# முன்னுரை

சங்கரரின் அத்வைத ஞானத்திலே உயிர்க்குல ஒருமையுணர்வை அடையக்கூடும் என்பதை நம் தேசிய மகாகவி பாரதியார் ஒரு கட்டுரையில் தெரிவிக்கிறார்: '1858–ம் வருஷத்துச் சிப்பாய்க் கலகத்தின் போது ஒரு ஸந்நியாசியை ஓர் ஆங்கிலேய ஸோல்ஜர் குத்திக் கொன்று விட்டான். அந்த ஸந்நியாசி 15 வருஷ காலமாக மௌன விரதம் பாராட்டி வந்தார். 15 வருஷ காலம் வாய் மூடியிருந்த மேற்படி ஸந்நியாசி, இந்த ஆங்கிலேயன் குத்தியவுடனே, "நீ கூட அவனே (பிரமமே)!" என்று சொல்லிவிட்டு, சரீரத் தியாகம் புரிந்து விட்டனர்.'

அனைத்துயிரும் ஒன்றே (பிரமமே) என்று கருதும் அத்வைத அடிப்படையிலேயே, 'பிறர் பசி நம் பசிதான்! பிறரை வஞ்சிப்போர் தமக்குத் தாமே வஞ்சகர், பிறர்க்கு இனியர் தமக்கு இனியர்!' என்ற சன்மார்க்கத் தனிப்பெருங் கோயில் உறுதியாக நிற்க முடியும் என்று கருதுவோர் உண்டு. விசிஷ்டாத்வைதிகளின் சித்தாந்தம் குறித்து, 'அருளே விசிஷ்டம், அன்பே விசேஷணம். அன்புக்கே சுரப்பது அருள்; அருளுக்கே வளர்வது அன்பு. உடலும் உயிரும்போல் அன்பும் அருளும்!' என்று ஓர் அறிஞர் கூறியிருப்பது கவனிக்கத் தக்கது.

'ஒருவன் தெருவில் விழுந்து காயமுற்று இரத்தம் சிந்தும் போது, நீயும் இரத்தம் பெருகக் காயமடைந்திருப்பதாய் உணர்ந்

தால் நீ ஸ்ரீவைஷ்ணவன்; காயமுற்றவன் வேறொருவன் என்ற உணர்ச்சி ஏற்பட்டால் நீ ஸ்ரீவைஷ்ணவன் இல்லை!'—இப்படி நஞ்சீயர் ஒரு பாகவதரை நோக்கிக் கூறினார். இது, கூரேச புத்திரரான பட்டரின் வாயிலாக அவரது அருமைச் சீடர் நஞ்சீய ருக்குக் கிடைத்த ராமாநுஜ தரிசனம்—விசிஷ்டாத்வைத அருள் நெறி—அன்புநெறி.

எங்கும் நிறைந்துள்ள விஷ்ணுசம்பந்த ஞானம் உடைய ஸ்ரீவைஷ்ணவனுக்கு உரியதோர் உணர்ச்சியை வற்புறுத்துகிறார் நஞ்சீயர். பிறர் துன்பம் கண்டு பொறுக்கமாட்டாமல் நம்மாழ் வார் உபதேசிக்கிறார் என்பதற்கு இந்த ஆழ்வாரின் பல்வேறு பாசுரங்களிலும் சான்று கிடைக்கிறது: இங்கே, நஞ்சீயர் காட்டும் ஸ்ரீவைஷ்ணவத்தின் ஊற்றுக்கண் காணப்படுகிறது எனலாம்.

திருமாலை உயிராகக் கொண்ட உலகத்திலே எந்த உயிரைப் பகையெனக் கொள்வது?—எவ்வுயிரைத்தான் அன்னியமாகக் கருதுவது? இறைவனிடம் உள்ளபடி அன்பு கொள்வது எல்லா உயிர்களிடத்தும் அன்பு கொள்வதுதான். 'எல்லாரிடத்தும் அன்பு பூண்டு ஒழுகுவது எம்பெருமானுக்குச் செய்யும் தொண்டு' என்று ணும் பிரகலாதன். உலகத்தார் அநர்த்தம் கண்டு ஆற்றாது கருணை காட்டுவது ஸ்ரீவைஷ்ணவ தர்மம் என்பதை ராமாநுஜரின் வாழ்க் கையும் குணதிசயமும் செயற்கருஞ் செயல்களும் வற்புறுத்தி யுள்ளன.

இந்த வாழ்க்கையில் வேதாந்த அறிவுப் பொக்கிஷமும் தமிழ்மறை என்ற அன்புப் பொக்கிஷமும் கலந்து குலாவுவதைக் காண்கிறோம். ஸ்ரீவைஷ்ணவர்களை உபய வேதாந்திகள் என்று கூறுவ துண்டு. வேதாந்தமாகிய உயிர் ஒன்று; அதற்கு உடல் இரண்டு—வடமொழிமறையும் தமிழ்மறையும். இது ஸ்ரீவைஷ்ணவர் கொள்கை, ராமாநுஜ சித்தாந்தம்.

'உளன் கண்டாய் நன்னெஞ்சே! உத்தமன்' என்று பொய்கை யாழ்வார் காட்டும் புருஷோத்தமனை 'உயர்வற உயர்நலம் உடைய வன்' என்று நம்மாழ்வார் அனந்த கல்யாண குணங்களுடனும் ஜகன் மோகன வடிவழகுடனும் காட்டுகிறார். 'குழல் அழகர், வாய் அழகர், கண் அழகர்' என்று ஆண்டாள் கண்டு காட்டும் புருஷோத்தமன், அடியவர்களின் உள்ளத்தை அழகாலும் அன்பாலும் வசீகரித்து அன்பர்பணிக்கு ஆளாக்குகிறான். வாழ்க்கை இப்படித் தூய அழகு பெற்று அன்புமயமாகும்போது, இன்பமாகிறது கைங்கரியநெறி, கருணைநெறி.

இந்த நெறியிலே, பிறர் அடையும் துன்பங்களையும் இன்பங்களையும் நமதாகக் கருதி வாழ்க்கை நடத்துவது சாத்தியமாகிறது. தன் அரசுரிமைச் செல்வத்தை இழந்து காடு செல்வதற்காகச் சிற்றன்னையிடம் விடைகொள்ளும் ராமன், 'என் பின்னவன் (தம்பி) பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றோ!' என்று கூறுவதாகக் கம்பராமாயணத்தில் வருவதை இங்கே ஓர் உதாரணமாகக் காட்டலாம். இத்தகைய மனமாற்றத்தை விளக்கவல்லது ராமாநுஜ தரிசனம்.

இத் தரிசனத்தை ஸ்ரீவைஷ்ணவம் என்று கூறுவர். இது கூர்ந்து நோக்கத்தக்கது. இங்கே தெய்வம்,

> **பொலிந்து இருண்ட கார்வானில்**
> **மின்னேபோல் தோன்றி**
> **மலிந்து திருஇருந்த**
> **மார்வன்**

என்று ஆழ்வார் காட்டுகிற லட்சுமிநாராயணமூர்த்தி—மேகமும் மின்னலும் போல விளங்கும் திவ்ய தம்பதி. இத் திருமாலைச் சரணமாக அடைய வேண்டும் என்ற திருவாய்மொழிக் கொள்கையை இராமாநுஜர் 'சரணாகதி கத்யம்' என்ற பிரபந்தத்தால் அனுஷ்டித்துக் காட்டியுள்ளார்.

இந்தப் பிரபத்திநெறி உபநிஷதங்களிலும் காணப்படுவது தான். இது ஒன்றே நமக்கெல்லாம் பயன்தரக் கூடியது என்பது ஆழ்வார்—ஆசாரியர்களின் கொள்கை. பிரபத்தி நெறியில் செல்வோர் பிரபன்னர். இவர்களுக்குப் புருஷார்த்தம் பகவானுடைய உறவும் கைங்கரியமும் மட்டுமல்ல; பாகவத சம்பந்தமும் பாகவத கைங்கரியமும் மிகவும் முக்கியமானவை. அனைத்துலகும் சரீரமாகக் கொண்டு திருமால் வியாபித்து உள்நின்று நியமித்துக் கொண்டிருப்பதால், பாகவத கைங்கரியத்தில் உலக கைங்கரியமும் அடங்கும். ஆம்; அனைத்துலகும் அவன் சரீரம் என்பது விசிஷ்டாத்வைத உயிர் நிலைக் கொள்கையல்லவா? உலகிலுள்ளவர் அனைவரும் பகவானுக்கு அடியவராவதற்கு உரியவர் தாமே.

இவ்வளவு கருணையுள்ள ஸ்ரீவைஷ்ணவன் அன்னிய மதங்களை வெறுக்கிறான் என்று சிலர் கூறுவது ஒரு பெருந்தவறாகும். 'வணங்கும் துறைகள் பல பலவாக்கி' என்று தொடங்கும் பாசுரத்தில் நம்மாழ்வார், திருமாலே எம்மதத்திலும் விளங்கி அருள்புரிகின்றான் என்ற கருத்தை வெளியிட்டிருப்பது பிரசித்தம். எந்த இஷ்ட தெய்வத்தை ஏத்தினாலும் 'என் திருமாலுக்குச் சேருமே!' என்று இவர்

கூறுவதும் நோக்கத் தக்கது. 'மறந்தும் புறம் தொழாத' ஸ்ரீவைஷ் வரின் உள்ளத்திலும் இத்தகைய 'சமரச' மனப்பான்மை இருக் தானே வேண்டும்? கற்புடையவள் கணவன் அல்லாத புருஷர்களை சகோதரர்களாகக் கருதுவதுதானே முறை ?

பகவத் பிரபந்தம் என்றும் பகவத் விஷயம் என்றும் திருவ மொழியைச் சிறப்பாக மதிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள், பகவத்வி ஞான நூல் எந்த மொழியில் இருந்தாலும் அது மதிக்கத் தக் தான் என்று கருதுகிறார்கள். வடமொழியில் தோன்றியவைத தூயன, தொன்று தோன்றியவையே தூயன என்று ஸ்ரீவைஷ்ண கள் விவகரிப்பதில்லை. 'மால் உகந்த ஆசிரியர்'களான ஆழ்வா ஆசாரியர்கள் முனிவர்களைக் காட்டிலும் சிறந்தவர்கள் என்று தமிழ் மறைகளைத் தெளிவாக ஓதிய பின்பே 'தெளியாத மறை நி களை'த் தெளிவாய்க் காண்கிறோம் என்றும் வேதாந்த தேசிகன் ச யிருப்பதும் ஸ்ரீவைஷ்ணவத்தின் இதய விசாலத்திற்குச் சான்றுதா

இராமாநுச நூற்றந்தாதியில் திருவரங்கத்து அமுத எடுத்த எடுப்பிலேயே, நம்மாழ்வாரின் அடிபணிந்து உய்ந்த இராமாநுஜர் என்ற கருத்தை வெளியிடுகிறார். மற்ற ஆழ்வ களின் அருளிச் செயல்களும் இராமாநுஜருக்கு வழிகாட்ட என்பதை விவரமாய்க் குறிப்பிடுகிறார். இதிலிருந்து, இரா நுஜரின் 'மேகத்தை ஒத்த கருணை (கார் ஏய் கருணை)' குறி அமுதனார் பேசுகிறாரே இக்கருணை, ஆழ்வார்களின் அருள இவருக்கு வாய்த்து, வேதாந்த சிந்தனைகள் என்ற காட்டிலே ர வழி ஒன்றைக் கண்டு காட்ட உதவியது என்று ஊகிக்கலாம்.

இந்தக் கருணையை அமுதனார் இராமாநுஜ குணசித்திரத் உயிர்நிலை அம்சமாக மதிக்கிறார். 'கொள்கை குறைவற்று இ கிக் கொழுந்து விட்டு ஓங்கிய வள்ளல்—தனம்' என்று சிறப் துச் சுட்டிக் காட்டுகிறார். கலியால் வருந்திய உலகத்தை வண் யினால் வந்தெடுத்துக் காப்பாற்றியவர் என்று போற்றுகி இராமாநுஜரை.

இத்தகைய கருணையிலிருந்து இராமாநுஜரின் பல கலியா குணங்களும் தழைத்துப் படர்ந்தன என்கிறார். 'தூயவன், தீ இராமாநுசன்' என்ற வாக்கிலிருந்து அமுதனாருக்கு இராமாநுஜ தூய அழகிய மகோன்னத வாழ்க்கையிலும் குணாதிசயத்திலு இவர் பிரசாரம் செய்த 'தீதில் நன்னெறி'யிலும் உள்ள ஈடுப இனிது புலனாகும்.

இவரது சீலத்தைக் 'கற்றவர் காமுறு சீலம்' என்கிறார். 'மெய்யைப் புரக்கும்' நிலை என்று கருணைவழியில் இவர் நிலை நிறுத்திய சத்தியத்தைக் குறிப்பிடுகிறார். இத்தகைய இராமா நுஜரின் புகழ் எங்கும் பரவி வந்ததைத் 'திக்குற்ற கீர்த்தி இராம நுசன்' என்ற அமுதனார் வாக்கில் காண்கிறோம். இக்கீர்த்தியைப் 'புவனம் எங்கும் ஆக்கிய கீர்த்தி' என்று அமுதனார் குறிப்பிடுவது, எதிர்காலத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களின் நற்பெரு முயற்சிகளால் இராமாநுஜரின் புகழ் வெளிநாடுகளில் மேன்மேலும் பரவக்கூடும் என்பதற்கு ஒரு முற்குறியாகக் கருதத்தக்கது.

இராமாநுஜரின் நீண்ட வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள் பலவற்றையும் அமுதனார் சாரமாக நினைவூட்டுகிறாரோ என்று சொல்லும்படி அமைந்திருக்கும் சொற்றொடர்களையும் வாக்கியங் களையும் இராமாநுச நூற்றந்தாதியில் காண்கிறோம். நல்லவர் களும் புண்ணியர்களும் இவரை எப்படி நேசித்தார்கள், வல்ல வர்களும் மகான்களும் நுண்ணறிவாளர்களும் 'இனம் இனத் தோடே' என்றபடி இவருடன் எப்படி இணைந்தும் இசைந்தும் இழைந்தும் நின்றார்கள், அன்பர்களும் அடியவர்களும் சாதுக்களும் இவரது வாக்கை எப்படி அமுதமாய்ப் பருகினார்கள், கற்றாரும் மற்றாரும் இவரை எப்படிக் கற்பகமாய்க் காமதேனுவாய்ப் பயன் படுத்திக் கொண்டார்கள், பேதையரையும் கலகக்காரரையும், இவர் எப்படி வென்று வழிப்படுத்திக் கொண்டார்!—இத்தகைய அரும் பெரும் பொருள்களை உய்த்துணர்ந்து, எல்லையற்ற செல்வங்களை ஒரு சிற்றறையில் காண்பவன்போல் கண்டு அனுபவிக்க உதவுகிறது இராமாநுச நூற்றந்தாதி.

இராமாநுஜருக்கு இராமாயணத்தின் மீதுள்ள அபார பக்தி யைத்தான் எவ்வளவு வசீகரமாய்க் குறிப்பிடுகிறது அமுதனாரின் அமுதவாக்கு! 'இராமாயணம் என்னும் பக்திவெள்ளம் குடிகொண்ட கோயில்' என்று இராமாநுஜரைச் சுட்டிக் காட்டுவதிலிருந்து, திரு வாய்மொழியைப்போல் வால்மீகி ராமாயணமும் இவரது கொள் கையை எப்படி உருவாக்க உதவியிருக்கிறது என்பது ஊகிக்கப் படும். இத்தகைய இராமாநுஜரை 'எம் குலக் கொழுந்து' என்று கூறிப் பெருமையடைகின்றார் அமுதனார்.

இராமாநுஜர் சிவந்து நெடியராய், ஆஜானுபாகுவாய், சர்வ லட்சண சம்பன்னராய்த் திகழ்ந்தார் என்றும், இவரது வடிவழ கும் நடையழகும் கண்ணுக்கினியனவாய்ச் சீடர்களையும் பிறரையும் குளிரப் பண்ணின என்றும் குருபரம்பரைகள் சொல்லுகின்றன. உண்மையில், இவருடைய குண சௌந்தரியம்தான் அந்தப் பொன்

மேனியில் அப்படிப் பிரதிபலித்து எத்தனையோ உள்ளங்களை வச ம்ாக்கி மலரச் செய்தது, கனிய வைத்தது என்று சொல்லவேண்( ம்.

இந்த வசீகரசக்தி, உத்தமர் உள்ளங்களில் ஒளிகாட்டி ( நறி காட்டியது; வேஷக்காரர்களையும் மோசக்காரர்களையும் நடு கச் செய்தது. குற்றத்தை உணர்ந்து பணிவோடு சார்ந்தவர்கடு க்கு அருள் செய்து, திருந்த வழி காட்டியது. இப்படியெல்லாம் ெ ப்த அந்த வடிவழகையும், நடையழகையும் கூடத் தம் கவிதைக் கண்( ுடி யில் பிரதிபலித்துக் காட்ட முயன்றிருக்கிறார் அமுதனார்.

திசை எங்கும் பரவிக் கொண்டிருந்த குணசௌந்தரியத்ே, ாடு கூடிய ரூபசம்பத்து அப்படியே உதயம் செய்கிறதாம் உத், மர் சிந்தையில். இவரது அருளுக்கு அறிகுறியான இரண்டு திருவடிக நம் இரண்டு சூரியர்களைப்போல் பிரகாசிக்கின்றனவாம். அந்தப் ப தங் கள் மாறிமாறி அடியிட்டு வரும்போதே பகைமையுள்ளம் அடு சிக் கொதிக்கிறதாம். (முடிவில் திருந்துகிறது, அல்லது விலகிப்ே ாகி றது என்பது குறிப்பு.)

'இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த யதிராஜாவின் திருவடி ள், குற்றங்களையே இரத்தினங்களைப்போல் பதித்து வைத்துக் கொ ாடி ருக்கும் அடியேனுடைய புன்கவிதையையும் ஆபரணமாக அண ந்து கொண்டனவே!' என்று பேராச்சரியத்துடனும் பெரும் பண ுட னும் உருகிப் பேசுகிறார் அமுதனார்.

இந்த அருமையான பாட்டை இப்போது பார்க்கலாம்:

**உதிப்பன உத்தமர் சிந்தையுள் ;**
**ஒன்னலர் நெஞ்சம்அஞ்சிக்**
**கொதித்திட மாறி நடப்பன ;**
**கொள்ளைவன் குற்றமெல்லாம்**
**பதித்தஎன் புன்கவிப் பாவினம்**
**பூண்டன ; பாவு தொல்சீர்**
**எதித்தலை நாதன் இராமா—**
**நுசன்தன் இணைஅடியே !**

பாடிப் பாடிப் பார்ப்பவர்க்கு இராமாநுஜரின் கருணை வடி ுவ யும் புகழ் வடிவையும் கொண்டுவந்து காட்டும் மந்திரக் கவ ுத இது.

இத்தகைய யதிராஜாவைச் சிறியேனும் எழுதிப் பா க்க ஆசைப்பட்டேன். நெடுநாளைய ஆசை நிறைவேற இந்த வாய்ட ுப அளித்திருக்கும் "ஸ்ரீநிவாஸன்-பிரேமா" கம்பெனியாருக்கு எ து நன்றி.

பி. ஸ்ரீ.

# பதிப்பாளர் குறிப்பு

இருபத்தொன்பது அத்தியாயங்களில் இராமாநுஜர் வாழ்க்கை வரலாற்றையும் அக்காலத்துச் சூழ்நிலையையும், இவர் வளர்த்த விசிஷ்டாத்வைத தரிசனத்தையும் இவர் வகுத்த ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தையும் சுவைபடக் கூறும் இந்நூல் எமது முதல் வெளியீடாய் வருவதை ஒரு பாக்கியமெனக் கருதுகிறோம்.

ஆசை என்னும் ஒரு வேட்கையே மனித வாழ்க்கையின் உயிர் நாடி என்கிறது அதர்வ வேதம். ஆசை என்னும் பற்றே துக்கத்துக்கெல்லாம் வேர் என்பது நிரீச்வரவாதமான பௌத்தத்தின் தத்துவம். தோற்றங்களைத் தாண்டி, பற்றற்ற நிலையில் பரம்பொருளை உணர்ந்து "நானே அவன்" என்னும் இரண்டற்ற ஒருமையைப் பேசுவது அத்வைத 'சித்தாந்தம்'. கடவுள் உண்டு, வேதம் உண்மை என்ற அடிப்படையில் பல்லாயிரம் ஆண்டுகளாக நம் நாட்டு மக்களின் வாழ்க்கையை வகை செய்துவரும் சமயங்களுக்குப் பொதுவாகப் பிறநாட்டார் இந்து மதம் என்று பெயரிட்டிருக்கிறார்கள்.

யூத, கிறிஸ்தவ, இஸ்லாமிய மதங்களைப்போல இந்து மதத்துக்கு ஒரு முதனூலோ, ஒரு ஸ்தாபகரோ இல்லை. பிற மதங்கள் பொய்யென்றோ, அவற்றைப் பின்பற்றுவோர் கடைத்தேறார் என்றோ இந்துக்கள் கருதுவதில்லை. அவரவர் முன்வினைப்படி அமையும் சூழ்நிலையில் தம் தம் குலநெறி தவறாது வாழ்வது கடமை என்பது இந்துக்களின் கோட்பாடு.

மிகத் தொன்மையிலிருந்து இன்று வரை நிலைநிற்கும் இந்து மதத்தைச் சார்ந்த நம் நாட்டு மக்களிடையே மதப்பற்றுத் தளரும் போதும், சமய அறிவு மங்கும்போதும், வாழ்க்கை நெறி பிறழும்

போதும், பல பெரியோர்கள் தோன்றி எக்காலமும் உண்மைய
சநாதன தர்மத்தின் இலக்கணத்தைக் காலநிலைக்கேற்ப வாழ்க்
யாலும் வாக்காலும் தெளிவாக்கியிருக்கின்றனர்.

மனிதனையும் சமூகத்தையும் உயர்த்திப் பிணைத்துக் கடவு
கருணைக்கு ஆளாக்கும் அன்புவழியைச் சிறப்பாகக் கண்ட
வைணவர். இவர்களுக்கு நடுநாயகமானவர் இராமாநுஜர். இ
நெடுநாள் வாழ்ந்து, நாடெங்கும் உலவி, ஆண்டவன் தொண்
இனம், குலம், மொழி என்னும் வேற்றுமையறியாத அடிய
குழாங்களை வளர்த்தார். தமது அன்புநெறியை என்றும் கா
நூல்கள் இயற்றினர், இயற்றுவித்தார்; மடாலயங்கள் நிறுவி
தெய்வ வழிபாட்டு முறைகளை அமைத்தார்.

இவர் வரலாறு அன்பும் அழகும் நிறைந்தது; தனி மனிதனுக்
சமுதாயத்துக்கும் மிக்க பயனுள்ளது.

இராமாநுஜரின் செயல்களையும் கருத்துக்களையும், இவருக்கு
காட்டிய பெரியோர் பெருமைகளையும், இவர் சீடர்கள் ஆற்றிய ப
களையும் தொகுத்துச் செவ்வனே இந்நூலை உருவாக்கிய ஸ்ரீ பி.
நம் நன்றிக்கு உரியவர். மதத்துக்கும், மொழிக்கும் மக்களுக்
ஒருங்கே நலன் செய்யும் பணியில் ஸ்ரீ பி. ஸ்ரீ. தமது நிகரற்ற புல
யையும் ஆராய்ச்சித் திறனையும் சொல் நயத்தையும் ஈடுபடு
யுள்ளார்.

எங்கும் எதிலும் புரட்சி மலிந்துவரும் இக்காலத்தில் மக்களு
உறுதியும் நம்பிக்கையும் தந்து வாழ்க்கைக் கொடுமைக
தணிக்கவல்லது அன்பு நெறி கூறும் இராமாநுஜர் வரலாறு எ
எண்ணத்தில் இந்நூலை வெளியிடுகிறோம்.

**ஸ்ரீநிவாஸன்-பிரேமா கம்பெனி**

# பொருளடக்கம்



ஸ்ரீ ராமாநுஜர் - அபூர்வ வெண்கல உருவச் சிலை ஒன்றின் பிரதி

Reproduced with the kind permission of
the Student Christian Movement Press Limited, publishers of
the book 'India's Religion of Grace and Christianity'

# பெரும்புதூர் வள்ளல்

பூங்காவில் பல மலர்களிலிருந்து தேனைச் சேகரித்துக் கொள்ளும் தேனீயைப் போல் சீடர் தம் ஆசிரியர்களிடமிருந்து வேத வேதாந்த நுட்பமான சமய உண்மைகளை அறிந்த வண்ணமாயிருந்தார். ஒரு நாள் தம் முக்கிய குருவான பெரிய நம்பியிடம் சென்றார்.

'சுவாமி, ஆளவந்தார் என்று பேரும் புகழும் பெற்றிருந்த தங்கள் ஆசிரியரின் திருவடிகளில் பணிபுரிந்து பல உண்மைகளையும் இரகசியங்களையும் பெற்றுக் கொள்ளும் பேறு அடியேனுக்கு வாய்க்கவில்லை. தங்கள் சீடன் என்று பெயர் பெற்றிருப்பதே அந்த நஷ்டத்திற்கு ஓரளவு ஈடாகும் என்பது என் நம்பிக்கை. இனி, ஆளவந்தார் தங்கள் திருவுள்ளத்தில் சிறப்பாகப் பதிய வைத்திருக்கும் பொருள்களையும் வழங்கியருள வேண்டும்' என்று வெகு விநயமாக வேண்டிக் கொண்டார்.

' அப்படியே செய்கிறேன், வாரும் ' என்று உளம் குளி
சொல்லிப் பெரியநம்பி, தாம் ஆளவந்தாரிடம் பெற்றிரு
பொருள்களை முற்றும் பொழிந்தார். பிறகு சீடரை முகம் நோக்
' தெற்கே சற்றுத் தூரத்தில் திருக்கோஷ்டியூர் என்ற பக்
பண்ணை ஒன்று உண்டு. அங்கே ஒரு பெரியவர் இருக்கிற
பெரும் பக்தியுடன் நல்ல புலமையும் வாய்ந்தவர். திரு
கோஷ்டியூர் நம்பி என்றே சிறப்பித்துப் பேசப் பெறுகின்று
அவரிடம், ' வைஷ்ணவ மந்திரம் ' என்று சிறப்பாகக் குறிக்க
பெறும் திருமந்திரத்தின் இரகசியப் பொருள்கள் உண்டு
ஆளவந்தார் உமக்காக அவரிடம் விட்டுவைத்துப் போயிரு
கிறார் என்று நம்புகிறேன் ' என்றார்.

**கோஷ்டி நம்பியுடன்**

பெரிய நம்பியின் சீடர் உடனே திருவரங்கத்தை விட்டு
புறப்பட்டார். கோஷ்டியூருக்குப் போய், எதிர்ப்பட்ட சிலை
நோக்கி, ' நம்பிகள் திருமாளிகை எங்கே?' என்று கேட்டா
' அதோ தெரிகிற கூரை !' என்று அவர்கள் சுட்டிக் காட்
னார்கள். இவர் உடனே திசை நோக்கித் தொழுது விரைந்
சென்றார். நம்பிகளைக் கண்ணுற்றுத் தண்டனிட்டு நின்றா
பிறகு, ' சுவாமி, அடியேனுக்குத் திருமந்திரத்தையும் அத
புதைபொருளையும் அறிவித்தருள வேணும் ; பெரிய நம்பி இங்கே
அனுப்பி வைத்தார் ' என்று விண்ணப்பம் செய்து கொண்டார்

கோஷ்டி நம்பியோ, ' யார் இவர் ? எந்த ஊர் ?' என்று
கூட விசாரிக்கவில்லை ; கண்டும் காணாதவர் போல் இருந்து
விட்டார். வழக்கம்போல், காலட்சேப கூடத்தில் குழு
யிருந்த சீடர்களுக்குச் சில நன்மொழிகள் கூறிய பின் த
இல்லத்திற்குள் போனார். புதிய சீடர் தொடர்ந்து பின்சென்று
வணங்கிவிட்டு, வருத்தத்துடன் திரும்பினார்.

மறுநாளும், குருவின் வீட்டு முகப்பிலுள்ள அந்தக் காலட
சேப மன்றத்திற்குப்போய் அவரை வணங்கி, ' அடியேனுக்கு
இரங்கியருள வேணும் ' என்று பிரார்த்தித்துக் கொண்டார்
இன்றும் குரு இவரைப் புறக்கணித்தவர் போலவே இருந்து
விட்டார்.

இப்படிக் குரு ' வா ' என்றும் சொல்லாமல், ' போ ' என்றும்
சொல்லாமல் இருப்பதன் மர்மம் என்ன ? பெரும் புலவரும்
பேரறிவாளருமாகிய இப்புதுமைச் சீடருக்குக் குருவின் நிலை
புரியவில்லை என்று எப்படிச் சொல்ல முடியும் ? ' தாகம் இருக்
கிறதா ?' என்ற சோதனை போலும் ; எல்லாம் நன்மைக்குத்
தான் ! இதய தாபத்தையும் ஆத்ம தாகத்தையும் உணர்ந்து

கொண்டதும் அந்த ஜீவ ஊற்றில் கருணை சுரந்து பொங்கும். இப்படியெல்லாம் எண்ணமிட்டவராய்ச் சீடர் திருவரங்கத்திற்குத் திரும்பினார்.

'இவருக்குக் கூட உபதேசம் பெற உரிமையில்லையாம்; "ஆருக்கு, என் சொல்லுகேன்?" என்று முகம் கொடாது இருந்து விட்டாராம் கோஷ்டி நம்பி. அப்படியானால் ஆரே தகுதி வாய்ந்தவர்? ஆளவந்தாரின் கொள்கை எப்படித்தான் பரவப் போகிறதோ? ஸ்ரீரங்க ராஜாவுக்கே வெளிச்சம்!' என்று ஊரெங்கும் ஒரே பேச்சு. புதுமைச் சீடரோ, 'நம் இதயத் தவிப்பை அறிந்து அவர் அருள் புரியவில்லை என்றால் இந்த உயிரினால்தான் என்ன பயன்?' என்று வாடி வெதும்பியிருந்தார்.

கொஞ்ச காலத்திற்குப் பின் கோஷ்டிநம்பி திருவரங்கத்திற்கு ஒரு பெரிய திருவிழாவை முன்னிட்டு அழகிய மணவாளப் பெருமாள் என்ற ஸ்ரீரங்க ராஜாவைத் தரிசிக்க வந்திருந்தார். பெருமாளைச் சேவிக்கும்போது நம்பிகளின் உள்ளத்தில் புதிய சீடரைப் பற்றிய நினைவுகள் வந்தன. அவர் திருவரங்கத்திலிருந்துதான் வந்திருந்தார் என்பதை இதற்குள் தெரிந்து கொண்டிருந்தார். 'அவருக்குத்தான் என்ன ஆர்வம், வைஷ்ணவ மகாமந்திரத்தின்மீது!' என்ற எண்ணமும் இவர் உள்ளத்தில் இருக்கத்தான் செய்தது.

இந்த நிலையில், தம் உள்ளத்தில் இடம் பிடித்துக்கொண்ட அந்தப் புதிய சீடரே வந்து தம் திருவடிகளில் தாழ்ந்து வணங்குவதையும் கண்ணுற்றார். உடனே நம்பிகள் இவரை நோக்கி, 'நம் ஊருக்கு வாரும்' என்று சொல்லிப் போய்விட்டார். அரங்கநாதனே அப்படிச் சொல்லும்படி தூண்டியது போன்ற ஓர் உணர்ச்சி கோஷ்டிநம்பிக்கு அப்போது ஏற்பட்டிருந்தது.

சீடர் மறுபடியும் திருக்கோஷ்டியூருக்குப் போனார்; 'தங்கள் உத்தரவுப்படி வந்தேன், சுவாமி!' என்று வணங்கி விண்ணப்பித்தார். ஆனால்—ஆ, என்ன அதிசயம்!—கோஷ்டி நம்பி இவரை நோக்கி, 'இப்போது நமக்கு அவகாசமில்லை, வேறொரு சமயம் வரலாமே!' என்று சொல்லி அனுப்பிவிட்டார்.

இப்படிப் பதினெட்டுத் தடவை நம்பிகள் இச்சீடரை, 'இன்னொரு சமயம் வாரும், வேறொரு சமயம் பார்த்துக் கொள்ளலாமே!' என்று சொல்லிச் சொல்லித் திருப்பித் திருப்பித் திருவரங்கத்திற்கு அனுப்பிவிட்டார். எனினும், சீடருக்கு உள்ளம் தளரவில்லை, ஊக்கம் குன்றவில்லை, உற்சாகம் மழுங்கவும் இல்லை—கோஷ்டி நம்பிகளைக் குறைகூறவும் தோன்றவில்லை.

ஒருநாள் இச்சீடர், 'கோஷ்டி நம்பியின் கருணைக்கு என்று தான் உரியவன் ஆவேனோ?' என்ற நினைப்பில் கண்களில் நீர் ததும்பக் கரைந்து உருகிக் கொண்டிருக்கும் போது, திருக் கோஷ்டியூரிலிருந்து அந்த நம்பிகளின் சீடர் ஒருவர் வந்து சேர்ந் தார். அவர் ஸ்ரீரங்கநாதனைச் சேவித்துத் திரும்பும்போது இச் சீடரைக் கண்டு, 'பாகவதரைக் கண்டதும் பாகவதர் வணங்க வேண்டும், தண்டனிட வேண்டும்' என்ற சட்டப்படி தண்ட னிட்டு வணங்கினர். அவரைக் கோஷ்டியூரில் சந்தித்த நினைவு இச்சீடருக்கும் வந்தது. ததும்பிய கண்ணீர் பொங்கி வழிந்தது.

'சுவரோடாயினும் சொல்லி ஆறு!' என்று சொல்வதுண்டு. 'இனம் இனத்தோடே!' என்றவாறு பாகவதரோடு பாகவதர் அகம்தொட்டுப் பேசுவது பொருத்தம்தானே. திருவரங்கத்துச் சீடர் திருக்கோஷ்டியூர்ப் பாகவதரிடம் தம் துக்கத்தைத் தெரி வித்து ஆறுதலடைய விரும்பினர். பிறகு கோஷ்டி நம்பிக்குத் தம் நிலையை எப்படிச் சொல்லால் எடுத்துரைப்பது என்று நினைத்துப் பார்த்தார்.

முடிவில், ஆழ்வாரின் அருள்வாக்கு ஒன்று நினைவிற்கு வந்தது. அவர் பகவானுக்குக் காதல்-தூது அனுப்பிய அதே பாஷையில் குருவுக்குச் செய்தி அனுப்பினர். குரு வேறு, கடவுள் வேறு என்பதுதான் இல்லையே பாகவதர்களுக்கு! இந்தச் செய்திதான் :

**பொன்னாழிக் கையார்க்கு,**
**பூந்துழாய் முடியார்க்கு, 'இங்கு**
**என்ஆவி ஈடழித்தல்**
**தகவலஎன்று இயம்பீரே!**

இச்செய்தியை, இவ் வசீகர வாய்மொழியைத் திருக்கோஷ்டி யூர்ப் பாகவதர் அப்படியே நம்பிகளின் செவிகளில் சேர்த்தார். உடனே நம்பிகள், 'இப்படியும் ஒரு காதலா உண்மைப் பொருள் மீது!' என்று பிரமித்தார். எனினும் அந்த உணர்ச்சியை உள்ளடக்கிக் கொண்டு மறுசெய்தி அனுப்பிவைத்தார், அரங்க நகர்ச் சீடருக்கு.

ஒரு மாதம் உண்ணவிரதம் மேற்கொண்டு உபதேசம் பெற வரவேண்டும் என்பது இச்செய்தி. 'நன்று நன்று!' என்று இணங்கினர் சீடரும். உடனே திருக்கோஷ்டியூருக்குப் புறப் பட்டுப் போய் நம்பிகளின் திருவடிகளில் விழுந்து வணங்கியபின், அவ்வூரிலுள்ள ஸௌம்ய நாராயணப் பெருமாளின் சந்நிதியில் உபவாசமிருந்தார். 'நிராஹாரம் பண்ணிக் கொண்டு இருந் தார்!' என்கிறது குருபரம்பரை வரலாறு.

இந்த ‘ நிராஹாரத்’தில் நீர் பருகுவதற்கும் இடமில்லை. பதினறு நாள் இப்படிக் கழிய, அதற்குள் இவருடைய அழகிய மேனி அறவே மெலிந்து சுருங்கிப் போயிற்று. பதினேழாம் நாளில், இட்டகால் இட்டகைகளாகிக் கிடந்தார். உயிர் விட்டது போல் மூச்சும் அடங்க, மூர்ச்சித்துப் போனார். ‘ நன்று, நன்று நம்பிகளின் வைத்தியம்! நோய் தீர்க்கும் பத்தியம் நோயாளியையும் தீர்த்து விடும்!’ என்று பதறியது பக்தர் குழாம்.

**கெட்டது திருமால் மார்க்கம்,**
**கெடுத்தனன் நம்பி!**

என்று கதறியது கோஷ்டியூர்.

நம்பிகளோ, ‘ **இறந்தால்** ஆளவந்தாரிடம் உபதேசம் கேட்பார்; **இருந்தால்** நானாக உரைப்பேன் நானே! இரண்டில் ஒன்று எப்படியும் தப்பாது!’ என்று அமைதியாகப் பதில் சொன்னார். ‘ நல்ல குரு! நல்ல சீடர்!’ என்று ஊரார் பேசிக் கொண்டனர். ஞான பக்தர்களோ, ‘ இந்த இருவருக்கும் இந்த இருவருமே இணையாவர்; வேறு இணையொன்றும் காணேம், காணேமே!’ என்று சொல்லிக் கொண்டனர்.

‘ இனித் தண்ணீர் மட்டும் பருகலாம்’ என்று குரு அனுமதி கொடுத்தார். உடனே பக்தர்கள் ஓடிப்போய், ‘ ஸௌம்ய நாராயணப் பெருமாளின் தீர்த்தத்தைச் சிறிது புகட்டி, உபவாசம் கிடந்தவரைத் தேற்றி விட்டார்கள். அன்று தொட்டு இவர், நீரை மட்டும் உட்கொண்டு உபவாசத்தைப் பூர்த்தி செய்தார்.

உண்ணு நோன்பு இனிது நிறைவேறியது என்ற செய்தி கோஷ்டி நம்பிக்கு அறிவிக்கப்பட்டது. அவர், ‘ இனி, அந்த அரங்கநகர்ச் சீடர் (துறவியாதலின்) தண்டு பவித்திரங்களோடு ஒருவராய் வந்து உபதேசம் பெற்றுப் போகலாம்’ என்று சொல்லியனுப்பினர்.

## மந்திரத்தைக் கண்டு காட்டினர்!

அதுகேட்ட சீடர் அளவற்ற மகிழ்ச்சியோடு தம் சீடர் ஒருவரையும் தம் மருமகனையும் கூட்டிக் கொண்டு மெல்ல மெல்ல வந்து நம்பி திருவடிகளில் இறைஞ்சி நின்றார். படிப்படியாகவும் ஜாக்கிரதையாகவும் உணவு கொண்டு உபவாச பூர்த்தி செய்து வந்திருந்த சீடர் சற்றுப் பலவீனமாகக் காணப்பட்டபோதிலும், உடல் நலம் பெற்றுத் திடமாகவே இருப்பதை ஒரு கணத்தில் உணர்ந்து கொண்டார் கோஷ்டி நம்பி.

மூவரையும் பார்த்தார் திகைப்புடன். துறவியான சீடரை முகம்நோக்கி நம்பிகள் கண்டிப்பான குரலில், ‘ உம்மை நான்

தண்டு பவித்திரங்களுடன் தனியாகத்தானே வரச் சொன்னேன்' என்ருர். 'அப்படித்தானே வந்தேன் அடியேன்!' என்று பதில் வந்தது.

குருவின் திகைப்பு அதிகரித்தது. சீடத் துறவி, 'இவர்களே எனக்குத் தண்டும் பவித்திரமும்! இந்த முதலியாண்டான் என்ற என் மருமகன் தண்டு; இந்த அந்தரங்கச் சீடனை கூரேசன் என் புவித்திரம்!' என்று சொன்ஞர்.

ஆம்; இவரது மருமகன் எப்போதும் ஊன்றுகோல் போல் உதவுவது உண்டு; துறவிக்கு உரிய தண்டுபோலவும் இம் மருமகன் உதவுவதாகவும், கூரேசன் ஒப்பற்ற பரிவால் தம் வாழ்க்கையைப் பவித்திரமாக்கியதாகவும் (புனிதமாக்கியதாகவும்) இத் துறவி கருதினுர் என்பது குறிப்பு.

இக்குறிப்பைப் பளிச்சென்று உணர்ந்து கொண்ட நம்பிகள், 'இவரன்ருே மேதாவி!' என்று வியந்து மகிழ்ந்தார். எனினும், தம் அகமகிழ்ச்சியை வெளிக்காட்டாது, 'நல்லது; இனி நான் உபதேசிப்பது உங்கள் மூவருக்கும்தான்; வேறு எவருக்கும் சொல்லிவிடக் கூடாது' என்று கட்டளையிட்டார்.

அப்பால் கோஷ்டிநம்பி, தம் சீடத் துறவியைத் தமது வலது பக்கத்தில் வைத்துக் கொண்டு,

**நலம்தரும் சொல்லை**
**நான்கண்டு கொண்டேன்!**

என்று திருமங்கையாழ்வார் சொல்லியிருக்கிருரே, அந்தப் பெரிய திருமந்திரப் பொருளை இனிது விளக்கத் தொடங்கினுர்.

பசியன் சோற்றைக் கண்டாற்போல அனுபவித்தார் விடாத கண்டராக வந்திருந்த சீடர். குரு, மந்திரப் பொருளின் ஞான பரம்பரையை எடுத்துக் காட்டியபின் முக்கியமான சீடரை முகம் நோக்கி, 'நான் ஆளவந்தாரின் ஞானபுத்திரனுக இருந்து இதைக் கற்றுக் கொண்டேன். இப்பொருள் இன்றளவும் ஓர் ஆசான் வழியாக (குரு சிஷ்யக் கிரமத்தில்) வந்திருக்கிறது. இதை நீரும் இரகசியமாகவே வைத்துக் கொண்டு, பாத்திரம் அறிந்து பக்குவமாக வழங்கவேண்டும்' என்ருர்.

பிறகு, அப்படியே செய்வதாகத் தம் தலையைத் தொட்டுச் சீடர் ஆணையிட வேண்டும் என்ருர். இவரும் அவரடிகளில் தாழ்ந்து, அத்திருவடி இரண்டையும் தொட்டு, 'குருவின் ஆணையை மீறினுல் நரகம் புகுவேன்!' என்று ஆணையிட்டார். அப்பால் நம்பி திருமந்திர உண்மையைச் செவிக்குத் தேன் என உபதேசித்தார்.

உபதேசம் பெறும்போதே, 'இறைவனை அடையும் நெறி

இவ்வளவு அழகாகவும் எளிதாகவும் இருக்க, அழகனுன இறைவ னும் இப்படிப் பரமசுலபனுகவும் அடியவர்க்கு அடியவனுகவும் இருக்க, மக்கள் வழியறியாது வருந்துகிருர்களே, அந்தோ !' என்ற இரக்கம் பளிச்சென்று எழுந்தது, சீடத் துறவியின் உள்ளத்திலே. அழுகை வந்துவிட்டது.

'உத்தம பக்திநிலையுற்று உருகுகிருர், பரவசமாகிருர்' என்று கருதிய நம்பி, 'அன்பரே ! ஞானபுத்திரரே ! ஒப்பிலாமணியே ! இனி உமக்கு ஒரு குறைவும் இல்லை ; உம்மால் கலிதீரும்; உலகத்திற்கு இடர் தீரும் !' என்று வாழ்த்தினர். இச்சீடரும் குருவின் அடிகளில் முடிபட விழுந்து வணங்கி விடைபெற்றுக் கொண்டார். கடலைக் கடைந்து அமுதம் பெற்ற தேவர்களைப் போல் இன்புற்றது இவரது உள்ளம்.

இந்த அரும்பெரும் பொருளை அடைவதற்காகத் தாம் அனுபவித்த கஷ்டங்களெல்லாம், பட்ட சிரமங்களெல்லாம், ஒன்றன்பின் ஒன்ருக நினைவிற்கு வந்தன. 'இத்தனை சிரமங் களுக்கும் சோதனைகளுக்கும் உட்பட்டு இப்பொருளைப் பெற்றுக் கொள்வோர் எத்தனை பேர் இவ்வுலகில் இருக்க முடியும்?' என்று ஆலோசித்துப் பார்த்தார். இத்தகைய நினைவுகளில் அன்று இரவின் பெரும்பகுதியும் கழிந்தது.

மறுநாள் காலை வேளை. கிழக்கே ஒரு மங்கள தீபம்போல் ஜொலித்துக் கதிரவன் இருளைப் போக்கி உதயம் செய்கிருன். ஒரு திருவிழாவை முன்னிட்டு மக்கள் திரளாகக் கூடியிருக்கிருர் கள். கோஷ்டிநம்பியின் இச்சீடரைக் கண்டதும், அவர்கள் உள்ளம் மழை முகம் கண்ட பயிர்போல் தழைத்தது.

இவரும், தான் அழிய மாறிப் பயிர் பச்சைகளின் தாகத்தை யும் உயிர்க் குலத்தின் தாகத்தையும் ஒருங்கே போக்கும் மேகம் போல், கருணை பொழியச் சித்தமாகி விட்டார். இந்த நிலையில் இவரை ஒரு பக்த கவி,

> **தான்அறப் பெய்து**
> **மாயும் தடமுகில்**

என்றே வருணித்திருக்கிருர்.

எவர் உத்தரவுக்கும் கட்டுப்பட்டு மேகம் மழை பொழிவ தில்லை; பொழியாமல் இருப்பதும் இல்லை. விரைவில் அனைவரும் அறிந்து கொள்ளும் வண்ணம், 'ஆசை உடையவர்கள் எல்லாம் கேட்டு அனுபவிக்கலாம் !' என்று வரம்பு அறுத்துத் திருமந்திர தானம் செய்யத் துணிந்தார் கோஷ்டிநம்பிகளின் உத்தமச் சீடர்.

இவரது இதயத்திலிருந்து அன்புப் பெருங்கடல் ஒன்று பொங்கி வந்து தங்களை ஆனந்தமாக முழுக்காட்டியது போன்ற

உணர்ச்சி, அங்கே கூடியிருந்த ஆண்களோடு பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் கூட ஏற்பட்டதாகக் குரு பரம்பரைக் கதைகள் தெரிவிக்கின்றன.

கோபுரத்தில் ஏறி நின்று இவர் திருமந்திரத்தையும் அதன் பொருளையும் முழக்கினர் என்று கூறுவோரும் உண்டு.

குலம்தரும் ; செல்வம்
தந்திடும்

என்றெல்லாம் திருமங்கையாழ்வார் கூறியிருப்பதால், வேற்றுமை பாராது இச்சீடர், 'ஓம் நமோ நாராயணாய' என்ற அந்த மகா மந்திரத்தையும் அர்த்த விசேடங்களையும் வாரி வழங்கினர். அனைவரும் வாழப் பணிபுரிவது மந்திரத்தின் உட்பொருள் என்பதையும் உணர்த்தினர்.

**இவர் கண்ட உலகு**

இச்செய்தி திருக்கோஷ்டியூர் நம்பியின் காதில் விழுந்ததும், அவர் இவரை உடனே அழைத்து வரும்படி ஆள் அனுப்பினர். சீடர் வந்து வணங்கியதும்,

ஊரவர்க்கு எல்லாம் கூறி
உமக்கும்என் பெற்றீர் ?

என்று கேட்டார்.

'ஊருக்கு உழைத்து உழைத்து உனக்கு என்ன லாபம் கிடைத்ததப்பா ?' என்று இன்றும் நம்மவர் கேட்பதுண்டு. இக் கொள்கை நம் வேதாந்த மனப்பான்மையிலிருந்து தோன்றிய தாகக் கருதுவோரும் உண்டு. ஆனால் 'ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும் !' என்ற பழமொழியும் நம் மக்களிடையே வழங்கக் காண்கிறோமல்லவா ?

குரு கேட்ட கேள்விக்குச் சீடர், 'நரகம் பெற்றேன்' என்று அமைதியாகப் பதில் சொல்லுகிறர்.

' அப்படியா ? ஒப்புக்கொள்கிறீரா ?'

'சுவாமி, அழிவில்லாத நரகம் பெற்றேன் ! குருநாதரின் ஆணையை அல்லவா மீறிவிட்டேன் ?'

' அறிந்தும் இப்படிச் செய்யலாமா ?'

' அறிந்தே இப்படிச் செய்தேன், சுவாமி !'

இந்த மனப்பான்மை குருவுக்குப் புரியவில்லை. அப்போது சீடர் சொல்லுகிறர் :

நான் ஒருவனுமே அன்றே
நசிப்பது ?இத் திரள்கள் எல்லாம்
ஆனவான் பேரின் பத்தை
அருந்துமே அந்தோ !

'இப்படி நினைத்துவிட்டது என் பேதை உள்ளம்' என்று சீடர் கூறி முடித்ததும், குரு சிறிதுநேரம் மறுமொழி ஒன்றும் கூறவில்லை; மௌனத்தில் மூழ்கியிருக்கிறார். உள்ளுக்குள்ளே ஊற்றுக்கண் திறந்து பொங்குவதுபோல் பொங்குகிறது உவகை. தம் பீடத்திலிருந்து துள்ளி எழுந்து வருகிறார்; சீடரைத் தழுவிக் கொள்ளுகிறார்—உணர்ச்சியோடு உணர்ச்சி ஒன்றிவிட்டது போல; ஆவியோடு ஆவி தழுவிக் கொண்டது போல!

அன்பினால் உச்சிமோந்து கொண்டாடும் தாய்போல் குரு சீடரிடம், 'குழந்தாய்! நன்று நன்று' என்று பூரித்துப் போகிறார், 'உம்மை இவ்வுலகில் எவரே ஒப்பார்?' என்று நெஞ்சார வாயாரப் புகழ்கிறார், போற்றுகிறார்.

ஆத்மாவுக்காக உலகத்தைத் தியாகம் செய்துவிடலாம் என்பது பழைய வேதாந்த விதி. இந்தச் சீடர் கண்ட நெறியோ. உலகத்திற்காகத் தன் ஆத்மாவையும் தியாகம் செய்யலாம் என்பது! 'இந்த மனம் நமக்கு ஏற்பட்டதில்லையே' என்று வருந்துகிறார் குரு.

வேதகாலம் தொட்டு வளர்ந்தோங்கும் ஞான நெறியிலே — ஸநாதன தர்மத்திலே — நாளது வரை ஒரே பெருங்கொள்கை தான் நிலவி வந்திருக்கிறது. அதாவது, தன் உயிரைக் கொண்டு தான் பிழைத்துக் கொள்வது. இது முன்னோர் கண்ட நெறி. ஆனால் இந்தச் சீடர் செய்யத் துணிந்ததுதான் என்ன? மன்னுயிருக்காகத் தன்னுயிரை நாசம் செய்து கொள்ளவும் துணிந்து விட்டாரே! இப்படியெல்லாம் சிந்தனைகள் அலைஅலையாக மோதுகின்றன குருநாதரின் திருவுள்ளத்திலே.

நீளநினைந்து நெடுநோக்கு நோக்குகின்றார். கோடை வெப்பம் வெதுப்புகின்ற நிலத்தை நோக்கி, மழைத்துளிகள் இறங்கி வருவதுபோல் வருகின்றன சொற்கள்:

**தன்னுயிர் தன்னைக் கொண்டு**
**தான்பிழைத் திடுவ தன்றி**
**மன்னுயிர்க்கு இரங்கித் தன்னை,**
**மைந்தனே! மாய்க்கப் புக்கார்**
**இந்நிலத்து இல்லை, இல்லை;**
**ஏழுல கத்தும் இல்லை!**

இப்படிச் சொல்லிவிட்டு, கோஷ்டிநம்பிகள் மறுபடியும் சீடரை அணைத்துக் கொண்டு, 'அவர் தாமோ நீர்?' என்று கேட்கிறார். முன்பு ஒரு காலத்தில் அந்தப் பெருந்திரளான சேனைக்கு இடையே நின்று பலர் காதிலும் விழும்படி அர்ச்சுன

னுக்குக் கீதை உபதேசித்த கருணைக் கடலின் நினைவு வந்தது உள்ளத்தின் ஆழத்திலே.

எம்பெருமானின் கருணையுடன் சீடரின் கருணையையும் ஒப்பிட்டுப் பார்த்தவர் இவரை, 'எம்பெருமானாரே!' என்று அழைக்கிறார். அப்போது அங்கே வந்து குழுமியிருந்த பாகவதர்களை நோக்கி, 'இந்தத் தரிசனம் பரம வைதிக சித்தாந்தமென்று இதுவரையில் பெயர் பெற்றிருந்தது. இன்று முதல் இது "எம்பெருமானார் தரிசனம்" என வழங்குவதாக!' என்று கூறுகிறார்.

இப்படிக் கோஷ்டியூர் நம்பியால் பாராட்டப் பெறும் சீடர் இராமாநுஜர் என்று சொல்லவும் வேண்டுமா? ஸ்ரீவைஷ்ணவத்தைச் சிறப்பாக இராமாநுஜ தரிசனம் என்றும், இராமாநுஜ சித்தாந்தம் என்றும் இன்றளவும் குறிப்பிடுகிறோம்.

**காரேய் கருணை இராமாநுசா!**
**இக்கட லிடத்தில்**
**ஆரே அறிபவர் நின்அருளின்**
**தன்மை ?**

என்று 'இராமாநுச நூற்றந்தாதி'யில் ஆசிரியர் திருவரங்கத்து அமுதனார் கூறுகிறாரே, இந்த வாக்கில் 'திருமந்திர தானம்' செய்தது போன்ற இராமாநுஜரின் கருணைப் பெருஞ் செயல்கள் குறிக்கப் பெற்றிருப்பதாய்க் கருதலாம்.

மேகத்தைப் பரம பக்தர்களின் நினைவுக் குறியாகக் காட்டுவதுண்டு. நம்மாழ்வாரின் பாசுரம் ஒன்றில், மானைவிதி எங்கும் நன்னீரைச் சுமந்து திரியும் மேகம் பாகவதர்களுக்கு உபலட்சணமாகக் கூறப்படுகிறது. திருமாலின் திருமேனியை மேகம் ஒத்திருப்பதற்குக் காரணம், உலகத்தை ஊட்டி வளர்த்துக் காப்பதற்காக அது முற்றும் தன்னைத் தியாகம் செய்து விடுவதுதான் என்றும் அதே பாசுரம் தெரிவிக்கிறது. திருமந்திர தானத்தில் இராமாநுஜர் 'தான் அறப் பெய்து மாயும் கருணை' மேகத்தை நினைவூட்டுகிறார் அல்லவா?

திருமந்திரதானம் செய்து மக்களை வாழ்வித்த நிகரற்ற கருணை, இராமாநுஜரின் செயற்கருஞ் செயல்கள் பலவற்றுக்கும் வித்தாக இருப்பதை இவரது வரலாற்றில் நெடுகக் கண்டு கொள்ளலாம். இத்தனிப் பெருங்கருணை இவரது வாழ்க்கை வரலாற்றுக்கும் குணாதிசயத்திற்கும் ஓர் அபூர்வ சோபை தந்திருக்கிறது. இக்கருணை ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்களின் பரம்பரையில் இவரை நடுநாயக மணியாக ஒளிரச் செய்திருக்கிறது.

ஆழ்வார்களின் தலைவராகிய நம்மாழ்வாரைக் குறித்து, 'பராநர்த்தம் (பிறர் துயரம்) நெஞ்சிலே படுகையாலே நாட்டுக்

காகத் தாம் மன்றாடுகிறார்' என்று பெரியோர் கூறுவர். இந்த ஆழ்வாரின் கருணை இராமாநுஜரின் உள்ளத்தில் கனிந்து கனிந்து திருமந்திரதானம் செய்த வைபவமாயிருக்கிறது எனலாம். நம்மாழ்வாரை ஸ்ரீவைஷ்ணவத்தின் 'முதல் தாய்' என்றும், இராமாநுஜரை 'இதத் தாய்' (நன்மை புரியும் வளர்ப்புத் தாய்) என்றும் கூறுவதுண்டு.

இராமாநுஜ தரிசனம் ஒரு புது நெறிதானா? உண்மையில், இது புதுமைக்கும் புதுமையாய், பழமைக்கும் பழமையாக உள்ள நெறிதான். ஸ்ரீவைஷ்ணவத்தைக் குறித்து வேதாந்த தேசிகர், 'அருமறைகள் தமிழ் செய்தான் (நம்மாழ்வார்) தாளே கொண்டு, துன்பற்ற மதுரகவி தோன்றக் காட்டும் தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே' என்று கூறியுள்ளார். தொல்வழியான நல்வழியைத்தான் நம்மாழ்வாரின் சீடரான மதுரகவி ஆழ்வார் ஸ்ரீவைஷ்ணவமாகக் காட்டுகிறார் என்பது கருத்து. அதே தொல்வழியைத்தான், நல்வழியைத்தான், என்றும் புதுமை வாய்ந்த நன்னெறியாகவும், பொதுமை நெறியாகவும் இராமாநுஜ தரிசனம் நமக்குக் காட்டுகிறது.

'எம்பெருமானார் தரிசனம்' என்ற பெயரை இட்டு நிலை நிறுத்தியது நம்பெருமாளான ஸ்ரீரங்கநாதரின் அருள்தான் என்று கூறும் மணவாள மாமுனிகள், இராமாநுஜர் தம் பெருங்கருணையால் இந்தப் பக்தி மதத்தை வளர்த்து விட்டிருக்கும் செயற்கருஞ் செயலை உலகம் உணர்ந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே இப்பெயர் இடப்பெற்றிருக்கிறது என்பதையும் நினைவூட்டுகிறார்.

இராமாநுஜர் ஸ்ரீபெரும்பூதூரில் தோன்றியவராதலின் 'பெரும்பூதூர் வள்ளல்' என்று இவரைக் குறிப்பிடுவதும் உண்டு. இவர் பக்தியில் ஒரு புது உலகத்தையே கண்டுபிடித்துக் காட்டுவது போலத் தோன்றுகிறது. ஆம்; சமுதாயப் பெரும்பணிக்கு ஆழ்ந்து அகன்றதோர் அடிப்படை-வேதாந்தத்தை அல்லவா இப்புதிய கருத்துலகில் காண்கிறோம்?

# 2

# வளமான குலதனம்

வேதத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கும் சமயத்தை இந்து மதம் என்று உலகம் சொல்லுகிறது. ஸநாதன தருமம் என்று நம்மவர் குறிப்பிடுவதும் உண்டு. காந்தியடிகள், டாக்டர் அனிபெஸன்ட் முதலானவர்களும் இந்து சமயத்தை ஸநாதன தருமம்—அதாவது ஆராய்ச்சிக்கு எட்டாத காலம் தொட்டு வந்து கொண்டிருக்கும் சமயம்—என்று கருதினார்கள்.

ரிக் வேதம் முதலான நாலு வேதங்களையும் பொதுவாக 'வேதம்' என்ற சொல்லால் குறிப்பிடுகிறோம். வேதத்தில் நம்பிக்கை உள்ளவர்கள் சைவராயினும் வைணவராயினும் தேவி பக்தராயினும் முருக பக்தராயினும் விநாயக பக்தராயினும் இந்துக்களே. வைணவர்கள் தங்கள் சமயத்தைப் 'பரம வைதிக சித்தாந்தம்' என்று சிறப்பித்துப் பேசுகிறார்கள்.

வேதங்களின் சிகரமான பகுதியை 'உபநிஷதங்கள்' என்கிறோம். 'அருமறை (நாலு வேதங்களும்) துணிந்த பொருள் முடிவை' உபநிஷதங்களில் காணலாம் என்பது இந்துக்களின் கொள்கை. வடமொழி—இலக்கியத்தில் வேதங்களும் உபநிஷதங்களும் மிகவும் பழமையான நூல்களாக ஒப்புக்கொள்ளப்படுகின்றன. இந்த நூல்களில் திருமாலைப் பற்றிய பிரஸ்தாபம் உண்டு; திருமாலே பரம்பொருள் என்று பொருள்படும் வாக்கியங்களும் உண்டு.

திருமால் உலகளந்த கதை பிரசித்தமாக வழங்குகிறதல்லவா? ஆழ்வார்கள் இக்கதையில் ஈடுபட்டுத் திருமாலின் அருமை பெருமைகளைப் பேசுவர் என்பது திவ்யப்'பிரபந்தங்களைக் கற்றவர் பலரும் அறிவர். உலகளந்த மூர்த்தியே முதல்வன் என்று ஆழ்வார்கள் சித்தாந்தம் செய்வதும் உண்டு. தருமத்தை நிலைநிறுத்துவதற்காக விஷ்ணுமூர்த்தி உலகம் முழுவதையும் அளந்தார் என்று பொருள்படும் வேதவாக்கியங்களும் உண்டு.

திருமாலின் திருப்பெயர்களை உச்சரிப்பவர்கள் திடமாகவும் அழிவில்லாமலும் இருப்பார்கள் என்ற பொருளுடன் கூடிய வாக்கியத்தை ரிக் வேதத்தில் காணலாம். விண்ணையும் மண்ணையும் விஷ்ணு பாதுகாப்பதாக யஜுர் வேதம் தெரிவிக்கிறது.

**உளன்கண்டாய், நன்னெஞ்சே !**
**உத்தமன்**

என்று முதலாழ்வாரான பொய்கையார் குறிப்பிடுகிறாரே, அந்த உத்தமனைப் 'புருஷன்' என்று குறிப்பிடுகிறது வேதம். புருஷனைப் புருஷோத்தமன் என்றும் கூறுவதுண்டு.

திருமாலை அம்பாகக் கொண்டு உருத்திர மூர்த்தி அசுரர்களின் முப்புரங்களை எரித்த கதையையும் வேதங்களில் காண்கிறோம். இக்கதை திருமாலின் பெருமைக்குச் சான்றாகக் கூறப்படுவதையும் வேதங்களிலே காணலாம்.

திருமால் எங்கும், எல்லா உயிர்களிலும், வியாபித்திருப்பவன் என்ற கருத்தும் வேதங்களில் காணப்படுகிறது. விஷ்ணு என்ற சொல்லுக்கே வியாபித்திருப்பவன் என்பதுதான் உட்பொருள். இந்த 'விஷ்ணு' சம்பந்தம் பெற்றிருப்பதுதானே வைஷ்ணவம்.

விஷ்ணுவை நாராயணன் என்ற பெயரால் திருமங்கை மன்னன் முதலான ஆழ்வார்கள் குறிப்பிடுகிறார்கள் அல்லவா? இத்திருப் பெயரால் உபநிஷதங்கள் பரம்பொருளைக் குறிப்பிடுவதையும் காண்கிறோம். நாராயணனைப் பரமாத்மா என்று குறிப்பிடும் உபநிஷதம், நாராயணமூர்த்தி அகமும் புறமுமாக உலகமெங்கும் வியாபித்திருப்பதாகவும் தெரிவிக்கிறது.

வேதம் கூறும் திருமாலின் பெருமையை ஸ்மிருதிகளும் ஆதரிக்கின்றன ; ஸாத்விக புராணங்களும் ஒருமுகமாய் ஆதரிக்கின்றன. அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் என்ற மூவகை வேதாந்தக் கொள்கைகளை நிலைநாட்டிய மூன்று ஆசாரியர்களும் விஷ்ணு பரம்பொருள் என்பதை ஒப்புக்கொள்கிறார்கள். துவைதக் கொள்கையை நிலைநாட்டிய மாத்வருக்குப் பின் தோன்றிய சைதந்யர் வல்லபர் சங்கரதேவர் முதலான ஆசாரியர்களும் திருமாலின் பரத்வ நிலையை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

**தமிழும் வைஷ்ணவமும்**

பழந்தமிழிலக்கியத்திலும் திருமாலின் பெருமை பேசப்படுகிறது. நிலத்தை நான்கு வகை நிலங்களாக—முல்லை (காடு), குறிஞ்சி (மலை), மருதம் (வயல்), நெய்தல் (கடற்கரை) ஆகிய நானிலங்களாகப் பகுத்துப் பேசிய ஆதித் தமிழாசிரியர்கள், திருமாலைக் காடு சார்ந்த இடத்திற்கு அதிதெய்வம் என்றார்கள். இந்தத் தெய்வத்தைத் தொல்காப்பியம் முதலில் வைத்துச் சிறப்பிப்பதையும் காண்கிறோம்.

'மாயோன்' என்று கண்ணபிரானைக் குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். பண்டைக் காலத்துக் கண்ணன் வழிபாடு ஸ்ரீவைஷ்ணவமாகத் தமிழகத்தில் வளர்ந்தோங்கி வந்திருக்கிறது என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்று தருகின்றன. கண்ணபிரானின் பாலலீலைகள் என்ற குழந்தைச் செயல்களில் பழந்தமிழ் மக்கள் ஈடுபட்டிருந்தனர் என்பதற்கு உரிய குறிப்பையும் தொல்காப்பியத்தில் காண்கிறோம்.

தெய்வக் குழந்தையாகிய கண்ணனிடம் ஆயர்குல மகளிர் காதல் கொண்டிருந்ததையும் தொல்காப்பியர் அறிந்து குறிப்பிடுகிறார் என்பதை ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு மு. இராகவையங்கார் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

'காமப் பகுதி' என்று தொல்காப்பியர் குறிப்பிடுவது, ஆழ்வார்களின் நாயக - நாயகி பாவமான காதற் பாசுரங்களையும், சிறப்பாக ஆண்டாளின் காதற்பாசுரங்களையும் நினைவூட்டுகிறது. எனவே, 'கண்ணன் காதல்' என்ற பக்திப் பெருங்கொள்கையும் கதைகளும் நீண்டகாலமாகத் தமிழகத்தில் வேரூன்றி வளர்ந்து வந்திருக்கின்றன எனலாம்.

தமிழ்முனிவரான அகத்தியர் துவராபதிக்கு (துவாரகைக்கு)ப் போய்க் கண்ணபிரானின் வழிவந்தவர்களையும் பிறரையும் தமிழகத்திற்குக் கொண்டுவந்து காடு கெடுத்து நாடாக்கிய வரலாற்றுத் துணுக்கு ஒன்றும் பண்டைத் தமிழர்களிடையே வழங்கி வந்திருப்பதைக் காண்கிறோம்.

கண்ணனையும் அண்ணனாகிய பலராமனையும் பண்டைத் தமிழர்கள் வழிபட்டு வந்தார்கள்; கண்ணனின் தேவியான நப்பின்னைப் பிராட்டியையும் வழிபட்டதுண்டு. இத்தகைய வழி பாட்டுக்குப் பரிபாடல், சிலப்பதிகாரம் முதலிய நூல்கள் சான்று தருகின்றன. நப்பின்னைப் பிராட்டியைக் குறித்து ஆழ்வார்களும் ஆண்டாளும் பாடியிருப்பதைத் தமிழன்பர்களும் அறிஞர்களும் அறிவார்கள்.

திருமாலைப் பரம்பொருள் அல்லது முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் வைஷ்ணவம், ஆழ்வார்—ஆசாரியர்களுக்கு முன்பே தமிழ் நாட்டில் தழைத்திருந்தது என்பது திண்ணம். இச் சமயத்தை வேத வேதாந்த அடிப்படையில் நிலைநிறுத்திய பெருந் தமிழர்களில் தலைசிறந்து நின்றவர் நம்மாழ்வார். இவரை ஸ்ரீவைஷ்ணவத்தின் மூலபுருஷர் என்றும், குலபதி என்றும் கூறுகிறோம்.

நம்மாழ்வாரின் உயிர்நிலைக் கொள்கையைச் சரணாகதி நெறி என்றும், பிரபத்தி தரிசனம் என்றும் சுருங்கக் கூறி விளங்கவைக் கலாம். இதைத் 'தீதில் நன்னெறி' என்று குலசேகராழ்வார் குறிப்பிடுகிறார்.

நம்மாழ்வாரைத் திவ்ய கவி பிள்ளைப் பெருமாளையங்கார்,

**அருமறை துணிந்த**<br>
**பொருள்முடிவை, இன்சொல்-**<br>
**அமுதொழுகு கின்ற**<br>
**தமிழினில் விளம்பி**<br>
**அருளிய சடகோபன்**

என்று போற்றிப் புகழ்கிறார்.

வேதாந்த சிந்தனைகள் நம்மாழ்வாரின் 'அமுது ஒழுகுகின்ற தமிழினில்' கவிதையாகிக் கலையாகி மக்களை வாழ்விக்கின்றன என்பது திவ்யகவிஞரின் கருத்து. வடநாடு சிந்தனைகளுக்குப் பேர் போனது என்றும், தென்னகம் கலைகளுக்குப் பேர்போனது என்றும் கூறுவதுண்டு. வடக்கேயிருந்து பெருகி வந்த வேதாந்த ஞான வெள்ளத்தைக் கொண்டு கவிதைப் பயிரையும் கலைப் பயிரையும் வளர்த்து ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தை விளைத்த திருப் பணி சிறப்பாக நம்மாழ்வாருக்கு உரியது என்பதில் ஐயமில்லை.

வேத வேதாந்த சிந்தனைகளால் இந்து சமயத்திற்கு உறுதி யான அடிப்படை அளித்து உதவியிருக்கும் முனிவர்களைக் காட் டிலும், அந்தச் சிந்தனைகளைக் கலையாக்கி உபகரித்திருக்கும் ஆழ்வார்களிடத்திலும் ஆசாரியர்களிடத்திலும் வைணவர்களுக்கு மதிப்பு அதிகம். எனவே, மாசற்ற முனிவர்கள் வகுத்தன

எல்லாம் திருமால் உகந்தருளிய ஆழ்வார் - ஆசாரியர்களின் வார்த்தைகளுக்கு ஒப்பானவை அல்ல என்ற கருத்தை வேதாந்த தேசிகர் இயற்றிய ஒரு பிரபந்தத்தில் காண்கிறோம்.

இவ்வார்த்தைகள் வேத வேதாந்த நெறியைத் தெளிவாக்குகின்றனவாம் :

**செய்யதமிழ் மாலைகள்நாம்**
**தெளிய ஓதித்**
**தெளியாத மறைநிலங்கள்**
**தெளிகின்றோமே !**

ஆழ்வார்களின் புகழ் தமிழகத்தைக் கடந்து பரவியிருந்தது என்பதற்கு ஸ்ரீமத் பாகவத புராணமும் சான்று தருகிறது. காவேரி தீரம், தாம்பிரபருணி தீரம் முதலான பிரதேசங்களில் கிருஷ்ண பக்தர்கள் அவதரித்துப் பக்திநெறியைப் பரவச் செய்வர் என்று தீர்க்க தரிசனமாகப் பேசுவது போன்ற வாக்கியங்களைப் பாகவத புராணத்தில் காண்கிறோம். பக்தியே தென்னகத்தில் சிறப்பாகத் தோன்றித் திகழ்ந்தது என்ற கருத்தையும் இப்புராணத்தில் காணலாம்.

ஆழ்வார்களின் தமிழ்ப் பாசுரங்களை 'நாலாயிர திவ்யப் பிரபந்தம்' என்கிறார்கள். திவ்யப் பிரபந்தத்தைத் தமிழ்வேதம் என்றும் கூறுவதுண்டு. திவ்யப் பிரபந்தத்திலே ஆழ்வார்கள் இவ்வுலகில் இருள்நீங்கும் பொருட்டு அழகிய தமிழால் 'நற்கலைகள் ஆய்ந்துரைத்த'னர் என்று மணவாள மாமுனிகள் கூறியுள்ளார். இவர் வாக்கிலிருந்தும், **சிலருக்கே** உரியனவாக இருந்த வேதாந்த சிந்தனைகள் கலைச்சுவையுடன் **பலருக்கும்** உரியனவாக ஆழ்வார்களின் வாக்கிலே பரிமாறப் பெற்றுள்ளன என்ற உண்மையை உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

திவ்யப் பிரபந்தங்களில் திருவாய்மொழிக்கு ஒரு தனிச் சிறப்பு. திருவாய்மொழி என்றால் வேதம். வாய்மை+மொழி= வாய்மொழி ; அதாவது, சத்திய வசனம். வாய்மொழி என்ற சொல் வேதம் என்ற பொருளில் பரிபாடல் என்ற சங்க இலக்கியத்தில் வருவதைக் காண்கிறோம். வேத முதல்வன் திருமால் என்ற பொருளில் பரிபாடல் 'வாய்மொழி முதல்வன்' என்ற சொற்றொடரை உபயோகித்திருப்பதையும் காண்கிறோம்.

திருவாய்மொழியின் ஆசிரியரான நம்மாழ்வாரைத் திருக்குறளின் புகழ்பெற்ற உரையாசிரியரான பரிமேலழகர், 'பெரியார்' என்று சிறப்பித்துப் பேசுகிறார். இச் சந்தர்ப்பத்தில் 'பெரியவன்' என்று கண்ணன் சிலப்பதிகாரத்தில் குறிக்கப்படுவதையும் நினைவூட்டிக் கொள்ளலாம். பெரியவனைக் கண்டு காட்டுகிற

வரைப் பெரியார் என்று குறிப்பிடுவது பொருத்தம்தானே. ஏனைய ஆழ்வார்களைக் காட்டிலும் சிறந்தவர் நம்மாழ்வார், பக்தருலகின் தலைவர்—என்ற கருத்தையும் குறிப்பாகப் 'பெரியார்' என்ற பரிமேலழகர் வாக்கில் காணலாம்.

ஆழ்வார்களின் காலத்திற்குப் பிறகு, அருளிச் செயல்களான பாசுரங்களை எழுதிவைத்திருந்த ஓலைச்சுவடிகள் செல்லுக்கு இரையாகிவிட்டனவாம். கேட்பதற்கும் அரியனவாகிவிட்டன என்று சொல்லுகிறார்கள். அந்த நிலையில் திவ்யப் பிரபந்தங்களுக்கும் பக்திப் பெருங்கொள்கைக்கும் புத்துயிரளிக்க முற்பட்டவர் ஸ்ரீநாதமுனிகள் என்ற முதலாவது ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்.

இவர், இப்போதுள்ள சிதம்பரம் தாலுகாவைச் சேர்ந்த காட்டுமன்னார்கோவில் என்ற வீரநாராயணபுரத்தைச் சேர்ந்தவர். வட இந்தியாவில் தம் தந்தையாரோடும் புதல்வரோடும் யாத்திரை செய்தார். யமுனாதீரத்தில் கோவர்த்தனபுரம் என்ற தலத்தில் 'தூயபெருநீர் யமுனைத் துறைவன்' என்ற ஆண்டாளின் திருப்பாவைச் சொற்றொடரால் குறிக்கப்படும் பெருமானைச் சேவித்தார்; அங்கேயே தங்கிவிடலாமா என்றுகூட எண்ணினாராம். எனினும், வீரநாராயணபுரத்து மன்னனார் என்ற பெருமாள்மீது இவருக்கு இருந்த பக்தியும் தமிழன்பும் வடக்கே தங்கிவிட இடம் கொடுக்கவில்லை.

நாதமுனிகள் திரும்பிவந்து வீரநாராயணபுரத்தில் நந்தவனம் அமைத்து மன்னனார்கோயிலில் பணி புரிந்ததுடன், அறிஞர்களின் சபைகளைக் கூட்டிவைத்துச் சமய தத்துவ ஆராய்ச்சிகளும் நடத்திக் கொண்டிருந்தார். அப்போது யாத்திரிகர்களான சில வைஷ்ணவர்கள் இங்கு வந்து, 'ஆரா அமுதே!' என்று தொடங்கும் திருவாய்மொழிப் பதிகத்தைப் பாடிக் காட்டினார்கள். நாதமுனிகள் செவிகுளிர அகங்குளிரக் கேட்டார்.

பதிகத்திலுள்ள பத்துப் பாசுரங்களையும் அவர்கள் மன்னனார் என்ற ஸ்ரீராஜகோபால சுவாமியின் சந்நிதியில் பாட, நாதமுனிகள் செவி சாய்த்து அமுதமாய்ப் பருகி வந்தார். பதிகத்தின் இறுதியில் 'குருகூர்ச் சடகோபன்' என்ற பெயர் வந்ததும், 'இந்த அமுதப் பாக்களின் ஆசிரியரின் பெயரைத் தெரிந்து கொண்டோமே!' என்று அகமகிழ்ந்தார்.

'குருகூர்ச் சடகோபன் குழலின் மலியச் சொன்ன' என்று அவர்கள் ஒப்பித்ததும், 'புல்லாங்குழலின் இசை போன்ற இசையில் அமையத் தக்க அருமைப் பாக்கள்தாம் இவை!' என்று இசை நிபுணராக இருந்த இவர் இதயம் ஒப்புக்கொண்டது. பிறகு

'ஓராயிரத்துள் இப்பத்தும்' என்று அவர்கள் சொன்னதும், 'ஆரா அமுதக் கவி ஆயிரமா?' என்று அதிசயித்தது இரசிக உள்ளம்.

நாதமுனிகள் அவர்களை நோக்கி, 'உங்களுக்கு ஆயிரம் பாசுரமும் வருமோ?' என்று ஆவலாய்க் கேட்டார். அவர்களோ, 'எங்களுக்கு இவ்வளவுதான் தெரியும்; இதற்கு மேல் தெரிந்தவர்கள், எங்களுக்குத் தெரிந்த வரையில், வேறு எவரும் இல்லை' என்று பதில் சொன்னார்கள். அப்பொழுது நாதமுனிகள், 'இப்பிரபந்தத்தை முற்றும் பெற்றால்தான் என் இதயம் சாந்தியடையும்' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார்.

சடகோபர் என்ற நம்மாழ்வாரின் பிறப்பிடமாகிய ஆழ்வார் திருநகரி என்ற திருக்குருகூருக்குப் போனால், அங்கே இந்த ஆயிரம் பாசுரங்களும் கிடைக்கக்கூடும் என்று நினைத்தார். உடனே திருநகரிக்குப் பயணமானார். அங்கே மதுரகவியாழ்வாரின் சீடரான பராங்குச தாசரைச் சந்தித்தார். இப்பராங்குச தாசரை மதுரகவியின் சீட பரம்பரையில் வந்த ஒருவர் என்று கருதுவோரும் உண்டு. பராங்குசர் என்பது நம்மாழ்வாரின் பெயர்களில் ஒன்று. இப்பெயர், நம்மாழ்வார்மீது அந்தப் பிரதேச வாசிகளான தமிழர்களுக்கு உள்ள பக்தியைப் புலப்படுத்தியது.

நாதமுனிகள் பராங்குசதாசரை நோக்கி, 'திருவாய்மொழி ஆயிரமும் ஓதியவர்கள் இப்போது இருக்கிறார்களா? ஏட்டுப்பிரதி உண்டா?' என்று கேட்டார். அதற்குப் பராங்குசதாசர், 'திருவாய்மொழியும் மற்றைய திவ்யப் பிரபந்தங்களும் மறைந்து விட்டன. ஆனால் ஆசாரியர் அடியேனுக்குக் கற்பித்திருந்த "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்ற பாடல்கள் மட்டும் நினைவில் இருக்கின்றன' என்று பதில் சொன்னார்.

நாதமுனிகள், 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற சிறு பிரபந்தத்தை ஓதி ஓதி உருவேற்றித் தியானித்து நம்மாழ்வாரைத் தரிசிக்கும் பேறு பெற்று, திருவாய்மொழி உள்ளிட்ட திவ்யப் பிரபந்தங்களையெல்லாம் தெரிந்து கொண்டார் என்பது கதை. ஆயிரம் தேடிய நாதமுனிகளுக்கு நாலாயிரமும் பராங்குச தாசரின் உதவியால் ஆழ்வார்திருநகரியில் கிடைத்திருக்கக் கூடும் என்பது ஆராய்ச்சியாளர் ஊகம். ஆழ்வார் அருளால் காரியம் கைகூடியது என்ற நம்பிக்கை, மேலே சொன்ன அற்புதமாக விளைந்திருக்கக் கூடும்!

நாதமுனி வீரநாராயணபுரத்துக்குத் திரும்பினார். திவ்யப் பிரபந்தங்களை இயலும் இசையுமாக ஓதுமாறு தம் மருமக்கள் இருவருக்கும் கற்பித்தார். இம்மருமக்களைக் 'கீழை அகத்து ஆழ்வான்' என்றும் 'மேலை அகத்து ஆழ்வான்' என்றும் குரு

பரம்பரை வரலாறுகள் குறிப்பிடுகின்றன. நாதமுனிகளின் சிறந்த நன்முயற்சியால் திவ்யப் பிரபந்தப் பாடல்கள் திவ்யமான இசையில் இசைக்கப்பட்டும், இயற்றமிழாக ஓதப்பட்டும் நாடெங்கும் பரவலாயின.

நாதமுனிகளின் சீடரில் உய்யக் கொண்டார் என்ற புண்டரீ காட்சர் முக்கியமானவர். இவர் நாதமுனிகளின் ஞான பரம் பரையை வளர்த்து, தமது சீடரான ராமமிசிரர் என்ற மணக் கால்நம்பியிடம் ஒப்படைத்து மேலும் வளர்க்கச் செய்தார்.

இதற்கிடையே, நாதமுனிகளின் புதல்வரான ஈசுவர முனி களுக்கு யாமுனாசாரியர் என்ற யமுனைத் துறைவர் புதல்வராகப் பிறந்தார். யமுனை ஆற்றங்கரையில் கோவர்த்தனபுரத்தில் நாதமுனிகள் ஈடுபட்டுத் தொழுதாரே, அந்த யமுனைத் துறைவன் என்ற பெருமாளின் பெயரே இப்பேரருக்குச் சூட்டப்பெற்றது என்று கருதலாம்.

நாதமுனிகளுக்குப் பின் இந்த ஞான பரம்பரையில் மிகவும் புகழ் பெற்றிருந்தவர் யாமுனரே. பாட்டனாரான நாதமுனி களைக் காட்டிலும் யாமுனர் புகழ் பெற்றுவிட்டார். இந்தப் பேரருக்கும் பாட்டனுருக்கும் ஒருவகைப் பாலமாக உதவியவர் களே உய்யக்கொண்டாரும் மணக்கால்நம்பியும்.

மேதாவியான நாதமுனிகளுக்குப் பின் மகாமேதாவியாகத் திகழ்ந்த யாமுனாசாரியரை ஆளவந்தார் என்ற அருமைப் பெய ரால் தமிழகம் போற்றித் தன் இதயத்தில் பிரதிஷ்டை செய்து கொண்டிருக்கிறது.

யாமுனர் சிறுபிள்ளையாக இருக்கும்போதே வித்வஜன கோலாகலன் என்ற, கர்வம் பிடித்த, வித்வானை வாதில் வென்றார். அந்த வித்வான் அந்தப் பிரதேசத் தலைவனான ஒரு சிற்றரசனின் ஆஸ்தான வித்வான். ' எங்கள் மகாவித்வானோடு அந்தச் சிறுபிள்ளையா வாதப் போருக்கு வருகிறான்?' என்று அரசன் அரசியிடம் சொன்னானும். அவளோ சிறுபிள்ளையின் வடி வழகாலும் முகப்பொலிவாலும் வசீகரிக்கப் பெற்று, ' உங்கள் வித்வானை என் சிறு பிள்ளை வெல்ல வேண்டும் என்பதுதான் என் பிரார்த்தனை ' என்று பதில் சொன்னாளாம்.

முடிவில் அரசியின் விருப்பம் நிறைவேறிவிட்டது. ஆம்; மகாவித்வானைச் சிறு பிள்ளையான யாமுனர் வென்று செருக் கழித்து விட்டார். அது கண்ட அரசி, ' என்னை ஆளவந்தார்!' என்று கொண்டாட, அன்று முதல் ' ஆளவந்தார் ' என்ற பெயர் இவருக்குக் கிடைத்தது என்கிறார்கள்.

பாட்டனாரின் ஞான பொக்கிஷத்தை ஆளவந்தாருக்குக்

காட்டிக் கொடுத்தவர் மணக்கால்நம்பி. சீடர் குருவைத் தேடி வரவில்லை; குருவே சீடரைத் தேடிப் போனுர். இப்படி ஆளவந்தாருக்குக் கிடைத்த பரம்பரைச் செல்வம், ஆழ்வார்கள் ஈட்டி வைத்திருக்கும் ஸ்ரீ வைஷ்ணவம் என்ற அரும்பெருஞ் செல்வம்தான், சிறப்பாகக் குலபதியான நம்மாழ்வார் நாதமுனி வாயிலாக அருளிய குலதனம்தான்.

இந்தச் செல்வத்தை ஆளவந்தாருக்குக் காட்டிய மணக்கால் நம்பி, பகவத் கீதையின் இரகசியங்களையும் இவருக்கு எடுத்துரைத்தார். கண்ணனின் அருள்மழையாகிய கீதா ரகசியமும் ஆழ்வார்களின் கீதமழையாகிய சரணுகதி தருமமும் ஒன்றே என்ற உண்மையையும் ஆளவந்தார் மணக்கால்நம்பி வாயிலாகக் கண்டுகொண்டார் எனலாம்.

ஒரு சமயம், மணக்கால்நம்பி ஆளவந்தாரைத் தனியாகத் திருவரங்கத்துக்கு அழைத்துக் கொண்டு போனுர். 'பாட்டனுர் உமக்கு வைத்திருக்கும் புதையலைக் காட்டுகிறேன்!' என்று ஆசை வார்த்தை காட்டித்தான் அழைத்துப் போனுர். தம்மை ஆளவந்தார் என்று அருமையாக அழைத்த அந்த அரசியின் தயவால் இவரும் ஒரு குறுநில மன்னராகி யிருந்தார். அந்தவைய வாழ்க்கைக்கு மேலும் மேலும் செல்வம் தேவைப்பட்டது. அந்த ஆசையைப் பயன்படுத்திக் கொண்டார் குரு.

மணக்கால்நம்பி குறிப்பிட்டது ஞான சம்பத்தைத் தான் என்பதை 'அந்த மகாவித்வானை வென்ற இந்தச் சிறுபிள்ளை' ஏன் உணர்ந்து கொள்ளவில்லை? போதத்தை மறைத்தது பொருளாசை. இந்த நிலையில், 'நாதமுனிகளின் பேரப் பிள்ளாய்! உம் பாட்டனுரின் பெருநிதி உமக்குத் தேவை இல்லையா?' என்று கேட்டதும், இந்த ஆசை அறிவுக் கண்ணை மூடிவிட்டது; தாற்காலிகமாகத்தான், லௌகிக அறிவுக் கண்ணைத்தான்! பாட்டனுரின் அருளும் ஆசியும் மணக்கால் நம்பி வடிவில் வந்திருக்கும்போது, என்ன குறை இருக்கமுடியும் ஆளவந்தாருக்கு? கூடப் புறப்பட்டார். மணக்கால்நம்பியை நிழல் போலத் தொடர்ந்தார்.

'ஆறிரண்டும் காவேரி, அதன் நடுவே சீரங்கம்' என்று தமிழ்நாடு எங்கும் தாய்மார் குழந்தைகளுக்கு ஒருவகைத் தாலாட்டு மெட்டில் நினைவூட்டுகிறுர்களே, அந்த ஆற்றிடைக் கோயிலுக்கு இருவரும் வந்து சேர்ந்தார்கள். மூலஸ்தானத்தி லுள்ள பெருமாளைச் சுட்டிக் காட்டி, 'அதோ, அருமைக் குழந் தாய்! அதோ, பாட்டனுர் வைத்து விட்டுப் போயிருக்கும் விலை மதிக்க முடியாத பெருநிதி!' என்று கூறினுர் மணக்கால்நம்பி.

மேதாவியான ஆளவந்தாரின் உள்ளத்தில் ஒரு கருந்திரை விலகியது ; ஒரே ஒளிக் கொள்ளையாக உதயமாயிற்று உண்மை ! அங்கே அப்பொழுதே அருள்பூத்த நெஞ்சு ஆனந்தமாய்க் கனிந்தது. தம்முடன் வந்தவரையும் மறந்தார் ; தம்மையும் மறந்தார். அப்படியே துறவு பூண்டு, பாட்டனாரின் ஸ்ரீவைஷ்ணவ நிதியை அள்ளி வழங்க விழைந்தது உள்ளம் ; வாரி வழங்கவும் விழைந்தது.

'இப்படி ஒரு நிதியைக் காட்டினாரே "புதையல் எடுத்த தனம் போலே !"—அந்த வழிகாட்டிக்கு, நம் நெஞ்சையே பரிசாகத் திறையாகக் கொடுப்போம் !' என்று திரும்பிப் பார்த்தார் : மணக்கால்நம்பியைக் காணவில்லை.

'வீராணத்து ஏரி' என்று சொல்லுகிறார்களே அந்த வீர நாராயணபுரத்து ஏரியின் வெள்ளம்போல் நாதமுனிகளின் ஞானவெள்ளம் தம் உள்ளத்திலே பாய்ந்துவிட்டது போன்ற உணர்ச்சி ஏற்படுகிறது ஆளவந்தாருக்கு. அந்த ஞான ஏரி மேலும் நிறைந்து விரிவு பெற்று ஆளவந்தாரின் ஸ்ரீவைஷ்ணவம் ஆகிறது!

**இங்கே** தாகமும் தாபமும் தீர்த்துக் கொண்ட சீடர்கள் பலர். இவர்களில் பெரியநம்பி, பெரிய திருமலைநம்பி, திருக்கோஷ்டியூர் நம்பி, திருக்கச்சிநம்பி, திருமாலையாண்டான், திருவரங்கப் பெருமாளரையர் முதலான சீடர்களை முக்கியமாகக் குறிப்பிடலாம்.

இந்தச் சீடர் குழாத்தில், இவரை 'ஆளவந்தாரே !' என்று அகம்குளிர அழைத்துக் கௌரவித்த இராஜபத்தினிக்கும் இடம் உண்டு. இவள் திருவரங்கத்து அம்மன் என்ற பெயருடன் சீடப் பெண்ணாகிக் குருமூர்த்திக்கும் ஸ்ரீவைஷ்ணவத்திற்கும் பணி புரிந்தாள் என்பர்.

இப்படி ஆண்களோடு பெண்களும், அரசரோடு ஆண்டிகளும், பார்ப்பனரோடு மாறனேர்நம்பி போன்ற திருக்குலத்தினரும் (ஹரிஜனரும்), ஆளவந்தாரின் அருளுக்கு இலக்காகி, ஸ்ரீவைஷ்ணவத் தொண்டர்குலம் என்ற ராஜகுலத்தைப் பெருகச் செய்தனர்.

ஆளவந்தாருக்கு இராமாநுஜரையும் சீடராகக் கூறுவதுண்டு. ஆனால், இவர் குருவை உயிருடன் சந்தித்ததில்லை. ஆளவந்தாரின் ஞானபக்தி வெள்ளம் பெரிய நம்பி முதலான பல கால்களாக ஓடிவந்து இவர் உள்ளத்தை நிரப்பியது. ஆளவந்தாரின் ஞான ஏரி நாளடைவில் ஒரு பெரிய ஊருணியாகிவிட்டது.

'இதுவோ நம் குலதனம்!' என்று கண்டு கொண்ட இராமாநுஜர், இதை மேலும் மேலும் பெருக்கிக் கொண்டு உலகத்திற்கே வாரி வழங்க ஆசைப்படுகிறார் என்பதை ஏற்கெனவே கண்டிருக்கிறோம்.

ஆளவந்தாரின் சீடர்களில் பெரிய திருமலை நம்பி என்பவரும் ஒருவர் அல்லவா? இவர் திருமலை என்ற திருப்பதியில் ஆண்டவனுக்கும் அடியவர்களுக்கும் பணி செய்து கொண்டிருந்தார். இவருக்கு இரு சகோதரிகள். மூத்தவள் காந்திமதி, ஸ்ரீபெரும்பூதூரிலே கேசவ சோமயாஜியாருக்கு வாழ்க்கைப் பட்டிருந்தாள். இவர்களது அருமைப் பிள்ளை இராமாநுஜர்.

கேசவ சோமயாஜியார் தம் கல்விப் பயிற்சியைப் பெரிய திருமலை நம்பியிடம் பூர்த்தி செய்து கொண்டார் என்பர். இவர் புதல்வரோ, துரோணருக்கு ஏகலைவன்போல், ஆளவந்தாரின் சீடராகிப் பெரும் பேறு பெற்றார்.

# 3

# பிறந்தார்; அறிவிலே வளர்ந்தார்

ஸ்ரீபெரும்பூதூர் சென்னை நகருக்குத் தென்மேற்கே சுமார் முப்பது மைல் தூரத்தில் காஞ்சீபுரத்துக்குச் செல்லும் வழியில் இருக்கிறது. இங்கே ஓர் அழகான பெரிய கோயில், பெருமாள் கோயில் ;—ஆதிகேசவப் பெருமாள். இக்கோயிலுக்கு அருகில் வேறொரு கோயில்; கூப்பிய கைகளுடன் காணப்படும் இராமா நுஜர் கோயில். இக் கோயில்களின் சுற்றுப்புறம் இன்றும் அழகாயிருக்கிறது.

சுமார் 950 ஆண்டுகளுக்கு முன் இத்தலமே ஒரு பூங்கா என்று சொல்லுமளவிற்குப் பொலிவுற்றிருந்தது. அழகுக்கும் இனிமைக்கும் அமைதிக்கும் ஆரோக்கியத்திற்கும் ஒரு நிலைய

மாகத்திகழ்ந்தது எனலாம்.

இத்தலத்தில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன், கேசவ சோமயாஜியாரின் குடும்பம் வசித்து வந்தது. ஆளவந்தாரின் காலட்சேபம் திருவரங்கத்தில் வெகு கோலாகலமாக நடை பெற்றுக் கொண்டிருந்த காலம் அது.

பாகவதகுலத் தலைவர் அவரே என்று கருதியது தென்னகம். படிப்பைப் போல் பணிவு, கருணை போல் கடுந்துறவு—இப்படியும் ஒரு லட்சிய புருஷர் இருக்க முடியுமா? 'ஆளவந்தார் இருக்கிறாரே!' என்று கண்டு அவநம்பிக்கை அகன்றது; ஐயம் திரிபுகள் ஒழிந்தன.

பெரிய திருமலைநம்பி என்ற ஸ்ரீசைலபூர்ணரின் சகோதரிகளில் மூத்தவளைக் காந்திமதி என்றும், பூதேவி என்றும், பூமிப் பிராட்டி என்றும் கூறுவதுண்டு. ஆம்; பொறுமைக்குப் பூமி தேவி இவள். இளைய சகோதரியோ பெரிய பிராட்டி என்றும், ஸ்ரீதேவி என்றும் பெயர் பெற்றிருந்தாள். இவள் மழலைமங்கலத்தில் கமலநயனபட்டரை மணந்துகொண்டு வாழ்க்கை நடத்தி வந்தாள்.

இந்தச் சகோதரியும் கேசவ சோமயாஜியாரின் தேவியான காந்திமதி அம்மையும், பெரிய திருமலை நம்பியின் அன்பிற்கும் வாழ்த்துக்கும் உரியவர்களாய், தத்தம் கணவர்களுக்கு உரிய அன்புப் பணிகள் புரிந்து இன்புற்று வாழ்ந்தனர். இவர்களுக்கு மணமானதுமே, தம் நெஞ்சைவிட்டு ஒரு பெருஞ்சுமை இறங்கி விட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது திருமலை நம்பிக்கு. இவர்களது மணவாழ்க்கை அமைதியாகவும் இனிமையாகவும் அமைந்து விட்டது கண்டு, திருமலை நம்பி பகவானுடைய வழி பாட்டிலும் தியானத்திலும் குருபக்தியிலும் தம்மை முழுக்க இழக்கலானார்.

இந்த நிலையில், கேசவ சோமயாஜியாருக்கும் காந்திமதிக்கும் புதல்வராகப் பிங்கள ஆண்டுச் சித்திரைத் திங்களில் சுக்கில பட்சத்துப் பஞ்சமியில் வியாழக்கிழமையும் திருவாதிரை நட்சத்திரமும் கூடிய சுபதினத்தில் குழந்தை பிறந்த செய்தி திருமலை நம்பியின் காதில் விழுந்தது. இவர் திருமலையிலிருந்து இறங்கிப் பெரும்பூதூருக்கு விரைந்தார்.

மாமா குழந்தையின் அழகைக் கண்ணுற்று வியந்தார், பெருமகிழ்வெய்தினார்.

**புத்தியின் கொழுந்தோ !**
**புண்ணியக் கொழுந்தோ !**

என்றும், 'பக்தியின் கொழுந்தோ!' என்றும் கொஞ்சினார்.

ராமபிரானின் தம்பியான லட்சுமணனின் லட்சணங்கள் பொருந்தியிருக்கின்றன இப்பிள்ளைக்கு என்று கருதி, லட்சும ணன் அல்லது இளையாழ்வார் என்ற பெயரைச் சூட்டினார் திருமலைநம்பி. இராமாநுஜன் என்பதற்கு இராமன் தம்பி என்று தானே பொருள்.

லட்சுமணனை ஆதிசேஷனின் அம்சம் என்று சொல்லு கிறார்கள். ஆதிசேஷன் பெருமாளுக்கு,

**சென்றால் குடையாம் ;**
**இருந்தால் சிங்காதனமாம் ;**
**நின்றால் மரவடியாம்......**

என்றெல்லாம், ஆழ்வார் அருளியவாறு, பணி புரிகிறான் அல்லவா ? இப்படி இராமனுக்குப் பணிபுரிந்த ஆதிசேஷனாக லட்சுமணனை மதித்தார்கள். லட்சுமணனைப் போல், ஆதி சேஷனைப் போல், இராமாநுஜரும் பணிபுரிய வேண்டும், பேரறிவுள்ளவராகவும் விளங்க வேண்டும் என்பது திருமலை நம்பியின் ஆசை.

காந்திமதியின் தங்கைக்கும் ஒரு புதல்வன் பிறந்தான். அந்தப் பிள்ளையுடன் அந்தத் தங்கையும் காந்திமதியின் இல்லத் திற்கு வந்திருந்தாள். அக்குழந்தைக்குக் கோவிந்தன் என்று பெயர் இடப்பட்டது.

கோவிந்தனைக் காந்திமதியும், இளையாழ்வாரை ஸ்ரீதேவியும் பார்த்துப் பார்த்துப் பரவசமாயினர். இரு சகோதரிகளையும் குழந்தைகளுடன் காந்திமதியின் இல்லத்தில் பார்த்துப் பரவச மான திருமலை நம்பி, முதுமை நீங்கி இளமை திரும்பிவிட்டது போன்ற குதூகலத்துடன் காணப்பட்டார்.

கேசவ சோமயாஜியாரின் மகிழ்ச்சியைச் சொல்லவா வேண்டும் ? சோம யக்ஞம் என்ற வேள்வி புரிபவர் சோமயாஜி என்று சொல்லப்படுகிறார். கேசவர் பல வேள்விகள் புரிந்தவர்.

எனினும், 'பிள்ளைப் பேறு வாய்க்கப் பெற்றேன் இல்லையே' என்று பெரிதும் வருந்தினார். திருவல்லிக்கேணிப் பார்த்தசாரதிப் பெருமாள் கோவிலுக்கு வந்து வழிபட்டார், தம் மனைவியான காந்திமதியுடன்.

'பிள்ளைமைச் செல்வம் பெற வேண்டும் ; பிள்ளையில்லாச் செல்வம் கள்ளியின் சோறு என்பது போலத்தான் !' என்று கருதி, திருவல்லிக்கேணியில் புத்திரகாமேஷ்டி யாகமும் செய்தார்.

குழந்தைப் பேறு வாய்த்தபின் கேசவ சோமயாஜியாரின் உள்ளம் பெருமாள்-பக்தியில் சிறப்பாக ஈடுபட்டது. இந்த நிலை

யில் திருக்கச்சி நம்பியுடன் தோழமையுணர்வும் அதிகரிக்கப் பெற்றார். இந்தத் தோழமையுணர்வு திருக்கச்சி நம்பிமீது பக்தியாகவும் கனிந்து வந்தது. இவர், கண்ணைக் காக்கும் இமைபோல் தம் அருமைப் பிள்ளையைப் பாதுகாத்து வந்தார்.

தாயான காந்திமதியும் தோழிகளான நங்கைமார்களும் வண்ணச் சிறு தொட்டிலில் கண்ணுக்கினிய குழந்தையை விட்டு, வைத்த கண் வாங்காமல் பார்த்துப் பார்த்துப் பேரின்பம் உற்றனர்.

**சித்திரையில் ஆதிரைநாள்**
**வந்துதித்த தேசிகனே !**

என்று தாலாட்டினார்கள்.

கேசவ சோமயாஜியாரின் குலம் விளங்கும், இவர் கிளை ளுரும் வாழ்ந்து போவர் என்றெல்லாம் தங்களுக்குள் பேசிக் கொண்ட பெண்மணிகள், அந்த உணர்ச்சிகளைப் பாட்டாக இசைத்து,

**கேசவனார் வாழக்**
**கிளைவாழக் கீர்த்திமிகும்**
**ஆசூரி வந்துதித்த**
**ஆரியனைச் சொன்னார் ஆர் ?**

என்று தாலாட்டிச் சீராட்டினார்கள்.

கேசவ சோமயாஜியாரின் வம்சத்தை 'ஆசூரி' வம்சம் என்று கூறுவதுண்டு. இவரை ஆசூரி கேசவாசாரியார் என்று அழைப்பவர்களும் உண்டு. ஆசூரி கேசவ தீட்சிதர் என்று குறிப்பிடுவோரும் உண்டு.

நான்கு மாதங்கள் கழிந்ததும், தாய் குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு, 'அதோ பார் உதய சூரியனை!' என்று காட்டினாள். 'அம்புலி மாமா! வா வா' என்று சந்திரனை விளையாட அழைக்குமாறு குழந்தைக்குச் சொல்லிக் கொடுத்தாள்.

இக் குழந்தைக்கு ஆண்டு நிறைவு முதலான விசேஷங்கள் முறையாக நடைபெற்றன. குழந்தையின் தளர்நடை அழகும் வளரும் வடிவழகும் அசாதாரணம் என்று ஆச்சரியப்பட்டவர் களும் உண்டு.

உரிய காலத்தில் உபநயனம் நடைபெற்றது. புறக் கண் களுடன் அறிவுக் கண்ணையும் மலர விழித்துப் பார்க்க வேண்டும் என்ற நினைவு அந்த உபநயன காலத்திலேயே ஏற்பட்டு விட்டது இராமாநுஜருக்கு!

வழக்கமான ஆரம்பக் கல்வித் துறையிலேயே இராமா நுஜரின் பேராற்றல் வெளிப்படலாயிற்று. இவர் பிரமசரிய

விரதம் பூண்டு தம் தந்தையாரிடம் ஆரம்பக் கல்வி கற்றார். இக் கல்வியைத் தாய் கற்பித்த அன்புக் கல்வி வளமுறச் செய்தது என்று கருதுவது மிகையாகாது.

'சுருதிகள் நான்கும் அறநெறிகள் யாவும் தெரிந்தவர்' என்ற நிலையையும் அடைந்தார். ஒரு தரம் கேட்ட பாடத்தை இவர் மறந்ததில்லை, அதன் பொருளையும் எளிதில் கிரகித்துக் கொண்டார். எனவே தந்தையாரும், இந்த ஆரம்பக் கல்வியைப் பூர்த்தி செய்து வைத்த வேறு ஆசிரியர்களும், 'மாணாக்கர் என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்?' என்று மகிழ்ந்து இவரைப் புகழ்ந்தார்கள்.

இவர் இளமையிலேயே வாழ்க்கையாகிய கல்விச் சாலையிலும் கற்கத் தொடங்கி விட்டார். காஞ்சீபுரத்தில் தொண்டர் குல விளக்காகத் துலங்கிய திருக்கச்சி நம்பிகளிடம் இவர் அடிக்கடி போய் வருவதுண்டு.

தந்தையாரின் அந்தத் தோழர், 'இளைஞர் தாமே!' என்று ஒதுக்காமல் இவரையும் தோழராகக் கொண்டார். பகவானைத் தியானிப்பவர்கள் என்றும் இளைஞர்கள், என்றும் குழந்தைகள்!- இது திருக்கச்சி நம்பிகளின் கொள்கை.

சிறுவராகிய இராமாநுஜரும், திருக்கச்சி நம்பியை 'முதியவர்' என்று நினைத்துப் பார்க்கவில்லை. காஞ்சீபுர வாசிகள் அனைவரும் இவரைப் பூவிருந்தவல்லி என்ற சிற்றூரிலிருந்து காஞ்சிமாநகருக்கு வந்து சேர்ந்த வைசிய குலத்தினர் என்பதை அறிந்திருந்தனர். பார்ப்பனர்களும் பிறரும் இவரைக் கௌரவித்தார்கள், வணங்கினார்கள்; இவருடன் உரையாடி ஆறுதல் பெற்றார்கள்.

அந்தக் காலத்தில் திருக்கச்சிநம்பி ஒவ்வொரு நாளும் பூவிருந்தவல்லிக்குப் போய் வருவார்; அங்கிருந்த ஒரு பெரிய நந்தவனத்திலிருந்து பூக்கொய்து வந்து வரதராஜப் பெருமாளுக்கு மாலை கட்டிச் சாத்துவது வழக்கம். பிறகு தம் சிறப்புப் பணியான ஆலவட்ட கைங்கரியத்தில் (பெருமாளுக்கு விசிறி வீசும் பணியில்) ஈடுபடுவார்.

இப் பெரியாரை ஒரு நாள் மாலைப் பொழுதிலே இராமாநுஜர், தம் ஆரம்பப் பள்ளி ஆசிரியர் ஒருவர் வீட்டிலிருந்து திரும்பி வரும் வழியில், சந்தித்தார். இது முதலாவது சந்திப்பு.

சிறுவரின் தேசு பொலிந்த திருமுகம் திருக்கச்சி நம்பியின் கருணை — ஊற்றுகளான கண்களைக் கவர்ந்தன. இவரும் அவரால் பெரிதும் வசீகரிக்கப் பெற்றார். 'இனம் இனத்தோடே!' என்பது போன்ற ஒருவகை உணர்ச்சி எப்படியோ இச்சிறுவர்

உள்ளத்திலும் அப்பெரியவர் உள்ளத்திலும் ஒரே சமயத்தில் ஏற்பட்டுவிட்டது.

'பகவானுக்குப் பணி செய்துவரும் இந்தப் பாகவதருக்கு நாம் பணிசெய்ய வேணும்; வாய்த்திடும் நாள் என்றோ?' என்ற எண்ணம் சிறுவரின் மேதையுள்ளத்தில் பளிச்சென்று தோன்றியது.

பாடசாலைகளில் கற்றுக்கொண்டதைவிட அதிக அளவில் திருக்கச்சிநம்பியின் வாழ்க்கை வரலாற்றிலிருந்து இராமாநுஜர் சில பாடங்களைக் கற்றுக் கொண்டார் எனக் கருதலாம். நம்பி, தம் தந்தையார் தம்மிடம் கொடுத்திருந்த வாணிப நிதியை அன்பர்பணியிலும் ஆண்டவன்பணியிலும் செலவிட்டபின், 'நீ சேமித்தநிதி எங்கே?' என்று கேட்ட அத் தந்தையாருக்கு, 'பரத்திலே சேமித்து வைத்தேன்!' என்று பதில் சொன்னாராம்: அந்த வரலாற்றுத் துணுக்கு இராமாநுஜரைப் பெரிதும் வசீகரித்தது.

காஞ்சீபுரத்தில் திருக்கச்சிநம்பி உயர்ந்த சிந்தனைகளுடன் எளிய வாழ்க்கை நடத்திவந்ததும் இராமாநுஜரைக் கவர்ந்தது. தம் தந்தையாருக்கு இவரிடம் உள்ள நட்பும் நம்பிக்கையும் இராமாநுஜரின் மதிப்பை அரண் செய்து திருக்கச்சிநம்பி மீது இவர் கொண்ட பக்திவிசுவாசத்தைப் பெருக்கியது. பண்புத் திறமை காட்டிய ஆசிரியர்களைக்காட்டிலும் பாமரர் போல் காணப்பட்ட திருக்கச்சிநம்பி இராமாநுஜரின் இளமையுள்ளத்தை வசமாக்கி மலரச் செய்தார் என்று கருதுவது பொருந்துவதே.

பதினாறாம் பிராயத்தில் இராமாநுஜருக்குத் திருமணம் இனிது நிறைவேறியது. மனைவிக்குத் தஞ்சமாம்பாள் என்று பெயர். திருமண வைபவமும் விருந்துகளும் விமரிசையாக நடந்தன.

இராமாநுஜரின் மனைவி உருவ அழகு உள்ளவள்; அகத்தே இசைந்த குண சௌந்தரியம் வாய்க்கப்பெற்றவள் என்று சொல்வதற்கில்லை. ஆனால் அப்போது இந்த நிலைமையைக் கணவரோ, காந்திமதி அம்மையோ, கேசவ சோமயாஜியாரோ உணர்ந்து கொண்டதாகத் தோன்றவில்லை.

திருமணம் நடந்த ஒரு மாதத்திற்குப்பின் கேசவசோமயாஜியார் நோய்வாய்ப்பட்டு மரணமடைந்தார். காந்திமதியம்மை மிகவும் சோகமுற்றாள். இராமாநுஜரும் சிறிது காலம் சோகமுற்றிருந்தார். எனினும், தமது ஞானசக்தியாலும் கச்சிநம்பிகளின் கூட்டுறவால் கிடைத்திருந்த பக்தியாலும் தம்மைத் தேற்றிக்கொண்டார். பிறகு தாயையும் ஒருவாறு தேற்றினார்.

கேசவ சோமயாஜியார் காலமானபின் கொஞ்சகாலம்தான் ஸ்ரீபெரும்பூதூரில் இராமாநுஜரின் குடும்பம் தங்கியிருந்தது. அப்பால் காஞ்சீபுரத்தில் வீடு கட்டிக்கொண்டு குடியேறி இராமாநுஜர் தம் குடும்பத்துடன் வாழ்க்கை நடத்திவந்தார். திருமணமான பின்பும் இராமாநுஜர், தம் கல்வி தொடர்ந்து நடைபெறவேண்டுமென்று விரும்பினார்.

காஞ்சீபுரத்தைச் சேர்ந்த திருப்புட்குழியில் யாதவப் பிரகாசர் என்ற வேதாந்தி ஒருவர் மாணாக்கர் பலருக்கும் வேதாந்த பாடங்கள் கற்பித்துவந்தார். அந்த மாணவர் குழுவிலே இராமா நுஜரும் சேர்ந்து கற்க விரும்பினார். இதிலிருந்து, இராமாநுஜரின் விவேகமோ வைராக்கியமோ விவாகத்தால் ஒரு சிறிதும் பாதிக் கப்படவில்லை என்று ஊகிக்கலாம்.

காந்திமதியம்மையின் சகோதரி ஸ்ரீதேவியின் புதல்வரான கோவிந்தபட்டர், திருப்புட்குழியில் இராமாநுஜர் வேதாந்தம் கற்கிறார் என்று கேள்விப்பட்டதும், தம் தாயிடம் சென்று, ' அம்மா, நானும் காஞ்சிக்குப்போய் யாதவப்பிரகாசரின் மாணவ ராகி இராமாநுஜருடன் வேதாந்தம் கற்க விரும்புகிறேன் ' என்று தெரிவித்தார். அவளும் சம்மதிக்க, கோவிந்தர் குதூகல மாய்ப் புறப்பட்டுக் காஞ்சிக்கு வந்து சேர்ந்தார்.

அந்த நாளில் குருகுலக் கல்விமுறை நடைபெற்றது. அந்த முறைக்கு இணங்க, அயலூர் மாணவர்கள் எல்லாம் யாதவப் பிரகாசரின் இல்லத்திலேயே தங்கிக் கல்வி பயின்று வந்தனர். இராமாநுஜரோ காஞ்சியிலுள்ள தம் இல்லத்திலிருந்தே யாதவப் பிரகாசரின் வேதாந்த பாடசாலைக்குப் போய்வந்தார். கோவிந்த பட்டரும் இராமாநுஜரின் இல்லத்திலிருந்து இவருடன் அந்தப் பாடசாலைக்குப் போய் வேதாந்தம் கற்றுவந்தார்.

# 4

# வேதாந்தக் கல்வியும் காசியாத்திரையும்

இராமானுஜரின் முகப்பொலிவிலும் குணநலத்திலும் மதி நலத்திலும் யாதவப்பிரகாசர் முதல் முதல் ஈடுபட்டார். இவரைத் தமது முக்கிய சீடராக மதித்ததும் உண்டு. எனினும், இந்தக் குருசிஷ்ய அன்பு நீடித்திருக்கவில்லை. யாதவப்பிரகாசரின் வேதாந்தக் கொள்கையில் இராமானுஜரின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்திருந்த பக்திநெறிக்கு இடம் இல்லை ; ஆண்டவனுக்கும் அடியவர்களுக்கும் பணிபுரிவதிலேயே பேரின்பநிலை எய்தப் பெறும் என்ற கொள்கைக்கோ, அருள் நெறிக்கோ இடமில்லை.

யாதவப்பிரகாசரின் வேதாந்த விளக்கங்களை மறுத்து இராமானுஜர் வேறு விதமாகப் பொருள் கூறத் துணிந்தார்.

யாதவர் கூறும் அத்வைதப் பொருள்களையெல்லாம் அமைதியாக உள்ளத்தில் பதியவைத்துக்கொண்டு ஆற அமர அலசி ஆராய்ந்து, 'நம் பக்திநெறிக் கொள்கைக்கு இணங்குமோ?' என்று பார்த்தார்; குருவின் காதிலும் விழும்படி உரக்கச் சிந்தித்தார். தர்க்கம் செய்து குருவையும் தம் வழியில் சிந்திக்குமாறு தூண்டமுடியுமா என்றும் முயன்று பார்த்தார். யாதவரோ, இவர் வார்த்தைகளைப் புறக்கணித்துப் பராமுகமாயிருந்து விடுவார்.

எனினும், இராமாநுஜர் தாம் குருவுக்குச் செய்யவேண்டிய பணிகளையும் மரியாதைகளையும் செய்யத் தவறவில்லை. அதனால், யாதவப்பிரகாசருக்கு இவர்மீதுள்ள அபிமானம் முற்றும் குறைந்து விடவில்லை. மற்ற மாணுக்கர்களைப் போல் இவரையும் ஏவிக் கூவிப் பணிகொள்வார்.

சீடர்கள் பணிகளில் ஈடுபட்டிருக்கும் போதும், அவர்களுக்குக் குரு கற்பிப்பார். இப்படியிருக்க, ஒரு நாள் இராமாநுஜர் யாதவப் பிரகாசருக்கு எண்ணெய் தேய்க்கும் பணியில் ஈடுபட்டிருக்கும் போது, மாணுக்கர் ஒருவர் வேதவாக்கியம் ஒன்றுக்குப் பொருள் கேட்டார்.

அதற்கு யாதவப்பிரகாசர் சொன்ன பதில் இராமாநுஜருக்கு மிக்க அதிருப்தியையும் மனவருத்தத்தையும் உண்டாக்கி விட்டது. சாந்தோக்ய உபநிஷதத்தில் வரும் வாக்கியம் அது. முதல் அத்தியாயத்தின் ஆருவது பிரிவில் ஏழாவது மந்திரத்தின் முற்பகுதியில் 'கப்யாஸம்' என்று வரும் வார்த்தைக்குச் சங்கராசாரியர் கூறியிருந்த பொருளை யாதவப்பிரகாசர் எடுத்துக் காட்டியதும், இராமாநுஜர் 'அது உசிதமானதன்று' என்ருர்.

சூரியமண்டலத்தினுள்ளே உறையும் புருஷனுடைய கண்கள் சூரியகிரணங்களால் மலரும் தாமரைகளை ஒத்திருக்கின்றன என்பது அந்த மந்திரப் பகுதியின் பொருள் என்ருர் இராமாநுஜர்.

இப்படி இவர் கூறுவதற்கு முன்பே இவர் கண்களிலிருந்து 'கோபம் கொதித்த' கண்ணீர் கன்னங்களில் ஓடித் துளிதுளியாக யாதவப் பிரகாசரின் தொடைமீது விழுந்தது. யாதவப்பிரகாசர் பார்த்து விட்டார்; திகைத்தார்; திடுக்கிட்டார். இராமாநுஜர் யாதவரின் பொருள் விபரீதமானது என்றதும், அந்த வார்த்தை யாதவர் உள்ளத்தைப் புண்ணுக்கி விட்டது.

யாதவப்பிரகாசர் சினந்து சீறி, 'நாம் சொன்னபடி கேட்க விரும்பினுல்தான் இங்கே நம்மிடம் வாசித்துக் கொண்டிருக்கலாம். இல்லையாகில் நம்மைவிட்டுப் போகலாம்' என்று சொல்லி

விட்டார். எனினும், இராமாநுஜர் பனிச்சென்று யாதவரை விட்டுப் போய்விடவில்லை.

தைத்திரிய உபநிஷதத்தில் 'ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரம்ம' என்று வரும் மந்திர வாக்கியத்திற்கு யாதவப் பிரகாசர் கூறிய பொருளையும் இராமாநுஜர் வெகு விநயமாகவும் உசிதமாகவும் தர்க்கரீதியில் மறுத்தார். இதுவும் குருவுக்கு அதிக அளவில் அதிருப்தி விளைக்கத்தான் செய்தது. இந்த நிலையில் 'இனி என்ன செய்வது?' என்பது குறித்து இராமாநுஜர் ஆலோசனை செய்து கொண்டுதான் இருந்தார்; யாதவப் பிரகாசரும் இது குறித்து ஆலோசனை செய்த வண்ணமாயிருந்தார்.

இராமாநுஜரின் ஆலோசனைகள் **நன்முறையைத்** தழுவிச் சென்றன; யாதவரின் ஆலோசனைகளோ **வன்முறையையும்** நாடத் துணிந்தன.

ஒருநாள் யாதவப் பிரகாசர் தமக்குப் பிரியமான சீடர்களை இரகசியமாகக் கூட்டி வைத்துக்கொண்டு அவர்களுடன் கலந்து ஆலோசித்தார். 'பிள்ளைகளே, நீங்களெல்லாம் நாம் சொல்லும் பொருளை ஒப்புக்கொள்ள, அந்த இராமாநுஜர் மட்டும் எப்போதும் நமக்கு எதிர்த் தட்டாய் நின்று போரிடுகிறாரே! அவரால் நம்முடைய வேதாந்தத்திற்கு அபாயம் ஏற்படுமோ என்று அஞ்சுகிறேன். வருமுன் காப்பாக அவருக்கே அபாயம் விளைத்து நம் வேதாந்தத்தைக் காப்பாற்றிக் கொள்வதில் தவறில்லை யென்றே எனக்குத் தோன்றுகிறது' என்று கூறினார்.

'அதற்கு என்ன செய்ய வேண்டும்?' என்று அவர்கள் ஆலோசித்துப் பார்த்தார்கள். 'அவரை நம் பாடசாலைக்கு வர வேண்டாமென்று கண்டிப்பாகச் சொல்லி விடலாமே' என்றான் ஒரு மாணாக்கன். 'இதிலும் ஆபத்து இருக்கிறது. அவர் நம் குருநாதருக்குப் போட்டியாக வேறொரு வகையில் வேதாந்தப் பிரசாரம் செய்யத் தொடங்கிவிட்டால் என் செய்வது?' என்றான் வேறொரு மாணாக்கன். கடைசியாக, 'எல்லா விவகாரங்களும் முடிந்து போகும்படி ஆளை முடித்து விடுவதிலும் தவறில்லை!' என்று முடிவு கட்டினார்கள்.

'இந்த முடிவை நிறைவேற்றுவது எப்படி?' என்பது குறித்தும் ஆலோசனை செய்தார்கள். 'கங்கையில் இராமாநுஜர் மூழ்கிப்போய்விட்டால் நல்லதுதானே!' என்றார் யாதவப்பிரகாசர். அதற்காக இராமாநுஜரையும் கூட்டிக்கொண்டு ஒரு நல்ல நாள் பார்த்துக் காசியாத்திரைக்குப் புறப்படலாமென்று தீர்மானித்தார்கள்.

யாதவப்பிரகாசர் தம் பொறுமையையும் பகைமையுணர்ச்சி

யையும் வெகு சாமர்த்தியமாக மறைத்துவைத்துக் கொண்டார். இராமாநுஜரிடம் ஆதியில் காட்டிய பேரன்புடன் மீண்டும் நடந்துகொள்வது போலவும் நடித்தார். கள்ளங்கவடற்ற குழந்தையுள்ளங் கொண்ட இராமாநுஜரோ யாதவப்பிரகாசர் முதலானவர்களுடன் கங்காயாத்திரைக்குச் சித்தமாகித் தம் அன்னையிடம் விடைபெற்றுக் கொண்டார்.

சிற்றன்னையின் புதல்வராகிய கோவிந்தபட்டருக்கு இராமாநுஜர் மீதுள்ள அன்பு ஒரு தனிப்பட்ட ரகத்தைச் சார்ந்தது. ஏறக்குறையச் சமவயது. இருவரும் சேர்ந்தே கல்வி பயின்றும் பொழுதுபோக்கியும் வந்தார்கள். இவர்களுக்குத்தான் கல்வி வேறு, பொழுதுபோக்கு வேறு என்பதில்லையே.

**வாசித்தும் கேட்டும்**
**வணங்கி வழிபட்டும்**
**பூசித்தும் போக்கினேன்**
**போது**

என்று கூறியிருக்கும் ஆழ்வாரைப் போலவே இவர்களும் பொழுது போக்கி வந்தனர் எனலாம். இந்த நிலையில், இராமாநுஜருடன் கோவிந்தரும் காசியாத்திரை புறப்படத் தயாராகிவிட்டார்.

இதற்கு ஓர் அடிப்படைக் காரணமும் உண்டு. யாதவப் பிரகாசருடன் வாக்குவாதங்கள் ஏற்பட்டதால் இராமாநுஜர் சிறிதுகாலம் ஆசிரியருடனும் அவருக்குப் பிரியமான சீடர்களுட னும் நெருங்கிப் பழகுவதை நிறுத்தியிருந்தார். இந்த நிலைமை, இவரைக் கொல்லச் சதிசெய்தவர்களுக்கு ஓரளவு வசதி அளித் தது. அந்தச் சதியாலோசனையில் கோவிந்தபட்டர் கலந்து கொள்ளவில்லை என்பதைச் சொல்லவா வேண்டும்? இவர் கலந்து கொள்வார் என்று யாதவப்பிரகாசரும் எதிர்பார்த்திருக்க முடியாது. எனினும், வழக்கம்போல் கோவிந்தர் மற்றச் சீடர் களுடனும் குருவுடனும் ஓரளவு நெருக்கமாகவே பழகிவந்ததால், சதிகளையும் சூழ்ச்சிகளையும் பற்றிய செய்தி இவர் காதிலும் சற்று விழத்தான் செய்தது.

விவரங்களை அறிந்திராவிட்டாலும், கங்காயாத்திரை இராமாநுஜரைக் கங்கையிலே ஆழ்த்திவிடத்தான் முக்கியமாக நடைபெறுகிறது என்பதைக் கோவிந்தர் தெரிந்துகொண்டிருந் தார். ஆகவே, தாம் இராமாநுஜருக்குப் பாதுகாப்பாக உதவ வேண்டும் என்ற எண்ணமும் இவரை இந்த யாத்திரையில் கலந்துகொள்ளத் தூண்டிவிட்டது. ஏன், இதுவே இவர் இராமா நுஜருடனும் பிறருடனும் காசியாத்திரை செய்யப் புறப்பட்டதற்கு முக்கிய காரணம் என்று கருதுவதும் பொருத்தமே.

வழியில் இராமாநுஜரும் கோவிந்தரும் சந்தித்துப் பேசிக் கொள்ளாதபடி அவ்வளவு ஜாக்கிரதையாக, யாதவப்பிரகாசரின் நம்பிக்கைக்கு உரிய சீடர்கள் இராமாநுஜரைக் கவனித்துவந்தார்கள். இவரிடம் அளவு கடந்த பாசம் கொண்டவர்கள் போலவும் இவரைச் சிறப்பாய்ப் பாதுகாக்கும் நேசர் போலவும் நடந்து கொண்டார்கள்.

இந்த யாத்திரைக் கூட்டத்தினர் விந்தியமலைப் பிரதேசத்திற்கு வந்து சேர்ந்தார்கள். இங்குள்ள காடுகள் ஒரே அழகுக் காட்சியாய் யாத்திரிகளுக்குக் கண்விருந்தாயிருந்தன. இராமாநுஜருக்கோ, இந்த அழகுகளெல்லாம் அழகனாகிய எம்பெருமானை நினைவூட்டின. பக்திநிறைந்த உள்ளம் இயற்கை அழகுகளையும் இறையழகின் கூறுகளாகவே அனுபவித்துப் பூரித்துப் போயிற்று.

ஆனால், வழக்கமாக இராமாநுஜரின் உணர்ச்சிகளோடு ஒன்றி நின்று எல்லாவற்றையும் பார்த்து அனுபவிக்கும் கோவிந்தபட்டரின் உள்ளம், 'இராமாநுஜருக்கு என்ன ஆபத்து நேரிடப் போகிறதோ? எப்போது, எப்படி, ஏற்படப் போகிறதோ?' என்ற ஒரே கவலையில் ஆழ்ந்திருந்தது. எனவே, இவரால் விந்திய மலையின் விந்தைக் காட்சிகளை இராமாநுஜரைப் போல் அனுபவிக்க முடியவில்லை. யாதவரை உள்ளிட்ட சதிக் கும்பலுக்கோ, அகஇருள் என்ற திரை காட்சிகளின் அழகை மறைத்துவிட்டது.

சதியாளர்கள் மிதமிஞ்சிய கவனத்தையும் போலி அன்பையும் இராமாநுஜர்மீது பொழிந்து வந்ததால், இவருடன் தனித்து உரையாடுவதற்கு வாய்ப்பே இல்லாமற் போய்விடுமோ என்று கூட அஞ்சினார் கோவிந்தபட்டர். எனினும் இறைவனருளால் ஒரு வாய்ப்பு நேர்ந்தது.

ஒருநாள் அதிகாலையில் எழுந்து இராமாநுஜர் காலைக்கடன் முடித்துக் கொள்ள ஒரு பொய்கைக்குச் சென்றார். அந்தப் பொய்கை மரங்களாலும் செடிகொடிகளாலும் புதர்களாலும் மறைக்கப்பட்டிருந்தது. அங்கே இராமாநுஜர் சென்றதும், தமது சகோதரரின் நலங்குறித்த கவலையால் உறங்காது விழித்துக் கொண்டிருந்த கோவிந்தபட்டர் வேறு எவருக்கும் தெரியாமல் மெல்லத் தொடர்ந்து சென்றார்.

இராமாநுஜரின் தோளைக் கோவிந்தர் மெதுவாகத் தொட்டதும், இவர் திடுக்கிட்டு வியப்புடனும் சற்றுப் பயத்துடனும் திரும்பிப் பார்த்தார். கோவிந்தரைக் கண்டதும் இளநகை அரும்பினார். உடனே கோவிந்தர், 'இங்கே நாம் சாவகாசமாய்ப் பேசிக் கொண்டிருக்க முடியாது. உம்மைக் கொன்று

தீர்த்துவிடச் சதி ஒன்று உருவாகிச் செயற்படவும் தொடங்கி விட்டது ' என்று எச்சரிக்கை செய்தார்:

' அதுதான் இந்த யாத்திரைக்குக் காரணமாகவும் அமைந் திருக்கிறது. அண்ணலே! ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும். இப்போதே தப்பிவிடுவதுதான் நலம் என்று எனக்குத் தோன்றுகிறது. அவர்கள் நம்மைத் தேடி வருவதற் குள் நான் போய்விடுகிறேன். பகவானின் அருளும் உம்முடைய தூயஉள்ளமும் உம்மைக் காப்பாற்றும். போய் வருகிறேன்; அண்ணு! போய் வருகிறேன் ' என்று சொல்லிவிட்டுத் திரும்பிப் போய்விட்டார் கோவிந்தர்.

அந்தக் காட்டுச் சோலைக்கிடையே கோவிந்தரின் தலை மறைந்ததும், இராமானுஜருக்குத் 'திக்பிரமை' பிடித்தது போன்ற உணர்ச்சி முதல் முதல் ஏற்பட்டது. ' நான் தன்னந் தனியனுகி விட்டேன் ' என்ற உணர்ச்சியும் ஏற்பட்டது. எனினும், பக்தி நிறைந்த ஞானப் பொய்கையான உள்ளம் விரைவில் ஆண்டவ னின் அருளால் தெள்ளத் தேறித் தெளிந்தது. அந்தச் சிற்றஞ் சிறு காலையின் சிற்றொளியிலே இவர் ஒற்றையடிப் பாதை ஒன்றைக் கண்டுபிடித்து அவ்வழியே நடந்து சென்றூர்.

பொழுது புலர்ந்தது. யாதவப்பிரகாசரும் சீடர்களும் இராமானுஜரைக் காணுமல் திகைத்தார்கள். எல்லாரும், ' இளை யாழ்வார் எங்கே? எங்கே?' என்று தேடத் தொடங்கினர். அந்தக் காட்டுப் புறமெங்கும் தேடிப் பார்த்தார்கள். சில இடங் களில் எதிரொலிகள் கேட்டனவே அன்றி, இராமானுஜரைப் பற்றிய செய்தி ஒன்றும் தெரியவில்லை.

சிற்சில இடங்களில் காணப்பட்ட வேடர்களும், ' நாங்கள் உங்களைத் தவிர வேறு எந்த யாத்திரிகரையும் இந்த அடர்ந்த காட்டில் சந்திக்கவில்லையே ' என்று சொல்லி விட்டார்கள். கோவிந்தரோ வாய் திறந்து ஒன்றுமே சொல்லவில்லை. இதற்குக் காரணம் ' சகோதரரைப் பறிகொடுத்தோமே ' என்ற தாங்க முடியாத துயரமாகத்தான் இருக்க வேண்டும் என்று யாதவப்பிரகாசரும் பிறரும் தீர்மானித்தார்கள்.

இவருக்கு அவர்கள் ஆறுதல் கூறத் தொடங்கினுர்கள். ' ஐயோ, பாவம்! எந்தக் காட்டு விலங்கோ கொன்றிருக்க வேண்டும்; என் செய்வது? விதியை வெல்ல முடியுமா?' என்று சொன்னுர்கள். ' எப்படியும் இந்தக் காசி யாத்திரை உன் மனப் புண்ணுக்கு மருந்தாகிவிடும். கோவிந்தா! கவலைப்படாதே ' என்றூர் யாதவப்பிரகாசர்.

இராமானுஜர் தப்பிவிட்டார் என்பது தெரிந்திருந்தும்

கோவிந்தரால் கவலைப்படாமல் இருக்க முடியவில்லை. அது எப்படிச் சாத்தியமாகும்? 'வழியில் என்ன ஆபத்து ஏற்படக் கூடுமோ? ஒரு காட்டுப் புலி எதிர்ப்பட்டுக் கொன்றுவிட்டால், பெரியம்மாவுக்கு என்ன சமாதானம் சொல்லப் போகிறேன்?' என்று கவலைப்பட்டார் கோவிந்தர். 'எப்படியும் இந்தப் பாவிகளின் நோக்கம் பலித்துவிடுமோ?' என்று அஞ்சினார்.

யாதவப்பிரகாசர் கோவிந்தரை நோக்கி, 'கோவிந்தா, நாம் வேதாந்திகள்; ஆசாபாசங்களை வேரறுக்கத் துணிந்தவர்கள். உன்னுடைய வேதாந்த அறிவுதான்—நான் உனக்கு அளித்திருக்கும் வேதாந்தக் கல்விதான்—இப்போது உனக்குத் துணையாகவேண்டும். யார் யாருக்கு உறவு? சந்தைக் கூட்டம் தானே உறவும் நட்பும், ஊரும் நாடும்! மேலும் ஆத்மாவுக்கு மரணம் ஏது? உண்மையிராமாநுஜர் மரணமற்றவரே! ஞானம் பெற்றிருந்தால் அதுவுடன் அதுவாய்ப் போயிருப்பார்! உள்ளத்தில் வீணான கவலைக்கோ சோகத்திற்கோ இடம் கொடுப்பது பொருந்தாது' என்றெல்லாம் ஒரு வேதாந்தச் சொற்பொழிவே செய்யத் தொடங்கிவிட்டார்.

இப்படி வாய் பேசும்போதே, இந்த வேதாந்தியின் உள்ளம், 'இராமாநுஜர் கங்கைகழுவிச் செத்தால் என்ன, கரடி தழுவிச் செத்தால் என்ன? எப்படியாகிலும் நமது நோக்கம் நிறைவேறிவிட்டது' என்று திருப்தியடைந்தது. பிறகு யாதவப் பிரகாசரின் குழாம் காசி நோக்கிச் சென்றது.

'ஒரு வழி கிடைத்ததே இந்தக் காட்டில்!' என்று முதல் முதல் இராமாநுஜர் இன்புற்றுச் சென்று கொண்டிருந்தார். 'எப்படியும் ஆண்டவன் நமக்கு அருள்வழி காட்டுவான், வேதாந்தக் காட்டிலும் வழி காட்டுவான்!' என்று எண்ணமிட்டவராய்ப் போய்க் கொண்டேயிருந்தார். அப்போது இவருக்கு வயது பதினெட்டு.

திடீரென்று குறுக்கும் நெடுக்குமாகச் சென்ற பல்வேறு காட்டு வழிகளைக் கண்டதும், இவர் காஞ்சியை நோக்கிச் செல்வதற்கு உரிய வழியைக் கண்டுபிடிக்க இயலாது தவிக்கலானார். வழி வினவித் தெரிந்து கொள்ளலாம் என்றால், அந்தக் காட்டுப் பகுதியில் மனித சஞ்சாரமே இல்லை என்று தோன்றியது. காட்டு விலங்குகளின் சுவடுகளைத் தவிர, காட்டுமனிதர்களின் அடிச்சுவடுகளையும் காண்பதற்கில்லை.

'பாதையில்லாத பாதை இது!' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டு ஒரு திசையில் வெகு கஷ்டத்துடன் சென்று கொண்டிருந்தார். கால்கள் முள்ளுச் செடிகளை மிதித்ததால்

வீங்கி இரத்த மயமாகி விட்டன. புதர்களும் மரக்கிளைகளும் பட்டுப் பொன்னுன மேனியைப் புண்ணுக்கிவிட்டன. களைப்பும் பசியும் அதிகரித்தன; தாகமும் நாவறட்சியும் ஏற்பட்டன.

இராமாநுஜர், 'இனிமேல் நாம் என்ன செய்ய முடியும்? என்ற நினைப்பில் அப்படியே சோர்ந்து, ஒரு மரத்தடியில் சாய்ந்து விழுந்து விட்டார்; மூர்ச்சித்துக் கிடந்தார்.

மூர்ச்சை தெளிந்து விழித்துக் கொண்டபோது, தமக்கு ஏதோ ஒரு புதிய சக்தி ஏற்பட்டுவிட்டது போன்ற உணர்ச்சியுடன் அங்கும் இங்கும் பார்த்தார். 'நெஞ்சமே! அஞ்சுவதேன்? எங்குமுள்ள நாராயணனின் காப்பில் அல்லவா நீயும் நானும் இருக்கிறேம்?' என்று தமக்குள் தாமே சொல்லிக் கொண்டவராய்ப் பளிச்சென்று ஒரு வேடனைப் பார்த்து விட்டார்.

அவனை மட்டுமா?—அவனுடைய மனைவியையும் கண்ணுற்ருர். அவர்கள் இவருக்கு அருகே வந்து, 'குழந்தாய்! இந்தக் காட்டிலே வழிதவறி வந்துவிட்டாயா? உன் ஊர் எது?' என்று பரிவுடன் கேட்டார்கள்.

முதல் முதல் 'இது கனவா, நனவா?' என்றுகூட ஐயம் தோன்றியது இராமாநுஜருக்கு. 'தெற்கே காஞ்சீபுரம் என் இருப்பிடம்' என்று பதில் சொல்லிவிட்டு, 'அது வெகு வெகு தூரத்திலிருக்கிறது' என்று பெருமூச்சு விட்டார். அப்போது வேடன், 'இந்தக் காட்டுப் பகுதியில் திருடர்களின் ஒளிப்பிடங்கள் உண்டு; அவர்கள் காட்டு விலங்குகளைக் காட்டிலும் கொடிய விலங்குகளாக வாழ்க்கை நடத்துகிருர்கள்! இளைஞனே! இந்த அபாயமான இடத்திற்கு எப்படியோ வந்து விட்டாயே!' என்று அனுதாபத்துடன் கூறினுன்.

அந்த வேட்டுவ தம்பதியை நோக்கி இராமாநுஜர், 'உங்கள் இருப்பிடம் எதுவோ? நீங்கள் யாரோ?' என்று கேட்டுக் கொண்டே, தம் பலவீன நிலையை ஒருவாறு சமாளித்துக் கொண்டு முழங்கைகளை ஊன்றி மெல்ல எழுந்தார்.

'நாங்கள் இந்த விந்திய மலையின் அடிவாரத்துக் காட்டுப் புறத்திலுள்ள ஒரு வேடச்சேரியைச் சேர்ந்தவர்கள்; இராமேச்வரம் போகிறேம். காஞ்சீபுரத்தின் வழியாகத்தான் போவோம். உன்னைப் பார்த்தால் நல்ல பிள்ளை என்று தோன்றுகிறது, எவ்வளவு லட்சணமாய் இருக்கிருய்! பயப்படாமல் எங்களுடன் வா' என்று வேடன் பதில் சொன்னுன்.

முதல் முதல் வேடனுடைய கரிய நெடிய உருவமும் சிவந்த கண்களும் இவரைச் சற்றுப் பயமுறுத்தின; ஆனுல் வேட

தம்பதியின் முகங்களில் குடிகொண்டிருந்த அன்பும் அமைதியும், வேடனது சொற்களின் போக்கும் இவரது பக்தியுள்ளத்தில் பிறந்த புதிய தெம்பை உறுதிப்படுத்திவிட்டன. இராமாநுஜர், ' அப்படியே செய்வேன் ' என்று அவர்களைப் பின்பற்றிச் செல்லத் துணிந்தார்.

அருகிலுள்ள ஒரு நீர்நிலையை அந்த வேடர்கள் காட்ட, அதில் இவர் தாகசாந்தி செய்துகொண்டார்; அந்தக் குளக் கரையில் தம் கைக்கு எட்டிய காய்கனிகளால் ஒருவாறு தம் பசியையும் தீர்த்துக்கொண்டார். இந்த வேலைகளை வெகு விரைவில் முடித்துக் கொண்டு இராமாநுஜர் அவர்களைத் தொடர்ந்து புறப்பட்டதும், வேடன் இவரை நோக்கி, ' அப்பா, நாம் வெகு வேகமாய் இந்தக் காட்டுப் பிரதேசத்தைக் கடந்து செல்ல வேண்டும்; இல்லாவிட்டால் பேராபத்து வந்துவிடும். நான் உன்னைப் பயமுறுத்தவில்லை; ஜாக்கிரதைப்படுத்துகிறேன். அவ்வளவுதான் ' என்று சொன்னான்.

இராமாநுஜர் காதில் இந்தச் சொற்கள் விழுந்ததும், பலவீன உணர்ச்சிகளெல்லாம் மாயமாக மறைந்துவிட்டன. இவர் குதித்தோடி வந்து வேடனின் கைகளைப் பிடித்துக்கொண்டார்; நெஞ்சார நன்றி தெரிவித்தார். பிறகு அவர்கள் முன்னும் தாம் பின்னுமாகத் தொடர்ந்தார். அந்தப் பகற்பொழுது கழிந்து இருட்டு வருவதற்குள் இவர்கள் வெகுதூரம் வேகமாக வந்து விட்டார்கள்.

ஆற்றங்கரை: இலைகள் அடர்ந்த ஒரு பெரிய மரத்தின் அடியில் இவர்கள் தங்கினார்கள். ' உறங்கப் பாயுமில்லை, உண்ண உணவுமில்லை ' என்ற நிலையில்தான் இரவைக் கழிக்க வேண்டியதாயிற்று. வேடன் மரச்சுள்ளிகளை ஒடித்துக்கொண்டு வந்து தீ மூட்டினான்.

அந்த ஒளியில் இராமாநுஜர் அந்த இடத்தைப் பார்த்தார்; அது கரடுமுரடாகத்தான் காணப்பட்டது. இவர் படுத்துக் களைப்பாறுவதற்காக வேடன் அந்த இடத்தின் ஒரு பகுதியைச் சற்றுச் சமப்படுத்திக் கொடுத்தான். பிறகு அவன் தன் மனைவியுடன் அதே இடத்தில் வேறொரு பக்கத்தில் இளைப்பாறப் போனான்.

நட்ட நடுநிசி. ' தாகமாய்த் தவிக்கிறேனே ' என்றாள் வேடச்சி. ' இந்தப் பக்கத்தில் எங்கேயோ ஒரு நல்ல கிணறு இருப்பதாக எனக்கு ஞாபகம்; ஆனால் இந்த நள்ளிரவில் அதை எப்படிக் கண்டுபிடிப்பது? பொழுது விடிந்ததும் அங்கே போகலாம். அதுவரை அடக்கிக் கொள்ளம்மா உன்னுடைய

தாகத்தை !' என்றான் வேடன்.

இந்த உரையாடல் இராமாநுஜரின் காதில் விழுந்ததும், 'ஐயோ ! அந்த அம்மாளின் தாகம் உடனே தணியுமாறு உதவ என்றால் இயலவில்லையே ; இடமும் புதிது, இருட்டும் வழிகாண வாய்ப்பு அளிக்கவில்லை. என் செய்வது ? என் உபகாரிகளுக்கு நான் கைம்மாறு செய்யும் பாக்கியத்தையும் உடனே பெறுவதற் கில்லையே' என்று இரங்கித் தவித்தது இவர் இதயம். எண்ணிறந்த மக்களுக்கு ஞானதாகமும் ஆத்மதாபமும் தீருமாறு அருள்புரியப் பிறந்தவரல்லவா ?

பொழுது நன்றாக விடிவதற்கு முன்பே இராமாநுஜர் எழுந்து போய்க் கிணறு இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்தார். உடனே விரைந்தோடி வந்து வேடச்சியை அழைத்துச்செல்லவிரும்பினார். ஆனால் வேடனையோ வேடச்சியையோ காணவில்லையாம். எங்கும் தேடிப் பார்த்தும் கூவிப் பார்த்தும் அவர்களைப் பார்க்க முடியவில்லை ; அந்தக் குரல்களையும் கேட்க முடியவில்லை!

# 5

# மீண்டும் காஞ்சியில்

இராமாநுஜர் காஞ்சிபுரத்தில் வீட்டுக்கு வந்து சேர்ந்தார்; தம் பிரிவால் துயருற்றிருந்த தாயைக்கண்டு வணங்கினார். திடீரென்று பிள்ளையைக் கண்டதும் அவளுக்கு முதலில் தன் கண்களையே நம்பமுடியவில்லை. பிறகு அகங்குளிர்ந்து வாழ்த்தினாள். திரும்பிவருவதற்கு உரிய காலத்திற்கு முன்பே இராமாநுஜர் வந்து சேர்ந்தது அவளுக்கு அதிசயமாயிருந்தது.

'விரைவில் வந்துவிட்டாயே, குழந்தாய்! தனியாக வந்திருக்கிறாயே; கோவிந்தன் எங்கே? எல்லாரும் சேர்ந்து வரவில்லையா? கங்கையாடித் திரும்புவதற்குக் குறைந்த பட்சம் ஆறுமாதகாலம் ஆகும் என்றார்களே' என்றெல்லாம் கேள்விகளை அடுக்கினாள் காந்திமதி. இராமாநுஜர் நிகழ்ந்தவற்றையெல்லாம்

ஆதியோடு அந்தமாகச் சொன்னார்.

யாதவப்பிரகாசரின் சதி அம்மையின் உள்ளத்தைத் திடுக்கிடச் செய்தது. அவளுக்குக் கண்ணீர் வந்துவிட்டது. ஆனால், தம் பிள்ளையைக் காப்பாற்றிக்கொண்டு வந்துசேர்த்த அருளாளனுடைய அருளை நினைத்துப் பார்த்ததும், கண்ணீர் ஆனந்தக் கண்ணீர் ஆகிவிட்டது.

தன் அருமைப் புதல்வரின் முகத்தைச் சிறிது நேரம் உற்று நோக்கினாள். தாயுள்ளம் குழைந்து மௌனமாக ஆசி சொல்லிற்று. 'காடும் மேடும் அலைந்து திரிந்து வந்திருக்கும் பிள்ளை மிகவும் பசியோடு இருக்கக் கூடுமே!' என்ற நினைவு வந்ததும், விரைந்து சமையலறைக்குச் சென்றாள்.

பெருமகிழ்ச்சியில் 'என்ன சமைப்பது?' என்று தெரியவில்லை. 'என்ன செய்வது?' என்று கூடத் தோன்றவில்லை. அடுப்பிற்கு அருகே சென்றதும் விறகு இல்லை என்று தெரிய வந்தது. இரண்டு மூன்று நாள்களுக்கு முன்பே விறகு இல்லையே என்பதும் நினைவிற்கு வந்தது. பிள்ளையோ இல்லை; மருமகளும் தன் தாய்வீட்டுக்குப் போயிருந்தாள். 'நான் ஒருத்தி தானே; காய் கனி கிழங்குகளைப் பகவானுக்கு ஆராதனம் செய்து சாப்பிட்டால் போதாதா?' என்று கருதி விறகு வாங்காமலே இருந்து விட்டாள்.

ஒருநாள் வரதராஜப் பெருமாளின் கோவிலிலிருந்து பிரசாதம் வாங்கி ஒருவேளை உண்டு பசி தீர்ந்து, பகவானையும் தன் பிள்ளையையுமே நினைத்துக் கொண்டிருந்தாள். காரணம் இல்லாமலே இவள் உள்ளம் பிள்ளையை நினைத்துக் கவலைப் பட்டதும் உண்டு. அந்தக் கவலையில் விறகு போன்ற விஷயங்கள் எப்படி நினைவிற்கு வரும்?

இப்போது, தானே விறகுக் கடைக்குப் போய்வரலாம் என்று தீர்மானித்தாள் காந்திமதி. வேலைக்காரி இன்னும் வரவில்லை; நீண்ட பிரயாணத்தில் எத்தனையோ கஷ்டங்களை அனுபவித்துத் திரும்பி யிருக்கும் மகனைக் கடைக்கு அனுப்புவதற்கும் மனம் வரவில்லை. இப்படி ஆலோசித்துப் புறப்படும் போது, திடீரென்று காந்திமதியின் சகோதரி இராமாநுஜரின் மனைவியை அழைத்துக் கொண்டு வந்துவிட்டாள். இருவரும் காந்திமதியை வணங்கினார்கள். இராமாநுஜர் சிற்றன்னையை வணங்கினார்.

பிள்ளையைப் பிரிந்து வருந்திக் கொண்டிருக்கும் தமக்கைக்கு ஆறுதலாயிருக்கு மென்றுதான் கோவிந்தபட்டரின் தாய் மருமகளையும் அழைத்துக்கொண்டு வந்திருந்தாள். இராமாநுஜரைக்

கண்ணுற்றதும் இவளுக்கு ஒரே மகிழ்ச்சி. வணங்கிய பிள்ளையை நெஞ்சார வாயார வாழ்த்தினாள். மருமகளான தஞ்சமாம்பாள் நாணிக் கோணித் தலை குனிந்தவளாய்க் கணவரின் அடிகளில் விழுந்து வணங்கினாள்; மாமியாரையும் வணங்கினாள். பளிச் சென்று அந்த இல்லம் ஓர் ஆனந்த நிலையமாகி விட்டது.

இதற்குள்ளே வேலைக்காரியும் வந்து, அரிசி நெய் வெல்லம் விறகு காய்கறி முதலியவற்றை வாங்கிக்கொண்டு வந்துவிட்டாள். இரு சகோதரிகளும், தங்கள் அருமைப் புதல்வருக்கு ஒரு விருந்து தயாரித்துவிட்டார்கள்.

இராமாநுஜர் சிற்றன்னையிடத்திலும் தமது யாத்திரை-அனுபவங்களை விரிவாகத் தெரிவித்தார். கோவிந்தரைக் குறித்து இவர் சொல்லச் சொல்ல, அந்த அம்மாளுக்குச் சற்றுக் கவலை தான். எனினும், இராமாநுஜரைக் காப்பாற்றிக் கொண்டு வந்து சேர்த்த தெய்வம் தன் பிள்ளையையும் கைவிடாது என்ற நம்பிக்கையுடன் கவலையை உதறித் தள்ளி மற்றவர்களுடைய மகிழ்ச்சியில் தன்னை முழுக்க இழக்கலானாள்.

இராமாநுஜர் திரும்பிவந்த செய்தி வரதராஜப் பெருமாளின் கோயில்–கைங்கரியத்தில் தம்மை மறந்திருந்த திருக்கச்சி நம்பிக்கும் எட்டியது. அவரும் இவரைப் பார்க்க விரைந்து வந்துவிட்டார். இராமாநுஜர் ஓடிவந்து தம்மை வணங்கியதும், திருக்கச்சிநம்பி இவரை வாரி எடுத்துக் கட்டி அணைத்துக் கொண்டு உச்சி மோந்து உவகைக் கடலாடினார். இராமாநுஜரின் தாயும் கச்சிநம்பிகளை நோக்கி, 'பாகவத சிரேஷ்டரே! என் பிள்ளைக்கு இனி நீரே கதி; உமது அருளே கவசம்' என்று சொன்னாள்.

இராமாநுஜர் தம் இல்லத்திலிருந்தபடியே வேதாந்த ஆராய்ச்சிகள் செய்யத் தொடங்கினார். யாதவப் பிரகாசரின் சதிச் செயல் குறித்துத் தம் அன்னையையும் சிற்றன்னையையும் தவிர வேறு எவரிடத்திலும் பிரஸ்தாபிக்கவில்லை. 'வேறொருவரிடத்திலும் நீங்கள் இது குறித்து ஒரு வார்த்தையும் சொல்ல வேண்டாம்' என்று இவர், தம் தாயையும் சிற்றன்னையையும் வற்புறுத்தி வேண்டிக் கொண்டார். இந்த இரகசியத்தைப் பரசியம் ஆக்குவதில் ஒரு பயனும் இல்லை என்று உறுதியாக எண்ணி விட்டார்.

மூன்று மாதத்திற்குப் பின் யாதவப்பிரகாசரும் சீடர்களும் காஞ்சீபுரத்துக்குத் திரும்பி வந்தார்கள். ஆனால் கோவிந்தர் மட்டும் திரும்பி வரவில்லை என்று தெரிந்து இராமாநுஜரின் சிற்றன்னை பெருங்கவலையுற்றாள். அது குறித்து விசாரித்து

விவரமாகச் செய்தி தெரிவிக்கும்படி இராமாநுஜரைக் கேட்டுக் கொண்டாள். இவருக்கும் கோவிந்தரைப் பற்றிய கவலைதான்; விஷயம் தெரிந்தபின் கவலை அதிகரித்தது.

யாத்திரைக் குழுவினர் சற்று விரைந்து காசிக்குச் சென்றார்கள்; வழியில் அதிகமாய்த் தங்கி ஓய்வு கொள்ளாமலே காசி விசுவநாதரின் தரிசனத்திற்குப் போய்விட்டார்கள். ஒரு பட்சம்—அதாவது சுமார் இரண்டு வாரங்கள்—காசியில் தங்கினார்கள். அப்போது ஒருநாள் அவர்கள் கங்கைப் பேராற்றில் குளித்து கொண்டிருக்கையில் கோவிந்தர் ஒரு லிங்கத்தைக் கண்டுபிடித்தார். லிங்கம் என்றால் சிவபெருமானின் ஓர் அழகிய உருண்டை வடிவமான நினைவுக்குறி.

இந்த லிங்கத்தை உள்ளங் கையில் வைத்துக் கொண்டு, 'என்ன செய்வது?' என்று சற்றுச் சிந்தித்துக் கொண்டிருந்த கோவிந்தரை நோக்கி யாதவப்பிரகாசர், 'பட்டரே! நீர் அதிர்ஷ்டசாலி; கங்கையாடிய பலன் கைகூடி விட்டது; கங்காதரனே கையில் புகுந்தான்! நீர் இனி "உள்ளங்கை கொணர்ந்த நயினார்" என்று பெயரும் புகழும் பெற்றுவாழ்வீர்!' என்று சொல்லி உற்சாகப் படுத்தினார்.

இதற்குப் பின் யாதவப்பிரகாசர் கோவிந்தரை மிதமிஞ்சிய அபிமானத்துடன் கவனித்தார், கௌரவித்தார். கோவிந்தரும் அன்றுமுதல் சைவ அத்வைதியானார். இராமாநுஜர் மீதுள்ள நம்பிக்கையும் அபிமானமும்கூட நாளடைவில் குறைந்து போயின. தம்மைப் பிரிந்து காட்டுக்குள்ளே சென்ற தம் சகோதரரின் கதி என்ன ஆயிற்றோ என்ற நினைப்பையும் விட்டு, யாதவப்பிரகாசரின் வார்த்தையே வேத வாக்கியம் என்று நம்பி ஒழுகி வந்தார்.

காசி யாத்திரை இனிது முற்றுப்பெற்றது என யாத்திரைக் குழுவினர் அகமகிழ்ந்தனர். தமக்குப் பழிபாவங்கள் ஏற்படாமலே இராமாநுஜரின் வாழ்வு அற்றுப் போய்விட்டது என்று பூரித்தது யாதவப்பிரகாசரின் உள்ளம். காசியிலிருந்து அவர்கள் காஞ்சியை நோக்கித் திரும்பினார்கள். பல க்ஷேத்திரங்களையும் தரிசித்துக் கொண்டு ஜகந்நாதத்திற்கு வந்தார்கள்; பிறகு அகோபிலம் வழியாக வரும்போது, காளஹஸ்தி என்ற திருக்காளத்தியைக் கண்ணுற்றார்கள்.

அப்போது கோவிந்தர் யாதவப்பிரகாசரையும் மற்றச் சீடர்களையும் நோக்கி, 'என்னிடமுள்ள சிவலிங்கத்தைத் தகுந்த இடம் பார்த்துப் பிரதிஷ்டை செய்ய விரும்புகிறேன்; நீங்கள் அனுமதியளிக்க வேண்டும்' என்று வேண்டிக் கொண்டார்.

யாதவப்பிரகாசரும் சம்மதித்தார். 'திருக்காளத்தி புனிதத் தலம். கண்ணுக்கு இனிமையான இயற்கைக் காட்சிகளை உடைய தலம்; இங்கே தனிமையான ஓர் இடத்தில் நீர் உம்முடைய இஷ்ட தெய்வம் குறித்துப் பக்தி பண்ணிக்கொண் டிருக்கலாம்' என்றார் யாதவப் பிரகாசர்.

'அப்படியே செய்கிறேன் சுவாமி! என் அன்னையிடத்திலும் அவள் தமக்கையிடத்திலும் செய்தி சொல்லி விடுங்கள்' என்று சொல்லி விடைபெற்றுக் கொண்ட கோவிந்தர், அருகிலுள்ள ஒரு கிராமத்தில் நிலம் வாங்கித் தம் இஷ்டதெய்வத்தைப் பிரதிஷ்டை செய்து, பற்றற்ற நிலையில் பக்தி செய்யத் தொடங்கினார். திருக் காளத்தி க்ஷேத்திரத்திலுள்ள பலரும் கோவிந்தரைச் சிறப்பாகக் கௌரவித்தார்கள்.

யாதவப்பிரகாசர் சீடர்களுடன் காஞ்சிக்குத் திரும்பி வந்த தும், தங்களுக்கு முன்பே இராமாநுஜர் க்ஷேமமாகத் திரும்பி வந்து சேர்ந்துவிட்டார் என்ற செய்தி கேட்டு ஆச்சரியமடைந் தார்; திகிலடைந்தார். பிறகு ஒருவாறு சமாளித்துக் கொண்டு, தமக்கு உகந்த சில சீடர்களைக் கூப்பிட்டு, 'இராமாநுஜர் தப்பிப் பிழைத்திருப்பது குறித்து நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. பகையை ஒழிப்பதற்கு இன்னும் எத்தனை எத்தனையோ உபாயங்கள் இருக்கின்றன'! என்று சொன்னார்.

மேலும் அவர்களை நோக்கி, 'எப்படியாவது, நீங்கள் அவரிடம் போய்த் தந்திரமாகப் பேசி இங்கே மறுபடியும் அழைத்துக் கொண்டு வந்து விடுங்கள், இதுவும் உங்களுக்கு ஒரு பரீட்சை!' என்றார். அவர்களும் அப்படியே இராமாநுஜரிடம் சென்று, 'சகோதரரே, எங்களை விட்டு எப்படித் தவறிப்போய் விட்டீர்? எங்கெல்லாம் அலைந்து திரிந்தீரோ? காட்டிலே இருட்டில் தவறிப்போய் விட்டீரே! எந்தத் துஷ்ட மிருகம் உம்மை இரையாக்கிக் கொண்டதோ? இப்படியெல்லாம் புலம்பிக் கொண்டேதான் நாங்கள் காசிக்குப் போனோம்' என்று சொன்னார்கள். இவரை இங்கே சந்தித்ததில் தங்களுக்குப் பெருமகிழ்ச்சி என்றும் கூறினார்கள்.

'குருவுக்குத் தெரியுமா நான் இங்கே திரும்பி வந்திருப்பது?' என்று இராமாநுஜர் கேட்டார். அதற்கு அவர்கள், 'நீர் க்ஷேம மாக வீட்டுக்கு வந்துவிட்டீர் என்று நாங்கள் கேள்விப்பட்டதும், குருவிடம் ஓடிப்போய்ச் செய்தி சொன்னோம். அவரும் பெரு மகிழ்வுற்று உம்மைக் கையோடு கூட்டிக் கொண்டு வரச் சொன்னார்' என்று பதில் சொன்னார்கள். இராமாநுஜர் பணிவு டன் அவர்களுடன் சென்று குருவை வணங்கினார்.

இவரைக் கண்டதும் யாதவப்பிரகாசர் தம்மை அறியாமலே சற்றுத் திகைப்பும் திகிலும் அடைந்தார். எனினும் விரைவில் முகத்திலே அமைதியைத் தோற்றுவித்துக் கொண்டார். 'தம் அழைப்புக்கு இணங்கி அந்த மாணாக்கர்களுடன் வாதம் செய்யாமல் வந்திருப்பதால், தம்முடைய சூழ்ச்சிகளை அவர் நன்றாக அறிந்திருக்க மாட்டார் என்று நினைத்தார் யாதவப் பிரகாசர். பிறகு மிக்க உவகையுடன் வறவேற்பதுபோல் பாவனை காட்டி, 'விந்தியக் காட்டிலே உம்மைத் தேடிக் காணாது திகிலடைந்து சோகத்தில் ஆழ்ந்திருந்த நாம் உம்மைக் கண்ணாரக் காணவும் பெற்றோமே!' என்றார்.

'இடையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையெல்லாம் விவரமாகக் கூற வேண்டும்' என்று குரு கேட்க, இராமாநுஜரும், தாம் வழிதப்பி அலைந்து கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தபோது ஒரு வில்லியும் அவன் மனைவியும் வந்து உதவி செய்ததைச் சுருக்கமாய்க் குறிப்பிட்டார். அது கேட்ட யாதவப்பிரகாசர் மிகவும் அதிசயித்து, 'இவருக்கு அனுகூலமாக ஏதோ ஒரு திவ்ய சக்தி வேலை செய்து வருகிறது; உண்மையில் இவர் ஓர் அதிசய மனிதர் போலும்! இனி இவருடன் வாதப்போர் புரியாது இவரை இஷ்டப்படியே விட்டுவிடுவோம். யார் எப்படிப் போனால் என்ன?' என்று தம் இஷ்டப்படி வேதாந்த பாடம் சொல்லிக் கொண்டே போனார்.

யாதவப்பிரகாசர் இராமாநுஜரை நோக்கி, 'நீரும் மற்றவர்களைப்போல் என்னிடம் பாடம் கற்றுக் கொள்ளலாம். வேதாந்தியான எனக்குப் பட்சபாதம் இல்லை; வேற்றுமை உணர்வும் கிடையாது' என்று சொன்னதும், இராமாநுஜர் மறுபடியும் யாதவப் பிரகாசரின் மாணவராகி வேதாந்தம் கற்கத் தொடங்கினார். அந்த நாளில் யாதவப் பிரகாசர் பேரும் புகழும் பெற்றிருந்த பிரபல வேதாந்தியாக விளங்கினார் என்று இதிலிருந்து ஊகித்துக் கொள்ளலாம்.

இப்படிச் சில தினங்கள் கழிந்தன. ஆளவந்தார் தம்முடைய சீடர்கள் சிலருடன் திருவரங்கத்திலிருந்து காஞ்சீபுரத்திற்கு வரதராஜப் பெருமாளின் தரிசனத்திற்காக வந்திருந்தார். பெருமாளைச் சேவித்துவிட்டுத் திரும்புகையில் ஒரு சமயம் யாதவப்பிரகாசர் இராமாநுஜரின் தோள்மேல் தம் கையை வைத்துக் கொண்டு பிற சீடர்கள் புடைசூழ அந்த வழியேவந்து கொண்டிருந்தார். அவரை அங்குள்ளவர்கள், 'அதோ அவர் தாம் வேதாந்த சிம்மம்!' என்று ஆளவந்தாருக்குச் சுட்டிக் காட்டினார்கள். ஆளவந்தாரின் கண்களோ, இராமாநுஜரின்

முகப்பொலிவால் பெரிதும் கவரப்பட்டன. 'தெய்விக ஒளி வீசுகிறது அந்த இளைஞனின் முகத்திலும் கண்களிலும்! நமக்குப் பின் ஆசாரிய பீடத்தை வகிக்கக் கூடியவன் அவன் தானே?' பகவானுடைய அருள் எப்படியோ?' என்று எண்ணமிட்டார்.

அப்போது அங்கு வந்து சேர்ந்த திருக்கச்சிநம்பி, 'அவரே இராமாநுஜர்' என்று கூறினார். ஆனால் யாதவப்பிரகாசரோ, இராமாநுஜரோ இவர்களைக் கவனித்துப் பார்க்காமலே அப்பால் போய்விட்டார்கள். அந்தக் கூட்டம் மறைந்ததும் திருக்கச்சி நம்பி, ஆளவந்தாரை நோக்கி, 'ஏற்கெனவே மகாபுருஷ லட்சணம் வாய்ந்தவர்தாம் இராமாநுஜர்; எனினும் இன்று தங்கள் கருணை நிரம்பிய பார்வை அந்த லட்சணத்திற்கு மேலும் அழகும் ஒளியும் தந்துவிட்டது என்றே நம்புகிறேன்' என்று சொன்னார்.

பிறகு ஆளவந்தாரின் உள்ளத்தில் வரதராஜப் பெருமானை நோக்கி ஒரு பிரார்த்தனை எழுந்தது: 'பகவானே! அருளாளா! உன்னுடைய அருளின் ஒரு சிறு கூறு போதும் மக்கள் உய்ந்து போவதற்கு! திருமகள் கொழுநனாகிய நீ கருணைகூர்ந்து இராமாநுஜரை உன்னுடைய புகழொளி பரப்பும் கருவியாகச் செய்துகொள்ள வேண்டும்.'

இந்த பிரார்த்தனைக்குப் பின் பகவானுடைய அருள் மழையின்றி வாடி வறண்டுக் கிடக்கும் யாதவப்பிரகாசருடன் இராமாநுஜர் ஏன் இனித் தொடர்பு கொண்டிருக்க வேண்டும் என்ற நினைப்பும் ஆளவந்தாரின் உள்ளத்தில் எழுந்தது. 'தவறான வழியில் போய்க் கொண்டிருக்கும் யாதவப்பிரகாசர், இராமாநுஜருக்குப் புதிதாகவும், சிறந்த நற்பயன் விளைக்கத் தக்கதாகவும் உள்ள எந்த உபதேசத்தை எப்படிச் செய்யப் போகிறார்?' என்றும் எண்ணமிட்டார்.

ஆளவந்தார் திருக்கச்சிநம்பிகளை நோக்கி, 'இங்கிருந்து திருவரங்கத்துக்கு வந்த பாகவதர்கள் வாயிலாக இராமாநுஜரைக் குறித்து ஏற்கெனவே கேள்விப்பட்டிருக்கிறேன்; யாதவரோடு இந்த இளைஞருக்குள்ள கருத்து வேற்றுமைகளைக் குறித்தும் கேள்வியுற்றிருக்கிறேன்.' இராமாநுஜர் நமது ஸ்ரீவைஷ்ணவத்திற்கு அரணாகச் சமீப எதிர்காலத்தில் விளங்குவார் என்பது என் நம்பிக்கை. உம்முடைய அருளாளப் பெருமாள் அதற்கு அருள்புரிவார் என்றும் நம்புகிறேன்' என்றார்.

ஆளவந்தாருக்கு இப்போது தள்ளாத வயது; பழுத்து

உதிரப்போகும் ஒரு கற்பகக் கனிபோல் காட்சியளித்தார். அன்று உடனே அந்தக் கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு சென்று இராமாநுஜருடன் உரையாட வேண்டும், உறவாட வேண்டும் என்ற ஆசையும் இந்த வைராக்கிய உள்ளத்திலே கொழுந்துவிட்டெரிந்தது. ஆனால், அந்த ஆசையை அடக்கிக் கொண்டார். உரிய காலத்தில் திருமாலின் திருவருளால் தாம் இராமாநுஜரைத் தனியாகச் சந்திக்கலாம், பாகவத சமுதாயத்தில் தலைவராகும்படி வற்புறுத்தலாம் என்று கருதினார். அப்பால் திருக்கச்சிநம்பிகளிடம் விடைபெற்றுக் கொண்டு ஆளவந்தார் திருவரங்கத்திற்குத் திரும்பினார்.

காஞ்சிமாநகரத்தைச் சேர்ந்த பிரதேசத்தில் சோழ ராஜ சக்கரவர்த்திக்கு உட்பட்ட சிற்றரசன் ஒருவன் இருந்தான். அவனுக்கு ஒரு புதல்வி, சிறு பெண்; அழகி. அறிவாளியுங்கூட. அவளைப் 'பிரம ரக்ஷஸ்' என்ற பிசாசு பிடித்திருக்கிறது என்ற வதந்தி காஞ்சிநகரிலும் நாட்டுப்புறங்களிலும் பரவியிருந்தது. யாதவப்பிரகாசர் வேதாந்தியாக இருந்ததுடன் ஒரு பெரிய மந்திரவாதி என்றும் பெயர் பெற்றிருந்ததால் சிற்றரசன் அவரை அழைத்துவருமாறு சில பணியாளர்களுக்குக் கட்டளையிட்டான்.

யாதவப்பிரகாசர் தம் புகழைப் பரப்பிக் கொள்ள அதுவும் ஒரு வாய்ப்பு என்று கருதி அரண்மனைக்கு விரைந்து சென்றார். ஆனால், இவரது மந்திரங்களில் ஒன்றும் பலிக்கவில்லை. யாதவப்பிரகாசரின் குழுவிலிருந்த இராமாநுஜரைக் கண்டதும் அந்தப் பெண்ணின் உள்ளம் அமைதியடைந்ததாம். இராமாநுஜர் அன்புடனும் கருணையுடனும் அப்பெண்ணைத் தமது பக்தியால் ஒரு வகை நம்பிக்கை–வைத்தியம் செய்து குணப்படுத்தினார் என்று ஊகிக்கலாம்.

தன் புதல்வி குணமடைந்தது குறித்து, அரசன் மிக்க மகிழ்ச்சியடைந்து இராமாநுஜரைக் கௌரவிக்கவும் சன்மானிக்கவும் விரும்பினான். ஆனால் இவர் மெல்ல எழுந்து நின்று யாதவப்பிரகாசரை நோக்கி, 'ஆசிரியரே! நேரமாகி விட்டது; மடத்திலுள்ள நம் பாடசாலைக்குப் போகலாமே' என்று சொன்னார். உடனே யாதவப்பிரகாசர் அரசனிடம் விடைபெற்றுக் கொண்டு தம் மாணக்கர்களுடன் திரும்பினார். இந்த நிகழ்ச்சியால் ஆச்சரியமும் ஆத்திரமும் ஒருங்கே அதிகரித்தன யாதவப்பிரகாசருக்கு.

இன்றும் பேய்களைக் குறித்த நம்பிக்கை, உலகின் பல பகுதிகளிலும் காணப்படுகிறது. பெரும்பாலும், பெண்களைப் பேய் பிடித்துக் கொள்ளும் கதைகளைக் கேள்விப்படுகிறோம். நரம்புப்

பலவீனத்தினுல் ஏற்படக்கூடிய ஒரு வகை மனப்பிணியே என்று இத்தகைய நிகழ்ச்சிகளை வைத்தியர்கள் குறிப்பிடுகிருர்கள். 'மெல்லியலார்' என்று சொல்லப்படும் இவர்களது மென்மையான உடலமைப்பு-முறை இத்தகைய நோய்களுக்கு இடம் கொடுக்கிறது என்பர். இத்தகைய நோய்களை ஹிப்னுடிஸம், மெஸ்மரிஸம் என்ற மனேதத்துவரீதியான சிகிச்சை-முறைகளால் குணப்படுத்துவது சாத்தியம் என்றும் கருதுவோர் உண்டு.

இந்த நிகழ்ச்சிக்குப் பின்பும் இராமாநுஜர் யாதவப்பிரகாசரின் வேதாந்த பாடசாலைக்குப் போய் வந்தார். எனினும் இவர் உள்ளம் யாதவப்பிரகாசரின் குயுக்தி-வாதங்களை இப்போது அதிகமாய்க் கவனிப்பதில்லை. பல சீடர்களும் யாதவப்பிரகாசரின் வாக்கு வன்மையையும் தர்க்க வாதத் திறமையையும் பாராட்டினுர்கள். இராமாநுஜரோ, யாதவப்பிரகாசர் விளக்க முயன்ற உபநிடத வாக்கியங்களுக்குத் திருக்கச்சிநம்பியின் பக்திக்கொள்கைக்கிணங்க வழக்கம்போல் பொருள் கூறினுர்.

ஒரு நாள் யாதவப்பிரகாசரின் கோபம் வரம்பு கடந்து பொங்கிவிட்டது, 'இனிமேல் நீர் இங்கே இருக்கக்கூடாது; பிஞ்சிலே பழுத்த உமக்கு இங்கே இனி இடம் இல்லை. போகலாம்; உடனே போய் விடலாம்' என்று கர்ஜித்தார் குரு. இராமாநுஜரும் 'அப்படியே' என்று சொல்லி விட்டு உடனே தம் வீட்டிற்குப் புறப்பட்டார். அப்போதும் இராமாநுஜர் யாதவப்பிரகாசரின் கொள்கையைக் கண்டித்ததைத் தவிர அவரை வெறுக்கவில்லை. ஏன், தம்மைக் காசியாத்திரை என்ற வியாஜத்தால் படுகொலை செய்யத் துணிந்த அந்த நாளிலும் அவரை வெறுத்ததில்லை. 'இவரது அறிவு திருந்துக; குணம் பண்படுவதாக; மனம் பழுப்பதாக!' என்றே அன்றும் விரும்பினுர்; இன்றும் அப்படியே.

இராமாநுஜர் தம் வீட்டிலே தாயை வணங்கி நடந்ததைத் தெரிவித்தார். அவள் தன் பிள்ளையின் அருமை முகம்நோக்கி, 'நல்லது, நல்லது. யாதவப்பிரகாசரிடத்தில் நீ வேதாந்தம் கற்றுக்கொண்டது போதும். என்றே எனக்குத் தோன்றுகிறது. இனி நீ உன் கல்வியைத் திருக்கச்சிநம்பியிடம்தான் பூர்த்தி செய்துகொள்ள வேண்டும். அவரைப்போல் ஒரு பரம பக்தரைப் பார்ப்பது அரிது' என்று சொன்னுள்.

இராமாநுஜர் அப்படியே வரதராஜப் பெருமாள் கோவிலுக்குப் போய்த் திருக்கச்சிநம்பியைச் சந்தித்து நடந்ததைத் தெரிவித்து, 'இனி நான் எப்படி என் கல்வியைப் பூர்த்திசெய்து கொள்ள வேண்டும் என்பதற்குத் தாங்களே ஒரு வழிகாட்ட

வேண்டும்' என்று வேண்டிக் கொண்டார். அவரும், 'நல்லது; நாள்தோறும் நீர் எம்பெருமானது திருமஞ்சனத்திற்குக் கிணற்றிலிருந்து ஒரு குடம் தீர்த்தம் கொண்டு வாரும்' என்று சொன்னார்.

இராமாநுஜருக்கு வேடச்சி தாகமுற்றுத் தண்ணீர் கேட்கையில் வேடன் ஒரு கிணற்றைக் குறிப்பிட்டான் அல்லவா? அந்தக் கிணற்றிலிருந்து அன்று தொடங்கி இவர் திருமஞ்சனம் கொண்டுவந்து சமர்ப்பித்துக் கொண்டிருந்தார். இக் கிணறு இன்றும் தூய்மையானது என்று பக்தர்களால் கொண்டாடப் படுகிறது.

இராமாநுஜர் திருக்கச்சிநம்பியின் அருளுரைக்கு இணங்க வரதராஜப் பெருமாளின் கோயிலில் கைங்கரியம் செய்து கொண்டிருந்த போது, திருவரங்கத்தில் ஆளவந்தாரின் உள்ளத்தில் அடிக்கடி அன்புப் பெருநெறியாகிய ஸ்ரீவைஷ்ணவத்தைப் பரப்புவதற்கு இயன்ற வேலைகளை விரைவில் செய்து வைக்கவேண்டும் என்ற சிந்தனைகள் எழுந்தன. 'எனக்குப் பின்னே இந்தப் பெரும் பணியைத் தொடர்ந்து செய்வதற்கு எவரும் இல்லையா? என் பாட்டனாரின் ஞான பொக்கிஷமாகிய இச்சமயம், என்னுடன் மறைந்துவிடலாமா? ஸ்ரீரங்கநாதா! உன் அருளால் இராமாநுஜர் என்னிடம் வரவேண்டும்' என்ற பிரார்த்தனையும் எழுந்த வண்ணமாயிருந்தது.

மூப்பு அதிகரித்துவிட்டது; பலவீனமும் அதிக அளவில் ஏற்பட்டது; எனினும் ஆளவந்தாருக்கு ஊக்கம் தளரவில்லை. இராமாநுஜர் யாதவப்பிரகாசரின் கூட்டுறவை அறவே நீக்கி விட்டார் என்ற செய்தியும் காதில் விழுந்தது. 'இப்போது திருக்கச்சிநம்பிகளுடன் வரதராஜப் பெருமாளுக்குத் தொண்டு செய்துகொண்டிருக்கிறார்' என்றும் கேள்விப்பட்டார். ஆளவந்தாரின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

ஆளவந்தார் தம் சீடர்களுள் ஒருவரான பெரியநம்பியைக் கூப்பிட்டு, 'நீர் விரைந்து போய் இராமாநுஜரை என்னிடம் கூட்டிக்கொண்டு வரவேண்டும். வரதராஜப் பெருமாளின் தோத்திரப் பாவாக நாம் இயற்றியிருப்பதைத்தான் நீர் அறிவீரே!' என்றார். அந்தக் கட்டளையைத் தலைமேல் தாங்கிப் பெரியநம்பி காஞ்சியை நோக்கிப் புறப்பட்டார்.

இதற்குள்ளே காஞ்சியில் இராமாநுஜருக்கும் திருக்கச்சி நம்பிக்கும் உள்ள ஆன்மநேச உறவு நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக அதிகரித்திருந்தது. பணியும் பணிவும்

ஒருங்கே உருவெடுத்தாற்போல் காட்சியளித்த திருக்கச்சி நம்பியை இராமாநுஜர் தமக்குக் குருவாகவே மதித்தார்.

இராமாநுஜர் ஆண்டில் இளையவராக இருந்தும் ஞானத்தில் முதியவர் என்பது திருக்கச்சிநம்பியின் மதிப்பு. இராமாநுஜரோ, கல்விச்செருக்கும் பக்திநெறிக்கு இடையூறுதானே, இச் செருக்கைக் காட்டிலும் நம்பிக்கையே மேலானது, என்று உறுதி கொண்டார். சகல சாஸ்திர சாரத்தையும் ஓதாது உணர்ந்த உயர்ஞானி திருக்கச்சிநம்பி என்று தீர்மானித்தார்.

திருக்கச்சிநம்பி பூவிருந்தவல்லியைச் சேர்ந்தவர்; வரதராஜப்பெருமாளின் கோயிலில் ஆண்டவனுக்கும் அடியவர்களுக்கும் பணிபுரிவதைப் பெரும்பேறுகக் கருதிவந்தவர். பெருமாளுக்கு ஆலவட்டம் வீசிக்கொண்டிருப்பார், அல்லது பூக்கொய்து மாலைதொடுத்துப் பணிசெய்து கொண்டிருப்பார். எப்போதும் ஆனந்தமாகவே இருப்பார். ' பார்த்தால் பசி போகும்; கண்ணுற்றால் கலிதீரும்!' என்று பொது மக்கள் இவரைக் குறித்துப் பேசிக்கொள்வார்கள். இவரைக் காஞ்சி பூர்ணர் என்று கூறுவதும் உண்டு.

இவரது கூட்டுறவு இராமாநுஜருக்குச் சிறந்த நற்பயன் விளைத்தது. தமது குருவான ஆளவந்தாரின் நோக்கத்திற்கு இணங்க இராமாநுஜரின் உள்ளத்தைப் பண்படுத்தியதில் இவருக்குப் பெரும் பங்கு உரியதாகும். இராமாநுஜரின் பல ஆசிரியர்களில் திருக்கச்சிநம்பியும் ஒருவர். இவரும் பெரிய நம்பியும் ஆளவந்தாரின் சீடர்களாக இருந்ததால், இவர்களை ' ஒருசாலை மாணவர்கள் ' எனலாம்.

பெரியநம்பி திருவரங்கத்திலிருந்து காஞ்சீபுரத்துக்குப் பாதயாத்திரையாகவே வந்து சேர்ந்தார். பகலெல்லாம் நடப்பார்; இரவில் ஏதாவது ஒரு வீட்டுத் திண்ணையிலே உறங்குவார். பிட்சைகொண்டு பசிதீர்த்துக் கொள்வார்; பசிதீரும் அளவிற்கே பிட்சை ஏற்றுக் கொள்வார். இந்த விதமாக நாலுதினங்களில் காஞ்சிக்கு வந்து வரதராஜப் பெருமாளைத் தரிசித்துவிட்டுத் திருக்கச்சிநம்பியின் இருப்பிடத்திற்குச் சென்றார்.

# 6

# இருட்டிலே ஒரு கைவிளக்கு

**கா**ஞ்சிபூர்ணர் என்ற கச்சிநம்பிகள் ஒரு குடிசையில் வசித்து வந்தார். அழகாக இது ஓர் ஆசிரமம் போல் ஒரு பூங்காவினிடையே அமைந்திருந்தது. இதைத் திருக்கச்சிநம்பி மடம் என்று காஞ்சிவாசிகள் குறிப்பிட்டார்கள். இங்கே மாலைப் பொழுதில் பெரியநம்பி திருக்கச்சிநம்பியைச் சந்தித்ததும், தம்முடன் தமது மடத்திலேயே இராப்பொழுதைக் கழிக்கும்படி இவர் அவரை வேண்டிக் கொண்டார்.

இவர்கள் இருவரும் இரவில் வெகுநேரம் உரையாடிக் கொண்டிருந்தார்கள். தங்கள் குருவான ஆளவந்தாரைக் குறித்தும் பேசிக் கொண்டிருந்தார்கள்; இராமாநுஜரைக் குறித்தும் பேசிக் கொண்டிருந்தார்கள். பெரியநம்பி தாம்

வந்த காரியத்தைத் தெரிவித்ததும் திருக்கச்சிநம்பி, 'தாங்கள் சொல்வதற்கு முன்பே நான் ஒருவாறு ஊகித்துக் கொண்டேன். ஆளவந்தாருக்குப் பின் ஆசாரிய பீடத்தில் தலைவராக வீற்றிருக்கும் தகுதி இராமாநுஜருக்கே உரியது. இவர் அவரைச் சந்தித்து முகமுகமாய், அகத்தோடு அகம் தொட்டு, உபதேசம் பெற்றுக் கொண்டால் பாகவத சமுதாயம் ஒரு புதுவாழ்வு பெற்றுப் பொலியும்' என்றார்.

சிற்றஞ்சிறு காலையில் இருவரும் எழுந்திருந்தார்கள். ஆளவந்தாரின் திருவடிகளைத் திசைநோக்கித் தொழுதபின் இவர்கள், இராமாநுஜர் திருமஞ்சனதீர்த்தம் கொண்டுவருவாரே அந்தச் சாலைக் கிணற்றை நோக்கிப் புறப்பட்டார்கள். தூரத்தில் சிவந்து நெடிய வடிவினராய் ஒருவர் தீர்த்தக்குடமும் தோளுமாக வருவதைக் கண்ணுற்றதும், அவரே இராமாநுஜர் என்று, திருக்கச்சிநம்பி சுட்டிக் காட்டுவதற்கு முன்பே, ஊகித்துக் கொண்டார் பெரியநம்பி.

பிறகு திருக்கச்சிநம்பி தாம் கோவிலுக்குப் போகவேண்டுமென்று பெரியநம்பியிடம் விடைபெற்றுக் கொண்டார். பிறகு பெரியநம்பி இராமாநுஜரை நெருங்கினார். 'இப்படியும் ஒரு வசீகர உருவமா?' என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டே இராமாநுஜரை உற்று நோக்கிய வண்ணம் வந்து கொண்டிருந்தவரை இராமாநுஜரும் பார்த்துவிட்டார்.

இறைவன் புகழ், ஆளவந்தாரின் 'ஸ்தோத்ர ரத்ன' இசையில் தோய்ந்து, பெரியநம்பியின் வாயிலாக வெளிப்பட்டது. இராமாநுஜர் சித்திரம்போல் அசையாது நின்றார்; அந்தத் தோத்திரங்களுக்குத் தம் நெஞ்சைத் திறை கொடுத்தார்.

'இந்த ஒப்பற்ற தோத்திரங்களை இயற்றியவர் யாரோ?—அவரை வணங்குகிறேன். இந்தக் காலை வேளையில் ஒளியோடு இனிமை கலந்தது போல் வந்து என் உள்ளத்தைக் குளிர்விக்கும் இப்பாக்களை வாயாரப் பாடிய உமக்கும் என் வணக்கத்தைத் தெரிவிக்கிறேன்' என்றார் இராமாநுஜர். 'இந்தச் சுலோகங்களை இயற்றியவர் என் குருநாதரான யாமுனாசாரியர் என்ற ஆளவந்தார்' என்று பதில் சொன்னார் பெரியநம்பி.

இதைக் கேட்டதும் இராமாநுஜர், 'ஆ! அப்படியா? அந்தப் பெரியவரின் தரிசனம் அடியேனுக்குக் கிடைக்குமா? அவர் நோயுற்றிருந்ததாகக் கேள்விப்பட்டேனே' என்றார் கவலையுடன். அதற்குப் பெரியநம்பி, 'அங்கே இருந்துதான் வருகிறேன்; அம்புபோலப் புறப்பட்டு நேரே வந்து சேர்ந்தேன். நான் புறப்படும்போது அவர் தம் நோயிலிருந்து ஓரளவு தேறிச்

சௌகரியமாக இருந்தார். நீர் என்னுடன் உடனே புறப்பட்டு வருவதானால் அவரைப் போய்ப் பார்த்துவிடலாம் என்று கருதுகிறேன்' என்று விடைகூறினார்.

இராமாநுஜர் சொன்னார்: 'இந்தத் தீர்த்தத்தைக் கொண்டு போய்க் கோவிலில் சேர்த்துவிட்டு விரைந்து திரும்புவேன். தயவுசெய்து சற்று நேரம் எனக்காகக் காத்திருப்பீர்களா?' அப்படியே செய்வதாகப் பெரியநம்பி வாக்களித்ததும், இராமாநுஜர் கோயிலை நோக்கி வெகு வேகமாய்ச் சென்றார்.

இவர் தலைமறையும் வரை அதேதிசையை நோக்கிக் கொண்டிருந்த பெரியநம்பி, 'ஆஹா, இவருக்குத்தான் என்ன ஈடுபாடு ஆளவந்தாரிடம்! நம் குருமூர்த்தி இவர்மீது வைத்திருக்கும் நம்பிக்கை மிகவும் பொருத்தமானதே' என்று தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார்.

இராமாநுஜர் வரதராஜப் பெருமாளைத் தோத்திரம் செய்து திருக்கச்சிநம்பியிடத்திலும் விடை பெற்றுக்கொண்டார். 'எனது ஞானத் தந்தையைத் தரிசித்து வாரும்; பெரியநம்பிக்கும் ஞானத் தந்தை. அவரால் உமக்குச் சகல நன்மைகளும் உண்டாகும்' என்று சொல்லித் விடை கொடுத்ததும், இராமாநுஜர் ஓடிவந்து பெரிய நம்பியிடம், 'அடியேன் பிரயாணத்திற்குச் சித்தமாகி விட்டேன்' என்றார்.

'வீட்டுக்குப் போய்ச் சொல்லிவிட்டு வரவேண்டாமா?' என்று பெரியநம்பி கேட்டதும், அந்தக் கடமையைக் காட்டிலும் தங்களுடன் இப்படியே புறப்படுவதுதான் நலம் என்று இப்போது தோன்றுகிறது. யாமுனாசாரியரைத் தரிசிக்கவேண்டும் என்ற ஒரே ஆசை பிடர் பிடித்துத் தள்ளுகிறது' என்று பதில் சொன்னார் இராமாநுஜர்.

இராமாநுஜரின் யாமுன பக்தி பெரியநம்பியின் உள்ளத்தை உருக்கிவிட்டது. 'ஆம்; இனி இங்கே பொழுது போக்குவது சரியன்று; உடனே புறப்பட்டுத்தான் ஆகவேண்டும்' என்று சொல்லிக்கொண்டே பெரியநம்பி, மீண்டும் இளமை பெற்று விட்டது போல், விரைந்து நடக்கத் தொடங்கினார், இராமாநுஜருடன்.

நாலு தினங்களுக்குள் இருவரும் திருவரங்கம் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே ஒரு பெருங் கூட்டத்தைக் கண்டதும் பெரியநம்பி பெருங்கவலையுடன் 'அது என்ன?' என்று விசாரித்தார்.

இவரைத்தான் திருவரங்கம் நன்கு அறியுமே. 'உம்முடைய ஆசாரியர் திருநாட்டுக்கு எழுந்தருளினார்!' என்று ஸ்ரீவைஷ்

ணவ பரிபாஷையில் எதிரே வந்தவருள் ஒருவர் பதில் சொன்ஞர். பெரியநம்பி மயங்கி அப்படியே கீழே விழுந்து துடிக்கலுற்ருர். உடனே இராமாநுஜரும், ' இனி எங்கே காண்பேன் ?' என்று துடித்துத் தளர்ந்து தரையில் விழுந்தார்.

இராமாநுஜரின் நிலையைக் கண்டதும் பெரியநம்பி தம்மை ஒருவாறு தேற்றிக்கொண்டு இராமாநுஜரைத் தழுவித் தேற்றிஞர். ' மிகவும் சிறந்த செயல்களைச் செய்யப் புகும்போது பல இடையூறுகள் ஏற்படுவது இயல்புதான்' என்ருர். ' நாம் இனிச் சோகமடைய வேண்டாம் ' என்று சொல்லிக் கொண்டே இராமாநுஜரைக் கையைப் பிடித்துக் கொண்டு போஞர் பெரியநம்பி.

பெரியநம்பி அங்கே இருந்தவர்களை நோக்கி, ' இவரைப் பார்க்க வேண்டுமென்றுதான் நம் குருமூர்த்தி அல்லும் பகலும் ஆசைப்பட்டார்; ஏக்கம் கொண்டிருந்தார். அன்பர்களே, அந்த இராமாநுஜர் இவர் தாம்; நம் குருநாதரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவர் ' என்று இவரை அறிமுகப்படுத்திஞர்.

இராமாநுஜரோ அவர்களையெல்லாம் கவனிக்காமல் ஆளவந்தாருடைய ஸ்தூல சரீரம் இருந்த இடத்திற்கே போய்த் தண்டனிட்டு நின்ருர். பெரியநம்பியும் தண்டனிட்டார்; மளமளவென்று கண்களிலிருந்து நீர்கொட்டக் குழந்தைபோல் விம்மி விம்மி அழத் தொடங்கி விட்டார். ஆஞல், இராமாநுஜர் விரைவில் மன அமைதியுற்று ஒருமை உள்ளத்துடன் ஆளவந்தாரின் முகத்தை உற்று நோக்கிஞர்.

' என்ன அமைதி, என்ன பொலிவு! உறங்குவது போலத்தான் இருக்கிருர்!' என்று சொல்லிக்கொண்டே அந்தத் திருமேனி முழுமையும் நோக்கிஞர் இராமாநுஜர். ' அது என்ன வலது கையில் விரல்களில் மூன்று மடங்கி இருக்கின்றனவே; எப்போதும் இப்படித்தான் இருந்தனவா?' என்று மெல்லக் கேட்டார்.

' இப்போது இப்படிக் காண்கிரேமே ஒழிய முன்பு இப்படி இருந்ததில்லை ' என்று பதில் சொன்ஞர்கள் பக்கத்திலிருந்தவர்கள். இதற்கு முன் அவர்கள் இதைக் கவனித்ததில்லை. ஆளவந்தாரின் விரல்களில் குறையொன்றும் இல்லை என்பதைப் பெரியநம்பியும் உறுதிப்படுத்திஞர். ' அப்படியாஞல் இவர் திருவுள்ளத்தில் ஏதோ ஒரு குறிப்பு இருந்திருக்க வேண்டும் ' என்று ஊகித்தார் இராமாநுஜர்.

' இப்போது எங்களுக்கு ஞாபகம் வருகிறது. இவருக்கு வியாச முனிவரிடத்திலும் பராசர முனிவரிடத்திலும் நன்றி

யுணர்வு அதிகம். சடகோபராகிய நம்மாழ்வாரிடத்தில் விசேஷ பக்தி உண்டு; இந்த ஆழ்வாரின் கொள்கைகளுக்கு இசையப் பிரம சூத்திரங்களுக்கு ஒரு விசிஷ்டாத்வைதப் பேருரையாகிய பாஷ்யம் இயற்ற விரும்பியிருந்தார். ஆனால் மூப்பும் பலவீனமும் காரணமாக அப்படிச் செய்ய முடியவில்லையே என்று விசனித்ததும் உண்டு' என்று அங்கேயிருந்த ஒருவர் சொன்னார். 'அது சரிதான்' என்றார் பெரியநம்பி.

இராமாநுஜர் உடனே தாம் ஆளவந்தாரின் நோக்கத்தைப் பூர்த்தி செய்வதாக வாக்களித்தார். அங்கே திரண்டிருந்த பாகவதர்களை நோக்கி, 'அடியேனுக்கு இந்த உடம்பும் திடமாயிருந்து, இந்த ஆசாரிய கிருபையும் பூரணமாயிருந்து, பகவானுடைய திருவருளும் கூட்டிவைக்குமானால், இப்பெரியவரின் மூன்று விருப்பங்களையும் முற்றுப் பெறச் செய்வேன்' என்று சபதம் செய்தார்.

பிறகு இராமாநுஜர், 'இக்காட்சி என் கண்ணுள்ளும் கருத்துள்ளும் நீங்காது நின்று என்னை ஊக்கப்படுத்தும்!' என்றார். அப்பால் பெரியநம்பியை வணங்கி, 'காஞ்சீபுரத்திற்குத் திரும்பிப் போக அடியேனுக்கு அனுமதி கொடுக்க வேண்டும். நம்பெருமாளாகிய ஸ்ரீரங்கநாதனின் திருவடி தொழுவதற்கும் என் நெஞ்சு இப்போது உடன்படவில்லை' என்று சொல்லி விட்டுத் திரும்பினார்.

போகும் வழியெல்லாம் ஆளவந்தாரின் நினைவுதான். இந்த நினைவு ஆரம்பத்தில் சோகமாகவே யிருந்து, மெல்ல மெல்ல ஒரு புனிதப் பெருநினைவாக மாறத் தொடங்கியது. ஆளவந்தாரின் அடிச்சுவடுகளில் தாம் சென்று அவர் கொள்கைகளை நிலை நிறுத்த வேண்டும், என்று தீர்மானித்தார். அதற்காக **ஸ்ரீபாஷ்யம்** என்ற பேருரை எழுதப்பெற வேண்டும் என்ற எண்ணமும் இவர் உள்ளத்தில் இடம் பெறலாயிற்று. விஷ்ணு புராணம் இயற்றிய பராசர முனிவரின் திருப்பெயரைத் தகுதி வாய்ந்த ஒரு வைஷ்ணவருக்கு இட்டு விளக்கச் செய்ய வேண்டும் என்றும் நினைத்தார்.

இப்படியெல்லாம் எண்ணமிட்டவராய், இராமாநுஜர் காஞ்சீபுரத்தை அடைந்தார். திருக்கச்சிநம்பியே தமக்கு ஆறுதல் அளிக்க வல்லவர் என்று அவரிடம் சென்றார். நாளுக்கு நாள் திருக்கச்சிநம்பிமீது இராமாநுஜருக்குப் பக்தி அதிகரித்தது. வரதராஜப் பெருமாளுக்குத் தொண்டு செய்வதும் திருக்கச்சி நம்பியோடு உரையாடுவதும் இராமாநுஜருக்குப் பேரின்பம் அளித்தது.

ஆளவந்தாரின் மறைவுக்குச் சுமார் ஆறு மாதங்களுக்கு முன்பே காந்திமதி அம்மாள் காலமாகி விட்டாள். இராமாநுஜரின் மனைவியாகிய தஞ்சமாம்பாள் வீட்டுத் தலைவியாகி விட்டாள். இவளை இரட்சகாம்பாள் என்றும் குறிப்பிடுவதுண்டு. உருவ எழில் வாய்ந்தவள்; கணவரிடம் அன்பும் மரியாதையும் உள்ளவள்தான். ஆனால் இவளால் இராமாநுஜரின் இதயத்தை உணர்ந்து ஒழுக முடியவில்லை.

ஏற்கெனவே இராமாநுஜர் சாதாரணக் கணவரைப்போல் வீட்டுக் காரியங்களைக் கவனிப்பதில்லை; ஆளவந்தாரின் மறைவுக்குப் பின் இவரது வைராக்கியமும் பக்தியும் தஞ்சமாம்பாளுக்கு மேலும் அதிருப்தியை விளைத்தன. எனினும், இயன்ற வரையில் கணவருக்குப் பணிபுரிந்து வந்தாள். இராமாநுஜர் திருக்கச்சிநம்பிகளுடன் பெரும்பொழுதைப் போக்கி வந்ததும் தஞ்சமாம்பாளுக்குப் பிடிக்கவில்லை என்று ஊகம் செய்வதும் பொருத்தமே.

திருக்கச்சிநம்பி ஒருசமயம் இராமாநுஜரை நோக்கி, 'மனக்கவலையை அறவே விட்டுவிட வேண்டும், மனத்தில் கவலைக்கு இடம் கொடுக்காமல் கடவுளுக்கே இடம் கொடுக்க வேண்டும். பகவான் மீதுள்ள நம்பிக்கைக் குறைவுதான் கவலைக்குக் காரணமாகும். பக்தி செய்ய வேண்டும்; பணி புரிய வேண்டும். பணியில் அற்பம் என்றும் பெரிதென்றும் வேற்றுமைப்படுத்திக் கொள்வது சரியன்று. ஆராதனத்திற்காகக் கிணற்றிலிருந்து தீர்த்தம் கொண்டு வருவதும் கைங்கரியம்தான்; காலட்சேப கூடத்தில் அமர்ந்து அறிவுரைகளும் அறவுரைகளும் மக்களுக்கு வழங்குவதும் கைங்கரியம் தான். உண்மையான கைங்கரியத்தில் "நான்" என்ற ஆணவ முனைப்பிற்கே இடம் இல்லை. இறையருளை நம்பிப் பணிபுரிந்து கொண்டேயிருந்தால் ஆளவந்தாரின் அடிச்சுவட்டில் சென்று, அவர் பொருட்டுச் செய்த சபதத்தையும் உரிய காலத்தில் நிறைவேற்றலாம்' என்றெல்லாம் சொன்னார்.

இந்த வார்த்தைகளை அமுதமாய்ப் பருகிய இராமாநுஜர், 'என்னை உமது சீடராக அங்கீகரிக்க வேண்டும்' என்று வணங்கி வேண்டிக் கொண்டார். ஆனால் அதற்குத் திருக்கச்சிநம்பி இணங்கவில்லை. 'உரிய காலத்தில் தக்க குருவைப் பெறுவீர்; பகவான் அனுப்பி வைப்பார். அது குறித்தும் நீர் கவலைப்பட வேண்டாம்' என்றார் திருக்கச்சிநம்பி. இப்படிச் சொல்லி விட்டுக் கோயிலுக்குப் போய்விட்டார்.

'திருக்கச்சிநம்பிகளை நம்பியிருந்தேன்; அந்த நம்பிக்கை

நிறைவேறவில்லை. எனினும் இவர் அருளுக்கு எப்படியாவது பாத்திரமாக வேண்டும். இதற்கு என்ன செய்யலாம்?' என்று இராமாநுஜர் நினைவும் கனவுமாயிருந்தார். மறுநாள் எழுந்ததும் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, திருக்கச்சிநம்பியின் மடத்திற்குச் சென்றார்.

'இன்று என்னுடைய இல்லத்தில் தாங்கள் போஜனம் செய்ய வேண்டும்' என்று வேண்டிக் கொண்டார். நம்பி புன்னகையுடன், 'அப்படியே ஆகட்டும்' என்று இசைந்தார்.

இராமாநுஜர் மகிழ்ச்சியுடன் தம் இல்லத்திற்குத் திரும்பி வந்து மனைவியிடம், 'இன்று நமக்கு ஒரு பரம பக்தர் விருந்தாளியாக வரப்போகிறார். அவருக்கு அறுசுவை உண்டி தயாரிக்கப்பட வேண்டும். சீக்கிரம்; ஜாக்கிரதை' என்றெல்லாம் சொல்லி, வேண்டிய ஏற்பாடுகள் செய்துவிட்டு, நம்பியை நேரில் போய் அழைத்துவர வேண்டுமென்று நிச்சயித்தார்.

கோவில் விஷயமான சில பணிகளைக் கவனித்தபின் நம்பியை அழைத்து வரவேண்டும் என்று இராமாநுஜர் தெற்கு வீதி வழியாக வந்தார். அப்போது நம்பி மற்றொரு வீதி வழியாக இவர் இல்லத்திற்குச் சென்று இராமாநுஜரின் மனைவியை 'நோக்கி, அம்மணீ! அடியேன் பெருமாள் கைங்கரியத்திற்கு விரைந்து போகவேண்டும்; பிரசாதம் பரிமாற வேண்டும்' என்று கேட்டுக்கொண்டார்.

தஞ்சமாம்பாளும் அப்படியே விரைந்து பரிமாற, நம்பி உணவு கொண்டு திரும்பி விட்டார். பிறகு தஞ்சம்பாள் அந்த இலையைக் கோலால் ஒதுக்கித் தள்ளிவிட்டு அந்த இடத்தைக் கோமயத்தால் (பசுவின் சாணத்தால்) சுத்தி செய்தாள். அப்பால் தானும் நீராடினாள்.

அவள் நீராடி நிற்கும் சமயத்தில் திரும்பி வந்துவிட்டார் இராமாநுஜர். நம்பியை மடத்தில் காணாததால் அவர் வேறு வழியாக வந்திருக்கலாம் என்று ஊகித்து மீண்டு வந்தவர், தம் மனைவி நீராடி நிற்பதைப் பார்த்து விட்டார்.

'ஏனம்மா? இப்போது தீர்த்தமாடியிருக்கிறாய்?'

'அந்தப் பாகவதர் வந்து அமுது செய்து விட்டுக் கோயிலில் கைங்கரியத்திற்குப் போக வேண்டுமென்று சொல்லி அவசரமாகப் போய்விட்டார். அந்த இலையைக் கோலால் தள்ளிவிட்டு, இடத்தைச் சுத்தி செய்து நீராடி நிற்கிறேன்.'

'இப்படிச் செய்வது தகுமா? பரம பாகவதரான அவரைச் சாதி கருதிப் பழிக்கலாமா?'

' நான் அவரைப் பழித்து ஒரு வார்த்தை கூடச் சொல்ல வில்லை.'

' பக்தர்கள் விஷயத்தில் சாதி கருதுவதே பழிப்பு என்பதை நீ அறியாயோ? அறிந்திருந்தும் நீ செய்த இத்தவறு என் உள்ளத்தைச் சித்திரவதை செய்கிறது. "போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதம் அன்றே!" என்ற ஆழ்வாரின் அருள்வாக்கைப் பல தடவை நீ கேட்டிருக்கிருயே!'

இராமாநுஜர் ' இனி என்ன செய்வது?' என்று ஆலோசித்து ஒன்றும் தோன்ருமல் திருக்கச்சிநம்பியின் இருப்பிடத்திற்கு வந்து தண்டனிட்டு, ' சுவாமி! அடியேனை ஒதுக்கி விட்டீரே! "பெருமாளோடு முகமாய் பேசும் பேறு பெற்றிருப்பவர்" என்று மக்களால் ஒரு முகமாய்க் கொண்டாடப் பெற்றிருக்கும் தேவரீர், என் இதயத்திலே ஆழ்ந்து பதிந்திருக்கும் சில நினைவுகளைக் குறித்தாவது பெருமாளின் திருவுள்ளத்தைத் தெரிவிக்கவேண்டும்' என்று பிரார்த்தித்தார்.

திருக்கச்சிநம்பி, இது குறித்து ஆலோசனையில் ஆழ்ந்திருந்தார். இந்த ஆலோசனையின் விளைவாக, ஆறு வார்த்தைகளை இராமாநுஜருக்குத் தெரிவிக்கவேண்டும் என்று தீர்மானித்தார். இது விஷயமாகத் தெய்வமே குரல் கொடுத்துப் பேசியதாகவும் நம்பினுர்.

பக்தர்களின் கதைகளில் தெய்வத்தின் குரலைக் கேட்டதாக வரும் பகுதிகள் உண்டு. **சாக்ரடீஸ்** என்ற கிரேக்கநாட்டுப் பேரறிஞரும் தாம் தெய்வத்தின் குரலைக் கேட்டதாகக் கூறியுள்ளார்; அண்மையில் வாழ்ந்த மகாத்மா காந்தியும் அப்படியே கூறியிருக்கிருர்.

திருக்கச்சிநம்பி இராமாநுஜருக்கு வரதராஜப் பெருமாளின் திருவுள்ளமாக வெளியிட்ட ஆறு வார்த்தைகளும், இராமாநுஜர் தம் உள்ளத்தில் உறுதிப்படுத்திக் கொள்ள விரும்பிய அடிப்படைக் கொள்கைகளைத் தழுவியனவாகும். இவற்றுள் முதலாவது வார்த்தை திருமாலே பரம்பொருள் என்பது. இரண்டாவது வார்த்தை ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள வேற்றுமையைக் குறிப்பிடுவது. மூன்ருவது வார்த்தை சரணுகதியும் பிரபத்தியுமே சிறந்த முத்தி நெறி என்பது. மரண காலத்தில் உள்ளத்தைக் கடவுளிடம் ஒருமைப்படுத்தவேண்டும் என்பது கூட அவசியமில்லை என்பது நாலாவது வார்த்தை. சரீர முடிவில் பாகவதர்களுக்கு முத்தி நிச்சயம் என்பது ஐந்தாவது வார்த்தை. பெரியநம்பியைக் குருவாகக் கொள்ளவேண்டும் என்பது ஆருவது வார்த்தை.

இந்த ஆறு வார்த்தைகளையும் நம்பி சொல்ல இராமாநுஜர் ஆச்சரியமாய், தம் இதயத்திலிருந்து பகவானே பேசுவது போன்ற உணர்ச்சியுடன், கேட்டார். இறைவனிடமிருந்து தாம் விரும்பியவை இவைதாம் என்று ஒப்புக்கொண்டார். இவ் வார்த்தைகளில் முதல் ஐந்தும் இவர் இதயத்தின் எதிரொலி களாகவே காணப்பட்டன. ஆறுவது வார்த்தையில் மட்டும் ஒரு கருத்து வேற்றுமை: திருக்கச்சிநம்பிக்குப்பதில் பெரிய நம்பி ஞானோபதேசம் செய்ய வேண்டும் என்பது. இது பெருமாளின் திருவுள்ளம் என்று திருக்கச்சிநம்பி அறிவித்ததை யும் இராமாநுஜர் ஒப்புக்கொண்டார்.

பெரியநம்பியிடம் ஞானோபதேசம் பெற வேண்டும் என்று முடிவுகட்டிய பின்பும் திருக்கச்சிநம்பிமீது இவருக்கு ஏற்கெனவே இருந்த பக்தி ஒரு சிறிதும் குறையவில்லை. திருக்கச்சிநம்பியும் தம் குருமார்களில் ஒருவர் என்பதை இவர் மறந்ததே இல்லை.

இத்தகைய பக்தி விசுவாசம் காரணமாகவே இவர் தம் மனைவி திருக்கச்சிநம்பி விஷயத்தில் இழைத்த பிழையை ஒரு பெருந்தவறாகக் கருதினார். 'இப்படி மகான்களைக் குறைவு படுத்துவாயானால் நீ உன் தாய் வீடு போய்ச் சேரவேண்டி யதுதான்' என்று எச்சரிக்கை செய்ததாகவும் குரு பரம்பரைக் கதைகள் தெரிவிக்கின்றன.

# 7

# அமைதி காட்டிய மங்கள தீபம்

திருவரங்கத்திலே யாமுனரின் சீடர்களான பாகவதர்கள், 'கோன் இல்லாத மந்தைபோல் இருக்கிறோமே! தாய் இல்லாப் பிள்ளைகள் போல் தவிக்கிறோமே! இனி என் செய்வது?' என்று பெரியநம்பியைச் சூழ்ந்து கொண்டார்கள். 'சுவாமி, தாங்கள் யாமுனரின் அருமந்த பக்தர்களில் ஒருவர், இனிமேல் ஆளவந்தாரின் ஆசாரிய சிங்காதனத்தில் அமர்ந்து, பாகவத ராஜ்யத்தை உலகம் போற்றும் ஒரு மகாராஜ்யமாக்க யாரே தகுதியுடையவர்? ஆளவந்தாரின் ஆனந்தப் பொற்கனவுகள் நனவாக வேண்டாமா?' என்று கேட்டார்கள்.

அதற்குப் பெரியநம்பி, 'ஞானத்தனிச் செங்கோல் நடத்த நானோ தகுதி வாய்ந்தவன்? அவர் இதயம் இராமாநுஜரையே

ஆவலுடன் நாடிக்கொண்டிருந்தது: உங்களுக்குத் தெரியாதா என்ன?'' என்று பதில் சொன்னார்.

' அப்படியானால் உடனே காஞ்சீபுரத்திற்குப் போய் அவரை அழைத்து வாருங்கள் ' என்று அவர்கள் சொன்னார்கள். ' அப்படியே ' என்று சொல்லிப் பெரியநம்பியும் புறப்பட்டார்.

ஏறக்குறைய அதே சமயத்தில் இராமாநுஜரும் திருவரங் கத்தை நோக்கிப் புறப்பட்டார். திருக்கச்சிநம்பியின் திருவுள்ளத் திற்கிணங்கப் பெரியநம்பியைக் குருவாக அடைந்து உபதேசம் பெறவேண்டும் என்பதற்காகத்தான் முதல் முதல் திருக்கச்சிநம்பி யிடம் விடைபெற்றுக் கொண்டார். பிறகு வரதராஜப் பெருமாளின் சந்நிதியில் போய் நின்று, ' அருளாளா! அடியே னுக்கு விடையருள வேணும் ' என்று பிரார்த்தனை செய்து கொண்டார். அப்பால் புறப்பட்டுவரும் வழியில் மதுராந்தகத்தில் தங்கினார்.

பெரியநம்பி தம் மனைவியுடன் காஞ்சீபுரத்தை நோக்கி வந்தார். இராமாநுஜருடன் கொஞ்ச காலம் தங்கி இவர் உள்ளத்தைப் பக்குவப்படுத்த வேண்டும் என்று தீர்மானித்திருந் தார். நாலு நாள் பயணம் செய்தபின் அவர்கள் மதுராந்தகத் துக்கு வந்து சேர்ந்தார்கள்.

இங்கே கோயில் கொண்டிருக்கும் பெருமானை, ' ஏரி காத்த பெருமாள் ' என்று இந்நாளில் பிரசித்தமாகச் சொல்லுகிறோம். இக்கோயிலுக்கு எதிரே ஒரு பெரிய ஏரி இருக்கிறது. பெருமா னைச் சேவித்தபின் இந்த ஏரிக்கரையில் இளைப்பாறிக் கொண் டிருந்தனர் பெரியநம்பியும் மனைவியாரும்.

இராமாநுஜர் பெரியநம்பியைச் சந்தித்தார். ' எண்ணின பலன் எதிரேவந்து வாய்த்தது; எல்லாம் இறைவன் அருள்!' என்று தமக்குள் தாமே சொல்லிக் கொண்டவராய், ஆனந்தக் கண்ணீர் ததும்பும் கண்களைத் துடைத்துக்கொண்டு, பெரியநம்பி திருவடிகளில் தண்டனிட்டார். அவரும் அதிசயமும் ஆனந்த மும் அடைந்தவராய், இராமாநுஜரை வாரி எடுத்து அணைத்துக் கொண்டார்.

' அடியேனுக்கு இப்போதே தேவரீர் உபதேசம் செய்தருள வேணும் ' என்று பிரார்த்தித்தார் இராமாநுஜர். அவரோ, ' அத்திகிரி அருளாளரின் (வரதராஜப் பெருமாளின்) சந்நிதியிலே உபதேசம் செய்கிறோம், வாரும் ' என்றார்.

இராமாநுஜர் ஆத்திரப்படுவதாக நினைத்துப் பெரியநம்பி, 'ஆக்கப் பொறுத்தவர் ஆறப் பொறுக்கலாகாதோ?'' என்றும் மெல்லச் சொன்னார். இராமாநுஜரோ வெகு விநயமாகவும்

அதி உசிதமாகவும், 'ஆளவந்தார் விஷயமாக நாம் கண்டது போதாதோ?' என்று பதில் சொன்னார்.

'இந்த உடம்பு காஞ்சிக்குத் திரும்பிப் போகுமளவும் நிற்கும் என்பதுதான் என்ன நிச்சயம்? இங்கே இப்போதே தங்கள் உபதேசம் என்ற தீப மங்கள ஜோதியை அடியேனுக்குக் காட்டி அருள வேணும்' என்று சொல்லிக்கொண்டே, இராமாநுஜர் பெரியநம்பியின் திருவடிகளில் விழுந்து கிடந்தார். அவரும் இவரை முடிபிடித்து எடுத்து, 'வாரும், வாரும், இளையாழ் வாரே! வாரும்' என்று கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போனார்.

மதுராந்தகத்துப் பெருமாள் சந்நிதியில் பிராகாரத்தில் இருந்த ஒரு மகிழ மரத்தினடியில் இராமாநுஜரைப் பெரியநம்பி அழைத்துக்கொண்டு போய் உபதேசம் செய்யத் தொடங்கினார். முதல் முதல் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உரிய பஞ்ச ஸம்ஸ்காரம் செய்தார். இதன் முதல் அம்சம் இருபுயங்களிலும் சங்குசக்கர முத்திரை தரித்துக் கொள்வதாகும். இம்முத்திரைகளில் சக்கரம் வலதுபுயத்திலும் சங்கு இடது புயத்திலும் பொறிக்கப்படுகின்றன. வேத மந்திரங்களுடன் பொறிக்கப்படும் முத்திரைகள் இவை.

நெற்றியில் திருமண் கொண்டு பெருமானின் பன்னிரண்டு முக்கிய நாமங்களைச் சொல்லி ('கேசவா', முதலான நாமங்களால் பகவானை அழைத்து)ப் புண்டரம் தரித்துக் கொள்வதும் ஒரு ஸம்ஸ்காரம்தான். பகவானின் நாமங்களைச் சொல்லி இட்டுக் கொள்வதால் இதை 'நாமமிடுவது' என்றும் கூறுகிறார்கள்.

பகவானுடைய தாசனுகிவிட்டதற்கு அறிகுறியாக, வைணவப்பெயர் தரித்துக் கொள்வதும் ஒரு ஸம்ஸ்காரமாகக் கருதப்படுகிறது. பிள்ளைப் பெருமாளையங்கார் என்ற திவ்ய கவிஞருக்கு அழகிய மணவாளதாசர் என்ற பெயரும் உண்டு. தாசப் பெயராகிய இதுவே ஸ்ரீ வைஷ்ணவப் பெயர்.

உபதேச காலத்தில், ஸ்ரீவைஷ்ணவ மந்திரங்கள் கூறப்படுவதும் ஒரு ஸம்ஸ்காரமாகும். வேற்றுமை கருதாது, இம்மந்திரங்கள் அனைவருக்கும் உபதேசிக்கப்படுகின்றன.

குரு, உபதேச காலத்தில் சீடனுக்குத் திருமாலின் மூர்த்தங்களில் ஒன்றைப் பூஜிக்குமாறு கட்டளையிடுவதும் உண்டு. இதுவும் ஒரு ஸம்ஸ்காரமாகும்.

பெரியநம்பி இராமாநுஜருக்குப் 'பஞ்ச ஸம்ஸ்காரம்' என்ற ஐந்து ஸம்ஸ்காரங்கள் வாயிலாக ஸ்ரீ வைஷ்ணவ உபதேசம் செய்தார். இராமாநுஜரைத் தமது வலது புறத்தில் வைத்துக் கொண்டார். தம் வலது கையால் அவர் தலையைத் தொட்டு,

இடது கையால் அவர் இதயத்தைத் தொட்ட வண்ணம், ஆள வந்தாரின் திருவடிகளைத் தியானித்துக் கொண்டார். சீடரின் கண்களைத் தம் ஒருமுனைப்பட்ட பார்வையால் ஊடுருவிப் பார்த்தார்.

'கண்ணொடு கண்இணை நோக்கு' என்று திருவள்ளுவர் காதலர்களின் பார்வை குறித்துச் சொல்லுகிறாரே அது போன்றதொரு—அதைக்காட்டிலும் சக்தி வாய்ந்ததொரு—பார்வை, ஞானோபதேச காலத்தில் குரு சீடனைப் பார்க்கும் பார்வை என்பர்.

பெரியநம்பி 'மந்திர ரத்தினம்' என்று மதிக்கப்பெற்றிருக்கும் 'த்வயம்' என்ற இரட்டைப் பேருண்மைகளை உபதேசித்தார், இராமாநுஜரின் வலது செவியில்.

' பிறகு, முகம் நோக்கிச் சொன்னார் : 'முன்னாளில் ராமபிரான், காடு செல்ல நேர்ந்ததும், தம் பிரதிநிதியாகத் திருவடி நிலைகளை (பாதரட்சைகளை)ப் பரதன் தலையில் வைத்து அனுப்பினார் அல்லவா? அது போலவே, நம் குருமூர்த்தியான ஆளவந்தாரும், உமக்கு நேரே உபதேசிக்க முடியவில்லையே என்று, தமது அடிமலர்களை உமக்காக என் தலைமேல் வைத்துப் போய்விட்டார்!'

அந்த வார்த்தை இராமாநுஜருக்கு ஒரு பெரும் பொறுப்புணர்ச்சியை உள்ளத்தில் ஊன்றி வைத்தது. **'ராஜபோகமல்ல,** மகனே! உனக்கு நான் தருவது, ராஜ்ய **பாரம்** தான்!' என்று; **பாரம்** என்ற சொல்லை அழுத்தமாய் உச்சரித்து, ஒரு பெரிய நாட்டின் பொறுப்பை ஒப்படைக்கும் ஓர் அரசனைப் போல், ஆளவந்தார் தோற்றமளித்தார் இப்போது இராமாநுஜரின் மனக்கண் முன்பு!

இந்த அகக் காட்சியில் இராமாநுஜர் ஈடுபட்டிருக்கும் போதே, 'நீர் இப்போது உபதேசம் பெற்றது என்னிடம் இருந்தன்று, அவரிடமிருந்தே தான்!' என்ற பெரியநம்பியின் வார்த்தை காதில் விழுந்தது. 'இளையாழ்வாரே, யமுனைத் துறைவரே உமது ஆசாரியர்; நான் கருவி தான்!' என்றும் பெரியநம்பி தெரிவித்தார்.

இதே கருத்தைத்தான் பின்னாளில் திருவரங்கத்து அமுதனார், தம் இராமாநுச நூற்றந்தாதியில், 'யமுனைத் துறைவன் இணையடியாம் கதி பெற்றுடைய இராமாநுசன்' என்று குறிப்பிடப்போகிறார்.

பெரியநம்பியும் இராமாநுஜரும் அன்று முழுதும் மிக்க மகிழ்ச்சியுடன் மதுராந்தகத்திலேயே தங்கி உரையாடிக் கொண்டிருந்தனர். பேச்செல்லாம், ஸ்ரீவைஷ்ணவம் என்ற பக்தி

நெறி குறித்தும், ஆளவந்தாரின் பெருநோக்கம் குறித்தும்தான்.

இப்பேச்சினிடையே இராமானுஜர், 'குறி எது? நெறி எது? நெறியாளன் யார்? சுருங்கக் கூறி விளங்க வைக்கவேணும்' என்று கேட்டார். அதற்குப் பெரியநம்பி, காஞ்சீபுரத்தை நோக்கி நின்று கொண்டு, 'அத்திகிரி அருளாளனே குறியும் நெறியும்; நெறியாளர் நீரே!' என்று, கடுகுக்குள் கடலைக் காட்டுவதுபோல், சுட்டிக்காட்டி விட்டார்.

இருவரும், பெரியநம்பியின் மனைவியையும் அழைத்துக் கொண்டு, மதுராந்தகத்துப் பெருமாளைத் தொழுதபின், காஞ்சீ புரத்திற்குப் புறப்பட்டார்கள். இவர்கள் அங்கே போய் வரதராஜப் பெருமாளைத் தரிசிப்பதற்குள், திருக்கச்சிநம்பி இவர்களை எதிர்கொண்டு வந்துவிட்டார். திருக்கச்சிநம்பியும் பெரியநம்பியும் ஒருவரை ஒருவர் தண்டனிட்டு வணங்கியபின், மூவரும் முதல்முதல் திருக்கச்சிநம்பியின் இல்லத்திற்குப் போனார்கள்.

அங்கே திருக்கச்சிநம்பியால் உபசரிக்கப்பெற்று அவரோடு உரையாடிக் கொண்டிருந்தபின், எல்லாரும் வரதராஜப் பெருமாள் கோயிலுக்குப் போனார்கள். பெருமாள்முன் பெரிய நம்பி சிறிது நேரம் மெய்ம்மறந்து நின்றார். அப்போது சில காட்சிகள், ஏதோ ஒரு அதிசயமான திவ்ய நாடகத்தில் வரும் காட்சிகள் போல், தோன்றின, பெரியநம்பியின் அகக் கண்ணுக்கு எதிரே.

திவ்யப் பிரபந்தத்தையும் அதன் பெருங் கொள்கைகளையும் நாடெங்கும் விதைக்க விரும்பிய நாதமுனிகள் தாம் கண்டு பிடித்த செல்வத்தைத் தம் பேரப் பிள்ளையும் (ஆளவந்தாரும்) அனுபவிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டுத் தம் சீடரான உய்யக்கொண்டாரிடம் அதை விட்டு வைத்துப் போனது முதற் காட்சியாக வந்தது.

அந்த உய்யக்கொண்டார், தம் குருவின் அந்த நோக் கத்தை நிறைவேற்றமுடியாமலே, தம் பொறுப்பைத் தம் சீடப் பிள்ளையான மணக்கால்நம்பியிடம் ஒப்படைத்தது இரண்டாம் காட்சியாக வந்து நின்றது.

மணக்கால்நம்பி ஆறு மாத காலம் நாதமுனியின் பேரப் பிள்ளையான ஆளவந்தாருக்காகக் காத்திருந்ததும், 'கரும்பு தின்னக் கூலி கொடுப்பார் போல்' ஆளவந்தாருக்கு உகந்த உணவுப் பொருளான தூதுளங்கீரையைத் தேடிக் கொணர்ந்து கொடுத்து மேலும் ஆசை காட்டி, திருவரங்கத்துக்கு அழைத் துக் கொண்டுபோய், அழகிய மணவாளன் என்ற அந்த மஹா

ரகசியத்திற்கு முன் நிறுத்திவிட்டு மறைந்து போனதும் ஆகிய காட்சி மூன்றுவதாகத் தோற்றமளித்தது.

பெரியநம்பி கண்களை மலர விழித்துக் கொண்டு, ஆளவந்தாரின் விருப்பத்தைத் தெளிவாக நினைத்துப் பார்த்துக்கொண்டு, இராமாநுஜரை வரதராஜப் பெருமாளுக்கு நேரே கொண்டு போய் நிறுத்தினர். 'ஆளவந்தாரின் மஹா ரகசியம் இது!' என்று மகாபூர்ணர் என்ற பெரியநம்பி தமக்கு முடிவாக உபதேசித்தது போன்ற உணர்ச்சி இராமாநுஜருக்கு ஒரு கணத்தில் ஏற்பட்டுவிட்டது. இவரும், சிறிது நேரம் மெய்ம்மறந்து நிஷ்டையில் இருப்பதுபோல் நின்று கொண்டிருந்தார்.

அப்பால் இராமாநுஜர் பெரியநம்பியைத் தம் இல்லத்துக்கு அழைத்துக் கொண்டு போனர். தம் மனைவி தஞ்சமாம்பாளையும் சங்கு சக்கரங்கள் பொறித்துத் திருத்தியருள வேண்டும் என்று குருவை வேண்டிக்கொண்டார். குருவும் அப்படியே செய்ய, இராமாநுஜரும் தேவியும் தண்டனிட்டு, 'எங்கள் இல்லத்திலேயே தங்கியருள வேண்டும்' என்று பிரார்த்தித்தார்கள்.

பெரியநம்பி தம் மனைவியுடன் குடியிருப்பதற்காக இராமாநுஜர் தம் இல்லத்தின் மேல்பாதியைக் கொடுத்தார். தேவையான உணவுப் பொருள்கள் முதலியவற்றையும் தாராளமாகக் கொடுத்து உதவினர்; குருநாதரின் சகல வசதிகளையும் கவனித்துக் கொண்டார்.

இராமாநுஜர் ஒவ்வொரு நாளும் தமிழ்வேதம் என்ற திவ்யப் பிரபந்தங்களைப் பெரியநம்பியிடம் கற்று வந்தார். பெரியநம்பி இராமாநுஜருடன் சுமார் ஆறுமாதகாலம் தங்கியிருந்தார். பிரபந்தப் பாசுரங்களையும் அவற்றின் பொருட் சிறப்பையும் ஒவ்வொரு நாளும் அதிசயமாக அனுபவித்தார் இராமாநுஜர். ஆழ்வார்கள்மீதும், அவர்கள் உள்ளத்தைக் காட்ட முயன்ற பெரியநம்பி மீதும், நாளுக்கு நாள் பக்தி அதிகரித்தது.

'செவிக்கு இனிய செஞ்சொல்' என்று பிரபந்தங்களை அனுபவித்தவர், அந்தக் கவிதைகளுக்கும் அவற்றின் பொருளுக்கும் தம் உள்ளத்தை அர்ப்பணித்து விட்டார். பிரபந்தங்களுடன், வியாஸ சூத்திரப் பொருளையும், ஆளவந்தாரின் தரிசனமாகிய ஸ்ரீவைஷ்ணவத்திற்கு உரிய சிறப்பான சில உண்மைகளையும் இரகசியங்களையும் பெரியநம்பி இராமாநுஜருக்குக் கற்பித்து வந்தார்.

அவற்றை ஏற்றுத் தெளிந்து அமைதி பெற்ருர் இராமாநுஜர்.

# 8

# யதிராஜர்

பெரியநம்பி இராமாநுஜருடன் தங்கியிருந்த காலத்தில் ஒரு நாள் இராமாநுஜருக்கு எண்ணெய் தேய்க்க வந்த ஒருவன், 'பசிக்கிறதே' என்றான் இவரிடம். அவனை ஒரு ஸ்ரீவைஷ்ண வன் என்று குறிப்பிடுகின்றன குருபரம்பரைக் கதைகள்.

இராமாநுஜர் தம் மனைவியைக் கூப்பிட்டார். 'இவருக்கு அன்னம் இடு; பசியால் களைத்துக் கீழே விழுந்து விடுவாரோ என்று தோன்றுகிறது' என்று சொன்னார்.

'அன்னம் தயாராகவில்லையே!'

'நேற்று ஆக்கிய சோறாகிய அந்தப் பழையதையாவது உடனே பரிமாறு.'

'அது கூட இல்லையே.'

அவள் வார்த்தையில் இராமாநுஜருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. அந்த முகத்திலிருந்தும் விழித்த விழிப்பிலிருந்தும், சந்தேகம் வந்துவிட்டது. உடனே ஒரு காரியத்தை முன்னிட்டு, 'நீ வெளியே போய் அதைத் கவனித்து வா' என்று அவளை அனுப்பி வைத்தார். பிறகு, சமயலறைக்குள் புகுந்து சோதனை போட்டதில், பாத்திரம் நிறையப் பழஞ்சோறு இருப்பதைக் கண்டார்.

தஞ்சமாம்பாள் திரும்பி வந்ததும், 'உன்னிடம் கருணையும் இல்லை ; என்னிடம் பொய்யும் சொல்லி விட்டாயே' என்று வருந்தினர். இதை இரண்டாம் தவறு என்று இவர் உள்ளம் பதிவு செய்து கொண்டது.

திருக்கச்சிநம்பி விஷயத்தில் சாதி கருதி நீராடி நின்றுளே அந்த நிலை, முதல் தவருக — மூதன்மையான ஒரு தவருகவும்— இராமாநுஜரால் கருதப்பட்டது. அதை எண்ணிப் புண்ணுகியிருந்தது இவர் உள்ளம். அந்த ஆருத புண்ணைக் கோலிட்டுக் கிளறிவிட்டது போன்ற வேதனையுணர்ச்சி இப்போது ஏற்பட்டது.

இவர் ஒரு சாதாரண பாகவதரே, எனினும் பாகவத அபசாரம் தானே. வேலை செய்து பிழைத்து வந்த ஒரு பாகவதரைப் பட்டினி போடுவதும் பெருந்தவறு என்றே இராமாநுஜர் உள்ளம் சொல்லிற்று. 'இனி, இம்மாதிரி ஏதாவதொரு கொடுமை உன்னல் நேர்ந்தால் நான் மிகவும் கடுமையாக இருக்க நேர்ந்து விடும்!' என்று எச்சரிக்கை செய்தார் இராமாநுஜர், தம் மனைவியை நோக்கி.

இந்த எச்சரிக்கையும் பயன்படவில்லை. தஞ்சமாம்பாளால் இராமாநுஜரின் உள்ளத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. சில தினங்கள் சென்றபின் மூன்ருவது தவறும் செய்து விட்டாள் தஞ்சமாம்பாள். எல்லாத் தவறுகளுக்கும் சிகரமான பெருந்தவறும் நேர்ந்து விட்டது.

இது குருநாதரான பெரியநம்பி விஷயமாகவே நேர்ந்து விட்டது; எனவே ஒரு தனிப் பெருந்தவருக முடிந்தது. இது இவரது மணவாழ்க்கையை முடித்து விட்டது. இத்தகைய தவறு, ஒரு குடும்பத்தை இழந்து உலகத்தையே குடும்பமாக்கிக் கொள்ளும் வாய்ப்பை இவருக்கு அளித்து விட்டது. கிணற்றடிச் சண்டை ஒன்றில் விளைந்ததுதான் இவ்வளவும்.

ஒருநாள் தஞ்சமாம்பாளும் பெரியநம்பியின் மனைவியான விஜயாம்பாளும் ஒரு கிணற்றில் தண்ணீர் எடுத்து வரப் போயிருந்தார்கள். இருவரும் அவசரமாகக் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்துக் கொண்டிருக்கையில், விஜயாம்பாளின் குடத்தி

லிருந்து தஞ்சமாம்பாளின் குடத்தில் சில நீர்த்துளிகள் தெறித்து விட்டன. இதுவே சண்டைக்குக் காரணம்.

'பெரியநம்பிகளும் இராமாநுஜரும் பார்ப்பனராக இருந்தும், பெரியநம்பிகளின் குலம் தாழ்ந்தது என்று கருதினாள் தஞ்சமாம்பாள். செல்வத்திலும் குறைந்தவர்தாம் பெரியநம்பிகள் என்றும் நினைத்து விட்டாள். 'ஏனம்மா, ஆசாரிய பத்தினி என்ற செருக்கோ உனக்கு?' என்று கூசாது கேட்டு விட்டாள்.

விஜயாம்பாளின் பொறுமை தஞ்சமாம்பாளின் கோபத்தை மேலும் மூட்டியது. குரு பத்தினியின் மனம் நொந்து போகும்படி வாக்கு விரயம் செய்து விட்டாள் தஞ்சமாம்பாள்.

விஜயாம்பாள் கண்ணீர் வடித்துக்கொண்டு வந்ததைப் பெரியநம்பி கண்டார். 'காரணம் என்ன?' என்று விசாரித்தார். விஜயாம்பாள் நடந்ததை விண்ணப்பம் செய்தாள். அது கேட்ட நம்பிகள், 'இத்தவற்றுக்குப் பொறுப்பாளிகள் நாமே!' என்றார். 'இனி இங்கே இருந்தால் அடிக்கடி இப்படியே விபரீதங்கள் விளையக்கூடுமே; அதனால், நாம் பாகவத அபசாரத்திற்கு உள்ளாக வேண்டி வருமே!' என்றும் சொன்னார்.

'இராமாநுஜர் செய்தி அறிவதற்கு முன்னமே நாம் திருவரங்கத்திற்குப் புறப்படுவது நலம்' என்று பெரியநம்பி தம் மனைவியை அழைத்துக் கொண்டு புறப்பட்டார். பிறகு இராமாநுஜர் தம் இல்லத்திற்கு வந்து, வழக்கம்போல் 'குருவைத் தண்டனிட வேணும்' என்ற நினைப்புடன் பெரியநம்பி தங்கியிருந்த தம் மாளிகைப் பகுதிக்குப் போனார். அவரைக் காணமல் அங்குமிங்கும் தேடினார். 'பெரியநம்பி எங்கே?'- என்று பக்கத்திலுள்ளவர்களை விசாரித்தார்.

மனைவியுடன் அவர் திருவரங்கத்திற்குப் போய்விட்டார் என்று செய்தி கிடைத்தது. 'என்னிடம் சொல்லிக் கொள்ளாமலே அவ்வளவு அவசரமாகப் போவதற்குக் காரணம்தான் என்ன?' என்று ஆலோசித்துப் பார்த்தார்; அக்கம் பக்கத்திலுள்ளவர்களை விசாரித்தும் நடந்ததை உள்ளபடி அறிந்துகொள்ள விரும்பினார். 'எல்லாம் ஒரு தோண்டிச் சண்டையின் விளைவு தான்; கிணற்றங்கரையில் உங்கள் தேவியாருக்கும் அவர் தேவியாருக்கும் ஒரே பூசலாகிவிட்டது. பெரியநம்பி தம் மனைவியைக் கடிந்துகொண்டு அப்படியே ஸ்ரீரங்கத்திற்குப் போய்விட்டார்' என்று சிலர் தெரிவித்தார்கள்.

இராமாநுஜர் மனம் கலங்கியவராய்த் தம் மனைவி இருக்கும் இடத்திற்குச் சென்றார். அவள் ஒருவகைக் கலக்கமும் இல்லாமல்தான் தன் வீட்டு வேலையைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

இவர் அவளை நோக்கி, 'நீ திருக்கச்சிநம்பி விஷயத்திலும் அன்று அபசாரப்பட்டாய்; இன்று பெரியநம்பிகள் விஷயத்திலும் அபசாரப் பட்டாய். இடையே, பசித்துக் களைத்திருந்த பாகவதனுக்கு இரங்கி அன்னமிட மறுத்துவிட்டாய். இம்மூன்று குற்றங்களிலும் கொடிது, கொடிது குருமூர்த்தியைத் துரத்திவிட்ட இச்செயல். என்னல் இதைப் பொறுக்க முடியாது' என்றார்.

தஞ்சமாம்பாளும் ஏதேதோ பதில் சொன்னாள். 'உம்முடைய குருவின் பத்தினிக்கும் எனக்கும் தோண்டிச் சண்டை ஏற்பட்டது உண்மைதான். ஆனல் நான் அவளை ஏசவில்லை; மிகவும் கொடுமையாகப் பேசவும் இல்லை; அவளையும் அந்தப் பெரிய மனிதரையும் நான் துரத்திவிடவும் இல்லை' என்றெல்லாம் சொல்லி மேலும் கோபமூட்ட முயன்றாள்.

இராமாநுஜரோ அமைதியாக, 'இனி நீ இங்கே வாழ்க்கை நடத்துவதால் உனக்கும் பயன் இல்லை, எனக்கும் பயன் இல்லை. நீ பிறந்தகத்திலிருந்து கொண்டு வந்தவற்றையெல்லாம் எடுத்துக் கொண்டு உன் பெற்றோரிடம் போய்ச் சேரலாம்' என்று கூறி அவளை அனுப்பிவிட்டார் என்று குரு பரம்பரைக் கதைகள் பலவும் கூறுகின்றன.

சில ஐதிகக் கதைகள் இதுகுறித்து வேறு விதமாகவும் கூறுகின்றன. இராமாநுஜர் தஞ்சமாம்பாளை நோக்கி-'பெற்றோர், வீட்டுக்குப் போய்விடலாம்' என்று சொன்னதும், அவள் ஆடை ஆபரணங்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு போய் விட்டதாகவும் சிலர் சொல்லுகிறார்கள். இவர் அவளைத் தந்திரமாக அனுப்பிவிட்டதாய்க் கூறுவோரும் உண்டு.

இவற்றையெல்லாம் பார்க்கும்போது தஞ்சமாம்பாள் மகா மேதாவியான இராமாநுஜருக்கு இசைந்த வாழ்க்கைத் துணைவியாக அமைந்திருக்கவில்லை என்றும், இவளுடைய செயல்கள் அவருடைய குறிக்கோளுக்கு முட்டுக்கட்டைகளாகவே பெரும்பாலும் அமைந்தன என்றும் முடிவுகட்டுவது பொருத்தமே.

தஞ்சமாம்பாள் பிறந்தகத்திற்குப் போனதும், இராமாநுஜரும் அந்த வீட்டைவிட்டுப் புறப்பட்டார். வரதராஜப் பெருமாளின் கோயிலுக்குப் போனார். துறவியாவதே தாம் இனிச் செய்ய வேண்டிய கடமை என்று துணிந்தார்.

வரதராஜப் பெருமாளை வணங்கி எழுந்து நின்று, 'எம்பெருமானே; உன்னையும் உன் அடியார்களையும் ஒருமை உள்ளத்துடன் நேசித்து, உங்களுக்கே பணிசெய்ய விரும்புகிறேன்; அடியேனை ஆட்கொள்ள வேண்டும்' என்று பிரார்த்தித்தார்.

'இல்லறம் நன்று, துறவறம் நன்று? எது மேலானது,

எது கீழானது ?'' என்ற கேள்விகளுக்கு ஸ்ரீவைஷ்ணவம் என்ற பக்திப் பெருநெறியில் இடமில்லை. பகவத் கைங்கரியத்திற்கும் பாகவத கைங்கரியத்திற்கும் எந்த ஆசிரமம் இடம் கொடுக்கிறதோ, அதையே பாகவதன் மேற்கொண்டு ஒழுகுவான். கைங்கரிய நெறிக்கு, எவனுக்கு இல்லறம் பொருந்தாமற் போகிறதோ அவன் துறவியாகி விடுவதில் தவறொன்றுமில்லை. அவனுக்குத் துறவறமே நல்லறம். காவி கட்டும் துறவிக் கோலம் பகவத்—பாகவத கைங்கரியங்களுக்கும் தெய்வ பக்திக்கும் பாகவத அபிமானத்திற்கும் இடையூருகும் என்ருல், துறவும் துறக்கத் தக்கதுதான் !

இராமாநுஜரின் மனைவியும் விஜயாம்பாளைப் போலிருந்து விட்டால், இவர் துறவறம் பூண்டிருப்பாரா ?—இது ஒரு பெரிய கேள்வி. ஆனுல் இவர் இல்லறத்தை நல்லறமாகக் கண்டு அதிலே நிலை பெற்றிருந்தால், ஸ்ரீவைஷ்ணவத்திற்காக மகத்தான சாதனைகளைச் செய்திருக்க முடியுமா ? இத்தகைய வாதங்களில் பொழுது போக்குவதைக் காட்டிலும், காவி ஆடையும் முக்கோல் என்ற திரிதண்டமும் தரித்து, இராமாநுஜர் செய்திருக்கும் செயற்கருஞ் செயல்களையும் அவற்றின் விளைவுகளையும் ஆராய்ந்து பார்ப்பதே நலமாகும்.

இராமாநுஜர் துறவுக் கோலம் பூண்டு கொள்வதற்கு வரதராஜப் பெருமாளே அர்ச்சகர் மூலமாக அனுமதி அளித்தார் என்றும் ஒரு கதை வழங்குகிறது. இராமாநுஜர் துறவியானதும், ' இராமாநுஜ முனியே !' என்று தெய்வ ஆவேசம் கொண்ட அர்ச்சகரே அழைத்தாராம்.

திரிதண்டத்தையும் காவி ஆடையையும் இராமாநுஜர் அணிந்து கொண்டு கோயிலுக்கு எதிரேயுள்ள பழைய தடாகக் கரைக்குப்போய், வேள்வித் தீ வளர்த்து அதில் மனைவிமீதும் செல்வத்தின்மீதும் உள்ள ஆசைகளையெல்லாம் ' ஆகுதி ' செய்து விட்டார் என்றும் சொல்லுகிருர்கள்.

துறவிகளில் ஒற்றைத் தண்டுள்ளவர்கள் அத்வைதிகள். முக்கோல் என்ற திரிதண்டம் உள்ளவர்கள் பாகவதத் துறவிகள். இவர்களை ' முக்கோல் - பகவர் ' என்று கூறுவதும் உண்டு. சங்ககாலத் தமிழகத்திலும் முக்கோல்-பகவர்களைச் சந்திக்கிருேம். இவர்கள் துறவிகளாய்க் காடுகளில் சஞ்சரித்துக் கொண்டிருந்ததாய்த் தெரியவருகிறது. நாளடைவில் இத்துறவிகள் பாகவத சமயப் பிரசாரத்தில் மேலும் மேலும் ஈடுபட்டிருக்க வேண்டும். இத்தகைய முக்கோல் – பகவர்களில் இராமாநுஜரை யதிராஜா என்று குறிப்பிடுகிருர்கள்.

இராமாநுஜர் இல்லற வாழ்க்கைமீதும் செல்வத்தின்மீதும் உள்ள ஆசைகளை வேள்வித் தீயிலிட்டு நீருக்கி நிர்மலராக ஜொலித்த அதே சமயத்தில், காஞ்சிபூர்ணர் என்ற திருக்கச்சி நம்பி அங்கே வந்து இவரை 'யதிராஜா!' ('துறவிகளுக்கு அரசே!') என்று அழைத்ததே வரதராஜப் பெருமாளின் திரு வுள்ளத்தைப் புலப்படுத்தியதுதான் என்கிருர்கள்.

உடம்பு உள்ளம் வாக்கு என்ற மூன்றையும் முற்றும் கட்டுப் படுத்தியதற்கு ஓர் அறிகுறியாக முக்கோலைப் பிடித்தவராய் யதிராஜர் தூய காவியாடை புனைந்து வரதராஜப் பெருமாளின் ஆலயத்திலிருந்து வீதி வழியாக வந்ததும், ஒரு புதிய ஞான சூரியன் உதயம் செய்துவிட்டது போன்ற உணர்ச்சியைப் பொதுமக்களும் அடைந்தனராம்.

* * *

இராமாநுஜர் தஞ்சமாம்பாளைத் திருத்தி ஆட்கொண்டிருக்க லாகாதா? எத்தனை பேர்களை—ஆண்களையும் பெண்களையும்—திருத்திப் பணி கொண்டார்! தம்மைக் கொல்ல முயன்ற யாதவப் பிரகாசரும் திருந்திச் சீடராஞர் என்று நாம் தெரிந்துகொள் ளப் போகிறேம். இத்தகைய அற்புத ஆற்றலுள்ள இராமாநுஜ ருக்குத் தஞ்சமாம்பாளை ஏன் திருத்திப் பணி கொள்ள முடியா மல் போய்விட்டது? இப்படியெல்லாம் இராமாநுஜரின் இந்த வாழ்க்கை வரலாற்றுப் பகுதியை அலசி ஆராய்ந்து பார்ப்பவர் களும் உண்டு.

இந்தச் சந்தர்ப்பத்தில் புத்தர் பெருமானின் பெருந்துறவும் நமது நினைவிற்கு வருகிறது. தஞ்சமாம்பாளாவது மூன்று தவறு கள் செய்து விட்டாள்; ஆனல் புத்தர் பெருமானின் தேவி செய்த தவறு ஒன்றும் இல்லையே!

புத்தர்பிரான் அருள்
பொங்கிய நாடு

என்று வியந்து பாடி மகிழ்கிறேம். ஆனல் இந்த அருள் மனை விக்கு ஏன் கிடைக்கவில்லை? தம்முடைய உள்ளுணர்ச்சிகளைப் புத்தர் தமது வாழ்க்கைத் துணைவியிடம் தெரிவிக்கவே இல்லை. மேலும், தஞ்சமாம்பாளைப் புத்தர்பிரானின் மனைவிக்கு நிகராகச் சொல்ல முடியுமா?

புத்தர் பிரானின் மனைவி நல்லவள் தான்; கணவனின் குறிப்பறிந்து கீழ்ப்படிந்து நடந்தவள். இவள் தஞ்சமாம்பாளைப் போல் தவறு செய்யாவிட்டாலும், உலகத்திற்காகப் பிறந்திருக் கும் உத்தமரைத் தனக்கே உரியவராகக் கருதிவிட்டாள் அல் லவா? இது காதலால் விளைந்த தன்னலம்தானே என்று தமது

‘இராமாநுஜர் வாழ்க்கை’ என்ற நூலில் ஆசிரியரான சுவாமி ராமகிருஷ்ணனந்தர் கூறியிருப்பது கூர்ந்து நோக்கத் தக்கது.

புத்தர்பெருமான் உலக நலத்தை முன்னிட்டுத் துறவுபூண்டு ஞானசம்பத்தை அடைந்தார் என்றால், அந்த அருட்பெருஞ் செல்வத்தில் புத்தரின் மனைவிக்கும் பங்கு உண்டு. அப்படியே இராமாநுஜர் ஈட்டி வைத்த பாகவதப் பெருநிதியில் தஞ்சமாம் பாளுக்குப் பங்கு இல்லை என்று சொல்லமுடியாது. ஆனால், அந்த உரிமையைப் பெற்றுக்கொள்வதற்கும் தகுதி வேண்டுமே!

அவளைத் திருத்துவதற்கு இராமாநுஜர் முயற்சி செய்யவில்லை என்று கருதுவதற்கு இடமில்லை. இவர் செய்த முயற்சிகளெல் லாம் விழலுக்கு இறைத்த நீராயிற்று என்றே சொல்லவேண்டும். எப்போதாவது தஞ்சமாம்பாள் தன் தவறுகளை நன்குணர்ந்து பச்சாத்தாபக் கண்ணீர் வடித்ததுண்டா? இந்த வினவுக்கு, நாம் விடை கூற முடியாது; விடை கூறச் சான்று ஒன்றும் இல்லை.

* * *

இனி நாம் இராமாநுஜர் துறவுபூண்ட முறை குறித்துச் சிந்தித்துப் பார்க்கலாம். முக்கோல் என்ற திரிதண்ட சந்நியாசி களின் பரம்பரை தமிழகத்தில்—ஏன், இந்தியா எங்குமே— ஒற்றைத் தண்டு பிடித்த அத்வைத வேதாந்த பரம்பரைக்கும் முற்பட்டது என்பதில் ஐயமில்லை. ஆழ்வார்களும் முக்கோல்— பகவர்களான துறவிகளைக் குறிப்பிடுகிறார்கள். ஆனால் இராமா நுஜருக்கு வரதராஜப் பெருமாளே குருவாக அமைந்து சந்நியாசம் கொடுத்தார் என்று கூறுவதன் பொருள் என்ன?

இராமாநுஜர் காலத்தில் அத்வைத குருமார்களிடத்திலேயே சந்நியாசம் பெறுவது வழக்கமாயிருந்திருக்க வேண்டும். யாதவப்பிரகாசருடன் கருத்து வேற்றுமையும் கொள்கை வேற்றுமையும் கொண்டிருந்த இராமாநுஜர், அத்வைத வேதாந்திகளான துறவிகளிடம் சந்நியாசம் பெற்றுக்கொள்ள வில்லை யென்பதில் வியப்பொன்றுமில்லை. அந்த நிலையில் வரத ராஜப் பெருமாளின் பரமபக்தராக இருந்தவர், அப்பெருமானையே குருவாகப் பாவித்துக் கொண்டு துறவு பூண்டார் எனலாம்.

அக்காலத்திலே இவர் துறவு பூண்டதையோ, துறவுபூண்ட முறையையோ அனைவரும் ஒப்புக் கொண்டிருந்தனர் என்று சொல்ல முடியாது. எனினும் பக்தர்கள் இந்த யதிராஜரைத் தங்களுக்குத் தலைவராக மதிக்கலாயினர். இவர் முக்கோல் பிடித்ததைப் பாகவத ராஜ்யத்தை ஆளச் செங்கோல் பிடித்த தாகக் கருதியவர்களும் உண்டு.

இராமாநுஜர் துறவுபூண்டதும், பக்தர்கள் அமைத்துக் கொடுத்த ஒரு மடத்தில் அமர்ந்து ஆசிரமத்தின் விதிகளுக்கு இணங்க ஒழுகி வந்ததுடன் பக்திப் பிரசாரமும் செய்துவந்தார். அடிக்கடி பெரியநம்பியின் நினைவு வரும்; திருக்கச்சிநம்பியின் கூட்டுறவு கிடைக்கும். எனினும் இவர்களுக்கும் மேலாக, யாமுனரையே தம் பரமகுருவாகப் பாவித்துக் கொள்வார்.

'ஆளவந்தாரின் அபார கிருபை அடியேனுக்குக் கிடைத்துவிட்டது. அந்த அருளால் என் வழியில் தோன்றிய இடையூறுகள் எல்லாம் விலகிப்போய்விட்டன! குடும்பக் கவலைகள் இன்றி, எனக்கு இசைந்த ஆசிரமமும் கிடைத்துவிட்டது. இனி, நான் ஆளவந்தாரின் கடைசி விருப்பங்களைப் பூர்த்தி செய்ய முயல்வேன்' என்று சங்கற்பம் செய்து கொண்டார் இராமாநுஜர்.

# 9

# சூழ்நிலை உருவாகிறது

ஆளவந்தாரின் இறுதி விருப்பங்களை நிறைவேற்றுவது என்றால் அதற்கு இசைந்த சீடர் குழாம் ஒன்று உருவாகவேண்டுமல்லவா? 'அந்தோ! தனித்திருக்கிறேனே!' என்று தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார் இராமாநுஜர். யதிராஜர் என்று மக்கள் இவரைப் போற்றியபோதிலும், தக்க சீடர்களும் துணைவர்களும் இல்லாத நிலையில் அந்தப் பட்டம் பயனற்றது தானே. 'குடிவளம் பெறாத ராஜாவும் ஒரு ராஜாவா?—அப்படியே அன்புச் சீடர்களையும் ஞானத் துணைவர்களையும் பெற்றிராத துறவியும் யதிராஜராக இருக்க முடியாது' என்று எண்ணினார் இராமாநுஜர்.

இந்த நிலையில் தம் பழைய தோழராகிய கோவிந்தபட்டரின்

நினைவு முதல்முதல் வந்தது. 'கோவிந்தர் என்னுடன் இருந்தாலும் போதுமே! ஸ்ரீவைஷ்ணவத்திற்குரிய வேதாந்தக் கொள்கைகள் குறித்து அவர் நன்கு அறிவார். உண்மைமீது பற்றும் என்மீது அன்பும் கொண்டவர்; அவரைத் திருத்தி நமது சம்பிரதாயத்திற்குக் கொண்டுவர வேண்டும். யாதவப் பிரகாசர் அல்லவா அவரை வேறு வழியில் செலுத்தி விட்டார்?' என்றெல்லாம் எண்ணங்கள் அலை அலையாக எழுந்தன.

இந்த நிலையில் ஸ்ரீசைலபூர்ணர் என்ற பெரிய திருமலைநம்பியின் நினைவு வந்தது. 'என் மாமா இருக்கும்போது எனக்கு என்ன குறை?' என்று நினைத்தார். வரதராஜப் பெருமாளுக்குத் திருக்கச்சிநம்பி போல வேங்கடேசருக்குத் திருமலைநம்பி என்பதை நன்கறிவார் இராமாநுஜர். அவரைக் கொண்டு கோவிந்தரைத் திருத்துவது அரிதன்று எனக் கருதித் திருப்பதிக்குச் செய்தி அனுப்பினார்: தம்மைப்போல் கோவிந்தரும் திருமலைநம்பிக்கு மருமகன்தானே!

பிறகு இராமாநுஜர் தம் மருமகனை முதலியாண்டான் என்பவரைத் திருத்திச் சீடனாக்கிக் கொள்ள விரும்பினார். இரண்டு சகோதரிகள் இராமாநுஜருக்கு உண்டு; பூமி என்றும் கமலா என்றும் பெயர் உள்ளவர்கள். பூமி என்பவள் புருஷமங்கலம் அனந்ததீட்சிதரை மணந்து முதலியாண்டானைப் பெற்றெடுத்தாள். முதலியாண்டானுக்குத் தாசரதி என்ற ஒரு பெயரும் உண்டு.

இராமாநுஜர் இவரை உகந்து சீடராக்கிக் கொள்ள முயன்றதுபோல், தாசரதியும் இராமாநுஜரின் மகிமையைக் கேள்விப்பட்டு, 'அந்த யதிராஜரை நான் அடைந்து உய்ந்து போவேன்' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டு இவரைக் குருவாக்கிக் கொள்ள விரும்பினார். இவ்விருப்பத்துடன் தாசரதி காஞ்சீபுரத்திற்கு வந்தார்; குருவைத் தரிசித்துச் சீடருமாகி விட்டார்.

முதலியாண்டான் இராமாநுஜரைப் பிரிந்ததில்லை. எனவே, இந்தச் சீடரை இராமாநுஜர், 'எனக்குத் திரிதண்டம்போல் இருப்பவர்' என்று திருக்கோஷ்டியூர் நம்பிக்கு அறிமுகப் படுத்தினார். இப்படி முதலியாண்டானை அறிமுகப் படுத்தியவர், கூரேசன் என்ற கூரத்தாழ்வானைத் தமக்குப் பவித்திரம் என்று அதே நம்பிகளுக்கு அறிமுகப் படுத்தினார் என்பதையும் நாம் அறிவோம். இந்தக் கூரேசன் காஞ்சீபுரத்துக்கு அருகிலுள்ள கூரம் என்ற கிராமத்தைச் சேர்ந்தவர்.

இவர் மனைவியின் பெயர் ஆண்டாள். பெரியாழ்வாரின்

திருமகளான கோதை என்ற ஆண்டாளின் திருப்பெயரைச் சூட்டிக் கொண்டிருந்த இவளும் கூரேசனைப்போல் நுண்ணறிவு கொண்டிருந்தாள். கூரேசனுக்கு வேதசாஸ்திர விஷயமாக ஏற்படும் சந்தேகங்களைப் போக்கக்கூடிய ஆற்றலும் இவளுக்கிருந்தது. கூரேசன் பெருஞ்செல்வராகவும் இருந்தார்; ஒரு வள்ளலாகவும் திகழ்ந்தார்.

கூரேசன் அறவழியில் தமக்கு வந்த பொருளை அறவழியிலேயே விநியோகித்து வந்தார். பிறகு, தமக்கும் தம் மனைவிக்கும் ஒரு சிறு பகுதியை மட்டும் வைத்துக் கொண்டு மற்றச் செல்வங்களை யெல்லாம் ஏழை மக்களுக்கு வாரி இறைத்து விட்டார். பிறகு தம் மனைவிக்கு மட்டும் தேவையான பொருள்களைக் கொடுத்துவிட்டுத் தமக்கென்று ஒன்றுமே வைத்துக் கொள்ளாமல் காஞ்சீபுரத்தை நோக்கிப் புறப்பட்டார்.

ஒரு காட்டு வழியில் போய்க் கொண்டிருந்த இவரை, இவருக்குத் தெரியாமலே மனைவியான ஆண்டாளும் சற்றுத் தூரத்தில் தொடர்ந்து வந்தாள். இதை அறிந்து கொண்டதும் ஆச்சரியமடைந்த கூரேசன், ' இவளன்றோ வாழ்க்கைத்துணை !' என்று தமக்குள் தாமே சொல்லிக் கொண்டு, இவளையும் அழைத்துக் கொண்டு போனார்.

வழியிலே ஆண்டாள் கூரேசனை நோக்கி, ' எனக்குப் பயமாயிருக்கிறதே, நாதா !' என்றாள். உடனே கூரேசன், ' மடியிலே கனம் இருந்தால் வழியிலே பயமிருக்கும் ' என்ற பழமொழியை நினைவூட்டி, அவளை நோக்கி, ' நீ ஏதாவது விலையுயர்ந்த பொருளைக் கொணர்ந்திருக்கிறாயா ?' என்று கேட்டார். அதற்கு அவள், ' ஒரு பொன்வட்டில் கொண்டு வந்திருக்கிறேன் ' என்று பதில் சொன்னாள்.

' ஏனம்மா இந்தப் பொன்வட்டிலை மட்டும் கொண்டு வந்திருக்கிறாய் ?'

' நீர் இப் பொன்வட்டிலில் பிரியமாகச் சாப்பிடுவீரே அந்த நாளில் என்றுதான் இதைக் கொண்டு வந்திருக்கிறேன்.'

' இந்த நாளில் அடுத்த சாப்பாடு எங்கே கிடைக்கும் என்பதே நமக்குத் தெரியாத விஷயமல்லவா ?'

இப்படிச் சொல்லிவிட்டுச் சிரித்தார் கூரேசன். இந்தச் சிரிப்பொலி அந்தக் காட்டின் மௌனத்தைக் கடைந்து கொண்டு எழுந்தது. ' சரி ; அதை இங்கே கொடு ' என்று வாங்கிக் கொண்டு, சுழற்றி எறிந்துவிட்டார் வெகுதூரத்திலே. பிறகு ' உன் பயமும் அதோ வெகுதூரத்தில் ஓடிப்போய் விட்டது !' என்றார். இதனால் இந்தக் கூரேசனை,

**பொன்வட்டில் பறித்தெறிந்த**
**புகழுடையோன் வாழியே !**

என்று வாழ்த்துகிறது ஸ்ரீவைஷ்ணவ உலகம்.

கூரேசனும் ஆண்டாளும் காஞ்சீபுரத்திற்கு வந்துசேர்ந்து வரதராஜப் பெருமாளைத் தரிசித்தார்கள். இவர்களுக்கு இராமாநுஜ தரிசனம் கிடைத்தது. இவர்கள் போய்த் தரிசிப்ப தற்கு முன்பே இராமாநுஜர் இவர்களைப் பார்த்து விட்டார். தம் மடத்திற்கு அழைத்தார் ; சீடராக்கிக் கொண்டார்.

இராமாநுஜரின் சீடர்குழாம் மிகவும் பெருகிவிட்ட பிற் காலத்திலும், கூரேசனே மிகமிகச் சிறந்த வித்வானாக மதிக்கப் பெற்றார். புலமையைப்போல் புனிதத் தன்மையும் எய்தப் பெற்றவராகத் திகழ்ந்த இவரை இராமாநுஜர் தமக்குப் பவித்திரம் போன்றவர் என்று பாராட்டியதில் வியப்பில்லை.

தம் பிரார்த்தனைக்கு இணங்கி ஆளவந்தார் தமக்குச் சிஷ்ய சம்பத்தை அருளி வந்ததாகக் கருதி இராமாநுஜர் பெரிதும் இன்புற்றார். மருமகனை முதலியாண்டான் சீடரானது குறித்து மகிழ்ந்த உள்ளம், ‘ விரைவில் கோவிந்தரும் வந்துவிடுவார் ’ என்று குதூகலித்தது. கூரேசன் வந்து சேர்ந்தது எதிர்பாராத நிகழ்ச்சி. ‘ இவ்வளவும் ஆளவந்தாரின் அருளுக்கே சான்று ’ என்று கருதினார் இராமாநுஜர்.

ஆனால் இதற்கும் மேலாக, எந்த விதத்திலும் எதிர்பார்க்க முடியாத அற்புதம் ஒன்றும் நிகழ்ந்துவிட்டது, ஆளவந்தாரின் கிருபையால் ! தம்முடைய பெருமுயற்சிகளுக்கு ஒருவர் பரம விரோதியாக இருப்பது நிச்சயம் என்று இராமாநுஜர் எதிர்பார்த் திருந்தார்; ஆனால் அந்த எதிரியான யாதவப்பிரகாசரே சீடர் குழாத்தில் சேர்ந்து இவரது முயற்சிகளுக்கு அரணாக அமைந்து [illegible] ‘ ஆளவந்தாரின் பரமகிருபை [illegible] !’ என்று இராமா நுஜர் உள்ளம் சொல்லிற்று.

ஒருநாள் இராமாநுஜர் நெற்றியில் திருமண்காப்புடன், முதலியாண்டானை ஒரு புறத்திலும் கூரேசனை மற்றொரு புறத் திலும் வைத்துக் கொண்டு, மடத்திற்கு வந்திருந்தவர்களுக்கு அறிவுரை வழங்கிக் கொண்டிருந்தார். அது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. யாதவப்பிரகாசரின் வயது முதிர்ந்த அன்னை வரதராஜப் பெருமாளைத் தரிசித்துவிட்டு, மடத்தில் நடை பெற்ற காலட்சேபத்திற்கும் வந்திருந்தாள். இராமாநுஜருடைய ரூபசௌந்தரியமும் ஞானசௌந்தரியமும் அவள் உள்ளத்தை அப்படியே கவர்ந்துவிட்டன. இதற்கு முன் அவள் அறிந்திராத சித்த சமாதானமும் தனக்குக் கிடைத்தது கண்டு கிழவி குமரி

யாகிவிட்டது போன்ற உணர்ச்சியும் பெற்றுள்.

'என் மகனும் எவ்வளவோ படித்திருக்கிருன்; எத்தனையோ வாதங்கள் செய்கிருன்; ஆனல் சாதித்தது என்ன? சிறிதும் மன அமைதி இல்லாமல்தானே இருந்து கொண்டிருக்கிருன். இங்கே வந்து சீடர்குழாத்தில் கலந்து கொண்டால் மன அமைதி தானே வந்துவிடாதோ?' என்றெல்லாம் சிந்தனையில் ஆழ்ந்தாள்.

இராமாநுஜரைச் சதி செய்து கொல்ல முயன்ற யாதவப் பிரகாசருக்கு மனஅமைதி எப்படி இருக்க முடியும்? இதுவும் இவர் தாய் அறிந்ததுதான். 'அந்த மனநோய்க்கு மருந்து இல்லையே' என்று இதுவரை எண்ணியிருந்தாள். வரதராஜப் பெருமாளைப் பிரார்த்தித்துக் கொண்டால் அவர் வழிவிட மாட்டாரா?—அருளாளர் அருள் புரிவது இயற்கைதானே. இந்த எண்ணத்துடன் முக்கியமாகத் தன் மகன் பொருட்டுப் பிரார்த்தனை செய்து கொள்ள வந்திருந்தவள், இராமாநுஜ மடத்தில் செவிக்கு விருந்தாக, உள்ளத்திற்கு அமுதமாகக் காலட்சேபம் நடக்கிறது என்று தெரிந்து இங்கும் வந்தாள். வரதராஜ தரிசனம்போல் இராமாநுஜ தரிசனமும் கண்ணுக்கு இனிதாயிருந்தது; உள்ளத்தையும் மகிழ்வித்து அமைதிபெறச் செய்தது. தான் பெற்ற இன்பமும் அமைதியும் தன் மகனுக்கும் கிடைத்தால் நலமன்றே எனக் கருதியது தாயுள்ளம்.

'அந்த வரதராஜப் பெருமாள் திருக்கச்சி நம்பிகளுடன் தான் பேசுவதாகச் சொல்லுகிருர்கள்; இந்த வரதராஜப் பெருமாளோ எல்லா மக்களுடனும் பேசி ஆறுதல் அளிக்கிருர்!' என்று இராமாநுஜரை நோக்கிய வண்ணம் தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள் யாதவப்பிரகாசரின் தாய். 'அந்தப் பெருமாள் இருந்த இடத்திலிருந்தே அருள் புரிகின்ருர்; உலாவித் திரியும் இந்தப் பெருமாளோ, சீடர் இருக்குமிடம்போய் அருள் புரிவதும் உண்டு' என்று எண்ணமிட்டாள்.

ஆனல் இவர் யாதவப் பிரகாசரைச் சந்திப்பாரா? சந்தித்தால் பழைய நினைவுகள் இருவருக்கும் வரக்கூடுமே!

கடைசியாக, 'நான் என் புதல்வனை இப்பெரியாரின் அருளுக்கு இலக்காக்குவேன்; இவரடிகளில் கொண்டுவந்து சேர்ப்பேன். இதைக் காட்டிலும் எனக்கோ, என்பிள்ளைக்கோ சிறந்த நன்மை ஒன்றும் இருக்க முடியாது' என்று தீர்மானித்து யாதவப்பிரகாசரின் தாய் தன் வீட்டுக்குத் திரும்பினுள். தன் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் யாதவப்பிரகாசரிடம் வெளியிட்டாள்.

'காடு "வா" என்றும், வீடு' "போ" என்றும் சொல்லு கிற நிலையில் இருக்கும் எனக்கு நீ செய்யக் கூடிய உதவி இது ஒன்றுதான்; ஆம், அவரிடம் அடைக்கலம் புகுவதே பல பாவங் களுக்கும் ஒரு பிராயச்சித்தமாக இருக்கும். பல தீட்டுக்கும் கங்கையில் ஒரு முழுக்கு என்பது உபசாரமாய்க் கங்காதேவி யின் பெருமை பேசுவதுதான். ஆனால் நான் கூறுவதோ உப சாரமன்று; உண்மை' என்றெல்லாம் தாய் சொன்னாள்.

ஆனால் தடக்குச் சீடனாகப் பணிபுரிந்து கொண்டிருந்த வருக்கா தாம் சீடராவது? யாதவப்பிரகாசரின் தன்மான உணர்ச்சி சிறிதும் இடம் கொடுக்கவில்லை. 'இது நடக்கிற காரியமா? கனவிலும் நடக்கும் என்று எதிர்பார்க்கிறாயா?' என்று சொல்லி மறுத்துவிட்டார் யாதவப்பிரகாசர். 'வேறு எது செய்தாலும் செய்வேன்; இது செய்யேன்!' என்று சொல்லி விட்டு உடனே வெளியே போய்விட்டார்.

'இன்ன இடம் போகிறோம், இன்னது செய்கிறோம்' என்ற திட்டமில்லாமலே உலாவித் திரிந்தார் யாதவப்பிரகாசர். திடீரென்று திருக்கச்சிநம்பியைச் சந்தித்தார். உடனே அவர் திருமுகம் நோக்கி, 'கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது என்பார்கள். நான் இப்போது வரதராஜப் பெருமாளைக் கூடக் கும்பிட வேண்டுமென்று வந்து கொண்டிருக்கவில்லை. "எப்படி ஆறுதல் கிடைக்கும்? எங்கே கிடைக்கும்? அளிக்கப் போகிறவர் யாரோ?" என்றெல்லாம் இதயம் அலறிக் கொண் டிருக்கிறது. இந்த அலறல் என் அன்னையாரைத் தவிர வேறு எவருக்கும் தெரியாது. என்ன செய்வேன், நம்பிகளே? வரத ராஜப் பெருமாளுடன் முகமுகமாய்ப் பேசும் பேறு பெற்றிருப்ப வர் நீரே என்று ஊர் சொல்லுகிறது, உலகம் சொல்லுகிறது. பெருமாளின் திருவுள்ளம்தான் என்ன? அறிவில் ஏழையாகிய இவனை இப்படி வதை செய்வது அடுக்குமோ அருளாளனுக்கு? கேட்டுச் சொல்லும் நம்பிகளே?' என்றெல்லாம் கண்ணீர் வடித்தார் யாதவப்பிரகாசர்.

நம்பியோ, 'இன்று போய் நாளை வாரும்' என்று அமைதி யாகப் பதில் சொல்லி விடை பெற்றுக் கொண்டார். 'இன்று போய்ப் போருக்கு நாளை வா!' என்று இராமன் இராவணனை நோக்கிக் கூறியதாகக் கம்பராமாயணம் தெரிவிக்கிறது. நம் நம்பியோ, 'நாளை வாரும்; பெருமாளிடம் உண்மையைத் தெரிந்து கொண்டு உமக்கு ஏதாவதொரு நற்செய்தி சொல்ல முடியுமா என்று பார்க்கிறேன்' என்ற மனப்பான்மையுடன்தான் யாதவப்பிரகாசரிடம் பேசினார்.

மறுநாள் யாதவப்பிரகாசர் நம்பி குறித்த இடத்தில் அவரைச் சந்தித்தார். 'இராமாநுஜரை நீர் சந்திப்பதே நலம். இதை நான் சொல்லவில்லை; பெருமாளின் குரல்தான் இது என்று நம்பினால் நலம் பெறுவீர்!' என்று நம்பி சொன்னார். உடனே யாதவப்பிரகாசர் இராமாநுஜருடைய மடத்துக்குச் சென்றார். சீடராகிவிடவேண்டும் என்ற சங்கற்பத்துடன் செல்ல வில்லை; மேலும் வாதம் செய்து பார்க்கலாமே என்று போனார்.

பார்த்தார் இராமாநுஜரை; 'இவரா எனக்குச் சீடராக இருந்த அந்த இராமாநுஜர்?' என்று பிரமித்துப் போனார். 'என்ன அழகு! என்ன ஒளி!' என்று நினைத்தார். யாதவப் பிரகாசரைக் கண்டதும் இராமாநுஜர் மிகவும் மரியாதையுடன் ஒரு பீடத்தில் அமரச் செய்தார். இருவரும் முதல்முதல் பொது வாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்; பிறகு பேச்சு சமயக் கொள்கைகளை நோக்கிச் சென்றது. இராமாநுஜரின் விருப்பத் திற்கு இணங்கக் கூரேசனோடும் உரையாடிக் கொண்டிருந்தார் யாதவப்பிரகாசர்.

வேதங்கள் இதிகாசங்கள் புராணங்கள் ஆகிய ஆதார நூல் களிலிருந்து பல வாக்கியங்களைக் கூரேசன் எடுத்துக் காட்டி யாதவப்பிரகாசரின் உள்ளத்தில் இராமாநுஜரின் கொள்கை களைப் பதிய வைத்தார். கூரேசனின் புலமையும் மேதையும், அவற்றுக்கும் மேலாக அடக்கமும் அன்பும், யாதவப்பிரகாசரை வசீகரித்துவிட்டன. கூரேசன் வாயிலாக **ஒரு சமயம்** தம் தாயாரே வாதாடுவது போலத் தோன்றியது; **ஒரு சமயம்** வரதராஜப் பெருமாளே வாதாடுவது போலத் தோன்றியது!

'இந்தக் கருணையை இனி எப்படித் தாங்குவேன்! இனி என் ஆத்ம நலத்திற்குப் புலமைச் செருக்கு இடையூறாகக் கூடாது. மிகவும் ஜாக்கிரதையாக இருப்பேன்' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டு, இராமாநுஜரின் திருமுகத்தை உற்று நோக்கினார். திடீரென்று தம் பீடத்திலிருந்து எழுந்து சென்று இராமாநுஜரின் திருவடிகளில் விழுந்து, 'மன்னித்தருள வேணும்; அடியேனை ஆட்கொள்ள வேணும்' என்று தொழுதார், அழுதார்.

இராமாநுஜரும் கூரேசனும் யாதவப்பிரகாசரைக் காலில் விழாதபடி தடுக்க முயன்றார்கள். ஆனால் யாதவரோ முந்திக் கொண்டு இராமானுஜரைச் சரணமாக அடைந்துவிட்டார். பிறகு இராமானுஜர் யாதவப்பிரகாசரைத் தூக்கி நிறுத்தி நெஞ் சாரத் தழுவிக் கொண்டார். அப்பால் இராமானுஜரை நோக்கி யாதவர்,

மையல்ஏற்றி மயக்க
உன்முகம் மாயமந்திரம்
தான்கொலோ ?

என்ற ஆண்டாள் வாக்கை ஒப்பித்துத் தம் நிலையைத் தெளிவு படுத்தினார்.

இராமாநுஜரின் முகப்பொலிவுதான் இம்மன மாற்றத்திற்குக் காரணம் என்பதன்று யாதவப்பிரகாசரின் கருத்து. 'ஆண்டாள் கண்ட கண்ணபிரானைப் போல் நானும் உம்மைக் காணப் பெற்றேனே !' என்ற கருத்துடன் பேச வந்தவர், அந்த வாக்கியத்தை மட்டும் சொல்லி அப்படியே நிறுத்திவிட்டார்.

'அறிவால் பார்த்தேன்' அறிந்து கொள்ள முடியவில்லை; எல்லாம் இருளாகத்தான் இருந்தது. இப்போது அன்பால், பக்திக் காதலால், பார்க்கிறேன், ஞான ஒளி விளக்காகிய உம்மை! கண்ணன் வேறு, நீர் வேறு என்று பார்க்கவில்லை!' என்றெல்லாம் நெஞ்சில் சிந்தனை, அலை வீசியது. அந்த வெள்ளம் அவர் வார்த்தைகளாக வெளிப்படாமல், ஆண்டாளின் வாக்காக மட்டும் வெளிப்பட்டு அப்படியே நின்றுவிட்டது.

யாதவப்பிரகாசரின் பேச்சும், பேசாத பேச்சும் எல்லாம் புரிந்துவிட்டன இராமாநுஜருக்கு. தம் அன்னையின் அனுமதி பெற்றுத் தம் பழைய சீடரிடம் சந்நியாசம் பெற்றார்; பஞ்ச ஸம்ஸ்காரங்களும் பெற்றார். கோவிந்த ஜீயர் என்ற தாஸ்ய நாமமும் (ஸ்ரீவைஷ்ணவப் புனைபெயரும்) தாம் அடியவர் கூட்டத்துள் கலந்துவிட்டதற்கு அறிகுறியாகப் பெற்றுக் கொண்டார். இப்போது யாதவப்பிரகாசர் ஒரு புதிய பிறவி பெற்றுவிட்டார் என்றே சொல்ல வேண்டும்.

இராமாநுஜர் ஒரு நாள் யாதவப்பிரகாசரை நோக்கி, 'நீர் ஸ்ரீவைஷ்ணவக் கொள்கையைத் தழுவி ஒரு நூல் எழுத வேண்டும்' என்றார். யாதவரும் இசைந்து 'யதிதர்ம சமுச்சயம்' என்ற பெயரால் ஒருநூல் எழுதி, இராமாநுஜரின் அடிமலர்களுக்கு அர்ப்பணம் செய்தார். அப்போது யாதவப்பிரகாசருக்கு வயது எண்பது. இந்த நூல் முற்றுப்பெற்றபின் கொஞ்ச காலத்தில் யாதவப்பிரகாசரின் மண்ணுலக வாழ்க்கையும் முற்றுப்பெற்றது.

மாமாவான ஸ்ரீசைலபூர்ணர் என்ற பெரிய திருமலைநம்பிக்குக் கோவிந்தபட்டரைக் குறித்து இராமாநுஜர் செய்தி அனுப்பியிருந்தார் அல்லவா? திருப்பதிக்கு அருகில் திருக்காளத்தி என்ற காளஹஸ்தியில் வசித்துக்கொண்டிருந்த கோவிந்தரை வைஷ்ணவராக்குவது திருமலை நம்பிக்கு அரிதன்று என்பதுதான் இராமாநுஜர் கருத்து. திருமலைநம்பி, இராமாநுஜரிடமிருந்து

கடிதம் கிடைத்ததும், அப்படியே செய்வதாகத் தீர்மானித்து விட்டார்.

'இதோ இராமாநுஜர் திருமுகம்!' என்று ஒரு பாகவதர் ஓலைச்சுருளை நீட்ட, அதை வாசித்துப் பார்த்தவர் இராமாநுஜரின் கருணை பொங்கிய திருமுகத்தைப் பார்த்துவிட்டது போலவே உவகை அடைந்தார். திருமலைநம்பி காளத்தியூருக்குச் சென்று, வழக்கமாகக் கோவிந்தர் நீராடவும் பூக்கொய்யவும் வந்து கொண்டிருந்த குளத்தின் கரையில் போய்க் காத்துக்கொண் டிருந்தார், தம் சீடர்களுடன்.

கோவிந்தர் வந்ததும், திருமலைநம்பிகள்—அதுவரையில் தம் சீடர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தவர்—கோவிந்தரை நோக்கினார். கோவிந்தர் பூக்கொய்யத் தொடங்கியதும்,

**போதெலாம் போது கொண்டுஉன்**
**பொன்னடி புனைய மாட்டேன்!**

என்ற தொண்டரடிப்பொடியாழ்வாரின் வாக்கை இசையில் அமைத்துப்பாடினார் திருமலைநம்பிகள்.

அந்த வாக்கைத் திருக்கச்சிநம்பி வாயிலாக ஏற்கெனவே கேட்டிருந்தார் கோவிந்தபட்டர். 'பொழுதெல்லாம் பூக்கொய்து ஸ்ரீரங்கநாதனின் பொன்னடிகளை அணி செய்ய வேண்டும்; அப்படி நான் பொழுது போக்கவில்லையே!' என்ற ஏக்கம் தொனிக்கிறது அந்தச் செய்யுள்-அடியிலே. இது காதில் விழுந்ததும் கோவிந்தரின் இதயத்தில் பழைய நினைவுகள் பாய்ந்து வந்தன.

பிறகு, கோவிந்தருக்கும் திருமலைநம்பிக்கும் இடையே ஓர் உரையாடல் நிகழ்ந்தது. திருமலைநம்பி கோவிந்தரின் பக்தி—உள்ளமாகிய பொன்மலர் திருமாலுக்கு அர்ப்பணிக்கப் பெற்றால் மணம் பெறும் என்றார். உள்ளமாகிய மலரை அர்ப்பணிக்க ஓர் அறிகுறிதான் பூக்கொண்டு பூசைபுரிவதும் என்றார். குறிக்கோள் திருமாலைச் சரணமடைவதுதான் என்றும் சொன்னார். இத் தகைய உரையாடல்கள் சில தினங்களாகத் தொடர்ந்து காலை வேளைகளில் நடைபெற்றன.

கோவிந்தப்பட்டர் திருமலைநம்பிகளை 'மாமன்' என்று தெரிந்து கொண்டார். 'மாமா, உம்மைக் குருவாகவும் ஒப்புக் கொள்கிறேன்' என்று மருகர் சொன்னதும் மாமாவுக்கு உச்சி குளிர்ந்தது; உடம்பும் உள்ளமும் ஒருங்கே பூரித்துப் போயின. பிறகு கோவிந்தரை இராமாநுஜரிடம் போகுமாறு கட்டளை யிட்டுத் திருமலைநம்பிகள் திருமலைக்குத் திரும்பிவிட்டார்.

கோவிந்தரைக் கண்டதும் இராமாநுஜர், 'சகோதரா, அன்று விந்தியக் காட்டில் என்னைக் காப்பாற்ற உதவி புரிந்தாய்; இன்று முதல் என் கொள்கைகளைக் காப்பாற்ற உதவுவாய்; என்ன பேறு பெற்றேன்!' என்று கூறிப் பெருமகிழ்வெய்தினார்.

இராமாநுஜர் திருமலைநம்பிக்குக் கோவிந்தரைக் குறித்துச் செய்தி அனுப்பியபோது, காஞ்சீபுரத்தில் அன்பர்கள் அமைத்துக் கொடுத்திருந்த ஒரு மடத்தில் காலட்சேபம் நடத்திவந்தார். கோவிந்தர் மனம் திருந்தித் திரும்பி வருவதற்குள், திருவரங்கத்திற்குப் போய்விட்டார். திருவரங்கத்திலேதான் கோவிந்தபட்டர் இராமாநுஜரைச் சந்தித்தார். இதற்குள் இராமாநுஜர் வாழ்க்கையில் பல முக்கிய நிகழ்ச்சிகள் நிகழ்ந்துவிட்டன.

கோவிந்த பட்டரைக் கோவிந்தப் பெருமாள் என்று திருவரங்கத்துப் பாகவதர்கள் குறிப்பிட்டார்கள். ஒரு நாள் கோவிந்தப் பெருமாளின் அன்னை இவரிடம் வந்து, 'உன் மனைவி உன்னைச் சந்திக்க வந்திருக்கிறாள்' என்று சொன்னாள். 'நான் தனியாக இருக்கும்போது அவள் சந்திக்கலாம்' என்று பதில் சொன்னார் கோவிந்தர். ஆனால் அத்தகைய அவகாசம் அவளுக்குக் கிடைக்கவே இல்லை.

எப்போதும் இராமாநுஜ கைங்கரியத்திலேயே ஈடுபட்டிருப்பார் கோவிந்தர். இவர் உள்ளம் தம் இல்லற வாழ்க்கையை நோக்கித் திரும்பவே இல்லை. எனவே கோவிந்தப்பெருமாளுக்கு இராமாநுஜர் திரிதண்டமும் காவியாடையும் கொடுத்துத் துறவியாக்கினார்.

# 10

# அரங்கனின் அடி நிழலில்

இராமாநுஜர் காஞ்சிவாசியாக இருந்தபோது, திருவரங்கத்திலே ஆளவந்தாருடைய சீடர்கள் அடிக்கடி இவரை நினைத்துக் கொண்டார்கள். 'இங்கே எப்போது வருவாரோ?' என்று வழிமேல் விழி வைத்திருந்தார்கள். இராமாநுஜர் துறவியாகிவிட்ட செய்தி திருவரங்கம் எங்கும் பரவிவிட்டது. கூரேசனும் முதலியாண்டானும் சீடர்களாகி இராமாநுஜருக்கு அரும்பெருந் துணைவராகவும் இருக்கிறார்கள் என்ற செய்தியும் திருவரங்கத்துப் பாகவதர்கள் பலருக்கும் திருப்தியளித்தது. எல்லாவற்றுக்கும் மேலாக, யாதவப்பிரகாசர் திருந்தி ஸ்ரீவைஷ்ணவப் பணியில் ஈடுபட்டார் என்ற செய்தி ஊரெல்லாம் ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. பரம பாகவதர்களின்

உள்ளங்களிலோ எதிர்காலம் பற்றிய அபார நம்பிக்கையை உண்டாக்கிவிட்டன இச் செய்திகள்.

பெரியநம்பியிடம் ஒரே கூட்டமாகப் பாகவதர்கள் போனார்கள். 'சுவாமி, இராமாநுஜர் இராமாநுஜ முனியாகிவிட்டதைத் தாங்கள் இன்னும் கேள்விப் படவில்லையா? அரங்க நகருக்கு ஆளவந்தார் காலத்து அழகு வரவேண்டுமென்றால் இராமாநுஜ முனி இங்கே எழுந்தருள வேண்டும் - இல்லையா?' என்று கேட்டார்கள். பெரியநம்பி இளநகை அரும்பியவராய், 'என் உள்ளத்தைத் தானே எடுத்துக் காட்டுகிறீர்கள்!' என்றார்.

பெரியநம்பி அந்தப் பாகவதர்களுடன், 'இனி என்ன செய்யலாம்?' என்று ஆலோசித்துப் பார்த்தார். 'ஸ்ரீரங்க ராஜா அழைத்தாலும் வரதராஜாவுக்கு இராமாநுஜரை விட்டுப் பிரிய மனம் வரவேணுமே!' என்றார் ஒரு பாகவதர். இதன் உட்பொருள்: திருவரங்கத்தில் உள்ளவர்களுக்கு இராமாநுஜ முனியைச் சொந்தமாக்கிக் கொள்ள இஷ்டம்தான்; ஆனால் காஞ்சியிலுள்ளவர்களுக்குக் கஷ்டமாயிருக்குமே!

உண்மையில், 'நாமும் நம் இராமாநுஜனை விடுவதா? திருவரங்கத்துப் பெரிய பெருமாளே கட்டளையிட்டாலும், காஞ்சிப் பேரருளாளன் இணங்கினால்தானே இராமாநுஜ முனி திருவரங்கம் செல்ல முடியும்?' என்ற மனப்பான்மை காஞ்சீபுரத்தாரிடம் காணப்பட்டது. அவ்வளவு ஈடுபாடு அவர்களுக்கு இராமாநுஜரிடம்.

இதைப் பெரியநம்பியும் அறிந்திருந்தார். இந்த நிலையில் ஸ்ரீரங்கத்துப் பாகவதர்கள் ஒரு தந்திரம் செய்தார்கள் என்று குருபரம்பரைக் கதைகள் ஓர் அழகான வரலாற்றுத் துணுக்கை ஒரு கதைவடிவில் புனைந்து தந்திருக்கின்றன.

ஸ்ரீரங்கத்தில் திருவரங்கப் பெருமாளரையர் என்ற ஆளவந்தார்—சீடரும், ஏறக்குறையப் பெரியநம்பிக்குச் சமானர் என்று பெயர் பெற்றிருந்தார். இவருக்கு 'வரரங்கர்' என்றும் ஒரு பெயர். தெய்வ கானமாக இசைப்பாடல் பாடுவதில் இவர் ஒரு நிபுணர். 'இவரை அனுப்பினால் காரியம் சித்தியாகும்' என்று கருதினார் பெரியநம்பி. அரங்கநாதனே 'இத்தகைய எண்ணத்தைத் தம் உள்ளத்தில் உதிக்கச் செய்தான்' என்றும் நம்பினார் இவர்.

உடனே பாகவதர் கூட்டத்தில் ஒரு 'சதி' உருவாயிற்று. காசி யாத்திரையில் யாதவப்பிரகாசரின் சதி இராமாநுஜரைக் கொல்லத் துணிந்தது; இந்தச் சதியாலோசனையோ, 'இராமாநுஜரைக் கொண்டுவந்து உலகை வாழ்விக்கத்

துணிந்தது. அது மரணமாக்கும் சதி; இதுவோ வாழ்வளிக்கும் சதி. அதைக் ‘கொல்லும் சதி’ என்றால், இதை ‘வெல்லும் சதி’ என்றே குறிப்பிடலாம். இச்சதிதான் என்ன?

வரதராஜன் சங்கீதப் பிரியன், அப்படியே இசையில் சொக்கிப் போவான் என்பது மக்களின் நம்பிக்கை. வரங்களை வாரிவழங்கக் கூடிய அருளாளன் இசையோடு இசைந்த தோத்திரங்களைக் கேட்டால் எந்த வரத்தை எப்படி மறுப்பான்? அப்போது ‘எந்த வரமும் கொடுக்கத் தயார்!’ என்ற நிலையில் இருப்பானும், இசைக்கு உருகும் வரதராஜன்.

‘இசைவாணரே, உமக்கு வேண்டிய வரம் எது?’ என்று அப்பெருமாள் கேட்டதும், திருவரங்கப் பெருமாள் அரையர் உடனே, ‘நமக்கு இராமாநுஜ முனியைத் தரவேணும்’ என்று கேட்டுக் காரியத்தை முடித்துக் கொள்ள வேண்டும் என்றார்கள் திருவரங்கத்துப் பாகவதர்கள்.

திருவரங்கப் பெருமாள் அரையரும் உடனே புறப்பட்டுப் போனார் காஞ்சிக்கு. காஞ்சியைப் ‘பெருமாள் கோயில்’ என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் கூறுவதுண்டு; திருவரங்கத்தையோ ‘கோயில்’ என்றும், ‘பெரிய கோயில்’ என்றும் சிறப்பித்துப் பேசுவர். கோயிலிலிருந்து பெருமாள் கோயிலுக்கு வந்து சேர்ந்த திருவரங்கப் பெருமாள் அரையர், திருக்கச்சிநம்பி ஆலவட்டம் பரிமாறக் காட்சியளித்த வரதராஜப் பெருமாளைத் தரிசித்தார்.

பெருமாளுக்கு அருகில் இராமாநுஜரும் நின்று சேவித்துக் கொண்டிருந்தார். அரையரும் வந்து சேவித்து நின்று, பாலை ஒத்த தமிழ் என்றும் பண் நிறைந்த பாடல் என்றும் புகழப்பெறும் திவ்யப் பிரபந்தங்களிலிருந்து சில பாடல்களை இயலாக ஓதியும், இசையாகப் பாடியும், நாடகமாக அபிநயித்துக் காட்டியும் அங்குள்ளவர்களையெல்லாம் பக்திவெள்ளத்தில் மிதக்கச் செய்து விட்டார்.

அப்போது அர்ச்சகர் முதலானவர்கள், ‘உமக்கு வேண்டியது என்ன, அரையரே? கேளும், பெருமாள் கொடுத்துவிடுவார்’ என்று சொன்னார்கள். உடனே திருவரங்கப் பெருமாளரையர் இராமாநுஜரைச் சுட்டிக்காட்டி, ‘இவரைத் தந்தருள வேணும்’ என்று வேண்டிக் கொண்டார்.

அப்போது அங்கிருந்தவர்கள், ‘இசை வல்லுநர் மோசம் செய்து விட்டாரே!’ என்று பேசிக் கொண்டார்கள். ‘இது முன்கூட்டியே தெரிந்திருந்தால், இராமாநுஜரைத் தவிர நீர் வேண்டியதெல்லாம் பெருமாள் தருவார் என்று சொல்லியிருக்கலாமே’ என்றும் சிலர் பேசிக் கொண்டார்கள். அரையரோ,

'பெருமாளின் ஒரு சொல்லாக நீங்கள் ஏற்கெனவே சொல்லி விட்டதை இனி மாற்ற ஒருவருக்கும் அதிகாரமில்லே. உங்கள் "ஒரு–சொல்" பெருமாள் அதை மறுத்து இரண்டாம் சொல் சொல்லமாட்டாரே !' என்று அவர்களை நோக்கிச் சொல்லிவிட்டு, இராமாநுஜரைக் கையைப்பற்றி 'வாரும்' என்று அழைத்தார்.

'கொஞ்சம் பொறுத்துக்கொள்ள வேணும், சுவாமி' என்று அரையரிடம் சொல்லிவிட்டு, இராமாநுஜர் வரதராஜப் பெருமாளைத் தண்டனிட்டு, 'இன்றே போகின்றேன்; விடையும் கொண்டேன்' என்ற இராமபிரானின் வாக்கில் விடைபெற்றுக் கொண்டார். பிறகு கூரத்தாழ்வாளையும் முதலியாண்டாளையும் நோக்கி, 'நீங்கள் நமது மடத்திற்குப் போய், நம்முடைய திருவாராதனப் பெருமாளான பேரருளாளனை (வரதராஜனை)க் கொண்டு வாருங்கள்' என்று சொல்லித் தாம் மடத்திற்குப் போகாமலே அரையருடன் திருவரங்கத்திற்குப் புறப்பட்டார். திருக்கச்சிநம்பி வந்து இவர்களை வழியனுப்பிவைத்தார்.

போகும் வழியெல்லாம் திருவரங்கத்தின் அருமைபெருமைகளைக் குறித்த பேச்சே நடைபெற்றது. திருவரங்கத்தைக் குறித்த ஆழ்வார்களின் அருளிச் செயல்களான பாடல்களில் சிலவற்றையும் திருவரங்கப் பெருமாளரையர் இசையுடன் பாடிக் காட்டினர்.

வடதிருக்காவேரியில் நீராடி இராமாநுஜர் அனுஷ்டானத்தை முடித்துக்கொண்டிருக்கும் போதே, பெரியநம்பி முதலான பாகவதர்கள் இராமாநுஜரை எதிர்கொண்டு அழைத்துவர வேண்டுமென்று புறப்பட்டுவந்தார்கள். கீதவாத்தியங்கள் முழங்க, அவர்கள் ஒரு கூட்டமாய் அரங்கநாதனின் சந்நிதியிலிருந்து விருது முதலான மரியாதைகளுடன் வந்தார்கள்.

வடதிருக்காவேரியின் கரையளவாக வந்து எதிர்கொண்ட அந்தத் திருக்கூட்டத்தை இராமாநுஜர் கண்குளிரக் கண்டார்; கைகூப்பித் தொழுதார். பெரியநம்பியின் அடிகளில் முடிபட விழுந்து வணங்கினர். உடனே எல்லோரும் அரங்கநாதனின் சந்நிதி நோக்கிப் புறப்பட்டார்கள். கொடி கட்டிய கோபுரத்தைத் தரிசித்தார்கள்; கொடிகள் அணி செய்த நெடுமதில்களையும் கண்டார்கள்.

இராமாநுஜரை ஊர்வலமாக அழைத்துச் சென்றனர்கள். இவர் வெளிப் பிராகாரத்திலே சந்நிதிக்கு எதிரே நின்று, சற்றுத் தியானம் செய்தபின் திருவரங்க நாயகியைச் சேவித்தார்.

**செம்பொன் அரங்கத் தரங்கநீர்ச்**
**சீதள சந்திர வாவி**

என்று பின்னுளில் திவ்யகவிஞரான அழகிய மணவாளதாசரால் புகழ்ப்பெற்ற சந்திரபுஷ்கரிணியிலிருந்து தீர்த்தம் எடுத்துப் பருகினார்.

பிறகு நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களை வணங்கினார். அப்பால் உட்பிராகாரங்களுக்குள் சென்றார். 'அணி அரங்கன் திருமுற்றம்' என்று ஆழ்வார்களால் பாடப்பெற்றதும், தொண்டரடிப்பொடியாழ்வார் முதலானவர்கள் ஆடிப்பாடிப் பஜனை செய்து, 'அரங்க! ஓ!' என்று பெருமானை அழைத்து அருள் பெற்றதுமாகிய இடத்தில் தண்டனிட்டபின் விமானத்தைச் சேவித்தார்.

ஓங்காரத்தை (ஓம் என்ற பிரணவத்தை) உருவகப்படுத்திக் காட்டியிருக்கும் அந்த விமான தரிசனத்திற்குப்பின் அழகிய மணவாளன் திருமண்டபத்தை அடைந்தார். பக்தர்கள் இவருக்குப் பெருமாளே நல்வரவு அளிப்பதாகவும், யோக க்ஷேமம் விசாரிப்பதாகவும் சொல்லி உபசரித்தார்கள். இராமாநுஜரோ, விழுவதும் எழுவதும் தொழுவதுமாகச் சென்று 'பாம்பணைப் பள்ளி கொள்ளும்' பரம்பொருளைத் தரிசித்தார்.

'கடல் விளங்கு கருமேனி அம்மானே! உன்னைக் கண்ணாரக் கண்டு உவக்கின்றேன், வாயார வாழ்த்துகின்றேன்' என்று சொல்லி ஒரே அன்பு வசமாகி, அந்தப் பள்ளிகொண்ட திருக்கோலத்தை அடிமுதல் முடிவரையில் நோக்கி இன்புற்றார். 'கண்ணனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே!' என்ற ஆழ்வாரின் வாக்கை நினைப்பூட்டிக் கொண்டார்.

தமது பரமாசாரியரான ஆளவந்தாரின் நினைவு இப்போது பெரியபெருமாளைச் சேவித்துக் கொண்டிருக்கும்போது வந்து விடவே, அவருடைய அருள் வாக்கான சுலோகங்களைச் சொல்லியும் பெருமாளைத் தோத்தரித்தார்.

'அப்பனே, உன்னுடைய "துயர் அறு சுடரடி"களில் அடியேன் விண்ணப்பம் செய்து கொள்வதெல்லாம் அந்த அடிநிழலில் உலகம் வாழவேண்டும்; துயரற்றுத் தழைக்க வேண்டும் என்பதற்காகத்தான்' என்று விண்ணப்பித்துக் கொண்டார்.

ஒரு விக்கிரகத்தின் முன்நின்று சாதாரண மக்கள் வழிபடுவது போலவா வழிபட்டார் இராமாநுஜர்? எல்லாவற்றையும் அறிந்து கொண்டே உறங்குவது போலிருக்கும் எம்பெருமான் தன் மலர்க் கண்களால் தம்மை நோக்குவது போலவும், ஜோதிவாய் திறந்து ஏதேதோ பேசுவது போலவும் இவருக்குத் தோன்றியது.

'உம்முடைய உலகத்தையும் உம்மையும் கவனித்துக் கொள்வது நம் கடன்; நீர் நம்முடைய இந்த வீட்டுக் காரியத்தையெல்



ஸ்ரீரங்கநாதன்,
நீண்ட திருக்கோல
சேவை, ஸ்ரீரங்கம்

லாம் ஆராய்ந்து நடத்தும்' என்று பெருமான் மௌனவாக்காக அருளிச் செய்வதுபோலவும் ஓர் உணர்ச்சி இவருக்கு ஏற்பட்டது.

பெரியநம்பி அருகில் நின்று, 'இதுவன்றோ பக்தி? ஆளவந்தாரின் நம்பிக்கை வீணுகாது' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார். இராமாநுஜரோ அவரை நோக்கி, 'பெரியவராகிய உமக்கு ஆளாகிவிட்டால், எந்தப் பேறும் பெறக்கூடுமல்லவா? உமக்காகவும் நம்முடைய பரமாசாரியருக்காகவும் பெருமாள் அடியேனை வாழ்வித்தருளினுர்' என்று விண்ணப்பம் செய்து கொண்டார்.

அதற்குப் பெரிய நம்பி, 'ஆழ்வார்களின் பொற்கனவுகளும் ஆளவந்தாரின் தூய நற்கனவுகளும் உம்மாலே நனவாகும் காலம் நெருங்கி வருகிறது. "கலியும் கெடும் கண்டு கொண்மின்" என்ற நம்வாழ்வாரின் வாக்கை நீர் நிறைவேற்றும்படி உம்மைத் தயாரித்துவிடுவதுதான் எம்மைப் போன்றவர்களின் கடமை; அந்தக் கடமை முடிந்துவிட்டது. இனி உம்மை எதிர்நோக்குகிறது, உமது தனிப்பெருங் கடமை' என்று பதில் சொன்னுர்.

இராமாநுஜர், பெரியநம்பி முதலானவர்களுடன் பெரிய திருமண்டபத்திற்கு வந்தார். கோவிற் காரியங்களை முதல்முதல் ஒருவாறு ஒழுங்குபடுத்த வேண்டும் என்று நினைத்தார். கோவிலைச் சேர்ந்த பணியாளர்கள் அனைவரையும் வரவழைத்தார். பூஜை முறைகளையும் இவை இவை என்று ஆராய்ந்து திட்டமிட்டார்.

திருமதில் முதலான இடங்களில் பழுது பார்க்கும் பணிகளையும் நடைபெறச் செய்தார். செப்பனிட வேண்டிய அணிகள் முதலியவற்றைச் செப்பனிடும்படி செய்தார். மடைப்பள்ளியில் காலந் தவருது நைவேத்திய உணவுவகைகள் சித்தமாவதற்குச் சரியான ஏற்பாடுகளைச் செய்து, அவற்றைப் பக்தர்களுக்கும் யாத்திரிகர்களுக்கும் வழங்குவதற்கு உரியதொரு திட்டத்தையும் உருவாக்கினுர். வசந்த மண்டபங்கள், நந்தவனங்கள், பூங்காவனங்கள் ஆகியவற்றையும் பார்வையிட்டு அவற்றைப் பரிபாலிக்கவும் ஏற்பாடு செய்தார்.

ஆழ்வார்களில் பேயாழ்வாரும் தொண்டரடிப்பொடியாழ்வாரும் பெரியாழ்வாரும் சிறப்பாக நந்தவன கைங்கரியத்தில் ஈடுபட்டிருந்தார்கள். அத்தகைய கைங்கரியத்தைத் திருவரங்கக் கோயில் விஷயமாகக் குறைவின்றி நடத்த விரும்பிய இராமாநுஜர், செடிகொடிகள், பூமரங்கள் முதலியவற்றைப் பயிராக்கி வளர்த்துப் பாதுகாக்கவும் தக்க ஏற்பாடுகள் செய்து வைத்தார்.

திருவரங்கம் முழுவதுமே ஒரு பூஞ்சோலை தான் என்று பாடியிருக்கிறார் தொண்டரடிப்பொடியாழ்வார் :

**வண்டினம் முரலும் சோலை ;**
**மயிலினம் ஆலும் சோலை ;**
**கொண்டல்மீது அணவும் சோலை ;**
**குயிலினம் கூவும் சோலை.**

இத்தகைய தலம் சோலையாகவே பரிபாலிக்கப் பெற வேண்டும், இதுவே ஆழ்வார் திருவுள்ளம் என்று கருதிய இராமாநுஜர் அதற்குரிய ஏற்பாடுகளையெல்லாம் ஜாக்கிரதையாகச் செய்து வைத்தார்.

இராமாநுஜர் **அகளங்கன்** என்பவனைக் கோயிற்பணியாளர்களுக்கெல்லாம் மேலதிகாரியாக்கினார். இந்தச் சீடனின் தலைமையில் திருவரங்கம் ஒரு கோயில் நகரமாகவும், திருவிழா நகரமாகவும் வளரலாயிற்று. ஆண்டு விழாக்களுடன் மாதவிழா, பட்ச விழா முதலான விழாக்களும், பலவித வேடிக்கைகளுடனும் விமரிசைகளுடனும் கோலாகலமாக நடைபெறலாயின. யார் இந்தச் சீடன் என்பதைக் குறித்து நாம் அடுத்த அத்தியாயத்தில் தெரிந்து கொள்வோம்.

இராமாநுஜர் பெரியநம்பிகளைக் கலந்து ஆலோசித்து, திவ்யப்பிரபந்தப் பாடல்களையும் கோவில் வழிபாட்டுடன் கலந்து பரப்பவேண்டிய ஏற்பாடுகளையும் செய்தார். பிரபந்தங்களை இயலாக ஓதும் முறையையும் இசையுடன் பாடும் முறையையும் தாமே கற்றுக் கொள்ளவும் விரும்பினார்.

நம்மாழ்வாரின் திருவாய்மொழியையும் திருமங்கை மன்னனின் பெரிய திருமொழியையும் திருவரங்கப் பெருமாளரையரிடம் தாம் கொஞ்ச காலம் சீடராக இருந்து கற்றுத் தேர்ந்தார். ‘பிரபந்த சங்கீத நாட்டியம்’ என்று சொல்லத்தக்க ஒருவகைக் கலை இராமாநுஜருக்கு முன்பே நாதமுனிகள் காலத்திலேயே வளரத் தொடங்கிவிட்டது. இக்கலையையும் இராமாநுஜர் ரஸித்து வளர்த்துத் தம் ஸ்ரீவைஷ்ணவப் பிரசாரத்தில் ஓர் உறுப்பாக்கிக் கொண்டார்.

யதிராஜர் தமக்கு உரிய சிங்காதனத்தை அன்பர் உள்ளங்களிலும், அன்பர் பெருவாழ்வாகிய அழகிய மணவாளப் பெருமானின் அடிநிழலிலும் அமைத்துக் கொண்டார்.

# 11

# வேடும் வேந்தும்

உறையூரைத் தலைமை ஊராகக் கொண்டு சோழமகா ராஜ்யத்தில் ஒரு பகுதியை ஆண்டுவந்த சிற்றரசன் அகளங்கன். இவனை அகளங்கச் சோழன் என்று மக்கள் குறிப்பிடுவர். பாகவதர்களோ, அகளங்க நாட்டாழ்வான் என்பர். சோழன் ஆழ்வானாகிவிட்ட கதை விசித்திரமானது.

இதைத் தெரிந்து கொள்வதற்கு இவனது மூன்று பணியாளர்களின் முக்கிய வரலாற்றுப் பகுதிகளையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்த வேலையாளர்களில் முக்கியமானவன் உறங்காவில்லி என்ற மல்லன். இராமனை உறங்காது பாதுகாத்த வில்லாளனாகிய இலட்சுமணனைப்போல் இவனும் அகளங்கனைப் பாதுகாத்து

வந்தான். சிலம்பம், குஸ்தி முதலிய பயிற்சிகளில் நிகரற்றவன். இராமாநுஜரை யதிகளுக்கு (துறவிகளுக்கு) அரசு என்று கூறுவதுபோல் உறங்காவில்லியை 'மல்லர்களுக்கு அரசு' என்று கூறுவதுண்டு.

இவன் மனைவியின் பெயர் பொன்னுச்சி. 'எழில் அனைத்தும் திரண்டு இசைந்து ஒரு வடிவு எடுத்ததோ!' என்று பிரமிக்கத் தக்க பேரழகி. உறங்காவில்லி இந்தக் கோமளாங்கியின் கண்ணழகுக்கு அடிமைப்பட்டு அக்கண்களின் ஆழம் காண முடியாதவனாகி, காதலர்களின் ஆனந்தக் கனவுலகிலே சஞ்சரித்துக் கொண்டிருந்தான். அரசன் பணியில்லாத பொழுதெல்லாம் இக்காதல்-அரசியின் பணியிலேயே கழித்து வந்தான்.

திருவரங்கத்தில் வசந்த விழா. பொன்னுச்சிக்கு விழாக்காண ஆசை. உறங்காவில்லி அவளை இட்டுக்கொண்டுவந்தான். இவனுக்கு விழாவைப் பற்றிக் கவலையில்லை, பொன்னுச்சியைக் கண்ணாரக் காண்பதே நித்திய வசந்தமான பெருவிழா. அடிக்கடி அந்தக் கண்களையும் முகத்தையும் பார்த்துப் பார்த்து இன்புறுவான்.

'இந்தப் பூங்கொடி வெயிலில் வாடிப் போகுமோ?' என்று பயபக்தியுடன் ஒரு குடையைத் தூக்கி அவளுடைய தலைக்கு மேலே பிடித்துக்கொண்டு, அருகே ஆதாரமாக நடந்துவந்தான். மனைவியின் சிவந்த பாதங்களைப் பார்த்து, 'நடக்க முடியாமல் குழம்பித்தான் அப்படிச் சிவந்து காண்கின்றனவோ?' என்று ஏங்குவான்.

அகளங்கன் தனக்கு வெகுமதியாகக் கொடுத்திருந்த சித்திரப் பொற்பட்டாலான உத்தரீயத்தை அவளுக்கு 'நடை பாவாடையாக' விரித்து விரித்து அதன்மீது மெல்ல மெல்ல நடத்திக்கொண்டு போனான் அவன்.

'அதோ ஒரு பைத்தியக்காரன்! பார், பார்' என்று ஆச்சரியமாய்ப் பலரும் இந்த மல்லனை நோக்கினார்கள். எனினும், 'அவன் பொல்லாத மல்லன், அப்பா! துஷ்டனாகவும் இருக்கக் கூடும்' என்று பயந்து உரக்கப் பேசாமல் தங்கள் எண்ணங்களை முணுமுணுக்கும் குரலிலேயே ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டனர்.

அச்சமயம் இராமாநுஜரும் சீடர்களும்—காவேரியில் நீராட வந்திருந்தவர்கள்—மடத்திற்குத் திரும்பி வந்துகொண்டிருந் தார்கள்.

ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்தக் காதலர்-காட்சியை இராமா நுஜருக்கு 'அதோ பாருங்கள், சுவாமி!' என்று சுட்டிக் காட்டி

னர்கள். அந்த மல்லனைக் குறித்து இதற்கு முன் இவர்களுக்கு ஒன்றும் தெரியாது.

இராமாநுஜர் ஒரு பாகவதரை நோக்கி, ‘அவர்களை நம்மிடம் அழைத்து வாரும்’ என்றார். அவர்கள் வந்ததும், ‘குழந்தைகளே! நீங்கள் எங்கே போகிறீர்கள்? எந்த ஊர்?’ என்று கேட்டார்.

அதற்கு வில்லி சற்று ஒதுங்கி நின்ற வண்ணம், ‘சுவாமி! அடியேன் இருப்பது திருவெள்ளறையில்; தொழில் செய்வது உறையூரில், அகளங்க ராஜாவிடம். இவள் அடியேனுடைய மனைவி. இங்கே விழாவில் வேடிக்கை பார்த்துவிட்டுத் திருவெள் ளறைக்குத் திரும்புவோம்’ என்று பதில் சொன்னான்.

இராமாநுஜர் அவனை நோக்கி, ‘இப்படிப் பகிரங்கமாக மனைவிக்குப் பணிவிடை செய்து வருகிறீரே. பிறர் பரிகசிப்பார் களே என்பதை நீர் நினைத்தும் பார்க்கவில்லையே’ என்றார்.

வில்லி தன்னுடைய மனைவியைச் சுட்டிக்காட்டி, ‘இவ்வளவு அழகுள்ள ஒரு பெண்ணை எங்கள் வேடர் குலத்தில் மாத்திரமே அல்லாமல் வேறு எந்தக் குலத்திலுமே காண்பது அருமை என்று நினைக்கிறேன். இந்தப் பாக்கியத்தைப் பெற்ற அடியேன் எப்ப டிப் பணி செய்யாமல் இருப்பேன்?’ என்றான். இராமாநுஜருடன் இருந்த பாகவதர்கள் சிரித்தார்கள்.

இவரோ அவர்களை நோக்கி, ‘இது காதலின் சக்தி; எவ்வ ளவு பலசாலியை எப்படி ஆட்கொண்டிருக்கிறது, பாருங்கள்! காதலால் செய்யும் கைங்கரியத்தில் தன்னை மறந்து, உலகையும் மறந்து, மானம் வெட்கம் எல்லாவற்றையும் துறந்து விட்டிருக் கும் இந்த நிலை ஏளனத்திற்கு உரியதென்று நினைத்து விட்டீர்கள்? இத்தகைய கடுங்காதல் இறைவன் மீது செலுத்தப்பட்டால் பக்திக் காதலாகி விடுகிறது!’ என்றார், அமைதியாக.

பிறகு, வில்லியை நோக்கினார். அவர்கள் ஏளனச் சிரிப்புச் சிரிக்க, இப்பெரியவர் தனக்குப் பரிந்து பேசுவதாய்த் தெரிந்து கொண்டான் வில்லி. ‘சுவாமி, இவள் கண்ணழகை எப்படிப் பாராமல் இருப்பேன்?’ என்று பரிதாபமாய்க் கேட்டான். கண் ணழகு வசீகரமானதுதான் என்று ஒப்புக்கொண்டார் இராமாநுஜரும்.

‘எனக்கு விசேஷ அனுதாபம் காட்டுகிறாரே’ என்று அவன் ஒரு குழந்தைபோல், ‘சுவாமி, மன்னிக்கவேணும்; இவள் கண் ணழகுக்கு மேலான கண்ணழகும் உண்டோ?’ என்றும் கேட்டு விட்டான்.

'உண்டு' என்று உறுதியான குரலில் பதில் சொன்னார் இராமாநுஜர். 'மடத்திற்கு வா; உன்னுடன் வந்து காட்டுவேன், அந்தக் கண்ணழகை!' என்று சொல்லிவிட்டு, இராமாநுஜர் தம் திருக்கூட்டத்துடன் போய்விட்டார். போகும் வழியில், 'பகவானின் அருளால் இவரை மகாபக்தன் ஆக்கிவிடலாம் என்று நம்புகிறேன்' என்று பாகவதர்களிடம் தெரிவித்தார்.

வில்லியோ சற்றுத் தூரத்தில் ஒதுங்கி நின்றுகொண்டிருந்த பொன்னாச்சியை அழைத்துக் கொண்டு விழாக் காணச் சென்றான்.

வில்லி பொன்னாச்சியை உறவினர் வீட்டில் விட்டுத் தான் மட்டும் இராமாநுஜரின் மடத்திற்கு வந்து அடிகளில் விழுந்து வணங்கினான். உடனே இராமாநுஜர், 'வாரும் வாரும்' என்று வில்லியை அழைத்துக் கொண்டு போனார். வசந்த விழாக் கண்டருள எழுந்தருளியிருக்கும் திருவரங்கச் செல்வனாரைச் சுட்டிக் காட்டினார்.

'நம் அரங்கத்து இன்னமுதாகிய அழகிய மணவாளரைப் பாரும். "கண்ணழகர், வாயழகர்" என்றெல்லாம் ஆண்டாள் வருணித்திருக்கிற அழகர் இவர்.

**பச்சைமா மலைபோல் மேனி**
**பவளவாய் கமலச் செங்கண்**

என்று ஆழ்வார் வருணித்திருக்கும் அழகரும் இவரே. இந்தக் கமலச் செங்கண்ணைப் பாரும்; இந்தக் கண்ணழகுக்கும் மேலான அழகு மண்ணிலும் இல்லை, விண்ணிலும் இல்லை' என்று இராமாநுஜர் உறங்காவில்லியின் இதயத்தையே தொட்டுப் பேசுவதுபோல் பேசினார்.

வில்லி ஒரு கணம் திகைத்து நின்றான்; மறுகணமே, 'ஆஹா, என்ன அழகு; இதுவன்றோ அழகு?' என்று பிரமிக்கலானான். இராமாநுஜர் வில்லியின் உள்ளத்தை வசீகரித்த வண்ணம், பெருமாளின் பேரழகை வருணித்துக் கொண்டே போனார்.

வில்லிக்குத் தெரிந்த பாஷையிலே ஆழ்வார்கள் கண்ட அழகுத் தத்துவத்தை உணர்த்தி விட்டார். வைத்த கண் வாங்காதபடி அடிமுதல் முடிவரை உற்று நோக்கினான் வில்லி, அழகிய மணவாளரை.

இராமாநுஜர் காட்டிய வடிவழகை வில்லி தன் கண்களிலும் நெஞ்சிலும் தேக்கிக் கொண்டு, 'ஆண்டவனே, அடியேன் உம் அடிமை' என்று அடிவீழ்ந்தான். பிறகு இராமாநுஜர் திருவடிகளிலும் தண்டனிட்டான்.

இவரது திருமேனிப் பொலிவும், இப்பொழுது வில்லியைப் பெரிதும் கவர்ந்துவிட்டது. 'இனி, அழகு குறித்தும் காதல் குறித்தும் அடியேன் அறிய வேண்டுவனவெல்லாம் தேவரீர் சந்நிதியில்தான் ; வேறெங்கும் இல்லை' என்றான்.

கடைசியாக வில்லி தன் மனைவியையும் அழைத்துக் கொண்டு இராமானுஜரின் மடத்திற்கு வந்தான். இருவரும் இராமானுஜர் காலில் விழுந்தார்கள். பிறகு சிறிதுநேரம் மற்றவர்கள், 'எங்கள் கதியே! இராமானுஜ முனியே!' என்று சொல்லிக் கொண்டு அடிகளில் விழுந்து பிரார்த்தனை செய்து கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்களைப் பின்பற்றி வில்லியும், 'எங்கள் கதியே! இராமானுச முனியே! அடியேனையும் என் மனைவியையும் ஆட்கொள்ள வேணும்' என்று சொல்லி அடிகளில் விழுந்து பிரார்த்தித்துக் கொண்டான்.

இராமானுஜர் அப்படியே ஆட்கொண்டு, இவர்களுக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களும் செய்தார். வில்லியைப் பிள்ளையுறங்காவில்லிதாசர் என்று அழைத்து அங்குள்ளவர்களுக்கெல்லாம், 'இவர் இப்போது பெருமாளின் காதலர்!' என்று கூறினார். பொன்னாச்சியை மடத்திலுள்ளவர்கள் ஹேமாம்பா என்று அழைத்தார்கள். வில்லிதாசர் அகளங்கனிடம் வேலை பார்த்து வந்த தம் மருமக்களான வண்டவில்லியையும் செண்டவில்லியையும் கூட்டிக்கொண்டு வந்து இராமானுஜருக்கு அறிமுகப்படுத்தினான். இவர் அவர்களையும் ஆட்கொண்டு, வண்டலங்காரதாசர் என்றும் செண்டலங்காரதாசர் என்றும் தாஸ்ய நாமங்கள் இட்டு வைஷ்ணவராக்கிக் கொண்டார்.

வில்லிதாசரும் மருமக்களும் உறையூருக்குப் போய் உத்தியோக காரியங்களை மட்டும் பார்த்துவிட்டு வந்து மற்றப் பொழுதையெல்லாம் ஆசாரிய கைங்கரியத்திலேயே கழித்து வந்தனர். தங்களுக்குக் கிடைத்த மாதச் சம்பளங்களை அப்படியே கொண்டு வந்து இவர் திருவடிகளில் சமர்ப்பித்து விடுவார்கள். இராமானுஜரும் இக்காணிக்கைகளை அங்கீகரித்து, மடத்துக் கைங்கரியங்களுக்குப் பயன்படுத்திக் கொண்டார்.

'தான் உண்டு, தன் வேலைகள் உண்டு' என்று அரச காரியங்களில் ஈடுபட்டிருந்த அகளங்கன், உறங்காவில்லி முதலானவர்களின் புரட்சிகரமான மாற்றத்தை அறிந்து கொண்டிருக்கவில்லை. நாளடைவில்தான் பிள்ளையுறங்காவில்லி தாசரின் பக்தி நிலையும், இவரது மருமக்களின் வைஷ்ணவ பக்தியும் தெரிய வந்தன, அகளங்கனுக்கு.

இந்த நிலையில் அரசன், 'இனி இவர்களை நாம் நமக்காக வேலை செய்யச் சொல்வதும் தவறு; பாகவதர்களின் பணிகள் எல்லாம் அடியவர்களுக்கும் ஆண்டவனுக்கும் ஆசாரியருக்குமே உரியன' என்று கருதினன். ஒருநாள் வில்லிதாசர் முதலிய மூவரையும் தண்டனிட்டு, 'சுவாமிகளே, இது வரையில் அடியேன் உங்களைச் சாதாரண வேலைக்காரர்களாக நடத்தி வந்திருக்கிறேன்; அந்த அபசாரங்களைப் பொறுத்தருள வேணும்' என்ருன் அரசன்.

பிறகு இவர்களிடம் வேலை வாங்காமலே அரசன், வழக்கம் போல் கொடுத்து வந்த சம்பளத்தைச் சன்மானமாக்கித் தொடர்ந்து கொடுத்து வந்தான். அப்பால் மூவரும் திருவரங்கத்திலேயே தங்கி ஆசாரிய கைங்கரியத்திலேயே கண்ணும் கருத்துமாயிருந்தார்கள்.

பிள்ளையுறங்காவில்லி தாசர் தமக்கு அனுப்பப்பட்டு வந்த மாத வருமானத்தை இராமாநுஜரின் திருவடிகளில் வழக்கம் போல் காணிக்கையாக வைத்தார். இவரைப் பின்பற்றி மருமக்களும் தங்கள் ஊதியங்களைக் கொடுத்து வந்தார்களல்லவா? இப்போது அவர்களும் வில்லிதாசரைப் போல் காணிக்கை செலுத்தி நின்ருர்கள். ஆனல் இராமாநுஜர் வழக்கம்போல் இந்தக் காணிக்கைகளை ஒப்புக்கொள்ளவில்லை.

அகளங்கன் இம்மூவரிடத்திலும் வேலை வாங்காமலே ஊதியம் அளித்து வருகிருன் என்ற செய்தி இராமாநுஜர் காதில் விழுந்து விட்டது. இவர் இப்போது இந்தக் காணிக்கைகளை அருவருப்புடன் புறங்கையாலே ஒதுக்கித் தள்ளிவிட்டார்.

பிறகு அன்புடன் இவர்களை நோக்கி, 'பிள்ளைகளே, இது வரையில் நீங்கள் கொணர்ந்த பொருள் மெய்த்திரு, இது பொய்த் திரு!' என்ருர்.

'மெய் வருந்த உழைத்து அறவழியில் சம்பாதிக்கும் பொருள் தான் மெய்த்திரு. உங்கள் மெய்த்திருவைத்தான் கைங்கரியத்திற்குப் பயன்படுத்திக்கொண்டேன். உழைப்பில்லாது தேடிக் குவிக்கும் பொய்த்திரு நம் கைங்கரியங்களுக்கு உதவாது' என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார்.

பொன்னும் பொருளும் கைங்கரியங்களுக்குத் தேவை என்பதை இராமாநுஜர் அறியாதவரில்லை. ஆனல், 'பொய்த்திருவாகிய பாவ பொக்கிஷம், விஷம் கலந்த பால் போலே!' என்று தம் சீடர்களுக்குத் தெளிவுபடுத்தினர்.

ஆசாரியரின் இந்த உள்ளத்திற்கு எந்தப் பொன், எந்தப் பொருள், ஈடாகும்? இது உலகம் கண்டிராத ஆயிரத்தெட்டு

மாற்றுத் தங்கமல்லவா?—இத்தகைய உணர்ச்சியுடன் வில்லிகள் மூவரும் தங்களுக்குச் சன்மானமாக அரசன் கொடுத்திருந்த பொருள்களையெல்லாம் அப்படியே எடுத்துக்கொண்டு போய்த் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள்.

இந்நிகழ்ச்சி அகளங்கனுக்குப் பேராச்சரியம் அளித்தது. 'என்ன குரு! என்ன சீடர்கள்!' என்று பரவசமாகிவிட்டான்.

பொன்னை உரைத்து உரைத்துக் கருங்கல்லையும் பொன் நிறமாக்குவதுபோல் இராமாநுஜர் தம்மை உரைத்து உரைத்துத் தம் நிறமாக்கிக் கொண்டார் இந்த வேடர்களையும்!—இப்படி எண்ணமிட்டான் அகளங்கன்.

பிறகு அரசன் இந்த வில்லிகளை நோக்கி நோக்கி வியப்புக் கடலுள் ஆழ்ந்தே போனான். 'இவர்கள் பொருளாசையை மட்டுமா வென்றுவிட்டார்கள்? ஒரு காலத்தில் பயந்து வேலை செய்துகொண்டிருந்தவர்கள் நாளடைவில் அச்சத்தை அறவே ஒழித்துத் தங்கள் கடமைகளைச் செய்து வந்தார்கள். ஆசை உடையவர்களுக்குத்தானே அச்சம்!' என்றெல்லாம் நினைவுகள் ஓடின, இந்த அரசனுள்ளத்திலே. மீண்டும் கூர்ந்து பார்த்தான். 'அச்சமின்மை மட்டுமா?—இதயத்திலுள்ள சாந்தியும் முகத்தில் ஒளி வீசுகிறதே! அகத்தின் அழகு அல்லவா, இந்த வேடர்களின் முகங்களில் பிரதிபலிக்கிறது!' என்றெல்லாம் நினைநினைந்து பார்த்தபின் அரசன் வாய்விட்டு, 'உங்கள் வழியிலே நானும் பிழைக்கும் வழியைக் காண ஆசைப்படுகிறேன்' என்றான். தன் ஆசனத்திலிருந்து எழுந்து வந்து இந்த வேடர்களைத் தழுவிக்கொண்டான். 'சுவாமிகளே, உங்களை மாற்றுயர்ந்த பொன்னாகப் பரிணமிக்கச் செய்திருக்கும் மகாத்மாவான உங்கள் ஆசாரியரின் அருள் அடியேனையும் ஆள்ஆக்கி விடவேணும்! அதற்கு நீங்கள் இரங்கி வழிகாட்ட வேணும்' என்று வேண்டிக்கொண்டான்.

வில்லிகள் மூவரும் அரசனை அழைத்துக்கொண்டுபோய், இராமாநுஜரிடம் செய்தி தெரிவித்தார்கள். வேடர்களை உகந்து ஆட்கொண்டிருந்த கருணை, வேந்தனையும் உகந்து பஞ்ச ஸம்ஸ்கார வாயிலாக ஆட்கொண்டது. அகளங்கன் அகளங்க நாட்டாழ்வான் என்ற தாஸ்யநாமம் பெற்றான். இராமாநுஜர் அகளங்கனை இப்படி ஆட்கொண்ட பின்புதான் கோயில்—கைங்கரியங்களை மேற்பார்வையிடும் அதிகாரியாக நியமித்தார். அரசருக்குரிய மாட்சியைக் காட்டிலும், இந்தப் பணியால் கிடைக்கும் மாட்சியே பெரிது என்று அகமகிழ்ந்தான் அகளங்கன்.

# 12

# தெய்வத்தின் காவலர்

திருவரங்கத்தை, அரங்கனின் பூம்பொழில் என்றும், அரங்கநாதனை அரங்கப் பெருஞ் செல்வம் என்றும் அன்பர் பெருவாழ்வு என்றும் கூறுவதுண்டு. அது ஓர் அழகிய சிறுதீவும் பேருருமாக இருக்கிறது. தீவின் வட மேற்கில் இருப்பது திருக் கோயில். தென் கிழக்கில் திருவானைக்கா என்ற பழைய சிவஸ்தலம் இருக்கிறது.

தென்னிந்தியக் கோயில்களில் 'கோயில்' என்றும், பெரிய கோயில் என்றும் சிறப்பித்துப் பேசப் பெறுவது ஸ்ரீரங்கநாதனின் கோயில். சைவ உலகில் இத்தகைய சிறப்பு சிதம்பரத்திற்கு உண்டு.

ஒவ்வொரு நாளும் ஒரு திருநாள் என்று சொல்லும்படி, ஒவ்வொரு ஆண்டிலும் முந்நூறு தினங்களுக்கு மேல் விழாக்கள் கொண்டாடப்பெறுகின்றன, இக் கோயிலிலும் சுற்றுக் கோயில்களிலும். வடக்கே நேபாளம், காஷ்மீரம் முதல் தெற்கே குமரிமுனை வரையிலும் உள்ள எல்லாப் பிரதேசங்களிலிருந்தும் யாத்திரிகர்கள் இக்கோயிலுக்கு வந்தவண்ணமாயிருக்கின்றனர். பண்டைத் தமிழ்க் காவியமான சிலப்பதிகாரத்திலும் ஸ்ரீரங்கநாதனின் சயனத்திருக்கோலம் பாடப்பெற்றிருக்கிறது.

தலபுராணம் இத்தலத்தை இராமாயணப் பேரிதிகாசத்துடன் தொடர்புறச் செய்திருக்கிறது. ஸ்ரீரங்கநாதன் இராமனது முன்னோர்களின் இஷ்ட தெய்வம் என்றும், இட்சுவாகு என்ற சூரிய குலத்து அரசனின் பெருந்தவத்தால் ஸ்ரீரங்க விமானம் உலகத்திற்குக் கிடைத்திருக்கிறது என்றும் தலபுராணம் தெரிவிக்கிறது.

இட்சுவாகு பரம்பரையில் தனக்குக் குலதனமாக வந்து சேர்ந்த ரங்கவிமானத்தை இராமன் விபீஷணனுக்குக் கொடுத்தானாம்; விபீஷணன் இலங்கைக்கு இதைக் கொண்டுபோகும் வழியில், காவிரி சூழ்ந்த அரங்கப் பூங்காவில் தங்கிப் பூஜை முடித்துக்கொண்டதும், அரங்கநாதன் இவ்விடத்திலேயே தங்கி விட வேண்டுமென்று திருவுளம் பற்றி, அன்றுதொட்டுப் பள்ளி கொண்ட பெருமாளாகக் காட்சி வழங்குகிறான் என்பர். இத் திருவரங்கத்தைப் 'பூலோக வைகுந்தம்' என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் கொண்டாடுகிறார்கள்.

ஆழ்வார் பன்னிருவருள் மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரின் சீடர்; ஆண்டாள் பெரியாழ்வாரின் அருமைத் திருமகள். மதுரகவியாழ்வாரின் வைபவம் நம்மாழ்வாரின் வைபவத்திலும், ஆண்டாளின் வைபவம் பெரியாழ்வார் வைபவத்திலும் கலந்திருப்பதால், ஆழ்வார்கள் பதின்மர் என்று கூறுவதும் பொருத்தமே. இவர்களில் மதுரகவியாழ்வார் தவிர மற்றவர்கள் எல்லாம் திருவரங்கத்தைப் பாடியிருக்கிறார்கள்.

ஆழ்வார்களைப் பதின்மர் என்று கணக்கிட்டால் பதின்மரும் பாடியிருக்கிறார்கள் எனலாம். அரங்கன், பதின்மர் பாடும் பெருமாள். ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்தங்களைப் 'பதின்மர் செந்தமிழ்' என்பர். இத் தொகுதியில் 252 பாசுரங்கள் அரங்கன் திருப்புகழ்தாம். வேறு எந்தத் திருப்பதியையும்—திருப்பதி என்று சிறப்பித்துப் பேசப்படும் திருவேங்கடத்தையும்—இத்தனை ஆழ்வார்கள் இத்தனை பாசுரங்களால் பாடவில்லை என்பது திருவரங்கத்தின் தனிப்பெருஞ் சிறப்புக்குச் சான்று.

ஆழ்வார்களைப்போல், அவர்களுக்குப் பின்வந்து அவர்களு டைய கொள்கைகளைத் தொடர்ந்து பிரசாரம் செய்துவந்திருக் கும் ஆசாரியர்களும், திருவரங்கத்தைப் பாகவத ராஜதானியாகப் போற்றியிருக்கிருர்கள். இந்த ஆசாரிய ரத்தினமாலையில் நாயக மணியாக அமைந்திருக்கும் இராமாநுஜர், திருவரங்கக் கோயி லின் நடைமுறைகளை வகுத்தும், இதை மையமாகக்கொண்டு ஸ்ரீவைஷ்ணவத்தைப் பிரசாரம் செய்தும், பக்திநெறிக்குப் புத் துயிரும் இந்து சமயத்துக்குப் புதுவாழ்வும் அளித்திருக்கிருர்.

திருவரங்கத்தின் புகழையெல்லாம் தன் புகழாக்கிக்கொண் டவர் இராமாநுஜர் என்று கூறுவதைக்காட்டிலும், இராமநுஜரின் புகழையெல்லாம் தன் புகழாக்கிக்கொண்டு வளர்ந்திருக்கிறது 'திருவரங்கம் கோயில்' என்று கூறுவது பெரிதும் பொருந்தும்.

**குடதிசை முடியை வைத்து,**
**குணதிசை பாதம் நீட்டி,**
**வடதிசை பின்பு காட்டித்**
**தென்திசை இலங்கை நோக்கி,**

பள்ளிகொண்டிருக்கும் பெருமாளின் திருவடிப்பேற்றை அடைந்த இராமாநுஜரின் புகழ் இப்பெருமாளின் புகழுடன் இரண்டறக் கலந்துவிட்டது என்று பக்தர்கள் கருதுமாறு, இராமாநுஜர் செயற்கருஞ் செயல்களான கைங்கரியங்கள் பல புரிந்திருக்கிருர்.

### வரலாற்றுச் சின்னங்கள்

தென்ஞட்டுத் திருக்கோயில்கள் பலவற்றிலும், இக் கோயி லுக்கு அதிகமான வரலாற்றுச் சான்றுகள் உண்டு. இச்சான் றுகள் மூலமாகவும், 'கோயிலொழுகு' போன்ற நூல்கள் வாயி லாகவும், இக் கோயிலின் வளர்ச்சியை அறிந்துகொள்ளலாம். இப்போதுள்ள கோயிலின் பெரும்பகுதியும்-பிராகாரங்களும் சந் நிதிகளும் மண்டபங்களும் - காலப்போக்கில் தோன்றியவை; இவை எப்போது எப்போது தோன்றின என்பது குறித்த ஆராய்ச்சி, தமிழர் வரலாறு என்ற நெடுங்கதை ஆராய்ச்சியில் முக்கியமான ஒரு பகுதியாகவும் அமையக் கூடும்.

இக்கோயிலின் அமைப்பில் பிற்காலப் பல்லவர் காலம் முதல் நாயக்க மன்னர்களின் காலம்வரை ஏற்பட்டிருக்கும் வளர்ச்சி யைக் கண்டுகொள்ளலாம். இராமாநுஜர் காலத்திற்கும் முன்பே அரசர்கள் இக்கோயில்-அமைப்பில் திருத்தமும் பெருக்கமும் செய்திருந்தார்கள். இவர்கள் காலத்திற்குப் பின்பு, விஜயநகரப் பேரரசு தழைத்து வளர்ந்த காலப்பகுதியில் (கி பி 1350 முதல் 1600 வரை), இக் கோயிலில் சிறந்த சிற்பச் செல்வங்களான

தூண்கள் முதலியன அமைக்கப்பெற்றன; பெருமிதத் தோற்ற முள்ள மண்டபங்கள் கட்டப்பெற்றன; கண்கவரும் பிராகாரங்கள் உருவாக்கப்பெற்றன.

ஏறக்குறைய இராமாநுஜர் காலந்தொட்டுச் சென்ற ஒன்பது நூற்றாண்டுகளாகச் சுமார் 350 கல்வெட்டுச் சாசனங்கள் இக்கோயிலில் பொறிக்கப்பெற்றுள்ளன. வரலாற்றுக் குறிப்புகளை உடைய செப்பேடுகளும் உண்டு.

ஐந்தாவது பிராகாரம் இராமாநுஜரின் சீடரான அகளங்க நாட்டாழ்வானால் அமைக்கப்பெற்றது என்பதற்கு இது அகளங் கன் திருவீதி என்று பெயர் பெற்றிருப்பதே சான்றாகும். இவ்வீதி யில் வைகாசி வசந்தவிழா நடக்கிறது. ஆறாவது திருவீதி ‘திருவிக்கிரமன் திருவீதி’ என்று பெயர் பெற்றிருக்கிறது. இராமாநுஜருக்கும் இவரது கொள்கைக்கும் விரோதமாக இருந் தவன் என்று பலரால் கருதப்படும் முதலாவது குலோத்துங்க சோழனின் மகன் விக்கிரமசோழன். தன் தந்தை காலமான பின் இவன் இராமாநுஜரின் சீடன் ஆனான் என்பர்.

இக்கோயிலில் இராமாநுஜரின் அந்தரங்கச் சீடரான கூரத் தாழ்வானுக்கும் ஒரு சந்நிதி இருக்கிறது. ஆனால், இது திருவரங் கச் செல்வி என்ற தேவியின் பழைய கோயில் என்றும், பிற்காலத்திலேதான் கூரத்தாழ்வான் சந்நிதி ஆயிற்று என்றும் சொல்லுகிறார்கள். இச்சந்நிதிக்கு வடக்கே தொண்டரடிப்பொடி ஆழ்வார்-சந்நிதியும் திருப்பாணாழ்வார்-சந்நிதியும் இருக் கின்றன.

அகளங்கன் வீதியின் தென்மேற்கு மூலையில் சக்கரத்தாழ்வார் சந்நிதி; இச்சந்நிதியின் தென்மேற்கு மூலையில் ‘இராமாநுச நூற்றந்தாதி’ பாடிய திருவரங்கத்தமுதனாரின் ‘திருமேனி’ காணப்படுகிறது.

மேட்டழகியசிங்கர் என்ற நரசிங்கப்பெருமாளின் சந்நிதிக்கு எதிரே ஒரு நாற்கால் மண்டபம் உண்டு. இம் மண்டபத்தை அடுத்திருப்பது அருளாளப்பெருமாள் – பெருமண்டபம் என்பது. இம் மண்டபத்தில் பதினேழு நாள் இராமாநுஜருக்கும் யக்ஞமூர்த்தி என்ற வேதாந்திக்கும் தர்க்கம் நடந்தது என்றும், யக்ஞமூர்த்தி தோல்வியுற்றார் என்றும் **திவ்ய சூரி சரிதை** தெரிவிக்கிறது.

ஸ்ரீரங்கநாச்சியார் சந்நிதிக்குக் கிழக்கில், கோபுரவாசலை ஒட்டி வேதாந்த தேசிகரின் சந்நிதி இருக்கிறது. இதை அடுத்து பெரியவாச்சான் பிள்ளை என்ற ‘வியாக்கியான சக்ரவர்த்தி’ திருவேங்கடமுடையானுடன் தோற்றமளிக்கிறார்.

விஜயநகர ஆட்சிக் காலத்தில் கட்டப்பெற்றுள்ள ஆயிரக் கால் மண்டபத்தின் மத்தியிலுள்ள திருமாமணி மண்டபம் என்ற சிறு மண்டபத்தில் ஸ்ரீரங்கநாதன் தன் முக்கிய விழாவாகிய அத்யயன விழாவில் தமிழ் வேதமாகிய திருவாய்மொழியை அரையர்கள் மூலம் கேட்டருளும் காட்சியை இக் காலத்திலும் காணலாம். தமிழுக்கும் தமிழ்மறைக்கும் இராமாநுஜ தரிசனம் கொடுத்திருக்கும் முக்கிய ஸ்தானத்தை இந்த விழாக் காட்சியிலிருந்தும் ஊகித்துக் கொள்ளலாம்.

இக் கோயிலின் இருபத்தொரு கோபுரங்களில் உன்னதமானது வெள்ளைக் கோபுரம். இக் கோபுர வாசலை ஒட்டித் தென்புறமிருக்கும் மண்டபத்தில் விஜயநகர காலத்துச் சிற்பத் திறனுக்குச் சான்றுகள் காணலாம். இம் மண்டபத்திற்குத் தெற்கில் பார்த்தசாரதி சந்நிதி; இதன் தெற்கில் இராமாநுஜரின் சந்நிதி காணப்படுகிறது.

இச்சந்நிதி ஆதியில் ஸ்ரீரங்கநாதனின் வசந்த மண்டபமாக இருந்தது. இராமாநுஜர் காலமானதும் இவரது பூத உடம்பை வசந்த மண்டபத்திலேயே சமாதிவைத்துவிட்டார்கள். அதுதான் இராமாநுஜர் சந்நிதியாகி, எண்ணூறு ஆண்டுகளுக்கு மேலாக இவருக்கும் திருவரங்கத்துக்கும் உள்ள பிரியாத் தொடர்பை நினைவூட்டி வந்திருக்கிறது.

இச்சந்நிதியில் நாள்தோறும் தமிழ் வேத பாராயணம் நடைபெறுகின்றது. இந்த நிகழ்ச்சியும், இராமாநுஜரின் சித்தாந்தம் ஆழ்வார்களின் கொள்கைகளில் வேரூன்றி வளர்ந்து வந்திருக்கிறது என்பதன் ஒரு நினைவுக்குறிதான். திருவரங்கத்து அமுதனார் இராமாநுஜ நூற்றந்தாதி என்ற பெயரால் இயற்றியுள்ள தமிழ்ப் பிரபந்தம், ஸ்ரீரங்கநாதனுடைய பிரம்மோத்ஸவத்தில் பத்தாம் திருநாளில் பெருமாள் வீதிவலம் வரும்போது ஓதப்பெறுகிறது. இதைக் கேட்டுக்கொண்டே ஸ்ரீரங்கநாதன் இராமாநுஜர் சந்நிதிக்கு வந்து இவருக்கு அருள் புரிவதாக அமைந்திருக்கும் விழாக் காட்சியும், தமிழுக்கும் இராமாநுஜ தரிசனத்திற்கும் இக் கோயிலுக்கும் உள்ள உறவைப் புலப்படுத்துவதுதான். இராமாநுஜருக்கு ஆழ்வார்கள் மீதுள்ள அபார பக்திக்கு ஒரு பெருஞ் சான்று இராமாநுஜ நூற்றந்தாதி.

திவ்ய தேசங்கள் என்று வைஷ்ணவர்கள் குறிப்பிடும் திருப்பதிகளில் (ஆழ்வார்களின் பாடல்பெற்ற தலங்களில்) இராமாநுஜருக்கு என்று சந்நிதிகள் அமைக்கப்பெற்றிருப்பதைக் காணலாம். ஆனால் ஸ்ரீரங்கத்துக் கோயிலில் உள்ள இந்தச் சந்நிதிதான் வைஷ்ணவர்களால் மிகவும் போற்றப்படுகிறது.

காரணம், இதில் இவர் திருமேனி அடக்கம் செய்யப்பெற்றிருக்கிறது என்பதுதான். இச் சந்நிதியின் மண்டபத்தில் இராமாநுஜரின் வரலாறு சித்திரிக்கப்பெற்றிருப்பதைக் காணலாம்.

இக்கோயிலில் திருக்கச்சிநம்பி முதலான ஆசாரியர்களுக்கும் சந்நிதிகள் உண்டு, ஆழ்வார்களுக்கும் சந்நிதிகள் உண்டு. தொண்டரடிப்பொடியாழ்வார் முதலான பக்தர்கள் ஆடிப் பாடி பஜனை செய்த இடமாகிய 'அணி அரங்கன் திருமுற்றம்' ஒரு காலத்தில் பரந்தவெளியாக இருந்தது. இப்போது இந்த இடம் முழுதும் மண்டபமாக மேலே மூடப்பட்டிருக்கிறது.

**சமதர்மச் சின்னங்கள்**

இக்கோயிலின் ஆட்சிமுறைத் திட்டங்கள் இராமாநுஜர் அன்று வகுத்தபடி இன்றும் நடைபெற்றுவருகின்றன. இது, இராமாநுஜ சம்பிரதாயம் நாளதுவரை இடையறாத ஒரு பொற் சங்கிலித் தொடர்போல் வந்திருக்கிறது என்பதற்கும், உடைக்க முடியாதபடி உரம்பெற்று உருப்பெற்றிருக்கிறது என்பதற்கும் ஒரு சின்னமாகும்.

இக்கோயிலில் உள்ள 'சுல்தானி' என்ற துலுக்க நாச்சியாரின் சந்நிதியும் இராமாநுஜ சம்பிரதாயத்தின் ஸாரமான பாகவத ஸமதர்ம நோக்கிற்கு ஓர் அறிகுறி எனலாம்.

• அண்மையில் தோன்றிய கிளிமண்டபத்தை அடுத்துக் காணப்படுகிறது, திருவேங்கடமுடையான் என்ற ஸ்ரீநிவாசப் பெருமாளின் வர்ணப்படம். இந்த அழகிய திருக்கோலமும் ஒரு சமய உண்மையைப் புலப்படுத்தும் ஓர் அறிகுறிதான். திவ்யகவி அழகிய மணவாளதாசர் என்ற பிள்ளைப்பெருமாளையங்கார் ஒரு சமயம் அரங்கநாதனிடம் கொண்டிருந்த அதிபக்தி காரணமாகத் திருப்பதி எம்பெருமானைப் பாட மறுத்துவிட்டாராம். அப்போது அந்த வேற்றுமையுணர்வைப் போக்குவதற்காக அரங்கநாதன் ஸ்ரீநிவாசனாகக் காட்சி வழங்கினானாம். அந்தக் கோலம் தான் இந்த வர்ணப்படம் என்பர்.

பொற்றகடால் வேயப்பெற்ற ஸ்ரீரங்க விமானத்திற்குத் துர்க்கா தேவியும் கணநாதரான தும்பிக்கையாழ்வாரும் காப்பாக அமைந்திருப்பதையும் காணலாம். இதுவும், ஸ்ரீவைஷ்ணவம் பிறமதக் கொள்கைகளைத் தன் நிறமாக்கிக் கொள்ளக்கூடியதுதான் என்பதற்குச் சான்று.

இக்கோயிலில் நூற்றெட்டு வைஷ்ணவத் திருப்பதிகளின் வர்ண ஓவியங்கள் உண்டு. ஒவ்வொன்றுக்கும் கீழே தொங்கும் குறிப்புகளும் உண்டு. இந்த ஓவியங்கள்

பழமையானவை அல்ல. எனினும், இவை நூற்றெட்டுத் திருப்பதிகளாலும் போற்றப்படும் பகவானின் பூலோக ராஜதானி திருவரங்கம் என்ற வைஷ்ணவர்களின் நம்பிக்கைக்கு ஆதரவு தருபவை போல் அமைந்திருக்கின்றன.

ஸ்ரீரங்க விமானத்தின் கீழே அறிதுயில் அமர்ந்த அரங்க நாதனைத் தரிசிக்கிறோம். இப்பெருமான் வலது கையால் திருவடிகளைச் சுட்டிக் காட்டுகிறான். இந்த நிலையும் இராமாநுஜ தரிசனத்தின் ஓர் உண்மைப் பொருளை நமக்குச் சுட்டிக் காட்டுகிறது.

ஸ்ரீரங்கராஜா ராஜாதிராஜனும் தேவாதிதேவனுமாக ஆண்டுவருகிறான், உலகங்களையெல்லாம் என்பதற்குத் திருமுடி நினைவுக்குறி. இது இறைவனது நிலை என்ற மாட்சியைப் புலப்படுத்துகிறது. மேலே சொன்ன உண்மைப் பொருளின் ஒரு பாதி இது.

'மறுபாதியை—ஏன், செம்பாதியை-இடதுகை சுட்டிக் காட்டும் திருமுடியில் காணலாம். இதுவே அடியவர்களுக்கு அடைக்கலமாவது-குழந்தைகளுக்குத் தாய்ப்பால் போலே. தாழ்ந்தார்க்கும் தாழ்ந்து வந்து தாங்கிக் காப்பது திருவடிதான்.

நம் பக்திக் காதலைக் காட்டிலும் ஆண்டவனுக்கு நம் மீதுள்ள காதல் அதிகம் என்பதைக் காட்டுவதும் திருவடி. கிணற்றில் தவறி விழுந்த குழந்தையை உடனே குதித்து அதற்கும் கீழே போய்த் தூக்கிவிட வேண்டும் என்று துடிக்கிறாளே தாய், அந்தத் தாயுள்ளத்துக்கும் அறிகுறி திருவடி.

திருவரங்கம்-பெரியகோயிலில் மிகவும் சிறப்பும் பழமையும் வாய்ந்த திருவாபரணங்கள் உண்டு. சேர-சோழ-பாண்டிய—ஹொய்சால—விஜயநகர-நாயக்க அரசர்கள் அணிமணிகளால் அரங்கனை அணிசெய்து மகிழ்ந்திருக்கிறார்கள். படையெடுப்பு களாலும் கலகங்களாலும் குழப்பங்களாலும் கொள்ளைபோய் விட்ட அணிமணிகளின் கணக்கை யாரறிவார்? எஞ்சி நிற்பவை சிலவே. ஆனால் அரங்கநாதனின் கல்யாணகுணங் களே இன்றும் பிரியாத ஆபரணங்கள். இவற்றைக் கொண்டு மகிழும் பக்தர்களால் இவற்றுக்கு ஒரு குறைவும் இல்லையே!

'பாண்டியன் கொண்டை' என்ற கிரீடம் ஒன்று உண்டு. அரங்கநாதன் அணிந்து கொள்ளும் மகுடங்கள் பல; அவற்றுள் இதுவும் ஒன்று. இது ஒரு பாண்டியனின் நன்கொடை என லாம். இப்பாண்டியன் பதின்மூன்றும் நூற்றாண்டிலே திக்கு விஜயங்கள் செய்தபின் தான் கொணர்ந்த ஏராளமான பொன்னை யும் பொருள்களையும் இக்கோயிலுக்கு உதவிய ஜடாவர்மன் சுந்

தரபாண்டியன் என்று ஊகிப்பவரும் உண்டு. இப்பாண்டியனின் கொடை ஒரு கல்வெட்டிலே குறிக்கப் பெற்றிருக்கிறது. இந்தப் பாண்டியனின் பொருட்கொடை பெரும்பாலும் அழிந்து போயிருக்க வேண்டும். ஆனால் இராமாநுஜரின் அருட்கொடை யாகிய ஞானச் செல்வமோ இன்றும் அரங்கனுக்கு உரியது தான்; என்றும் உரியதுதான்—அரங்கனுக்கும் அடியார் களுக்கும்!

விஜயநகரப் பேரரசிலிருந்து கிளைத்த நாயக்க மன்னர் ஆட்சியில் கிடைத்த ஆபரணங்களே இப்போது பெரும்பாலும் அரங்கநாதனின் திருவாபரணங்கள். இந்த ஆபரணங்கள் என்றும் நிலைத்திருக்கும் என்றுதான் சொல்ல முடியுமா? ஆனால் என்றும் அழிந்து போகாத அணிகளும் அரங்கனுக்கு இருக்கத் தான் செய்கின்றன!

மட்டுப்படாது விண்ணிலும் மண்ணிலும் கொட்டிக் கிடக்கும் இயற்கையழகுகளும், புதுப் புதுப் புதுமைகளான சிந்தனையழகு களும், எல்லாம் அரங்கனை நீங்காது அணி செய்யும் அணிகளே! எல்லாவற்றுக்கும் மேலாக **ஸ்ரீ பாஷ்யம்** என்ற இராமாநுஜ பாஷ்யத்தை அழியாத பொற்றகட்டிலே வைரம் வைடூரியம் மரகதம் முதலிய இரத்தினங்களைப் பதித்து இழைத்ததோர் இரத்தின அங்கியாக மதித்து ஸ்ரீரங்கநாதன் அணிந்து கொண் டிருக்கிறான் என்று பக்தியுள்ளம் பரவசமாகிறது.

திருமங்கை மன்னன் அரங்கநாதன் சந்நிதிக்குக் காப்பாகக் கல் மதில்களைக் கட்டிவைத்தபின் பெருமாள் முன் நின்று, ‘பொன்னால் கட்டியிருக்க வேண்டும் உன் திருமதில்களை; அந்தப் பேறு பெறவில்லை அடியேன்!’ என்று மனம் நொந்து முறையிட்டுக் கொண்டாராம். அதற்குப் பெருமான், அர்ச்சகர் மீது ஆவேசித்துப் பதில் சொன்னாராம்: ‘ஆழ்வாரே, உம்முடைய பொன்னான உள்ளம் தான் நமக்கு வேண்டும்; பொன்மதிலைத் துஷ்டர்கள் சுரண்டிக்கொண்டு போய்விடுவார் களே’ என்று பதில் சொன்னானாம்.

ஆம்; ஆழ்வார்கள் ‘பூமாலை வாடும் பொன் மாலைக்கு மணம் இல்லை; நிலைத்து நிற்கும் ஆற்றலும் இல்லை’ என்று, என்றும் வாடாத, கவிமணம் குன்றாத, பாமாலைகளால் அரங்கனை அணி செய்திருக்கிறார்கள். இந்த ஆழ்வார்களின் பாமாலைகளுக் குப் பாதுகாப்பாக ஒரு ஞானக்கோட்டை கட்டியிருக்கிறது இராமாநுஜ பாஷ்யம்.

இராமாநுஜரின் கொள்கைகள் பரவுவதற்கு இடையூறு விளைத்ததாகக் கருதப்படும் குலோத்துங்கனே திருவரங்கத்துக்

கோயிலில் குலசேகராழ்வாரின் பிரபந்தங்களையும் திருவாய் மொழியையும் திருப்பள்ளியெழுச்சியையும் பாடுவதற்கு மானியம் அளித்தான் என்று ஒரு கல்வெட்டிலிருந்து தெரியவருகிறது. வேறொன்றிலிருந்து, மாலிக்காபூர் என்பவனின் படையெடுப்பை முன்னிட்டு வெளியே கொண்டு போகப்பட்ட பெருமாள் விக்கிரகம் விஜயநகர அரசைச் சார்ந்த கோபண்ணு என்பவ ரால் மறுபடியும் கோயிலில் புதுப்பிக்கப் பெற்றதாகத் தெரிய வருகிறது. இத்தகைய கல்வெட்டுகளிலிருந்து, அரசர்களின் பக்தியும் மக்களின் பக்தியும் இடையூற்றுக்கு இடையூருக எழுந்து கோயிலைப் பாதுகாத்து வந்திருக்கின்றன என்று தெரிய வருகிறது.

இவ்வளவு பக்திக்கும் ஆழ்ந்ததோர் அடிப்படை அமைத்த வர்கள் ஆழ்வார்களும் ஆசாரியர்களும். இவர்களில் இராமாநுஜர் கோயில் வழிபாட்டு முறைகளை நெறிபிறழாது செப்பம் செய்து வைத்தார்; கோயிலின் ஆட்சிக்குரிய லௌகிக காரியங்களையும் செம்மைப்படுத்தி வைத்தார். பிறகு, தம் சிந்தனைகளாலும் உபதேசங்களாலும் செயற்கருஞ் செயல்களாலும், கட்புலனு காத—எனினும் வைரம்போல் வலிமை வாய்ந்த—மதில்களையும் அரண்மனைகளையும் அரங்கனுக்காக அமைத்துள்ளார்.

இராமாநுஜரின் வாழ்க்கையும் உபதேசங்களும், மேதையும் செயல் - திறனும்,

**ஆவியை, அரங்க**
**மாலை**

—அதாவது உலகுக்கெல்லாம் ஓருயிராகியிருக்கும் பரம் பொருளின் அற்புத நினைவுக்குறியான அரங்கன் என்ற ஸர்ப்ப சயனமூர்த்தியை—அணிசெய்து அரண் செய்து அன்பர்களுக் கெல்லாம் பல நூற்றுண்டுகளாகக் காட்டி வந்திருக்கின்றன.

நாதமுனிகள் கண்ட அரங்கப் பெருஞ் செல்வத்தை ஒரு புதையலைக் காட்டுவதுபோல் காட்டினுர் ஆளவந்தாருக்கு, மணக்கால்நம்பி. இராமாநுஜரோ தம் காலம்தொட்டு இன்றள வும் இச்செல்வத்தின் காதலரும் காவலருமாகி எல்லா மக்களுக் கும் காட்டி வந்திருக்கிறுர்; எதிர்காலத்திலும் காட்டி வருவார்.

# 13

# கற்றதும் கற்பித்ததும்

'கோயிலில் ஒரு கலைக்கோயில்' என்று சொல்லுமாறு திருவரங்கத்து இராமாநுஜ மடம் பிரசித்திபெற்றுவந்தது. இராமாநுஜர் கற்பித்தவண்ணமாக இருந்தார்; கற்றவண்ணமாக இருந்தார். மேலும் மேலும், கற்றுக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து வாரி வழங்கிச் சீடர்களையும் பிறரையும் வாழ்விக்க வேண்டும் என்றே பெரியநம்பியிடம் கற்றார், திருக்கோஷ்டியூர் நம்பியிடத்தும் உபதேசம் பெற்றார். "இன்னும் எவரிடம் எதைக் கற்றுக்கொள்ளலாம்? கற்றதை மலடாக்கிவிடாமல் எப்படிப் பெருகச் செய்யலாம்?" என்று ஆலோசித்தவண்ணமாக இருந்தார்.

வேத வேதாங்க வேதாந்தங்களைக் கசடறக் கற்றதுடன், வேறு வடமொழி நூல்களையும் கற்ருர்; ஆளவந்தாரின் வடமொழி நூல்களைச் சிறப்பாகக் கொண்டார். அவர் வாய்மொழியாகச் செய்துவந்த உபதேசங்களையும் உள்ளவாறு அறிந்துகொள்ள முயன்ருர். அவர் பக்குவம் அறிந்து மறைப்பொருளுடன் மறைபொருளான இரகசியங்களையும் சிலருக்குக் கற்பித்திருந்தார்; அவற்றையும் தேடிப்பிடித்துத் தெரிந்துகொள்ள வேண்டும் என்பது இராமாநுஜரின் நோக்கம். அப்போதுதானே ஆளவந்தாரின் உள்ளம் தெரிந்து அவரது நோக்கங்களை இனிது நிறைவேற்றிவைக்கமுடியும்?

பெரியநம்பியிடத்திலும், பிறகு கோஷ்டியூர்நம்பியிடத்திலும் இவர் கற்றுக்கொண்டது மேலும் அரிய பெரிய விஷயங்களைத் தெரிந்துகொள்வதற்கு ஓர் உறுதியான அடிப்படையாக அமைந்திருந்தது. தம்மிடம் இராமாநுஜர் பாடம் கேட்கும்போது இவரது அருமை பெருமைகளைத் தெரிந்துகொண்ட பெரியநம்பி, தம் புதல்வரான புண்டரீகரை இவருக்குச் சீடராக்கி வைத்தார். அப்படியே கோஷ்டிநம்பியும் தம்மிடம் இவர் திருமந்திரப் பொருளையும் பகவத்கீதையின் சரமசுலோகப் பொருளையும் கற்றுக்கொண்டபோதே, அவர் தம் அருமைப் புதல்வரான ஸௌம்யநாராயணர் என்பவரைச் சீடராக்கினுர்.

## 'மெய்ம்மைப் பெருவார்த்தை' கற்றது

இராமாநுஜர் திருமந்திரதானம் செய்தபின், சரம சுலோகத்தின் ஆழ்ந்த பொருளைக் கோஷ்டியூர்நம்பி இவருக்கு மட்டும் பரம ரகசியமாக வெளியிட விரும்பினுர். கூரேசனையும் முதலியாண்டானையும் கூட அழைத்துவராமல் இவர் ஒருவரே ஏகாந்தமாக வரவேண்டுமென்று கண்டிப்பாகக் கட்டளை இட்டிருந்தார். அப்படியே இராமாநுஜர் மட்டும் திருவரங்கத்திலிருந்து திருக்கோஷ்டியூருக்குச் சென்ருர்.

நம்பியை இவர் அந்த இல்லத்தின் பகுதியான காலட்சேப மன்றத்தில் காணுததால், அப்போது அங்கு வந்த அவர் புதல்வியான தேவகி அம்மையை நோக்கி, 'உங்கள் தகப்பனுர் எங்கே?' என்று கேட்டார். அந்தப் பெண் அந்த வீட்டுப்பகுதி ஒன்றிலுள்ள மேல்தளத்தைச் சுட்டிக்காட்டி, 'அங்கே போய்ப் பாரும்' என்று பதில் சொன்னுள்.

இராமாநுஜர் அப்படியே போய்ப் பார்த்தார். நம்பி தியான சமாதியில் இருப்பதுபோல் காணப்பட்டார். உடனே, இராமாநுஜர் சத்தம் செய்யலாகாது என்று மெல்லக் கீழே

இறங்கிவந்து கூடத்தில் காத்திருந்தார். கொஞ்ச நேரம் கழித்து நம்பியும் இறங்கிவர, இவர் எழுந்து தண்டனிட்டுக்கிடந்தார். கோஷ்டியூர்நம்பி இவரை இரு கைகளாலும் தூக்கியெடுத்துக் கையைப்பிடித்து அன்புடன் அழைத்துக்கொண்டு மேல் தளத்திற்குப் போனார்.

'ஆளவந்தார் "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்று தொடங்கும் சரமசுலோகப் பொருளை உமக்குத் தெரிவிக்கிறேன்' என்ற பீடிகையுடன், அந்தச் சுலோகத்தின் பரம இரகசியப் பொருள்களையெல்லாம் தெரிவித்தார். பிறகு குருவை நோக்கி, 'நம்பிகளே, இந்த அர்த்தம் தெரிந்துகொள்ளக் கூரேசனுக்குக் கூட உரிமையில்லையா?' என்று கேட்டார். அதற்கு நம்பி, 'அவருக்கு அதிகாரம் உண்டு; ஆனால் ஒரு வருஷகாலம் அவரது கைங்கர்ய நெறியைச் சோதித்துப் பார்த்துக்கொண்டு நீர் இதை உபதேசிக்கலாம்' என்று பதில் சொன்னார்.

கோஷ்டியூர்நம்பிகள் வாயிலாகச் சரமசுலோகத்தை விளக்கமாய்த் தெரிந்துகொண்ட பின்புதான், இராமாநுஜர் 'மாயன் அன்று ஓதிய வாக்கை இன்றுதான் உள்ளபடி உணர்ந்து கொண்டேன். இது இப்போதுதான் "மெய்மைப் பெருவார்த்தை" யாகக் காண்கிறது' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார். பிறகு கோஷ்டியூர் நம்பிகளிடம் விடைபெற்றுக் கொண்டு திருவரங்கத்துக்குத் திரும்பினார்.

**"பெருவார்த்தை" கற்பித்தது**

கூரத்தாழ்வான் எதிர்கொண்டு வந்து இராமாநுஜர் அடிகளில் தண்டனிட்டு நின்றார். அவரை நோக்கி இவர், 'ஆளவந்தாரின் நோக்கம் நிறைவேறுமாறு நம்பி நம்மை வாழ்வித்தருளினார் காணும்!' என்றார்.

'சுவாமி, நம்மையா; அடியேனையும் சேர்த்துத்தானே சொல்லுகிறீர்கள்?'

'ஆம்; உம்மையும் தான். ஓராண்டுக் காலம் உம்மைப் பணிகொண்டு அறிந்து உபதேசிக்கவேண்டுமென்று நியமித்தார். அதிலே என்ன சிரமம் உமக்கு இருக்க முடியும்? கைங்கர்யம் தானே உமக்கு 'உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை'யும்! நீர் ஏன் கவலைப்பட வேண்டும்?'

'கைங்கர்யமே எனக்கு இம்மையின்பமும் பேரின்பமும் கூட! ஆனால் இந்த உடம்பிற்கு நிலை உண்டோ? ஒரு திங்கள் இந்த மடத்து வாசலில் உபவாசம் பண்ணுகிறேன். அதிலிருந்து என் ஆர்வத்தைச் சோதித்துக்கொள்ளலாமே!'

இராமாநுஜரும் அதற்கு இணங்கி, முடிவில் கூரேசனுக்குச் சரமசுலோகத்தின் பரம ரகசியங்களையெல்லாம் விரித்துரைத்தார். முதலியாண்டானும் இவர் அடிகளில் விழுந்து, 'அடியேனுக்கு இல்லையா அந்தச் செல்வம்?' என்று கேட்டார். இராமாநுஜரோ 'கூரத்தாழ்வானை மட்டுமே நான் நம்பிகளிடம் குறிப்பிட்டு அனுமதி பெற்றுக் கொண்டேன்; நீர் திருக்கோஷ்டியூருக்கே போய் அந்த நம்பியிடம் உமது தேவையைத் தெரிவித்துக் கொள்ளும்' என்று சொல்லிவிட்டார்.

நம்பிகளிடம் சமயம் பார்த்துத் தம் விருப்பத்தைத் தெரிவித்துக்கொள்ள ஆறுமாத காலம் பிடித்தது முதலியாண்டானுக்கு. கடைசியாக ஒரு வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு தம் தேவையைத் தெரிவித்ததும், 'குலச் செருக்கு, கல்விச் செருக்கு, செல்வச் செருக்கு என்ற முக்குறும்பும் போய் விட்டால் இராமாநுஜர் தாமே உமக்குக் கற்பிப்பாரே, இந்த இரகசியங்களை; அஞ்சவேண்டாம்' என்று விடைகொடுத்து அனுப்பிவிட்டார்.

உரிய காலத்தில், உகப்புடன் முதலியாண்டானுக்கும் இராமாநுஜர் சரமசுலோக இரகசியப் பொருளை உபதேசித்தார். பிறகு மடத்திலுள்ளவர்களை நோக்கி, 'கூரேசனுக்கு உபதேசித்தபோது, "நமது பவித்திரம் நம் கை புகுந்தது" என்று எண்ணினேன். இப்போதோ, "உரிய தண்டும் கை புகுந்தது" என்று உவகை கொள்ளுகிறேன்' என்றார்.

**திருவாய்மொழி கற்றது**

திருக்கோஷ்டியூர் நம்பி திருவரங்கத்துக்கு வந்து திருமாலையாண்டானை அழைத்துக் கொண்டு மடத்திற்கு வந்தார். இராமாநுஜரை நோக்கி, 'நீர் திருவாய்மொழியில் இலைமறை காய் போல் உள்ள பொருள்களைத் தெரிந்து கொள்ள வேண்டாமா? அதற்கு இத் திருமாலையாண்டான் ஒரு நல்ல வழிகாட்டி' என்று சொன்னார். திருமாலையாண்டானை **மாலாதரர்** என்றும் கூறுவதுண்டு. இவரும் ஆளவந்தாரின் சீடர்களில் ஒருவர். அழகர்கோவில் என்ற திருமாலிருஞ்சோலையில் பிறந்தவர்.

திருமாலையாண்டான் இராமாநுஜருக்குத் திருவாய்மொழி கற்பிக்கத் தொடங்கினார். இராமாநுஜர் பல பாடல்களுக்கும் திருமாலையாண்டானுக்குத் தெரிந்திராத பொருள்—விசேஷங்களையும் தெரிவித்தார். 'இப்படி ஆளவந்தார் சொன்னதாக எனக்கு நினைவு இல்லை' என்றார் திருமாலையாண்டான். இராமாநுஜரோ,

'முன்னுள்ள பாடல்களுக்கும் பின்வரும் பாடல்களுக்கும் இசைவாக இருப்பது அடியேன் கூறுவதுதான்' என்று உறுதியான குரலில் சொன்னார்.

மடத்தில் திருவாய்மொழிப் பாடம் நின்றுபோய்விட்டது. 'இராமாநுஜரின் பொருள் விசுவாமித்திர சிருஷ்டிதான்!' என்று திருமாலையாண்டான் நினைத்ததுதான் இதற்குக் காரணம். இந்தச் செய்தி திருக்கோஷ்டியூர் நம்பிக்குத் தெரியவந்ததும், அவர் இதற்காகவே மறுபடியும் திருக்கோஷ்டியூரிலிருந்து புறப்பட்டு வந்தார். திருமாலையாண்டானைச் சந்தித்து, 'திருவாய்மொழி நடக்கவில்லையா?' என்று கேட்டார்.

அதற்கு ஆண்டான், 'நம்பிகளே, இராமாநுஜர் ஏதேதோ சொந்தக் கற்பனை பண்ணிப் பொருள் காண்கிறார், ஆழ்வார் பாசுரங்களுக்கு; அடியேன் எப்படி ஒப்புக்கொள்ள முடியும்?' என்று பதில் சொன்னார். உதாரணமாக, சில பாசுரங்களுக்கு இராமாநுஜர் சொன்ன அர்த்த விசேஷங்களையும் எடுத்துக் காட்டினார்.

உடனே கோஷ்டியூர் நம்பி 'ஆளவந்தார் சிறப்பாகச் சொன்ன பொருள்–விசேஷங்கள் இவை என்று எனக்கு நன்றாக நினைவிற்கு வருகிறது. ஆண்டானே! உம்மிடம் இராமாநுஜர் திருவாய்மொழி கற்பது, வேத முதல்வனை கண்ணபிரான் சாந்தீபனி என்ற வாத்தியாரிடம் வேதம் கற்றுக்கொண்டது போலத்தான்! கண்ணனுக்குத் தெரியாததையா அந்தப் பிராமணர் கற்றுக்கொடுத்துவிட்டார்?' என்று சொன்னார். பிறகு திருமாலையாண்டானோடு பெரிய நம்பியையும் கூட்டிக்கொண்டு இராமாநுஜர் மடத்திற்குப் போனார்.

மூவரையும் அடிவிழுந்து வணங்கினார் இராமாநுஜர். 'நீர் தொடர்ந்து திருவாய்மொழியைத் திருமாலையாண்டானிடம் கற்கவேண்டும்' என்று இரு நம்பிகளும் இராமாநுஜரிடம் ஒரு முகமாய்ச் சொன்னார்கள். 'விட்ட இடத்திலிருந்து தொடர்ச்சியாகக் கற்பிக்க வேண்டும்' என்று ஆண்டானையும் வேண்டிக் கொண்டார்கள். தாம் காணும் பொருள்-விசேஷங்களைச் சொல்வதற்குக் குருவைப்போல் சிடருக்கும் உரிமை உண்டு என்று கூறினார்கள்.

மறுபடியும் திருவாய்மொழிப் பாடம் நடைபெறலாயிற்று. மறுபடியும் இராமாநுஜர் தாம் கண்ட பொருள்-விசேஷங்களைத் தாராளமாய்க் கூறிவந்தார். ஒரு பாசுரத்திற்கு ஆண்டான் கூறிய பொருளைக் கேட்டதும், 'ஆளவந்தார் இப்படி அருளிச் செய்திருக்க மாட்டாரே!' என்றும் துணிந்துரைத்தார்.

இப்போது சீடர் கூறுவதுதான் பொருத்தமானது, ஆளவந்தார் கருத்தைத் தழுவியது' என்பதைச் சற்று ஆலோசித்துப் பார்த்தபின் திருமாலையாண்டானும் ஒப்புக்கொண்டார்.

எனினும் திருமாலையாண்டானுக்கு இராமாநுஜரிடம் ஒரு கேள்வி கேட்டுவிட வேண்டும் என்று தோன்றியது. 'இளையாழ்வாரே, நீர் ஆளவந்தாரைக் கண்ணால் கண்டதில்லையே; "இப்படிச் சொல்வார்; அப்படிச் சொல்ல மாட்டார்" என்று எப்படித்தான் துணிந்து பேசுகிறீரோ' என்று ஆண்டான் கேட்டு விட்டார். இராமாநுஜர் அமைதியாக, 'அடியேன் ஆளவந்தாருக்கு ஏகலைவன் அன்றோ' என்று பதிலளித்தார்.

உடனே ஆண்டான் எழுந்தார். இராமாநுஜரைத் தண்டனிட்டார்.

**ஏற்ற கலங்கள்**
**எதிர்பொங்கி மீதளிப்ப**
**மாற்றாதே பால்சொரியும்**
**வள்ளல் – பெரும் பசுக்கள்**

என்று ஆண்டாள் பாடியிருக்கிறாள் அல்லவா? இதைச் சொல்லிவிட்டு ஆண்டான், 'திருவாய்மொழி என்ற பாலுக்கு ஏற்ற நீரே! எப்படி எதிர் பொங்குகிறது உமது ஞானம்!' என்றார். 'எல்லாம் ஆளவந்தார் அருள்தான்!' என்றார் இராமாநுஜர்.

மேலும் தொடர்ந்து நடைபெற்றது திருவாய்மொழிப் பாடம். ஆனால் யார் கற்பித்தார்? யார் கற்றுக்கொண்டார்? இராமாநுஜர் கற்கவும் செய்தார்; கற்கவும் துணிந்தார். 'ஆளவந்தாரிடம் நாமோ, மற்றவர்களோ, கேட்டிருக்கமுடியாத பொருள்களைக்கூட இங்கே கேட்டோமே; என்ன பாக்கியம் பெற்றோம்!' என்ற மனநிலையுடன் குரு திருவாய்மொழிப் பாடத்தைப் பூர்த்தி செய்தார்.

**குருபக்தியின் இரகசியம்**

திருவாய்மொழிப்பாடம் குருவுக்கும் சீடருக்கும் ஒருங்கே பயன்தரத்தக்க நிலையில் முற்றுப்பெற்றபின், பெரியநம்பி இராமாநுஜரை நோக்கி 'ஆளவந்தாரின் அருமைப் புதல்வரான திருவரங்கப்பெருமாளரையரிடம் வேறொரு பொருள்-விசேஷம் உண்டு; அதை அவரிடம் தெரிந்துகொள்ளும்' என்று சொன்னார். இந்த அரையர்தாம் காஞ்சிக்குச் சென்று இசைபாடி இராமாநுஜரை திருவரங்கத்துக்குக் கொணர்ந்தவர். இவரை 'ஆளவந்தாழ்வார்' என்றும் கூறுவதுண்டு.

குருவிடம் கல்வி கற்பவர்கள் அவர் உகந்த தொண்டுகள் புரிந்து அன்பிற்கு உரியவர்கள் ஆகவேண்டும் என்பது மரபு.

தொண்டில் சிறிதென்றும் பெரிதென்றும் இல்லை. இராமாநுஜர் அரையரின் அபிமானத்திற்குத் தாம் உரிமை பெறவேண்டும் என்று அவர் உகந்த சிறு பணிகளையும் ஆறு மாத காலம் செய்து வந்தார். பாலமுது காய்ச்சிக் கொடுப்பார்; அரையர் நீராடும் போது உடன் இருந்து உதவுவார். 'சென்றால் குடையாம்; இருந்தால் சிங்காதனமாம்......' என்றெல்லாம் ஆதிசேஷன் பெருமாளுக்குப் பணிபுரிவதுபோல் இராமாநுஜர் தமக்குப் பணிபுரிவது குறித்து அதிசயித்தார் அரையர்.

அற்பப் பணிகளையும் அதிஜாக்கிரதையாகவும் பரிவுடனும் பணிவுடனும் பக்தியுடனும் செய்துவந்த இராமாநுஜரை நோக்கித் திருவரங்கப் பெருமாளரையர், 'நீர் நம் உள்ளத்தை இப்படிக் கொள்ளை கொள்ளுகிறீரே! பெரியநம்பியின் விருப்பத்திற்கு இணங்க, நான் இப்போதே ஒரு மறைபொருளை உமக்கு வெளியிடுவேன்' என்றார். உடனே குருபக்தியின் உயிர்நிலைக் கொள்கையை ஆளவந்தாரின் கருத்திற்கிசைந்தவாறே இராமாநுஜருக்குக் கற்பித்தார்.

'அறியாதன அறிவித்துக் காட்டாதன காட்டிப் பேசாதன பேசிச் சீடனை ஆட்கொள்பவரே குரு அல்லது ஆசாரியன்' என்றார் அரையர். இத்தகைய குருவைச் சீடன் சாதாரண மனிதருள் ஒருவராக மதிப்பது தவறு என்றார். தெய்வமே உருவாகி வந்து உபதேசிப்பதாக நம்பும் சீடன் நலன் பெறுவது திண்ணம் என்றார். இப்படிக் குருபக்தியை வற்புறுத்தியவர், குருவின் இலக்கணம் அமையப் பெறாதவர் குரு அல்லர் என்பதையும் குறிப்பாக உணர்த்தினார். 'போலிக் குரு வழிகாட்ட முடியாது; குருடனுக்குக் குருடன் வழிகாட்ட முடியுமா?' என்றார்.

இப்படியெல்லாம் ஆசாரிய பக்தியின் உட்பொருளை—திருவரங்கப் பெருமாளரையர் அளித்துதவிய பொருளை–விசேஷமாக இராமாநுஜர் பெற்றுக் கொண்டபோதிலும், அரையர் புதுமையாக ஏதோ ஒன்றை இராமாநுஜருக்குத் தூக்கிக் கொடுத்து விட்டார் என்பதற்கில்லை. அரையரிடம் பாடம் கற்றுக்கொண்ட இந்த விஷயமும், கண்ணன் சாந்தீபனியிடம் கற்றுக் கொண்ட கதை தான்.

இப்படிப் பலரிடத்திலும் இராமாநுஜர் உபதேசம் பெறுவதற்குக் காரணம் என்ன? பெரியநம்பியிடம் பெற்றுக்கொண்ட உபதேசம் இந்த மேதைக்குப் போதாதா?-இக்கேள்விகளுக்கு விடை காண்பதற்கு, ஆளவந்தாரின் திருவுள்ளம் இராமாநுஜர்

விஷயமாக எப்படி இருந்தது என்பதை நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்; தமது ஞானவெள்ளம் பல கால்களாக் ஓடி இராமாநுஜர் உள்ளத்தில் பாய்ந்து பெருக வேண்டும் என்பதை நினைத்துப் பார்த்ததுமே, இராமாநுஜர் பலரிடத்திலும் உபதேசம் பெற்ற வரலாறுகளுக்கு ஒரு திறவுகோல் நமக்குக் கிடைத்து விடுகிறது.

ஓர் அரசன் தன் அருமைப் புதல்வன் வயது வந்ததும் பெற்றுக்கொள்ளட்டும் என்று தன்னுடைய பெருநிதிகளைப் பல அமைச்சர்களிடத்திலும் ஒப்படைப்பதுபோலத்தான், ஆளவந் தாரும் தமது ஞானப்பெருநிதிகளைப் பெரியநம்பி, திருக் கோஷ்டியூர் நம்பி, திருமாலையாண்டான், திருவரங்கப் பெரு மாளரையர் ஆகியோரிடம் வைத்துப்போனார் என்று குரு பரம் பரை நூல்கள் தெரிவிக்கின்றன.

பெரியநம்பி பெரியவர் என்பதில் ஐயமில்லை; திருக்கோஷ்டியூர் நம்பி முதலானவர்களும் பெரியவர்களே. எனினும், அவர்களில் ஒருவருக்கும் தம்முடைய அர்த்த விசேஷங்களையெல்லாம் ஒருங்கே பெற்று வைத்துக்கொள்ளும் தகுதி இருந்ததாக ஆளவந்தார் கருதவில்லை. எல்லாருக்கும் ஒவ்வொன்று எளிது என்ற சாதாரண விதிதான் அவர்களுக் கெல்லாம் பொருந்தும் என்று நம்பினார் ஆளவந்தார். இந்த விதிக்கு இராமாநுஜரைப்போன்ற மகா மேதாவிகளே விலக்காவர் என்பதும் ஆளவந்தார் அறிந்ததே.

ஆளவந்தாரின் திருவுள்ளத்தை ஓரளவு தெளிவாகத் தெரிந்துகொண்டே பல ஆசிரியர்களும் இராமாநுஜருக்கு உபதேசம் செய்வதைக் காண்கிறோம். இராமாநுஜரும், ஆளவந்தாரின் திருவடிகளில் அமர்ந்து தமக்கு வேண்டிய உபதேசங்களையெல்லாம் பெற்றுக்கொள்ள இயலவில்லையே என்று அந்த நஷ்டத்திற்கு ஈடாகவே பலரிடத்திலும் கற்றுக்கொள்ளலானார்.

இராமாநுஜருக்குத் தக்க குரு ஆளவந்தார் ஒருவரே. அந்த ஞான அரசரின் பல அமைச்சர்களாகவே பெரியநம்பி முதலான வர்கள் அமைந்து ஆளவந்தாரின் பெருநிதிகளைச் சேரவேண்டிய இடத்தில் சேர்ப்பித்தார்கள். அவர்களை இராமாநுஜரின் குருமார் என்று கூறுவது உபசாரம்; அவர்கள் உபதேசிக்கும் போதே தாங்களும் கற்றுக்கொண்டார்கள். குருவும் சீடருடன் கற்கிறார், சீடரிடத்தும் கற்கிறார்-இது இராமாநுஜ தரிசனத்தின் ஒரு சிறப்பியல்பு எனலாம். இத்தகைய குரு-சிஷ்யக் கிரமத்தில்

குருவாக இருந்தால் என்ன? சீடராக இருந்தால் என்ன?- இந்தப் பொற்சங்கிலித்தொடரில் இடம் பெறுவதுதான் முக்கியம்.

**சீதன வெள்ளாட்டி**

இப்படியெல்லாம் கற்றும் கற்பித்தும் வந்த இராமாநுஜர், 'ஆளவந்தாரின் உள்ளத்தை அப்படியே அறிந்துகொண்டோம், இனிச் செய்ய வேண்டுவது அவர் நோக்கத்தை நிறைவேற்று வதே' எனத் துணிந்தார். 'இனிமேலும் கற்போம்; கற்பிப் போம்; எனினும் மக்களை ஆட்கொண்டு நெறிப்படுத்துவதையே பெருநோக்காகக் கொள்வோம்' என்று சங்கற்பம் செய்து கொண்டார். இதற்காகத் தம்மைச் சித்தமாக்கிக் கொண்டதுடன் சீடர்களையும் பல வழிகளில் சித்தமாக்க முயன்றார்.

இத்தகைய முயற்சிகளுக்கு இப்போது ஓர் உதாரணம் காண்போம். பெரியநம்பிக்கு அத்துழாய் அம்மை என்று ஒரு புதல்வி உண்டு. அவள் புக்ககத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் போது ஒருநாள் தான் நீராடப் போகையில் மாமியாரைத் துணை யாக வரவேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். அதற்கு அவள் கோபித்துக் கொண்டு, 'உனக்கு யாராவது சீதன வெள் ளாட்டி வந்திருந்தால் கூட்டிக் கொண்டு போகலாமே!' என்று கடிந்து பேசி ஏளனச் சிரிப்புச் சிரித்தாள்.

அந்தக் காலத்தில் பெண்ணுக்குக் கொடுக்கும் சீதனப் பொருள்களுடன் செல்வர்கள் வேலைக்காரிகளையும் அனுப்பி வைப்பதுண்டு. பெரியநம்பி ஞானச் செல்வரே ஒழியப் பொருட் செல்வரல்லர். அந்த ஏழைமையை இடித்துக் கூறிப் பரிகசித்தாள் மாமியார். தன் தந்தை மீது பேரன்பும் பக்தியும் கொண்டிருந்த அத்துழாயால் மாமியாரின் சுடுசொல்லைப் பொறுக்க முடியவில்லை.

அத்துழாய் தந்தையிடம் வந்து, 'அப்பா, மாமி என்னைப் படுத்துகிற பாடுகுறித்து நான் கவலைப்படவில்லை. உம்மை ஏழை என்றல்லவா இகழத் துணிந்து விட்டாள்?' என்று சொல்லி, நடந்ததைத் தெரிவித்தாள். அதற்குப் பெரியநம்பி, 'குழந்தாய்! உனக்குச் சீதன வெள்ளாட்டி இல்லை என்றால், அந்தக் குறையை நாம் எப்படிப் பூர்த்தி செய்ய முடியும்? அதற்கு நான் வகை அறி யேன்; உங்கள் ஜீயரிடத்தில் போய்ச் சொல்லிக்கொள்!' என்று பதில் சொன்னார். 'உங்கள் ஜீயர்' என்று பெரிய நம்பி குறிப்பிட் டது தம் அருமைச் சீடரும் அத்துழாயின் மதிப்பிற்கும் பக்திக்கும் உரியவருமான இராமாநுஜரைத்தான்.

அத்துழாய் மடத்திற்கு விரைந்துவந்து தன் தந்தை தன்னை அனுப்பியதாகத் தெரிவித்தாள்.

‘ நீ எப்போது அம்மா உன் புக்ககத்திலிருந்து வந்தாய் ?’

‘ இன்றுதான் வந்தேன், இராமாநுஜ முனியே !’

‘ உன் முகத்தில் வழக்கமான அமைதியைக் காண முடிய வில்லையே; திருமகள் குதிகொள்ளும் முகத்திலே கவலையின் சாயையை அல்லவா காண்கிறேன்? என்ன நேர்ந்தது?’

நடந்ததனைத்தையும் சொன்னாள் அத்துழாய். ‘சீதன வெள்ளாட்டியைக் குறிப்பிட்டுத் தன் தந்தையின் வறுமையைச் சுட்டிக்காட்டினாள் மாமி’ என்று சொல்லும்போதே கண்ணீர் வந்துவிட்டது அத்துழாய்க்கு. ‘ஜீயரே, நீரே என் குடும்பத்திற்கு நெருங்கிய நண்பர், உம்முடைய ஆலோசனைக்காகத்தான் தந்தை அனுப்ப நான் வந்திருக்கிறேன்’ என்றாள்.

‘கவலைப்படாதே அம்மா, உனக்காக நான் அனுப்பி வைக்கிறேன் ஒரு வேலைக்காரியை!’ என்றார் இராமாநுஜர். இப்படிச் சொல்லிவிட்டு இராமாநுஜர் தமக்கு அருகில் நின்ற மருகரான முதலியாண்டானைக் கைப்பிடியாகப் பிடித்து, ‘அத்துழாய் அம்மை சொன்னதைக் கேட்டுக்கொண்டிருந்தீரே; அவள் குறை தீர உடன் சென்று பணிபுரிய வேண்டும்’ என்றார்.

முதலியாண்டான், ‘நியமனப்படியே’ என்று சொல்லிவிட்டு அத்துழாயின் புக்ககத்திற்குப் போய், ஒரு பணிப்பெண் செய்யக் கூடிய வேலைகளையெல்லாம் செய்யத் தொடங்கிவிட்டார். ‘ஏனையா பரமபாகவதரான நீர் வந்து இந்த வேலைகளைச் செய்து கொண்டிருக்கிறீர்?’ என்று கேட்டவர்களுக்கு, இவர் தம்மை அத்துழாய் அம்மையின் சீதன வெள்ளாட்டி என்று அறிமுகப் படுத்திக்கொண்டார்.

அத்துழாயின் மாமனார், மாமியார் முதலியவர்கள் திகைத்துத் திகிலடைந்தார்கள். ‘இங்கே வந்து இந்த வேலைகளைச் செய் வதற்குக் காரணம் என்ன, சுவாமி?’ என்று அவர்கள் கேட்க, ‘என்னை அனுப்பிய இராமாநுஜ முனியைக் கேட்டு அறிந்து கொள்ளுங்கள்’ என்று பதில் சொன்னார் முதலியாண்டான்; உடனே ‘இது என்ன விபரீதம் ? இந்தப் பாவத்தை நாங்கள் எப்படித் தொலைப்பது?’ என்று கூச்சலிட்டாள் அத்துழாயின் மாமி. அத்துழாயின் மாமனார் முதலானவர்களோ பெரியநம்பி யிடம் ஓடிப்போய், ‘நம்பிகளே! முதலியாண்டானை ஏவி எங்களைக் கெடுக்கவா திட்டமிட்டீர்?’ என்று கேட்டார்கள். அவருக்கோ இது குறித்து ஒன்றும் தெரியாது. ‘நாம் அறியோம். இராமாநுஜரைக் கேட்டுப் பாருங்கள்’ என்று சொல்லிவிட்டார்.

அவர்கள் மடத்திற்கு விரைந்து சென்ருர்கள். 'எங்களை இப்படியும் சோதிக்கலாமா?' என்று முறையிட்டுக் கொண்டார்கள். இராமாநுஜரோ அமைதியாக, 'நம் தங்கைக்குச் சீதன வெள்ளாட்டி ஒருத்தி இல்லையே என்று அந்தக் குறையை நிறை செய்யத்தான் முதலியாண்டானை அனுப்பித் தந்தோம்' என்ருர். பிறகு அவர்கள் படும்பாட்டைப் பார்த்து இரங்கி முதலியாண்டானைத் திருப்பி அழைத்துக்கொண்டார்.

திரும்பிவந்த முதலியாண்டான், 'இது அடியேனுக்கு மிகவும் அவசியமான ஒரு கல்விப் பயிற்சியாகிவிட்டது; ஒரு நல்ல அனுபவம் கிடைத்தது; இனி நம் மடத்தில் அதே பணிகளைச் செய்யவும் சித்தமாயிருக்கிறேன்' என்ருர், இராமாநுஜர். சீடர்களுக்கு இதுபோன்ற பாடங்களையும் கற்பித்தார்.

முதலியாண்டானை 'வைஷ்ணவதாசர்'என்று குறிப்பிடுவதும் உண்டு. இவர் கல்விமாளுகவும் செல்வராகவும் இராமாநுஜரின் மருகராகவும் இருந்தும் வைஷ்ணவர்களுக்கு எத்தகைய பணியையும் செய்வதற்குச் சித்தமாக இருந்தார். வேலைக்காரர் தொழிலையும் இவர் இழிவாகக் கருதவில்லை; சமையல்-தொழிலும் தாழ்ந்தது என்று நினைப்பதில்லை. அத்துழாயின் புக்ககத்தில், இவரை அங்குள்ளவர்கள் தெரிந்துகொள்வதற்கு முன் ஒரு நாள் சமையல் தொழிலிலும் ஈடுபட்டாரென ஒரு கதை வழங்குகிறது.

அப்போது இவரைப் பார்த்திருந்த வைஷ்ணவர் ஒருவர் ஒரு கதாகாலட்சேபம் நடத்திக்கொண்டிருந்தார். மக்கள் திரளாகக் கூடி அதைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். முதலியாண்டானும் அக் கூட்டத்தில் இருந்தார். காலட்சேபம் செய்தவர் இலக்கிய இலக்கணங்களை அறியாதவரானதால் ஒரு சுலோகத்திற்குப் பிழையாகப் பொருள் கூறிஞர். உடனே முதலியாண்டான் அந்தப் பிழையைத் திருத்திஞர். அதனுல் காலட்சேபம் செய்த வைஷ்ணவருக்குக் கோபம் வந்து விட்டது. 'மடையன்தானே நீ! உனக்கு மடைப்பள்ளி வேலை தவிர வேறு என்ன தெரியும்?' என்றுசுடச்சுடக் கேட்டுவிட்டார். ஆனுல், காலட்சேபம் கேட்டுக்கொண்டிருந்தவர்களில் பலரும் முதலியாண்டான் சொன்ன பொருளையே ஒப்புக்கொண்டார்கள். அந்தக் காலட்சேபத்தை இவரே தொடர்ந்து முடிக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்கள். முடிவில், கோபம்கொண்ட வைஷ்ணவரும் சாந்தமடைந்து, முதலியாண்டானிடம் மன்னிப்பு வேண்டிஞராம்.

இராமாநுஜர் கற்பித்த கல்விதான் இத்தகைய சீடர்களை உருவாக்கிவிட்டது.

# 14

# கையிலங்கு நெல்லிக்கனி

இராமாநுஜருக்கு ஆளவந்தார்மீது அளவுகடந்த பக்தி உண்டு என்பதை நாம் அறிவோம். இப்படி இவரது பக்தி பெருகியதற்குத் திருக்கோஷ்டியூர்நம்பி, பெரியநம்பி முதலான இவரது ஆசிரியன்மாரின் குருபக்தியும் காரணமாக உதவியது என்று கருதுவது பொருத்தமே. இதற்கு ஓர் உதாரணமாக, இவர் சரமசுலோகப் பொருள்-விசேடங்களைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று திருக்கோஷ்டியூருக்குப் போயிருந்தபோது அங்கே நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைச் சுட்டிக்காட்டலாம்.

**திருக்கோஷ்டியூர் நம்பியின் யாமுநபக்தி**

'இராமாநுஜர் நம்பிகளின் வீட்டு மேல்தளத்தில் ஏறிப் போய்த் தியான சமாதியில் இருந்த நம்பிகளைக் கண்ணுற்றார்

அல்லவா? பகவானைத் தியானித்தோ, ஒரு மந்திரப்பொருளைத் தியானித்தோ நம்பிகள் அத்தகைய சமாதிநிலையில் இருந்தார் என்றே இவர் முதல் முதல் கருதியிருக்கவேண்டும். ஆனால் உண்மை அதுவன்று என்பதை, உபதேசத்திற்குப்பின் நம்பி களே சொல்லத் தெரிந்து கொண்டார் இவர்.

உபதேசம் பெற்றபின் மறுநாள் இராமாநுஜர் நம்பிகளைத் தண்டனிட்டு, 'தேவரீர் நேற்றுத் தியானசமாதியில் இருந்தீரே, அந்தத் தியானத்தின் லட்சியம் எது? அல்லது அந்த மந்திரம் தான் என்ன?' என்று கேட்டார். இதற்கு நம்பிகள் இளநகை அரும்பியவராய், 'அப்போது என் தியானம் கீதாசாரியனையோ கீதையையோ அதன் இறுதிச் சுலோகமான சரமசுலோகத் தையோ குறித்துச் செல்லவில்லை' என்றார். பிறகு தமது அந்தத் தியானநிலையை உள்ளபடியே விளக்கினார்.

'இளையாழ்வாரே, நான் தம் குருமூர்த்தியான ஆளவந் தாரைத்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆளவந்தார் திருவரங்கத்தில் வடதிருக் காவேரியில் நீராடுவது நினைவிற்கு வந்தது. குனிந்து கவிழ்ந்து நீராடுவார். அப்போது சிவந்து அழகியதாய் ஒரு பொற்கடாரம் கவிழ்ந்தாற்போலே தோன்றும் அந்தப் பின்னழகு, அம்முதுகழகு-அந்த அழகைத்தான் தியா னித்துக் கொண்டிருந்தேன்-அவருடைய முக அழகைக்கூட அப்போது தியானிக்கவில்லை. தியானத்திற்கு ம்ந்திரமாக அவர் பெயரையே உச்சரித்துக்கொண்டிருந்தேன்' என்றார் திருக் கோஷ்டியூர்நம்பி.

இராமாநுஜர் ஆச்சரியமடைந்து, 'இதுவன்றோ குருபக்தி? இதைப் இப்பெரியார் உள்ளத்தில் தோற்றுவித்திருக்கும் அந்தப் பெரியாரின் பெருமையைத்தான் என்னென்பது!' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார். ஆளவந்தாரைத் தாம் நேரில் கண்டு அனுபவியாத குறையை ஒருவாறு நிறை செய்து கொண் டார், இராமாநுஜர்—திருக்கோஷ்டியூர்நம்பி முதலியவர்களின் தொடர்புகொண்டு. அதனால் யாமுநபக்தி இவருக்கும் கையிலங்கு நெல்லிக்கனி போலாயிற்று.

இராமாநுஜரைத் திருப்பாவை ஜீயர் என்று கூறுவதும் உண்டு. இவர் மடாதிபதியாக இருந்தும் தாம் மேற்கொண்டி ருந்த துறவுநெறிக்கு இணங்க, பிட்சை எடுத்துப் பசி தீர்த்துக் கொள்வார்; பிட்சை எடுக்கப் போகும்போது தாம் உகந்த திருப்பாவைப் பாசுரங்களை ஓதிக்கொண்டே போவார். ஒரு நாள் 'உந்து மதகளிற்றன்' என்று தொடங்கும் திருப்பாவைப்

பாட்டை ஓதியவண்ணம் பெரியநம்பியின் தலைவாசலை நெருங்கி வந்தார்.

அந்த வாசலுக்கு வருவதற்குமுன் பாசுரத்தில் பாதிக்குமேல் ஓதியாகிவிட்டது.

**பந்தார் விரலி ! உன்**
**மைத்துனன் பேர்பாடச்**
**செந்தா மரைக்கையால்**
**சீரார் வளை**
**வந்து திறவாய்**

என்ற பாசுரப்பகுதியை இவர் சொல்லிக்கொண்டிருந்தபோது, வாசலுக்கு நேரே வந்து நின்றார்.

உள்ளே பந்தும் கையுமாக விளையாடிக் கொண்டிருந்தாள், மணமாகாத அத்துழாய். பாசுரம் காதில் விழுந்ததும் பளிச் சென்று கதவைத் திறந்துவிட்டாள்,-'யாரோ பாடிக்கொண்டு பிச்சைக்கு வருகிறாரே' என்று. 'பந்தார் விரலி' என்று பாசுரம் சொல்லும் அதே கோலத்தோடு மணிக்கதவம் தாள்திறந்த பெண்மணி இராமாநுஜரின் திருக்கண்களுக்கு அந்தப் பாசுரத் தில் வரும் நப்பின்னைப் பிராட்டியாகவே தோன்றினாள்.

மலரடி பெயர்த்து வந்து, மெல் விரல்கள் சிவப்பெய்த, தாள் திறக்கின்றாள் நப்பின்னை!—என்ற அந்த ஆனந்தக் காட்சிக்கு இராமாநுஜர் உள்ளம் திறைகொடுத்து, அந்த வாசலில் தன் பொன்னொத்த மேனி புழுதிபடியத் தண்டனிட்டார். அவ்வளவில் அவள் பரபரப்புடன் ஓடி நம்பிகள் முன்னே சென்று கையைப் பிசைந்துகொண்டு, 'இதென்ன விபரீதம், அப்பா ? பிச்சைக்கு வந்த அந்தச் சந்நியாசி 'காவி'யோடு முக்கோலும் பிடித்திருக் கிறாரே !' என்றாள். நம்பி பதறாமல் கேட்டுக்கொண்டிருந்தார்.

அத்துழாய் தொடர்ந்து பேசினாள். 'வந்து திறவாய் என்று அழைத்து நான் திறந்ததும் ஏறப் பார்த்து மோகித்துத் தலைவாசலில் விழுந்துகிடக்கிறாரே ! இராவண சந்நியாசிகள் இன்றும் இருக்கிறார்களா, அப்பா?' என்றெல்லாம் அத்துழாய் சொன்னபோது, பெரியநம்பி பந்தும் கையுமாக நின்ற இவள் கோலத்தைப் பார்த்தார். பளிச்சென்று விஷயம் புரிந்துவிட்டது. 'இப்படியும் திருப்பாவையை அனுபவிக்கும் பேறுபெற்ற அந்தச் சந்நியாசி வேறு யாராக இருக்கமுடியும்? திருப்பாவை ஜீயரான இராமாநுஜ முனிதான் அவர்' என்று ஊகித்துக்கொண்டார்.

அத்துழாயை நோக்கி, 'குழந்தாய் "உந்து மதகளிற்றன்" என்று தொடங்கும் அந்தப் பாசுரத்தை நீ அறியாயோ?' என்றார்.

பிறகு வாசலுக்கு வந்து இராமாநுஜரைக் கண்டு, 'வாரும் திருப்பாவை ஜீயரே, நானும் ஓதிஓதி உணர்ந்திருக்கிறேன், இந்தப் பாசுரத்தை; ஆனால் உம்மைப்போல் அனுபவித்ததே இல்லை' என்று இவர் பக்தியைப் பெரிதும் கொண்டாடினார்.

அத்துழாய் நல்ல பெண்; அறிவுள்ளவள். இராமாநுஜரை அறிந்துகொள்ளாததற்கு அனுபவக் குறைவே காரணம். இப்போது தம் தந்தை வாயார, நெஞ்சாரக் கொண்டாடியதை அறிந்து, இராமாநுஜர் காலில் விழுந்து, 'அண்ணா, மன்னித் தருள வேணும், உம்முடைய தங்கையை!' என்று வேண்டிக் கொண்டாள். பிறகுதான் இராமாநுஜர் நடந்ததை ஊகித்துக் கொண்டார்.

இந்தத் தங்கைக்கு இராமாநுஜரின் ஆசியும் அனுதாபமும் சிறப்பாகக் கிடைத்தன. அவளுக்கும் தந்தைக்குஅடுத்தபடியான பக்தி இந்தத் தமையனார் மீது. அதனால்தான் அவளுக்காக இராமாநுஜர் முதலியாண்டானைச் சீதன வெள்ளாட்டியாக அனுப்பத் துணிந்தார்.

புக்ககத்தில் அத்துழாய்க்கு அன்போ அனுதாபமோ இதய தாபத்தைத் தீர்க்குமளவிற்குக் கிடைத்ததாகத் தெரியவில்லை. குரு பரம்பரைக் கதைகளில், இவளைப் பெரும்பாலும் தந்தையான பெரிய நம்பியுடன்தான் சந்திக்கிறோம். தந்தையை இவள் தந்தையாக மட்டும் மதிக்கவில்லை; குருவாகவும் போற்றினாள்; பரம பாகவதராகவும் மதித்துப் பக்தி செலுத்தினாள்.

பெரியநம்பியுடன், ஆளவந்தாருக்குச் சீடர்களாக இருந்த பலருள், ஹரிஜன வகுப்பினரான மாறனேரிநம்பியும் ஒருவர். இவர் மாறனேரி என்ற ஊரைச் சேர்ந்தவர். கோஷ்டியூரைச் சேர்ந்த பெரியவரைக் கோஷ்டியூர்நம்பி என்று கூறுவதுபோல் மாறனேரிநம்பி என்றுஇவரைக் குறிப்பிட்டார்கள்.

இத்திருப்பெயர்களில் இயற்பெயர்கள் மறைந்துபோய் விடு கின்றன; புனை பெயர்கள் உண்மைப் பெயர்களாகி விடுகின் றன. அதனால் என்ன? 'பெயரில் என்ன இருக்கிறது? ரோஜா என்று நாம் அழைக்கும் பூவை வேறு எப்பெயரால் குறிப்பிட்டா லும் அதன் இனிமையான மணம் குன்றிப் போகுமா?' என்று ஆங்கில நாடகக் கவிச் சக்கரவர்த்தியான ஷேக்ஸ்பியர் கூறி யிருப்பது கூர்ந்து நோக்கத் தக்கது.

மாறனேரிநம்பியை 'மாறனேர்நம்பி' என்றும் குறிப்பிடு வது உண்டு. 'மாறன் என்ற சடகோபருக்கு நிகரானவர்'

என்று ஆளவந்தார் இவரது வைராக்கிய பக்தியைக் கொண்டாடினுர் என்பர். இவரிடம் பெரியநம்பிக்கு விசேஷ அபிமானம் உண்டு; அத்துழாயும் இந்தப் பாகவதரிடத்தில் அன்பு கொண்டிருந்தாள். இவர் நோயுற்று வருந்தும்போது பெரியநம்பி இவருக்குப் பணி செய்தார் என்றும், தம் வீட்டிலிருந்து உணவு கொண்டு வந்து அமுது செய்வித்தார் என்றும் குரு பரம்பரைகளில் ஐதிக வரலாறு உண்டு.

ஒரு நாள் மாறனேரிநம்பிக்குப் பெரியநம்பி உணவு கொண்டு போகையில் இராக்காலமாக இருந்தபடியால் இராமாநுஜர் நம்பிக்குத் தெரியாமல் திருமேனிக் காவலாய்க் கூடவே தொடர்ந்தார். பெரியநம்பி, மாறனேரிநம்பி வசித்து வந்த நந்தவனத்திற்குப் போனுர். இராஜரணமாகிய நோயுடன் இருந்த மாறனேரிநம்பியைப் பெரியநம்பி நீராடச் செய்து இலையில் உணவு பரிமாறினுர். பெரியநம்பியைத் தொடர்ந்து வந்த இராமாநுஜர் பெரியநம்பிக்கும் மாறனேர்நம்பிக்கும் தெரியாமலே ஓரிடத்திலிருந்து நடப்பதைக் கவனித்தார். 'இதுவன்றே பாகவத கைங்கர்யம்!' என்று அதிசயித்து மெய்ம்மறந்து நின்றுர்.

மாறனேரிநம்பி உணவுகொண்டு பசி தீர்ந்து 'ஆளவந்தார் திருவடிகளே தஞ்சம்' என்று களைப்பாறத் தொடங்கியதும் பெரிய நம்பி அந்தக் குடிசையை விட்டு வெளியே வந்தார். குடிசையில் நடப்பதை இடைவெளி வழியாகக் கவனித்துக் கொண்டிருந்த இராமாநுஜர் விலகி விரைந்தார். அப்போது நல்ல நிலவு; அந்த நிலவில் அதிசுந்தரராய், ஆஜாநுபாகுவாய், கம்பீரப்பொலிவு வாய்ந்த நெடிய, சிவந்த வடிவினராய் இராமாநுஜர் காவி ஆடை ஒளிரச் செல்வதைக் கண்ணுற்றுர் பெரியநம்பி. 'எம்பெருமானுர் அல்லவா? நம் பிரிய சீடரான எதிராஜர் அல்லவா? மகாநுபாவரான இராமநுஜமுனி இங்கே எப்படி வந்து சேர்ந்தார்?' என்று அதிசயித்தார்.

மாறனேரிநம்பி காலமானதும் பெரியநம்பி உத்தம பாகவதர்களுக்குச் செய்யப்படும் முறையில் பிரமமேத சம்ஸ்காரம் செய்தார். இவர் தம் இல்லத்திற்குத் திரும்பிவந்ததும் அத்துழாய் 'இன்றே என் தந்தையை உள்ளபடி அறிந்து கொண்டேன்' என்று குதூகலமடைந்தாளாம். இராமாநுஜர் கூட அந்தநாளில் பெரியநம்பியின் மனப்பான்மையை அத்துழாய்அளவிற்கு உணர்ந்துகொண்டிருக்கவில்லை என்றும்,

பெரியநம்பியைச் சந்தித்தே தம் ஐயப்பாடுகளைப் போக்கிக் கொண்டார் என்றும் குருபரம்பரை ஐதிகம் ஒன்று தெரிவிக்கிறது.

இராமானுஜர் பெரியநம்பியைத் தண்டனிட்டு, 'மாறனேரி நம்பிக்குத் தாங்கள் பிரமமேத சம்ஸ்காரம் செய்தது குறித்துத் திருவரங்கத்தில் பலர் உள்ளங்களிலும் குழப்பம் ஏற்பட்டிருப்ப தாய்த் தெரிகிறது. ஒரு வழியாய் வேலியிட்டு வைத்திருப்பதைத் தாங்கள் ஒரு வழியால் பிரித்துப் போடுவதுபோல் தோன்று கிறதே என்று பேசிக்கொள்ளுகிறார்கள்' என்று விண்ணப்பம் செய்துகொண்டார்.

அதற்குப் பெரியநம்பி சொன்னார்: 'வாரீர் இராமானுஜ முனியே! இராமபிரான் ஜடாயு என்ற கழுகு–அரசைப் பெரியப் பாவாகக்கொண்டு, அந்திமக்கிரியை செய்யவில்லையா? இராமபிரானைக் காட்டிலும் நான் பெரியவனோ? ஜடாயுவைக் காட்டிலும் மாறனேரிநம்பி தாழ்ந்தவரோ? ஒரு பணிப் பெண்ணின் புதல்வரான விதுரருக்குத் தருமபுத்திரர் அந்திமக் கிரியை செய்யவில்லையா? தருமரைக் காட்டிலும் நான் பெரிய வனோ? விதுரரைக்காட்டிலும் மாறனேரி நம்பி தாழ்ந்தவரோ? ஆழ்வார்களின் திருவுள்ளத்தை நீர்அறியாதவரா?'

அது கேட்க இராமானுஜருக்கு இப்போது பெரியநம்பியின் பெரும்பக்தி உள்ளம், உள்ளங்கை நெல்லிக்கனிபோல் இனிது புலனாகிவிட்டது. பாகவதர்கள் விஷயத்தில் குலம் குறித்துச் சிந்திப்பதே பழிப்பாகும், பாவமாகும் என்ற தொண்டரடிப்பொடி யாழ்வாரின் தூய உள்ளமும், இது விஷயமாகத் திருவாய் மொழியில் பிரதிபலிக்கும் நம்மாழ்வாரின் தாயுள்ளமும் கையிலங்கு நெல்லிக்கனியாகிவிட்டன.

ஒரு சமயம் இராமானுஜர் மாதுகரத்திற்கு (பிட்சைக்கு)த் திருவரங்கத் திருவீதி ஒன்றில் சென்றுகொண்டிருந்தார். அப்போது இவர் உள்ளம் முதலாழ்வார் மூவரிலும் முதல் ஆழ்வார் என்று வைஷ்ணவர்கள் குறிப்பிடும் பொய்கையாழ்வார் அருளிய வெண்பா ஒன்றன்பொருள் குறித்துச் சிந்தித்துக் கொண் டிருந்தது. 'தமர் உகந்தது எவ்வுருவம்' என்று தொடங்குகிறது அந்த வெண்பா.

தன்னை அடைந்தவர்களை, ஆண்டவன் 'தமர்' என்று உகக்கிறான் என்பர். இந்த உகப்பு எவ்வளவு தூரம் போகிறது தெரியுமா? தமர் உகந்தது எவ்வுருவமோ, அவ்வுருவமே தான் என்று சொல்லும்படி அவர்களுக்குத் தன்னை வெளியிட்டுக்

கொள்கிருனும். தமர் உகந்தது எப்பெயராயினும் அதுவே தன் திருப்பெயர் ஆகுமாறும் அருள்புரிகின்ருனும். இக் கருத்தைப் பொய்கையாழ்வார்,

**தமர்உகந்தது எவ்வுருவம்**
**அவ்வுருவம் தானே ;**
**தமர்உகந்தது எப்பேர்**
**மற்றுஅப்பேர் !**

என்று வெளியிட்டிருக்கிருர்.

'ஓர் உருவம், ஒரு பெயர்' என்று வரையறுத்துக் கொள்ளாமல் எம்பெருமான் அன்பர்கள் உகக்கும் எந்த உருவத்தையும் பெயரையும் தனக்கு அமைத்துக்கொண்டு ஆட்கொள்கிருன், அருள்புரிகிருன் என்பது மேலே சொன்ன செய்யுளடிகளின் திரண்ட பொருள். கல்லோ, மண்ணே, உலோகமோ எதை உருவமாக்கினுலும் அன்பர்களின் அன்பு அந்த உருவத்திற்கு உயிர்கொடுத்து, அதை ஆண்டவனுருவ மாகவும் செய்துவிடுகிறதாம்.

கடவுள் தன் உருவில் மனிதனைப் படைத்தான் என்கிறது கிறிஸ்தவர்களின் சத்தியவேதம். இதை மறுத்து, மனிதன் தன் உருவில் கடவுளைப் படைத்து விடுகிருன் என்று விஞ்ஞான மனப்பான்மை தெரிவிக்கிறது. இந்த இருவகை மனநிலைகளை யும் சமரசப்படுத்துவதுபோல் அமைந்திருக்கிறது, பொய்கை யாழ்வாரின் அருள்வாக்கு.

இது குறித்துச் சிந்தனை செய்து கொண்டே இராமாநுஜர் வீதிவழியாகப் போய்க் கொண்டிருந்தார். அப்போது தெருப் புழுதியில் சில சிறுபிள்ளைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். ஸ்ரீரங்கத்துப் பிள்ளைகள் அல்லவா? திருக்கோயிலில் தாங்கள் கண்டதையே தங்கள் விளையாட்டிலும் பிரதிபலிக்கச் செய்தார் களாம்-இது சிறுவர் இயற்கைதானே?

ஒரு சிறுவன் மண்ணில் சில கோடுகளை வரைந்தான்; 'இதோ திருக்கோயில்' என்ருன். வேருெரு பிள்ளை, வேறு இரண்டொரு கோடுகளைக் கீறி, 'இதோ பெரிய திருமண்டபம்' என்ருன். அந்த இடத்தை நெருங்கிவந்துகொண்டிருந்த யதிராஜரைப் பார்த்ததும் ஒரு பையன் மேலும் இரண்டொரு கோடு கிழித்து, 'ஜீயரே, இதோ உம்முடைய பெருமாள்!' என்று காட்டினுன்.

இராமாநுஜர் வந்து பார்த்தார். 'அதோ பெருமாளின் திருவாழி, திருச்சங்கு!' என்றும் ஒரு பையன் சுட்டிக் காட்டினான். உடனே இராமாநுஜர்,

**தமர்உகந்தது எவ்வுருவம்**
**அவ்வுருவம் தானே!**

என்று சொல்லிக் கொண்டே, அந்தச் சிறுவரின் கீறல்களை நோக்கித் தண்டனிட்டார்.

பிறகு ஒரு பையன் 'கொட்டாங்குச்சி'யில் (தேங்காய்மூடியாகிய சிரட்டையில்) மண்ணை வாரிவைத்துக்கொண்டு'ஜீயரே!' என்று கூவினான். இராமாநுஜரும் 'நாயிந்தே!' என்று கோயிலில் சொல்வது போல் சொல்லிக்கொண்டே கையை நீட்டித் தம் காவி மேலாடையில் அந்த மண்ணைப் பிரசாதமாக ஏற்றுக்கொண்டார். சிறுவர்களுக்கு ஒரே குதூகலம்; இராமாநுஜருக்கோ, பொய்கையாழ்வாரின் இதயத்தையே பார்த்துவிட்டது போன்ற பரவசம்.

சிறு பிள்ளைகள் விளையாட்டில் ஒரு பேருண்மையை உள்ளங்கை நெல்லிக்கனியெனக் கண்டு கொண்டது இராமாநுஜரின் ஞானக் குழந்தையுள்ளம். இராமாநுஜர் தம் குருமாரிடத்திலும் கற்றுக்கொண்டார்; தம் சீடர்களுக்குக் கற்பிக்கும் போதும் கற்றவண்ணமாக இருந்தார். அது மட்டுமா? ஆளவந்தாரின் குரலையும் கேட்பதுபோல், ஏன், அரங்கநாதரின் குரலையும் உட்செவியில் கேட்பவர்போல் அரும்பெரும் பொருள்களை உணர்ந்து கொண்டார். இத்தகைய பெரியார் சிறுபிள்ளைகளின் விளையாட்டிலும் உண்மை கண்டார் என்றால், இவரது குணசித்திரம் எவ்வளவு அற்புதமாய் உருவாகி வருகிறது என்பதை நாம் ஒருவாறு உணர்ந்து கொள்ளக் கூடுமல்லவா?

மாறனேரிநம்பிக்குப் பெரியநம்பி சரம கைங்கரியம் என்ற அந்திமக் கிரியைகளையும் செய்யத் துணிந்தாரே என்று ஆத்திரப்பட்டனர், திருவரங்கத்தில் இவரைப் புரிந்து கொண்டிராத பலரும். அவர்கள் பெரியநம்பியின் வீட்டுவாசலில் முட்களைப் போட்டு ஒருவரும் அவர் வீட்டுக்குப் போகாமலும் அவரை ஒருவர் வீட்டுக்கும் வரவிடாமலும் விலக்கி வைத்தார்கள். அந்த நிலையில் அரங்கநாதனுக்குத் தேர்விழாக் கொண்டாடினார்கள்.

பெரியநம்பி வசிக்கும் வீதிவழியே வந்தது திருத்தேர். அத்துழாய் அம்மாள் அரங்கநாதனைத் தண்டனிட்டு, 'திரு

ஆணை, நின் ஆணை கண்டாய்!' என்று சொல்லிக் கொண்டே குறுக்கிட்டு இரதத்தை நிறுத்திவிட்டாள். மக்கள் திகைத்து நின்றார்கள். 'இந்தப் பெண்ணின் துணிவைத்தான் பாருங்கள்!' என்று சிலர் ஆச்சரியப்பட்டார்கள். 'இவள் தந்தைக்கு ஊரார் உபத்திரவம் செய்தார்கள் என்றால், அதற்குப் பெருமாள் என்ன செய்வார்?' என்று சில பக்தர்கள் பேசிக் கொண்டார்கள்.

அத்துழாய் அம்மை பெருமாளை நோக்கி, 'நீ மாடு மேய்க்கும் பிள்ளைகளுடன் ஒன்றாய்க் கலந்து உணவு கொண்டாயே! மேலும் 'தாழ்ந்த வகுப்பினர்' என்று ஒதுக்கப்பட்டிருந்த திருப்பாணாழ்வாரை அங்கீகரித்துப் பக்கத்தில் வைத்துக் கொண்டாயே! இப்படியெல்லாம் நடந்துகொண்ட நீ, மாறனேரி நம்பிக்கு அடியாளின் தந்தை செய்த பிரமமேத சம்ஸ்காரத்தை அங்கீகரிக்கவில்லையா? இவ்வூரில் உள்ளவர்கள் எங்களை விலக்கி வைத்துத் தெருவாசலில் முள்ளைப் போட்டிருக்கிறார்களே' என்று முறையிட்டுக் கொண்டாள்.

பிறகு அவள், 'பெரிய நம்பி செய்தது "சரி" என்றோ, அல்லது "சரியல்ல" என்றோ முடிவு கட்டிய பிறகே திருத்தேர் அப்பால் செல்ல வேண்டும்' என்று சொல்லி மறித்துக்கொண்டு நின்றாள். வடம்பிடித்தவர்கள் வடத்தைக் கீழே போட்டுவிட்டார்கள். தேர் நகராமல் மாலைவரை அங்கேயே நின்றுவிட்டது. அப்பால் அர்ச்சகர் ஒருவருக்குப் பெருமாளின் ஆவேசம் வந்துவிட்டதாம். அவர், பெரியநம்பியை விலக்கிவைத்த குழுவினரின் தலைவரை நோக்கி, 'பெரியநம்பியை உமது தோள்மீது தூக்கிக் கொண்டு வரவேணும் என்பது பெருமாளின் ஆணை' என்றார்.

அப்படியே அவரும் முள்ளை ஒதுக்கிக் கொண்டு பெரியநம்பியின் இல்லத்திற்குள் புகுந்து அவரைத் தூக்கித் தோளில் வைத்துக்கொண்டு தேர்த்தட்டில் இறக்கிவிட்டார். உடனே, 'பெருமாள் மாறனேரி நம்பிக்கு நீர் இறுதிக் கைங்கரியம் புரிந்ததற்காக உகந்தருளினார்' என்றார் அர்ச்சகர். பிறகு மாலை முதலான வரிசைகள் நம்பிகளுக்கு வழங்கப்பட்டன. முன்பு போல் நம்பிகள் கோஷ்டியில் இடம் பெற்றார். நிலைக்கு வந்தது தேர்.

மடத்தில் இந்த நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுத் தொண்டரடிப் பொடியாழ்வாரின் 'பழுதிலா' என்று தொடங்கும் பாசுரத்தையும், 'அமர' என்று தொடங்கும் பாசுரத்தையும் இராமாநுஜர் எடுத்துக்காட்டி, அவற்றின் ஸாரமான பொருளையும் தெரிவித்தார். எக்குலத்தவராயினும் பாகவதர்கள் வழிபடத் தக்கவர்கள் என்பது ஆழ்வாரின் திருவுள்ளம் என்றார்.

பாகவதர்களைப் பழிப்பவர்களுக்கு மறுலோகத்தில்தான் தண்டனை என்பதில்லை, மரணத்திற்குப் பின்புதான் தண்டனை என்பதும் இல்லை; இவ்வுலகிலேயே, பழிப்பு நிகழ்ந்த அதே காலத்தில், அதே இடத்தில் தண்டனை கிடைத்து விடுகிறது. எத்தகைய தண்டனை தெரியுமா? பாகவதரைப் புலையர் என்று பழிப்பவர், தாமே புலையராகி விடுகிறார்!—இப்படித் தொண்டரடிப் பொடியாழ்வார் கூறியிருக்கும் அந்த வாக்கை எடுத்துக் காட்டினார் இராமாநுஜர் :

**நுமர்களைப் பழிப்பர் ஆகில்,**
**நொடிப்பதோர் அளவில், ஆங்கே**
**அவர்கள்தாம் புலையர் போலும்,**
**அரங்கமா நகரு ளானே !**

அரங்கப்பெருமான் அருள்கூர்ந்து தமக்கு இந்தப் பாகவதப் பெருந்தத்துவத்தை உணர்த்துவதாகத் தொண்டரடிப் பொடியாழ்வார் கூறியுள்ளார். இப்பெருங்கொள்கையை இராமாநுஜர் நன்குணர்ந்து தம் வாழ்க்கை நெடுக ஒழுகி வந்தார் என்ற குறிப்பைப் 'பிரபந்த காயத்ரி' என்று சொல்லப்படும் 'இராமாநுச நூற்றந்தாதி'யில் காண்கிறோம். இராமாநுஜரை அடைந்த பாகவதர்களை 'நல்லோர்' என்கிறார் அமுதனார். அந்த நல்லவர்கள்

**எக்குற்ற வாளர், எதுபிறப்பு**
**ஏது இயல்வு ஆக நின்றோர்**
**அக்குற்றம் அப்பிறப்பு அவ்இயல்வே**
**நம்மை ஆட்கொள்ளுமே !**

என்பது திருவரங்கத்து அமுதனாரின் அமுதவாக்கு.

இத்தகைய பாகவதப் பேருண்மைகளை இராமாநுஜர் பெரிய நம்பியின் உபதேசங்களால் தெரிந்து கொண்டதுபோல், பேசாத உபதேசங்களான பெருஞ்செயல்களாலும் தெரிந்து கொள்ளலாம்.

இப்படிப்பட்ட உண்மைகளைக் கையிலங்கு நெல்லிக்கனிகளாகப் பெற்றுக்கொண்ட இராமாநுஜர், பிறருக்கு உள்ளங்கை நெல்லிக் கனிகளாய்க் கொடுத்து உதவினார் என்பதைச் சொல்லவா வேண்டும்?

# 15

# மாட்சியும் சூழ்ச்சியும்

இராமாநுஜர் நாள் தோறும் ஏழு வீடுகளில் பிட்சை எடுத்து அமுது செய்யும் முறையை மேற்கொண்டிருந்தார். இது, கொங்கு நாட்டிலிருந்து அங்கே மழை இல்லாமல் பஞ்சம் வந்ததும், தன் கணவருடன் ஸ்ரீரங்கத்திற்கு வந்து குடியேறி யிருந்த ஓர் அம்மையாருக்கு அதிசயமாகத் தோன்றியது. அரச குலத்தினரும் செல்வர்களும் பிறரும் போட்டியிட்டு இராமாநுஜ மடத்தில் வாசல் காக்கும் பணி போன்ற அற்பப் பணிகளையும் தமக்கு வாய்த்த பெரும் பேறுகளாக மதித்திருக்க, அந்த மடத்தின் தலைவரான எதிராஜர் ஏன் பிட்சை எடுக்கவேண்டும்?-இது தான் கொங்கு நாட்டிலிருந்து வந்திருந்த அம்மையின் அதிசயத் திற்குக் காரணம்.

ஒரு நாள் இந்த அம்மை இவரைச் சற்றுத்தூரத்தில் கண்டதும் மேல் தளத்திலிருந்து சடக்கென இறங்கி வந்தாள். இடைகழியில்(ரேழியில்)காத்திருந்து, இவர் பிட்சை கொண்டு திரும்பும் போது வெளியே வந்து கையைக் குறுக்கே நீட்டி வழியைத் தடுத்தாள். இராமாநுஜர், 'அம்மணீ! நீர் ஏன் இப்படிச் செய்கிறீர்?' என்று கேட்டார்.

'அடியேனுக்கு ஒரு சந்தேகம்; அதைத் தீர்க்கவேணும்.'

'மடத்திற்கு வந்து தீர்த்துக் கொள்ளலாகாதா?'

'அங்கே பெரிய பெரிய மனிதர்களெல்லாம் தங்கள் தரிசனத்திற்குச் சமயம் பார்த்துக் காத்திருக்கிறார்களே; அப்படியிருக்கத் தங்களுக்கு என்னுடன் பேச அவகாசம் கிடைப்பதுதான் எப்படியோ?'

அம்மாள் தொடர்ந்தாள்: 'சுவாமீ, தினமும் பிட்சை கொண்டு காலம் நடத்தும் ஒருவரிடம் அகளங்க சோழன் போன்றவர்களும், வேத சாஸ்திரங்களைக் கரைத்துக் குடித்த விற்பன்னர்களும், மற்றுமுள்ள பெரியாரும் சிறியாருமான பல சார்பினரும் சமரசமாக அடங்கி ஒடுங்கி அடிக்கீழ் அமர்ந்து காத்திருப்பது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது; நான் காரணத்தை விவரமாக அறிந்து கொள்ள விரும்புகிறேன்'.

• அதற்கு இராமாநுஜர், 'அம்மணீ, அரசனே ஆனாலும், தேவ ராஜாவே ஆனாலும், இறைவனைப் பற்றிய உண்மைப் பெருவார்த்தைகளில் ஒரு வார்த்தையை உள்ளபடியே செவி சாய்த்து உணரத்தொடங்கி விட்டாலும் அவர்கள் அந்த உண்மையின் சந்நிதியில் முடிசாய்த்து வணங்காதிருக்க முடியாது. சாமானிய மக்கள் ஆனாலும், 'தாழ்ந்தவர்கள்' என்று ஒதுக்கப்பட்டிருந்தவர்களானாலும் ஒரு சத்தியப் பெருவார்த்தையைக் கேட்டு உள்ளத்தில் பதிய வைத்துக்கொண்டால் அவர்கள் அரசரும் வணங்கத் தக்க 'ராஜ குலத்தினர்' ஆகிவிடுவார்கள்!' என்று பதில் சொன்னார்.

அது கேட்ட கொங்கு நாட்டு அம்மை, 'அப்பேர்ப்பட்ட அரும்பொருளை அடியேனும் பெற்று வாழ்வு பெறலாகாதா?' என்று கேட்டு விட்டு இவரடிகளில் விழுந்து வணங்கினாள். இவரும் 'மடத்திற்கு வாரும்' என்று சொல்லி அப்பால் போய் விட்டார். பிறகு அந்த அம்மாள் மடத்திற்குச் சென்று காத்திருந்து இராமாநுஜரைத் தரிசித்துத் தன் இதய தாபத்தையும் ஆத்ம தாகத்தையும் அறிவித்துக்கொண்டாள்.

இவள் கொங்கு நாட்டிலிருந்து வந்திருப்பவள் என்பதைத் தெரிந்து கொண்டதும் இராமானுஜர், 'கொங்கர் கோன் குல சேகரன்' என்று வரும் திவ்யப் பிரபந்த வாக்கை நினைவூட்டிக் கொண்டார். 'உங்கள் நாட்டுக் குலசேகராழ்வார் நம்மை ஆட் கொண்டவர்களில் ஒருவர். அவருடைய நாட்டுத் தொடர்பை நீர் பெற்றிருக்கிறீர். எனவே உமக்குக் "கொங்குப் பிராட்டி" என்று தாஸ்ய நாமம் வழங்குவதாக!' என்று சொல்லிப் பஞ்ச ஸம்ஸ்காரங்களும் செய்து ஸ்ரீ வைஷ்ணவியாக்கிக்கொண்டார்.

இதன் பின்பு, கொங்கு நாட்டில் நல்ல மழை பெய்து பஞ்சம் தீர்ந்து விட்டது என்ற செய்தி இந்தக் கொங்குச் செல்விக்கும் இவள் கணவருக்கும் எட்டியது. இவர்கள் சொந்த நாட்டுக்குப் போகவேண்டுமென்று தீர்மானித்தார்கள். கொங்குச் செல்வி, 'எம்பெருமானாரைச் சேவித்து உத்தரவு பெற்று வருகிறேன்' என்று தன் கணவனிடம் சொல்லி விட்டுப் புறப்பட்டாள்.

மடத்திலோ தரிசனத்திற்கு வந்திருந்தவர்களின் கூட்டம் ஒரு பெருங்கூட்டமாயிருந்தது. 'சமயமில்லை, பொறுத்திருக்க வேணும் அம்மா!' என்று இங்குள்ளவர்கள் சொல்லி விட்டார்கள். 'பயணத்திற்குக் குறித்திருக்கும் நேரம் விரைவில் வந்துவிடுமே, என் செய்வது?' என்று தளர்ந்திருந்த அம்மையை நோக்கி, தாயைத் தேடிவரும் சேய்போல் துள்ளிக் குதித்து வந்துவிட்டார் இராமானுஜர்.

கொங்குப் பிராட்டியின் ஆச்சரியத்திற்கு அளவே இல்லை. 'அடியேன் காத்திருப்பது எப்படித் தெரிந்ததோ சந்நிதானத் திற்கு?' என்று அம்மை சொன்னதும், 'உணர்வை உணர்வு உணர்ந்து கொள்ளும், அம்மா!' என்று வாய்குளிரச் சொல்லி இவளை அகங்குளிரச் செய்தார் இராமானுஜர்.

'அடியேன் அகமுடையாரோடு என் நாட்டுக்குப் போகிறேன்' என்று கண்ணீர் துளிக்க இவள் விண்ணப்பம் செய்து கொண்டாள். 'அடியேன் தேவரீரை நித்தமும் சேவித்துக் கொண்டிருக்கும்படி உம்முடைய திருவடி நிலையை அடையாளமாகத் தந்தருள வேண்டும்' என்று பிரார்த்தித்துக் கொண்டாள். அந்தத் திருவடி நிலை இவளுக்குத் திருவடிநிலை யாகத்தானா தோற்றமளித்தது?

கொங்குப்பிராட்டி இராமானுஜரது அருள் ததும்பும் திரு முகத்தை நோக்கிய கண் இமையாது நோக்கி நின்றாள், சிறிது நேரம். பிறகு திருவடியின் அழகை உற்று நோக்கினாள். அடிமுதல் முடிவரை அரங்கநகர் அப்பனின் அழகுகளைச்

சேவிக்கும் அன்பர்களைப்போல் இவரும் இராமாநுஜரின் திருமேனியழகுகளைச் சேவித்தாள். இராமாநுஜரின் திவ்ய மங்களத் திருமேனியை தன் மனம் என்னும் கண்ணாடியில் பிரதி பலிக்கச் செய்து கொண்டாள்.

இராமாநுஜரின் திவ்ய சௌந்தரியங்களையெல்லாம் இவரது குண அழகின் பிரதிபலிப்பாகக் கண்டு பேரின்பமடைந்தாள் கொங்குப் பிராட்டி. இராமாநுஜரின் திருவடி நிலைகளை இவரது அழகுச் சொரூபம் அனைத்தையும் காட்டும் நினைவுக்குறியாகவே வைத்துக்கொண்டாள். இவள், பிறகு விடைபெற்றுக்கொண்டு கணவனுடன் கொங்கு நாட்டுக்குப் பயணமானாள்.

இவள் கொங்கு தேசத்தில் கொள்ளைக்களம் என்ற ஊரைச் சேர்ந்தவள் என்று குருபரம்பரைக் கதைகள் குறிப்பிடுகின்றன. கொங்கு தேசம் என்பது இப்போதுள்ள கோயம்புத்தூர் மாவட்டத்தைத் தன்னகத்தே கொண்ட தமிழகப் பகுதி. 'கொள்ளைக்களம்' என்று குருபரம்பரை ஐதிகங்களில் குறிக்கப் படும் ஊரையே இன்று கொள்ளேகாலம் என்கிறார்கள்.

இராமாநுஜர் பழைய சீடர்கள் வாயிலாகவும் புதிய சீடர்கள் வாயிலாகவும் தம் கொள்கைகளைப் பரப்பி வந்தார்; பெரும் புலவர்களோடு சாதாரண மக்களையும் திருத்திப் பணிகொண்டு, இவர்கள் அனைவரையும் தம் ஸ்ரீவைஷ்ணவப் பிரசாரத்திற்குப் பயன்படுத்திக் கொண்டார். **கத்யத்திரயம்** என்ற நூலை இவர் இயற்றிய காலம் இது. 'நித்தியத் திருவாராதனப்படி' என்ற பெயரால் இறைவனை நித்தமும் பூசிக்கவேண்டிய முறைகளைக் கூறும் ஒரு நூலையும் உருவாக்கினார். இந்த நூல்களும் இவர் கொள்கைகளைத் தெளிவாக நிலையிடுவதற்கு உதவின.

இவரது புதிய சீடர்களில் திருவரங்கப் பெருமாளரையின் தம்பியான சொட்டை நம்பியும் ஒருவர். தமையனாராகிய திருவரங்கப் பெருமாளரையின் விருப்பத்திற்கிணங்க, ஆளவந்தாரின் இப்புதல்வரும் இராமாநுஜ மடத்தில் சீடராகச் சேர்ந்துகொண்ட இந்நிகழ்ச்சியும், பாகவத சமுதாயத்தை ஒருமுகமாய் இராமாநுஜரின் தலைமையை ஒப்புக்கொள்ளச் செய்வதற்கு உதவியது.

திருமலைநம்பியின் புதல்வரான திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பவரும் இராமாநுஜருக்குச் சீடரானார். திருமலை நம்பியின் மருகரான கிடாம்பியாச்சானும், தம் அத்தை புருஷரான திருமலை நம்பியிடம் அனுமதி பெற்றுக்கொண்டு, தாமும் பிள்ளானோடு சேர்ந்து இராமானுஜரின் சீடராகி விட்டார்.

இந்த விதமாக, தூரத்திலும் சமீபத்திலும் இருந்த பலரும் இராமானுஜரின் குணங்களையும் செயல்களையும் புகழையும் கேள்விப்பட்டு இவர் சந்நிதானத்திலே வந்து நின்று அடைக்கலம் புகுந்து, இவர் கொள்கைகளைப் பரப்பச் சித்தமாகி விட்டார்கள்.

நாளடைவில் இராமானுஜரின் வைஷ்ணவப் பிரசாரத்திற்கு வேகமும் ஆற்றலும் அதிகரித்தன. பல இடங்களிலிருந்து பலரும் வந்து கலந்து கொண்டதாலும், பெரும் புலவர்கள் ஈடுபட்டு ஆராய்ந்துகொண்டிருந்ததாலும், இந்த இயக்கத்திற்கு அகலமும் ஆழமும் ஒருங்கே வாய்த்திருந்தன. இத்தகைய பிரசாரத்துடன், இராமானுஜர் தம் இயக்கத்தை மேலும் பரப்பி நிலைபெறச் செய்வதற்காகத் திருவரங்கனின் திருக்கோயிலைப் பெரிதும் பயன்படுத்திக் கொண்டார்.

தென்னிந்தியத் திருக்கோயில்கள் இந்து சமயத்திற்குப் புத்துயிரளித்தன என்பதையும், திருக்கோயிலை மையமாகக் கொண்டே தென்னிந்திய நாகரிகமும் பண்பாடும் உயிரும் ஒளியும் உரமும் பெற்றுப் பரவி வந்திருக்கின்றன என்பதையும் சரித்திர மாணவர்கள் அறிவார்கள். இத்தகைய கோயில்களில் திருவேங்கடமும் திருமாலிருஞ்சோலையும் திருவரங்கமும் மூன்று பக்தி வளர்ப்புப் பண்ணைகள் என்பதை இராமானுஜர் நன்கு அறிந்திருந்தார். இந்தப் பண்ணைகளில் இராமானுஜ தரிசனத்தைச் சிறப்பாக வளர்த்தது திருவரங்கத் திருக்கோயில்.

திருவேங்கடத்தைத் ' தேனேங்கு சோலைத் திருவேங்கடம்' என்பர். திருமலையின் அழகும் இனிமையும் வாய்ந்த காட்டு வளத்தைக்காட்டிலும் மலைவளம் சிறந்ததென்று, இரசிகர் உள்ளங்களை வசீகரித்திருக்கிறது. சோலைமலை என்ற அழகர் கோயிலிலோ, பக்தர்கள் அந்த மலையின் வளத்தைக் காட்டிலும் சோலையின் வளத்தையும் அழகையும் பாராட்டுவாராயினர். எனவே சோலைமலையின் சோலைகளை ' வானேங்கு சோலை ' என்று வருணிப்பார்கள். இப்படித் திருவேங்கடத்தையும் சோலைமலையையும் வருணித்தபின் திருவரங்கத்தை எப்படி வருணிக்கக்கூடும் என்று ஆலோசித்துப் பார்த்த ஒரு புலவர், ' தானேங்கு தென்னரங்கம் ' என்று அதி உசிதமாக வருணித்து விட்டார். இதே மனநிலை, இராமானுஜரைத் திருமாலிருஞ்சோலைக்கும் திருவேங்கடத்திற்கும் மேலாகத் திருவரங்கத்தைத் தமது பாகவத தருமத்தின் தலைமைப் பேரூராகத் தேர்ந்தெடுக்கச் செய்தது.

திருவரங்கத்தில் மலைவளம் இல்லை, ஆனால் சோலைவளம் உண்டு. நித்திய வசந்தமான இச்சோலையைப் பாரத பூமிக்கே

ஒரு தனிச்சிறப்பு வாய்ந்த ஞானப் பூஞ்சோலையாகத் தழைக்கச் செய்த ஆழ்வார்—ஆசாரியார்களில் இராமாநுஜர் மிகச் சிறந்தவர். இந்த ஞானப் பூஞ்சோலையைப் பசுஞ்சுடர்ச் சோலையாகப் பாது காத்து வளர்த்துத் தம் தனிப்பெரு நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளவேண்டுமென்று இராமாநுஜர் இத்திருக்கோயிலில் பல சீர்திருத்தங்களையும் செய்தார்.

பூஜை முறைகளிலும் திருத்தங்கள் செய்தார்; நிர்வாகத் துறையிலும் பல சீர்திருத்தங்கள் செய்தார். அவரவர் கடமையைச் சற்றும் தவருது ஒழுங்காகச் செய்யுமாறு கண்டிப்பான திட்டங்களை உருவாக்கிஞர். நியாயமாகவும் நேர்மையாகவும் பட்சபாதமில்லாமலும் இவர் நடந்து கொண்டதும் கண்டிப்பாக இருந்ததும், சிலர் உள்ளத்தில் பகைமை உணர்ச்சியைக் கிளப்பி விட்டன. 'கோயிற்பணிகளை ஒழுங்குபடுத்துவது என்ற பெயரால் நமக்கு எவ்வளவு தொந்தரவு கொடுக்கிருர் இவர்!' என்று தன்னலப்பிரியர்கள் இவரை வெறுக்கலாயினர்.

பொதுமக்கள் இவரிடத்தில் வைத்திருந்த பக்தியால், இவரது விரோதிகள் தங்கள் விரோதத்தையும் வெறுப்பையும் வெளிப்படையாய்க் காட்டிக் கொள்ளத் துணியவில்லை. அவர்கள் இவரைக் கொல்ல வேண்டுமென்று இரகசியமாகவே சூழ்ச்சி செய்தார்கள். இந்தச் சூழ்ச்சியை ஆதரித்த அர்ச்சகர்களும் உண்டு என்று சில ஐதிக வரலாறுகள் தெரிவிக்கின்றன. இச் சூழ்ச்சிக்கு அரங்கநாதனின் முக்கிய அர்ச்சகர் காரணராக இருந்தார் என்று கூறுவதும் உண்டு; இவரை ஸ்தானத்தார் என்று ஆருயிரப்படி குருபரம்பரை தெரிவிக்கிறது.

இராமாநுஜர் வழக்கமாக ஏழு வீடுகளில் பிட்சை கொள்வார்; இந்த வீடுகளில் ஏதாவதொரு வீட்டிலிருந்து கொடுக்கப் படும் அன்னத்தில் நஞ்சு கலந்து விட்டால் போதுமே என்று சூழ்ச்சிக்காரர்கள் தீர்மானித்தார்கள். இந்த வீட்டினருள் ஒருவன் தன் மனைவியிடம் செய்தி தெரிவித்தான். அவளோ 'கூடாது' என்று ஆட்சேபித்தாள். கணவன் நிர்ப்பந்தித்தான்; அவனுக்குப் பயந்து அவளும் இணங்கிஞள்.

இராமாநுஜர் வழக்கம்போல் பிட்சைக்கு எழுந்தருளிஞர். சூழ்ச்சிக்காரர்கள் தீர்மானித்திருந்தபடியே, வீட்டிலிருந்து அந்தச் சூழ்ச்சிக்காரனின் மனைவி நஞ்சு கலந்த அன்னத்தை எடுத்துக்கொண்டு வந்தாள். அவள் முகம் வழக்கம்போல் மலர்ச்சியாகக் காணப்படவில்லை. இராமாநுஜர் மற்ற அகங்

களில் பெற்றுக்கொண்டு வந்திருந்த உணவுத்திரளுடன் இது சேராதபடி தனிப்பட ஒருபுறமாக ஒதுக்கியும் வைத்தாள் அவள்.

பிறகு வெகு துக்கத்துடன் இவர் திருமுகத்தை ஒரு பார்வை பார்த்தாள். உடனே தண்டனிட்டு எழுந்தாள்; சடக்கெனத் திரும்பிக் கண்களைக் கசக்கிக்கொண்டே தலைகுனிந்த வண்ணமாகத் தன் வீட்டுக்குள்ளே போய்விட்டாள். அவள் செயல்களைக் கவனித்த இராமாநுஜர், 'இந்த அன்னத்தில் ஏதோ தவறு செய்யப்பட்டிருக்கிறது' என்று சந்தேகித்தவராய், நேரே காவேரிக்குப்போய் அன்று கிடைத்த உணவு அனைத்தையும் தீர்த்தத்தில் கரைத்து விட்டார்.

பிறகு இவர் கரையோரத்தில் ஒரு மரத்தினடியில் வீற்றிருக்கும்போது அங்கே பறந்து கொண்டிருந்த காகம் ஒன்று இவர் கரைத்து விட்டதிலிருந்து சிந்திக் கிடந்த பருக்கைகளைத் தின்றதும், தலை சுற்றிக்கொண்டு விழுந்து இறந்தது என்றும் குரு பரம்பரைக் கதை ஒன்று தெரிவிக்கிறது. அன்று முதல் இவர் சில தினங்கள் பிட்சைக்குப் புறப்படாமலே உண்ணாவிரதம் கிடந்தார். ஒரு மாத காலம் உபவாசம் இருந்தார் என்று கூறுவதும் உண்டு.

ஸ்ரீராமாநுஜ சரிதம் என்ற தலைப்பெயருடன், வங்காள மொழியில் இராமகிருஷ்ண மடத்தைச் சார்ந்த சுவாமி இராமகிருஷ்ணாநந்தரால் எழுதப்பெற்று ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப் பெற்றிருக்கும் புத்தகத்தில், இராமாநுஜருக்கு விஷமிட முயன்ற விவரம் வேறுவிதமாகக் குறிக்கப் பெற்றிருப்பதைக் காண்கிறோம்.

அரங்கநாதனின் முக்கிய அர்ச்சகர் ஒரு நாள் இராமாநுஜரிடம் போய்த் தம் வீட்டில் பிட்சை கொள்ளுமாறு அழைத்தாராம். பிறகு தம் நோக்கத்தை மனைவியிடம் தெரிவித்தார். அவளும் புன்னகை புரிந்து சம்மதம் தெரிவித்தாள். இராமாநுஜர் நடுப்பகலில் உணவுப் பிட்சைக்கு வந்ததும் இந்த அர்ச்சகரின் மனைவி வெகு மரியாதையுடன் இவர் திருவடிகளைத் தண்ணீரால் கழுவித் துடைத்து ஒரு பீடத்தில் அமரச்செய்தாள். ஈரப் பசையில்லாதபடி தன் உள்ளத்தையும் கொடிய நினைவுகளால் துடைத்துக்கொண்டாள்.

பிறகு இந்தப் பாவி அந்த முகத்தைப் பார்த்தாள். அது ஒரு குழந்தையின் முகம்போல் கள்ளங்கவடற்றுப் பொலிவதைக் கண்டாள். உடனே தன் உள்ளத்தில் தாயன்பு எழுவதையும் உணர்ந்தாள். பளிச்சென்று உள்ளே போய் நஞ்சு கலந்த உணவைக் கொண்டு வந்ததும், அவளுக்குக் கண்ணீர் பெருகி

விட்டது. 'உம்முடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டு மென்றால் பிட்சைக்கு வேறு எங்காவது போய்விடும்' என்று வாய்திறந்து சொல்லி விட்டாள்.

உடனே இராமாநுஜர் அப்படியே எழுந்து காவேரிக் கரைக் குப் போய்விட்டார். அந்த மத்தியான வேளையில் இவர் கோஷ்டி யூர் நம்பிகளைச் சந்தித்தார். அவருடன் கலந்து ஆலோசித்த பின், தம்மை நஞ்சிட்டுக் கொல்ல முயன்ற அர்ச்சகரை மன்னிக் கத் துணிந்தார்; அந்த அர்ச்சகரைத் திருத்தவும் முயன்றார். 'அரங்கநாதப் பெருமான் உம்முடைய தவறுகளை யெல்லாம் மன் னித்து விட்டான்' என்று இராமாநுஜர் தெரிவித்ததும் அந்த அர்ச்சகர் முற்றும் திருந்திவிட்டார்—இவ்விதமாகச் சொல்லு கிறது சுவாமி இராமகிருஷ்ணானந்தர் தமது நூலின் பதினேழாம் அத்தியாயத்தில் 'ஸ்ரீரங்கநாத சுவாமியின் பிரதான அர்ச்சகர்' என்ற தலைப்பில் தந்திருக்கும் செய்தி.

ஆனால் 'ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்' முதலான நூல்களில் காணப்படும் ஐதிகமே பெரும்பாலும் ஸ்ரீவைஷ்ணவர் களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் செய்தியாகும். இது ஏற்கெனவே குறிக்கப்பெற்றிருக்கிறது. இந்த வரலாற்றின் பிற்பகுதி மிகவும் இரசமாக அமைந்திருக்கிறது.

நடந்ததைக் கேள்விப்பட்டுத் திருக்கோஷ்டியூர் நம்பி பதைபதைத்து உடனே தம் ஊரிலிருந்து புறப்பட்டுத் திருவரங்கத் திற்கு வருகிறார். அவர் காவேரிக்கரைக்கு வரும்போது, அந்த வருகை குறித்து ஏற்கெனவே கேள்விப்பட்டிருந்த இராமாநுஜர் எதிர்கொண்டு வருகிறார். நடுப்பகல் வேளை. நெருப்புக்கங்கு களைப் பரப்பியதுபோல், மணலில் நடப்பவர் கால்களைச் சுடு கிறது. அந்த உச்சிப்பொழுதில், அந்த மணலில் இராமாநுஜர் குருவைத் தண்டனிட்டுக் கிடக்கிறார். நம்பிகள் இவரை உடனே வாரியெடுத்துத் தழுவிக்கொள்ளவில்லை.

அப்போது அங்கே வந்திருந்த கிடாம்பியாச்சானுக்கு மனம் பதறுகிறது, சினம் அதிகரிக்கிறது. 'இது என்ன சிஷ்ய-ஆசாரிய ஒழுங்கு! அங்கே அவள் இட்ட நஞ்சு இந்த வெயிலில் இந்த மணலில் இவரை இப்படிக் கிடக்கவிட்டிருக்கும் குருவின் நெஞ்சைக்காட்டிலும் கொடிதாகாதே!' என்று முழக்குகிறார் கிடாம்பியாச்சான். இப்படிச் சொல்லிக்கொண்டே ஆச்சான் உடையவரைப் பரிவுடன் தூக்கியெடுக்கிறார்.

நம்பிகளோ ஒரு பெருஞ்சிரிப்புச் சிரிக்கிறார். 'உம்மைக் கண்டுபிடிக்கத்தானே நான் இவ்வளவு தூரம் வந்திருக்கிறேன்!' என்கிறார். 'இனி நீரே இவருக்கு உணவு தயாரித்துக்

கொடுக்க வேண்டும். இன்று முதல் ஏழு வீட்டுப் பிட்சை வேண்டாம். உம்முடைய ஏகபிட்சை போதுமைய்யா!' என்று திருக்கோஷ்டியூர் நம்பிகள் கிடாம்பியாச்சானிடம் சொல்லுகிறார்.

ஆச்சானுக்கோ, 'என்னை இராமாநுஜ முனிக்குச் சமையற்காரனாக நியமித்தருளினாரே நம்பிகள், என்ன பேறு பெற்றேன்! இத்தகைய கருணையைக் கொடுமையென்று மயங்கிக் கடிந்து கொண்டேனே!' என்றெல்லாம் குதூகலம் பிறக்கிறது.

இப்படிக் கிடாம்பியாச்சான் பணிபுரிந்துவருகையில் ஒருநாள் இராமாநுஜர் இந்தச் சீடரை உகப்புடன் நோக்கி, ஆச்சானே, அன்று நீர் நமக்காகப் பரிந்து நம்பிகளைக் கடிந்துகொண்டீரே, அது நியாயமா? மதுரகவிகள் தம் குருவான நம்மாழ்வாரைக் குறித்துத் "தேவு மற்று அறியேன்" என்று பாடியிருக்கிறாரே; குருவின் பெயரைச் சொன்னதும் தம் நாவில் அமுது ஊறும் என்றும் பொருள்படப் பாடியிருக்கிறாரே! மதுரகவியாழ்வாருக்கு நம்மாழ்வார்போல நமக்கு நம்பிகள் என்பதை அறியீரோ?" என்றெல்லாம் சொன்னார்.

இப்படிச் சொல்லிவிட்டு, தம் சீடரைக் குளிர நோக்கினார் இராமாநுஜர். கிடாம்பியாச்சானோ தலைகுனிந்த வண்ணம், 'மன்னித்தருள வேணும், சுவாமி!' என்று சொல்லிவிட்டு, வழக்கம் போல் தம் கைங்கரியத்தில் ஈடுபடலானார்.

★ ★ ★

'கிடாம்பியாச்சானைப் போன்ற சீடர்களும் திருக்கச்சிநம்பி போன்ற ஆசிரியர்களும் இருக்கும்போது, எந்தச் சூழ்ச்சிதான் இராமாநுஜருக்கு விரோதமாக வெற்றி பெறமுடியும்?' என்று பேசிக்கொண்டார்கள் பாகவதர்களும் பிறரும். தம்மை நஞ்சிட்டுக் கொல்ல முயன்ற சூழ்ச்சிக்காரர்களையும் இராமாநுஜர் மன்னித்துத் திருத்தி விட்டார் என்பதைத் தெரிந்து கொண்டதும் எல்லாரும், 'இந்தக் கருணைக்குமுன் எந்தப் பகைதான் நிற்க முடியும்?' என்று ஒரு முகமாய் அபிப்பிராயப்பட்டார்கள்.

# 16

# வாதுக்கு வந்தவரை வாழ்வித்தார்

யக்ஞமூர்த்தி ஒரு பெரும் புலவர்; நம் தென்னகத்துப் புலவன்தாம். மாயவாதம் என்ற வேதாந்தக் கொள்கையில் ஊன்றிய பிடிப்பு உள்ளவர். வாதப்போர்களில் பல எதிரிகளை முதுகு கண்டு வாகை சூடியவர்.

இவர் காசி யாத்திரை போனார். முக்கிய . நோக்கம் கங்கை ஆடுவது அல்ல, அந்தப் பிரதேசத்திலுள்ள சமயவாதிகளையும், வழியில் அங்கங்கே உள்ள பல்வேறு கொள்கையினரையும் வென்று வலியழிப்பதுதான்.

யக்ஞமூர்த்தி தெற்கேயிருந்து வடநாட்டுக்குப் போகும் போது இராமாநுஜர் பேரும் புகழும் பெற்றிருக்கவில்லை. வட

நாட்டுப் பெரும் புலவர்களையெல்லாம் தோல்வியுறச் செய்து, கங்கை கொண்ட சோழன் சேரன்-செங்குட்டுவன் முதலான பெருவீரர்களைப் போல் வெற்றி முழக்கம் செய்து கொண்டு யக்ஞமூர்த்தி தெற்கே திரும்பி வரும்போது, 'காவேரி தீரத்தில் திருவரங்கப் பூம்பொழிலில் ஒரு புதிய வைஷ்ணவத் துறவி மாயாவாத கண்டனம் செய்து பக்திசமயப் பெருங் கொள்கைகளை வேதாந்த அடிப்படையில் நிலைநிறுத்தி வருகிறார்' என்ற செய்தியைக் கேட்டுப் பெருஞ்சினங் கொண்டார்.

ஆயிரக்கணக்கான வரலாற்றுப் புத்தகங்களை வண்டிகள் சுமந்துவர, பிரெஞ்சு மகாவீரனை நெப்போலியன் போர்க்களம் நோக்கிப் போவதுண்டு என்பது அந்த மகாவீரனின் வாழ்க்கை வரலாற்றுச் செய்தி. யக்ஞமூர்த்தியும் வண்டி நிறைய ஏட்டுச் சுவடிகளுடன் வாதக் களங்களைத் தேடிச் செல்வார். தோற்றவர்களிடமிருந்து கப்பம் வாங்குவார். ஒரு பெருஞ்சீடர் குழாத்துடன், சென்ற இடமெல்லாம் மாறுபட்ட கொள்கையினரைக் கிடுகிடுவென்று நடுங்கச் செய்துகொண்டே, இராமாநுஜ மடத்திற்கு வந்து சேர்ந்தார்.

'ஜீயரைச் சந்திக்க வேண்டும், அவசரம்!' என்று மடத்தில் உள்ளவர்களிடம் தெரிவித்தார். இராமாநுஜரைச் சந்தித்ததும், 'நம் தினவு தீர உம்முடன் போராட வந்திருக்கிறேன்' என்றார். இவர் யக்ஞமூர்த்தியின் பெரும் புலமையைக் குறித்துக் கேள்விப் பட்டிருந்தார்; மகாவித்துவானைக் கௌரவிக்கும் முறையில் மரியாதை மொழிகள் கூறி வரவேற்றார். அதற்கு யக்ஞமூர்த்தியோ, 'உம்முடன் நாம் சீராட வரவில்லையே!' என்று கடுமையாகச் சொன்னார். இராமாநுஜர் மிக்க அமைதியுடன் புன்னகை புரிந்தார்.

'ஏதோ மாயமந்திரங்கள் பண்ணி எண்ணிறந்த சீடர்களைச் சேர்த்துக் கொண்டிருக்கிறீராமே நீர்; உம்முடைய ஸ்ரீவைஷ்ணவம் என்ற மாயையை ஒழிப்பதுதான் இப்போது நமது நோக்கம்!' என்றார் யக்ஞமூர்த்தி. அதற்கு இராமாநுஜர், 'உம்முடைய கொள்கைதான் மாயமானது; மாயாவாதம் என்று அதைநீர் குறிப்பிடுவதே சான்று' என்று பதில் சொன்னார்.

அரங்கநாதனின் சந்நிதியில் வாய்ப்பாக இருந்த ஒரு மண்டபத்தில் வாதப்போர் நடைபெறலாயிற்று, யக்ஞமூர்த்திக்கும் இராமாநுஜருக்குமிடையே. நடுநிலையாளர்களான பல புலவர்கள் இப்போராட்டத்தைக் கவனித்து வந்தனர். இராமாநுஜரின் சீடர்களும் யக்ஞமூர்த்தியின் சீடர்களும் திரளாகக் குழுமியிருந்தனர்.

கல்விச் செருக்கே உருவெடுத்து வந்ததுபோல் கம்பீரமாட்சி தோன்ற வீற்றிருந்தார் யக்ஞமூர்த்தி. இராமாநுஜரோ அடக்கமே வடிவெடுத்தாற்போல் ஆளவந்தாரைத் தியானித்துக் கொண்டு தம் ஆசனத்தில் அமர்ந்திருந்தார்.

எடுத்த எடுப்பில் யக்ஞமூர்த்தி, 'இராமாநுஜரே, நாம் தோற்ருல் உம்முடைய பாதரட்சையைச் சுமந்து உமது பெயரையும் இட்டுக் கொள்வோம்; உம்முடைய மதத்திலும் சேர்ந்து விடுவோம்!' என்று மிடுக்காய்ச்சொன்னுர். 'எல்லாம் அரங்கன் திருவுள்ளம்!' என்று மெல்லச் சொன்னுர் இராமாநுஜர். 'நான் தோற்ருல் அவனுக்கு அடியவன் அல்லேன்!' என்றும் சொன்னுர்.

தர்க்கத்துக்குக் காலவரை பதினெட்டு நாள் என்று நிச்சயிக்கப்பட்டது—மாபாரதப் போரின் காலவரை போல. 'இதன் முடிவு எப்படியோ? வெற்றி இவருள் எவருக்கோ?' என்று சபையிலுள்ளவர்கள் திகைக்கும்படி யக்ஞமூர்த்தியும் இராமாநுஜரும், 'மத்தகஜங்கள் எதிர்க்குமாபோல'த் தர்க்கித்து வந்தனர்.

இப்படிப் பதினறு தினங்கள் கழிந்தன. 'வெற்றிப்பாதையில் நாம் சிறிதும் முன்னேறவில்லையே!' என்பதை இராமாநுஜர் நன்குணர்ந்தார்.

பதினேழாம் நாள் யக்ஞமூர்த்தி வேத சாஸ்திரங்களைப் போர்வீரன் கொலைக் கருவிகளைப் பிரயோகிப்பதுபோல் குறி பார்த்து வீசித் தன் கொள்கைகளுக்கு வெற்றி காண முயன்ருர். 'இராமாநுஜருக்குப் பிரதிகூலமாக அல்லவா இருக்கிறது இந்த வாதப்போரின் போக்கு?' என்று மனம் இடிந்து ஏங்கிப் போயிற்று பாகவதப் பெருந்திரள்.

யக்ஞமூர்த்தியின் குதூகலத்திற்கோ அளவில்லை. தம் ஆசனத்திலிருந்து குதித்தெழுந்தார். இராமாநுஜரை நோக்கி, 'இன்னும் ஒரு நாள் இருக்கிறது, சுவாமிகளே! நாளை வாரும்' என்று கர்ச்சித்தார். வாடிய முகத்துடன் எழுந்து சென்ருர் இராமாநுஜர்.

மடத்திலே தம் திருவாராதனப் பெருமாளான வரதராஜன் முன் கைகூப்பி நின்று, 'பேரருளாளா, ஆழ்வார் தொடங்கி ஆளவந்தார் வரை வளர்ந்து வந்த தரிசனம் என்ற இந்தக் கற்பகப் பெருந்தரு அடியேனது காலத்தில் பட்டுப் போகுமோ? அப்படியும் ஒரு திருவிளையாடல் புரியத் திருவுளமோ?' என்று விண்ணப்பம் செய்தார். பிறகு உணவு கொள்ளாமலே உறங்கிப் போய்விட்டார்.

சிற்றஞ்சிறு காலையில் 'ஹ்ரிஹரி' என்று சொல்லிக் கொண்டே மெல்ல எழுந்தார் இராமானுஜர். 'எம்பெருமானுரே, திகைப்பது ஏன்? அந்தப் பெரும்புலவனை உமக்குச் சீடனாக்கி உரம் தருவதற்காகவே நாம் வரவழைத்திருக்க, நீர் வீணாகக் கவலைப்படுவது தகுமா? இது பாகவத தருமமா?' என்று ஏதோ ஒரு உட்குரல் ஒலித்தது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. 'அருளாளன் கைவிடமாட்டான்!' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார் இராமானுஜர்.

அன்று சூரியோதயத்துடன் ஒரு புதிய நம்பிக்கையும் உதயமாயிற்று. 'அரங்கன் அருளால் வெற்றி கிடைக்கும், ஆளவந்தாரின் ஆனந்தப் பொற்கனவு பலித்துவிடும்!' என்ற நினைப்பில், தம்முடைய பரமாசாரியர் 'மாயாவாதகண்டனம்' ஏற்கெனவே செய்திருக்கிறாரே, அந்த நூல் வழிகாட்டும் என்ற எண்ணமும் ஏற்பட்டது. அகம் மகிழ்ந்தது, முகம் மலர்ந்தது. தர்க்க மண்டபத்தை நோக்கி நடந்தார் இராமானுஜர்.

எதிரியான யக்ஞமூர்த்தி 'நமக்கே வெற்றி!' என்ற நினைப்புடன் முன்னமே மண்டபத்திற்கு வந்திருந்தார். இராமானுஜரின் நடையின் மிடுக்கைக் கவனித்தார். இவர் வந்து அமர்ந்ததும் முகத்தையும் ஏறிட்டுப் பார்த்தார். திகைத்தார்; திடுக்கிட்டார் யக்ஞமூர்த்தி.

'முகம் வாடி மூச்சடங்கிப் போனார் என்றல்லவா நினைத்துவிட்டோம் நேற்று மாலையில்? இன்றோ அதே முகத்தில் கூத்தாடுகிறாள் வெற்றித் திருமாமகள்!' என்ற நினைவுகள் பாய்ந்து வந்தன. 'இவருடன் வாதாடுவதில் இனி ஒரு பயனும் இல்லை; இந்த மகாத்மாவைச் சரணமாக அடைந்து இதயப் பசியைத் தீர்த்துக் கொள்வதே முறை' என்று கருதினார் யக்ஞமூர்த்தி.

வாதப் போரினிடையே எவ்வளவு கோபதாபத்தைப் புலப்படுத்தினார்! எத்தனை கடுஞ்சொற்களைச் சுடச்சுடப் பரிமாறினார்! எத்தகைய அறிவுத்திமிருடன் பேசினார், ஏசினார்! இராமானுஜருக்குத் துளியாவது சினம் ஏற்பட்டதா? நெருப்பைக் கறையான் பற்றிக் கொள்ளுமோ?—இப்படியெல்லாம் எண்ணமிட்ட யக்ஞமூர்த்தி தம் ஆசனத்திலிருந்து எழுந்து பயபக்தியுடன் இராமானுஜரின் அடிமலர்களில் வந்து விழுந்தார்.

அப்போதுதான் இராமானுஜர் யக்ஞமூர்த்தியை நோக்கி, 'மகா வித்வானே, வாதப்போர் தொடர்ந்து நடக்கலாமே' என்று வெகு மரியாதையாகச் சொல்ல வேண்டுமென்று எண்ணிக் கொண்டிருந்தார். அதே சமயம், 'நான் தோற்றேன்!'

என்று சொல்லிக் கொண்டே வந்து யக்ஞமூர்த்தி தண்டனிட்டார். ' நீர் தோற்கவில்லை, மகாவித்வானே! " நான் " என்ற ஆணவம் தோற்றது !' என்றார் இராமாநுஜர்.

இராமாநுஜருடைய பாதரட்சைகளைத் தலைமீது வைத்துக் கொண்டார் யக்ஞமூர்த்தி. பிறகு இராமாநுஜரை நோக்கி, 'அடியேன் தோற்கவில்லை என்று அருளிச் செய்தீர். தோற்கவில்லை என்பது மட்டுமா? வெற்றியும் பெற்றிருக்கிறேன், சுவாமிகளே!—இந்தப் பாதரட்சைகளே என் வெற்றிக் கிரீடம்!' என்றார்.

பிறகு யக்ஞமூர்த்தி, ' ஆத்ம ஞானம், வேதங்களைக் கற்பதாலோ, அறிவைக் கூர்மை செய்வதாலோ, கல்வி கேள்விகளிலே பொழுது போக்குவதாலோ கிடைப்பதற்கில்லை' என்று பொருள்படும் உபநிஷத வாக்கியத்தை (கடோபநிஷதம்: II. 23) ஒப்பித்தார். ' என் கல்விச் செருக்கே என்னைக் கெடுத்து விட்டது. கறி நறுக்கும் கத்தியைக் கொண்டு ஒரு குழந்தை தன் கையை நறுக்கிக் கொண்டதுபோல் அடியேனும் அறிவுக் கூர்மையால் என்னையே சிதைத்துக் கொண்டேன், வதைத்துக் கொள்ளவும் முயன்றேன். உம்மைச் சரணமாக அடைகிறேன், அருள் புரியவேணும் ' என்று பிரார்த்தித்தார்.

' அரங்கநாதன் அருள்புரிவான் ; ஆளவந்தாரின் அருள் நெறி உமக்கும் அடைக்கலம் தரும். யக்ஞமூர்த்தி, நீர் பாக்கியசாலி!' என்றார் இராமாநுஜர். யக்ஞமூர்த்தியின் வேண்டுகோளுக்கிணங்கித் தமது திருப்பெயர்களில் ஒன்றான ' எம்பெருமானார் ' என்ற அருமைப் பெயரை அவருக்குச் சூட்டினார். அருளாளப் பெருமாளான வரதராஜனின் அருளால் தமக்கு வெற்றி கிடைத்தது என்று, ' அருளாளப் பெருமாள் எம்பெருமானாரே !' என்று வாயார நெஞ்சார அழைத்தார் இராமாநுஜர் தம் பழைய எதிரியை.

' தேவராஜ முனி ' என்ற தாஸ்ய நாமத்தையும் இவருக்குச் சூட்டினார். வரதராஜனைத் தேவராஜா என்றும் கூறுவதுண்டு அல்லவா ?

தேவராஜமுனி ஏற்கெனவே துறவிதான் ; கங்கைக் கரையில் துறவுக் கோலம் பூண்டவர். இப்போது காவேரி தீரத்தில் பாகவத சந்நியாசியாகிக் காலம் கழிக்க விரும்பினார். இராமாநுஜரிடம் சந்நியாசம் வாங்கிக்கொண்டு, ' முக்கோல்-பகவர் ' என்ற திரிதண்ட சந்நியாசியானார். இராமாநுஜர், அருளாளப்பெருமாள் எம்பெருமானார் என்ற தேவராஜமுனி தங்குவதற்கு ஒரு பெரிய மடமும் கட்டிக்கொடுத்தார்.

அருளாளப் பெருமாள் எம்பெருமானாரை இராமாநுஜர் 'தேவராஜ முனியே!' என்று அழைப்பது வழக்கம். அவர் தம் புலமைக்குச் சான்றாகவும் பாகவத தருமத்திற்கு அரணாகவும் நூல்கள் எழுதவேண்டும் என்பதும் இராமாநுஜர் விருப்பம். அதற்கு இணங்கித் தேவராஜமுனி தமிழில் 'ஞானஸாரம்', 'பிரமேயஸாரம்' என்ற இரண்டு நூல்களை இயற்றினார்.

ஆனால் இத்துறையில் இவர் புலமையோ, புத்தியோ மேலும் மேலும் ஈடுபட்டதாகத் தெரியவில்லை. நூல்களுக்கும் மேலாகத் தம் வாழ்க்கையை ஸ்ரீவைஷ்ணவப் பெருவாழ்வாக மேன்மேலும் நூற்கத் தொடங்கினார் இவர் என்றே சொல்லவேண்டும்.

இராமாநுஜர் தேவராஜமுனியை நோக்கி, 'நீர் உம் வாழ்க்கையை வளமுறச் செய்துகொள்வதற்கு ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்தங்களைக் கசடறக் கற்கவேண்டும்' என்று சொல்லி, திருப்பல்லாண்டு தொடங்கி நாலாயிரத்தையும் ஓதுவித்தார். இதற்குப் பின்பே ஞானஸாரத்தையும் பிரமேய ஸாரத்தையும் இவர் இயற்றினார் என்று ஊகிப்பவரும் உண்டு.

இராமாநுஜரின் திருக்கூட்டத்தில் இதற்குமுன் மிகச் சிறந்து விளங்கியவர்கள் ஆழ்வானும் ஆண்டானுமே-ஆம், கூரத்தாழ்வானும் முதலியாண்டானும். இப்போது அருளாளப் பெருமாள் எம்பெருமானாரும் திருக்கூட்டத்தை அணி செய்தார், ஆற்றல் பெறச் செய்தார். பிறகு ஏற்கெனவே பல இடங்களில் 'குருமூர்த்திகள்' என்றும் 'ஆசாரியர்கள்' என்றும் பேர் பெற்றிருந்தவர்களும் இத்திருக்கூட்டம் கண்டு, 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்று இராமாநுஜர் அடிகளில் வணங்கிச் சீடராயினர்.

ஒருநாள் நாலு இளைஞர்கள் அறிவுச் செல்வமும் அதுபோல் பணிவுச் செல்வமும், பக்திக் காதலும், அதுபோல் துறவு-மனப் பான்மையும் பெற்றிருந்தவர்கள்—இராமாநுஜரிடம் வந்தார்கள். 'எம்பெருமானாரே, எங்களுக்கு உபதேசம் செய்யவேண்டும்' என அடிபணிந்தார்கள். அவர்கள் தங்கள் பெயர்களை அனந்தாழ் வான், எச்சான், தொண்டனூர்நம்பி, மருதூர்நம்பி என்று முறையே தெரிவித்துக் கொண்டார்கள். இராமாநுஜர் அவர்களை நோக்கி, 'நீங்கள் அருளாளப் பெருமாள் எம்பெருமானாரிடம் உபதேசம் பெற்றுக்கொள்ளுங்கள்' என்று கட்டளையிட்டார்.

அருளாளப் பெருமாள் எம்பெருமானாருக்கோ இராமாநுஜர் அளித்த இந்தப் பெருமை ஒரு பெருஞ்சுமையாகவே தோன் றியது. அந்தப் புதிய சீடர்களை நோக்கி அவர், 'குருவியின்

கழுத்தில் பனங்காயைக் கட்டிவைத்தாரே எம்பெருமானார்! நீங்கள் 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம்' என்று இருங்கள்; அந்தப் பெருவெள்ளம் பெருகிவந்து உங்களையும் வாழ்விப்பதற்கு அடியேன் ஒருகால்வாய். அவ்வளவுதான், குழந்தைகளே!' என்று சொன்னார்.

❊ ❊ ❊

பல ஆண்டுகள் ஆகிவிட்டன. பல நிகழ்ச்சிகளும் நிகழ்ந்து விட்டன, 'எம்பெருமானார் வாழ்க்கை' என்ற நெடுங்கதையிலே. ஒருசமயம் தேசாந்தரிகளான இரண்டு வைஷ்ணவர்கள் வட நாட்டிலிருந்து திருவரங்கத்திற்கு வந்தார்கள். வீதியிலே நின்று கொண்டிருந்த சிலரைப் பார்த்து, 'எம்பெருமானார் மடம் எது?' என்று கேட்டார்கள். அங்கிருந்தவர்களில் ஒருவர், 'எந்த எம்பெருமானார் மடம்?' என்று எதிர்க்கேள்வி கேட்டுவிட்டார்.

புதியவர்கள், 'பரிகாசம் பண்ணுகிறீர்களா? நம் தரிசனத்திற்கு எத்தனை எம்பெருமானார்கள் இருக்கிறார்கள்? ஒருவர் தாமே உடல் பொருள் ஆவியும் அழிய மாறி அற்புதப் பணிகள் புரிந்து வருகிறார்!' என்று நெஞ்சு உளைந்து சொன்னார்கள். எதிர்க்கேள்வி கேட்டவரும் அச்சமடைந்து, 'சுவாமிகாள், நாங்கள் பரிகாசம் பண்ணவில்லை. இங்கே அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்ற ஒரு பெரியவரின் மடமும் இருக்கிறது' என்று பதில் சொன்னார்.

உடனே புதியவர்கள், 'நாங்கள் அவரை அறியோம்; இராமாநுஜர் மடத்தைக் குறிப்பிட்டோம்' என்று சொன்னார்கள். உடனே ஒருவர் அவர்களை அழைத்துப்போய் இராமாநுஜரின் மடத்தில் சேர்த்தார்.

இந்தச் செய்தி தேவராஜமுனியின் காதில் விழுந்ததும், அவர் திடுக்கிட்டார். 'ஐயோ! நாம் எதிராஜரைப் பிரிந்து வேறொரு மடத்திலே வாழ்வதால் அன்றோ நம்மை எம்பெருமானாருக்கு எதிர்த்தட்டாக ஒருவர் சொல்லவும் நேர்ந்தது? அல்லற்பட்டோமே, அந்தோ!' என்று மிகவும் வேதனைப்பட்டுப் புலம்பினார்.

அருளாளப் பெருமாள் எம்பெருமானார் தம் சீடர்களையும் பணியாளர்களையும் அழைத்து, 'நம்முடைய மடத்தை இடித்துத் தள்ளிவிடுங்கள்!' என்று கட்டளையிட்டார். நிலத்தோடு நிலமாகச் சமன்செய்து தம் மடத்தை இருந்த இடமும் தெரியாமல் செய்து விட்டபின், அருளாளப் பெருமாள் எம்பெருமானார்

இராமானுஜர் மடத்துக்கு வந்தார். இவர் காலைக் கட்டிக் கொண்டு அழுதார்.

இராமானுஜர் நடந்ததை அறிந்து கொண்டார். "இனி அடியேனைத் தேவரீருடைய திருவடி நிழலிலேயே வைத்துக் கொள்ள வேண்டும், நாள்தோறும் ஏவிக் கூவிப் பணிகொள்ள வேண்டும்' என்று சொல்லி மறுபடியும் இராமானுஜரடிகளில் விழுந்தார். அவரை முடிபிடித்து எடுத்து இராமானுஜர், 'அஞ்சாதீர்!' என்று அருளித் தம்மை விட்டுப் பிரியாதபடி வைத்துக்கொண்டு வாழ்வித்தார்.

தம் வாழ்வை ஒரு நூலாக நூற்றார், ஒரு நோன்பாக நோற்றார், யக்ஞமூர்த்தியாக வந்து அருளாளப் பெருமாள் எம்பெருமானாராக மாறிப் பிறந்தவர்.

# 17

# ‘இராமாநுஜ’ நந்தவனம்

ஒரு சமயம் இராமாநுஜர் திருவாய்மொழிக்குப் பொருள் சொல்லிக் கொண்டிருந்தார். உடம்பெல்லாம் செவியாய்க் கேட்டுக்கொண்டிருந்தது திருக்கூட்டம். ‘சிந்து பூ மகிழும் திருவேங்கடம்’ என்ற சொற்றொடரில் ஈடுபட்ட இராமநுஜர், திருமலை முழுதும் ஆண்டவனுக்கு ஒரு புஷ்ப மண்டபம் என்று நம்மாழ்வார் கருதுவதாகக் கூறினர்.

பிறகு, ‘திருவேங்கடமுடையானுக்கு உகப்பாகத் திருமலையில் ஒரு நந்தவனம் உண்டாக்கி மாலை கட்டிச் சாத்தும் பணி புரிய விரும்புவோர் இந்தக் கூட்டத்தில் யாரேனும் உண்டோ?’ என்று கேட்டார். மலைக்குளிருக்கு அஞ்சிப் பலரும் பதில் சொல்லாமல் இருந்துவிட்டார்கள்.

'அடியேன் விடைகொள்ளுகிறேன்' என்று எழுந்தார் புதிய சீடருள் ஒருவரான அனந்தாழ்வான். 'நீரே ஆண்பிள்ளை காணும்!' என்றார் இராமாநுஜர்; உடனே திருமலைக்குப் புறப் பட்டுவிட்ட இவரை 'அனந்தாண்பிள்ளை'-என்று பலரும் சிறப்பித் துப் பேசுவாராயினர்.

அனந்தாழ்வான் அங்கே நந்தவனத்துக்குரிய இடத்தைத் தேர்ந்தெடுத்தார். காடு வெட்டி நிலத்தைச் சமன்செய்ய முற்பட் டார். வெட்டிக் கழிக்க வேண்டிய மண்ணை அப்போதைக்கு அப்போது கூடையில் நிறைத்துத் தம்முடைய மனைவியின் தலை மீது எடுப்பித்து அங்கங்கேயுள்ள சில பள்ளங்களில் கொட்டிவரச் செய்தார்.

கருவுற்றிருந்த அந்த அம்மை ஒரு கூடை மண் சுமந்து கொண்டுபோய்க் கொட்டித் திரும்புவதற்குள், அனந்தாழ்வான் நாலு கூடைகளுக்கு வேண்டிய மண்ணை வெட்டிச் சேர்த்துக் குவித்திருப்பார். இப்படி நடந்துகொண்டிருந்த பணி, சிறிது நேரத்தில் பரபரப்பாக நடக்கத் தொடங்கிவிட்டது. ஒரு கூடைக்கு மண் வெட்டிச்சேர்ப்பதற்குள் அம்மாள் வந்து நிற்பாள்; சற்றுக் காத்திருந்து கூடையை நிறைத்துக்கொண்டு போவாள். இதன் இரகசியம் என்ன?—ஆழ்வானுக்குப் புரியவில்லை.

'ஏனம்மா, எப்படியம்மா, இவ்வளவு விரைவாக வந்து நிற்கி றாய்? நான் குறிப்பிட்டுக் காட்டிய பள்ளங்கள் தூரத்திலிருக்கின் றனவே; சுமந்துகொண்டு போகச் சோம்பி இடையே ஒரு புதரில் சொரிந்து விடுகிறாயா?' என்று கேட்டார் அனந்தாழ்வான்.

உண்மை என்னவென்றால், உழவன் ஒருவன் இவளைக்கண்டு இரங்கி, 'அம்மணீ, நீர் நம்முடைய மகள் ஒருத்தியைப்போலக் காணப்படுகிறீர்! கர்ப்பிணியாகத் தோன்றுகிறீரே; உம்மை இப்படி வேலை வாங்குவது அடுக்குமா உம் கணவருக்கு? அந்தக் கூடையை என்னிடம் கொடும்' என்று வாங்கிக்கொண்டு ஓடி ஓடிக் கொட்டி உதவி புரிந்துவந்தான்.

'அந்த மேட்டுக்கு அப்புறத்தில் உழைப்பாளி ஒருவர் "பெண்-பரிவு" கொண்டு அடியேனுக்கு உதவுகிறார், சுவாமி!' என்று அந்த உண்மையைத் தெரிவித்தாள் மனைவி. உடனே, 'நல்லது நல்லது, சமர்த்தி நீ! ஆனால் நம்முடைய ஆசாரிய கைங்கரியத்தை வேறொருவர் கொள்ளையிடுவதோ? உதவுவார் போலே வந்து உள்ளத்தைப் புண்படுத்துவதோ! எங்கே அவர்? எனக்குக் காட்டு' என்று அனந்தாழ்வான் அவளுடன் மண் வெட்டியும் கையுமாகப் புறப்பட்டார்.

இவர் நெருங்கியதும் அவன் ஓட்டம் பிடித்தான். இவர் பின் தொடர்ந்ததும் அவன் வெகுதூரம் ஓடிவிட்டான். இவர் அலுப் படைந்து நின்றதும்; அவன் இவரைத் திரும்பிப் பார்த்துச் சிரித்தான். அலுத்துச் சலித்து நின்ற அனந்தாழ்வான், 'இன்னது செய்கிறோம்' என்று தெரியாமலே அவனை நோக்கி மண்வெட்டியை வீசினார்.

அவனோ மறைந்துவிட்டான் என்றும், 'எல்லாம் திருவேங்கட முடையானின் திருவருள்!' என்று ஆழ்வான் தம் மனைவியிடம் சொன்னார் என்றும் குரு பரம்பரை ஐதிகம் ஒன்று தெரிவிக்கிறது.

அனந்தாழ்வான் தன் மனைவியின் உதவியுடன் காடுமேடு களைத் திருத்தி ஓர் அழகிய நந்தவனம் உண்டாக்கினார்—காடுமேடான உள்ளங்களைத் திருத்திக்குரு ஒரு பாகவத சமு தாயம் உண்டாக்கிவந்ததுபோலே!

இந்த நந்தவனத்திற்கு என்ன பெயரிடுவது? 'இராமாநுஜன்' என்று பெயரிட்டுத் திருவேங்கடமுடையானுக்குப் பூத்தொண்டு புரிந்துவந்தார் அனந்தாழ்வான். திருமலையில் நந்தவனம் தம் உள்ளத்திற்கு இணங்க உருவாகிவிட்டது என்பதைக் கேள்வி யுற்ற இராமாநுஜர்—அப்போது பிரபந்த நந்தவனத்தில் சஞ்சரித் தவர்—தம் திருவாய்மொழிக் காலட்சேபத்தைத் தீவிரமாக நடத்தி முடித்துக்கொண்டு, திருப்பதியை நோக்கிப் புறப்பட்டார்.

வழியில் திருக்கோவலூர், காஞ்சிபுரம் முதலான தலங்களைத் தரிசித்தார். காஞ்சியில் திருக்கச்சிநம்பியின் மடத்துக்குச் சென்று அவரையும் தரிசித்துத் தண்டனிட்டுப் பிறகு வரதராஜப் பெருமாளையும் தரிசித்தார். 'சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை!' என்று சொல்லிக் கச்சிநம்பி விடைகொடுக்க, இராமாநுஜர் தம் சீடர்களுடன் திருப்பதிக்குச் சென்றார்.

வழி நடுவிலே பாதை சரியாகத் தெரியவில்லை; எனவே வழி தப்பித் திகைத்து நின்றார், சீடரும் தாமுமாக. அப்போது இராமாநுஜருக்கு, 'வழி திகைத்து அலமருகின்றேன்!' என்ற வாக்கியம் நினைவிற்கு வந்தது.

அப்போது அங்கே ஒருவன் ஏற்றம் இறைத்துக்கொண்டிருந் தான். அவனிடம் இராமாநுஜரின் சீடர்கள் திருமலைக்கு வழி விசாரித்தார்கள். அவனும் தன் வேலையை நிறுத்திவிட்டுச் சிறிது தூரம் இவர்களுடன் வந்து செவ்வையானதொரு வழியைக் காட்டினான்.

இராமாநுஜர் அவனைத் தண்டனிடச் சீடர்களும் அப்படியே தண்டனிட்டு விடைகொண்டு, இவரைப் பின்தொடர்ந்து சென்

ருர்கள். இதைப் 'பரம ஆஸ்திக நிலை' (பரமாஸ்திகத்வம்) என்று குறிப்பிடுகிறது பின்பழகிய பெருமாள் சீயர் இயற்றிய ஆறு யிரப்படி குருபரம்பராப்ரபாவம். (அவ்னும் நாளடைவில் இராமாநுஜ கோஷ்டியிலே சேர்ந்துகொண்டான் என்று ஊகிப்பதும் பொருத்தமே.)

அப்பால் இவர்கள் கீழைத் திருப்பதியை அடைந்தார்கள். அங்கே விட்டலதேவன் என்ற அந்த ஊர்த் தலைவனை (ஊராளியை) இராமாநுஜர் சீடனுக்கிக்கொண்டார். தம் சீடர்களில் முப்பது பேர்களை அங்கே குடியேற்றிவைத்தார். விட்டலதேவனின் உதவியால் இவர்களுக்கு இளமண்டியம் என்ற கிராமம் கைப்பற்றுகக் கிடைத்தது.

இராமாநுஜர் தம் சீடர்களுடன் வந்திருப்பதைக் கேள்விப்பட்டதும், அனந்தாழ்வான் சில ஸ்ரீவைஷ்ணவர்களுடன் மலையிலிருந்து இறங்கி வந்தார். அவர்கள் இராமாநுஜரை வணங்கி, 'தேவரீர் அப்பனைச் சேவிக்க வரவேணும்' என்று வேண்டிக் கொண்டார்கள்.

அதற்கு இராமாநுஜர், 'ஆழ்வார்கள் திருமலை மிதியாமையாலே, நாமும் ஏறக்கடவோம் அல்லோம்!' என்று பதில் சொன்னுர். அனந்தாழ்வானும், 'தேவரீர் ஏறவில்லையென்றுல் நாங்களும் ஏறப்போவதில்லை' என்று விடையிறுத்தார். 'இனிமேல் எவரையும் நாங்கள் ஏற விடுவதுமில்லை' என்றும் பிடிவாதமாகச் சொல்லிவிட்டார்.

திருவனந்தாழ்வான் என்ற ஆதிசேஷனே திருமலையாகத் தோற்றமளிக்கிருன் என்கிறது தலபுராணம். அதனுல் ஆழ்வார்கள் மலைமேல் அடியிட்டு மிதிக்காமலே தாழ்வரையிலிருந்து மலையையும், மலை குனிய நின்ற பெருமாள் என்று சொல்லப்படும் வேங்கடவனையும் பாடினுர்களாம். ஏனினும் அனந்தாழ்வான் கூறியதை உள்ளத்தில்கொண்டு சிந்தித்துப்பார்த்த இராமாநுஜர், 'நாம் வருகிறோம், புறப்படும்' என்று சொல்லிவிட்டு மலையில் மிதிக்காமலே தவழ்ந்து ஏறிப்போனுராம்.

காடும் வானரமும் வேடும் உடைய வேங்கடம் என்று ஆழ்வார்கள் பாடியிருக்கும் திருமலைக் காடுகளையும் வேடர்களையும் குரங்குகளையும் அருவிகளையும் பார்த்துக்கொண்டே இராமாநுஜரும் சீடர்களும் மலைமேல் சென்றுர்கள். திருவேங்கடமுடையானின் அருளுக்கு அறிகுறியான தீர்த்தம், பிரசாதத்துடன் மாமாவான பெரிய திருமலைநம்பி எதிர்கொண்டு வந்தார்.

இராமாநுஜர் நம்பியின் திருவடிகளில் விழுந்து வணங்கி, 'தேவரீர் எழுந்தருள வேணுமோ இவ்வளவு தூரம்? யாரேனும்

சிறியாரை வரவிடலாகாதா?' என்று கேட்டார். நம்பி நகைத்தார்; 'அப்பனே, தேடிப் பார்த்தேன்; என்னைக்காட்டிலும் சிறியவர்களைக் கண்டேனில்லையே! ஆகையால் இந்தச் சிறியவனே வரவேண்டியதாயிற்று!' என்று பதில் சொன்னார்.

இராமாநுஜரும் சீடர்களும் நம்பி கூறியதை ஆச்சரியமாய்க் கேட்டு, அவருடன் சென்றார்கள். கோனேரியில் நீராடியபின், 'எல்லாரும் "இராமாநுஜனை"ப் பார்க்கப் போவோம்' என்று அனந்தாழ்வான் சொல்ல அதிசயித்து நந்தவனத்தை நோக்கிப் புறப்பட்டார்கள்.

'உம்முடைய கைங்கரியம் எவ்வளவு அழகாயிருக்கிறது! இதற்கு என் பெயரை இட்டிருக்கும் உமது மனப்பான்மையைத்தான் என்னென்பது! அனந்தாழ்வானே, வாரும்' என்று இராமாநுஜர் அவரை அணைத்துக்கொண்டார். 'எளியேனால் இயன்ற ஆசாரிய கைங்கரியம்தான் இது! நீர் பக்தி நெறியிலும் கைங்கரியநெறியிலும் வளர்த்துவிட்ட குழந்தைதானே அடியேன்! அடியேன் வளர்த்த குழந்தை இது!' என்றார் அனந்தாழ்வான்.

இராமாநுஜர், ஆழ்வார் வாக்கை நினைவூட்டிக்கொண்டு, 'வளர்த்ததனால் பயன்பெற்றேன்' என்று அதே வாக்கைத் தழுவிப் பதில் சொன்னார். அனந்தாழ்வான் வளர்த்திருந்த குளிர் பூம்பொழிலைக் கண்குளிர உளம்குளிர நோக்கி நோக்கி, இராமாநுஜர் பெருமகிழ்வெய்தினார். செண்பகம், செருந்தி, மகிழம்பூ, பாடலம், சுரபுன்னை, புன்னாகம், இருவாட்சி, மல்லிகை, முல்லை முதலான மலர்களின் அழகுகளையும், சுனையில் மலர்ந்த செந்தாமரைகளின் அழகையும் வேங்கடவனின் அருளழகுக்கு அறிகுறிகளாய்க்கண்டு காட்டினார் சீடர்களுக்கு.

பிறகு ஞானப் பிரான் என்ற வராகப் பெருமானைச் சேவித்து ஸ்ரீநிவாஸப் பெருமானையும் சேவிக்கச் சென்றார்கள். ஆனந்த நிலயம் என்னும் திவ்ய விமானத்தைக் கண்ணால் பருகுவார் போல் நோக்கியபின், உள்ளே போய்க் 'குலசேகரன் படி'யைக் கடந்துபோனார்கள். வேங்கடேசப் பெருமானை, 'எண்ணம் புகுந்து தித்திக்கும் எம்பெருமானே! அலர்மேல்மங்கை உறை மார்பா!' என்று அழைத்து இராமாநுஜர், 'புகல் ஒன்றும் இல்லா அடியேன் புகுந்தேன், உன் அடிக்கீழ்!' என்று சரணாகதி செய்தார்.

இராமாநுஜர் திருமலையில் 'கலைக்கோயிலா'ன பெரிய திருமலை நம்பியின் இல்லத்தில் தங்கி இராமாயணத்திற்குப் பொருள்கேட்க விரும்பினார். அதற்காக ஓராண்டுக் காலம் அங்கேயே தங்கி விடுவது என்று தீர்மானித்தார்.

அப்போது கோவிந்தபட்டர் திருமலை நம்பிக்குப் பணிகள் புரிந்துகொண்டிருந்தார். மாமாவை இப்போது ஆசாரியராகவே மதித்துத் தொண்டாற்றிவந்த கோவிந்தரை இராமாநுஜர் சந்தித்ததும், இருவரும் உடம்போடு பேரின்ப உலகம் புகுந்தது போன்ற ஆனந்தத்தை அடைந்தார்கள்.

ஒருநாள் இராமாநுஜர் பெரிய திருமலை நம்பியின் தோட்டத்திற்குப் போனார். அங்கே ஓரிடத்தில் கோவிந்தபட்டரைக் கண்டார். அவர் ஒரு பாம்பின் வாயிலே கையிட்டதை இவர் பார்த்துவிட்டாராம். மறுபடியும் நீராடித் திருமலை நம்பியின் கைங்கரியத்தைத் தொடர்ந்து செய்த கோவிந்தபட்டரை நோக்கி இராமாநுஜர், 'கோவிந்தப் பெருமாளே! என்ன செய்தீர்?' என்று அதிசயமாய்க் கேட்டார். அவரும், 'பாம்பு நாக்கை நீட்டிக்கொண்டு நோவுபடுவதைக் கண்டு அதன் நாக்கிலே முள் இருக்க அதை எடுத்தேன்!' என்று விண்ணப்பம் செய்தாராம். 'இப்படியும் ஒரு ஜீவகாருணியமா?' என்று இராமாநுஜர் ஆச்சரியமாய் உகந்தருளியதாக ஆருயிரப்படி குருபரம்பரா ப்ரபாவம் தெரிவிக்கிறது.

இராமாநுஜர் பெரிய திருமலை நம்பியிடம் இராமாயணத்தின் பொருள்—விசேஷங்களைத் தெரிந்துகொண்டபின், 'அடியேன் திருவரங்கத்தை நோக்கி விடைகொள்ளுகிறேன்' என்று தண்டனிட்டார். அப்போது திருமலைநம்பி, 'இவ்வளவு தூரம் சிரமப்பட்டு வந்த உமக்கு விசேஷமாகப் பரிசு ஒன்றும் தரவில்லையே' என்று வருந்தினர். 'திருவுள்ளம் அவ்விதமாக இருந்தால் கோவிந்தப்பெருமாளைத் தந்தருளலாகாதோ?' என்று கேட்டார் இராமாநுஜர்.

பெரிய திருமலைநம்பி கோவிந்தரை அழைத்து இராமாநுஜரிடம் ஒப்படைத்தார். பிறகு கோவிந்தரை நோக்கி, 'நீர் இன்று தொட்டு இந்த எம்பெருமானாரை, நம்மைக் கண்டாற்போலே தரிசித்துப் பணிசெய்து கொண்டிரும்' என்று கட்டளையிட்டார். அதன்பின் இராமாநுஜர் கோவிந்தருடனும் மற்றைச் சீடர்களுடனும் திருவரங்கத்திற்குத் திரும்பினர்.

வழியில் காஞ்சீபுரத்திற்கு வந்து திருக்கச்சிநம்பிகள் மடத்தில் இவர்கள் தங்கினர்கள். கோவிந்தபட்டர் திருமலைநம்பியையே நினைத்துக்கொண்டு, 'நம்மைத் திருத்திப் பணிகொண்ட குருமூர்த்தியைப் பிரிந்துவிட்டோமே!' என்று ஏக்கமுற்றிருந்தார்.

அதுகண்ட இராமாநுஜர் கோவிந்தரை நோக்கி, 'நீர் மீண்டுபோய்த் திருமலை நம்பியைத் சேவித்துவாரும்' என்று

விடைகொடுத்து, இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்களையும் துணையாகக் கூட்டி அனுப்பிவைத்தார். பிறகு திருக்கச்சிநம்பியுடன் தமது சமயப் பணிகளைக் குறித்தும், மேலே நடக்க வேண்டிய காரியங் களைக் குறித்தும் உரையாடிக் கொண்டிருந்தார்.

கோவிந்தர் திருப்பதிக்குப் போய்த் திருமலைநம்பியின் தலை வாசலை அடைந்தார். அங்கே இருந்தவர்கள் உள்ளே சென்று அறிவிக்க, நம்பி உள்ளம் கலங்கி, 'அந்தப் பித்தனைப் போகச் சொல்லுங்கள்!' என்று சொல்லிவிட்டார். அப்போது அவர் மனைவி, 'இவ்வளவு தூரம் நம்மீது அன்புகொண்டு திரும்பி வந் திருப்பவரை அழைத்துப் பேசவேண்டாமா? களைப்பும் பசியும் தீர உணவு அளிக்கவேண்டாமா?' என்று கேட்டாள்.

அதற்கு நம்பி, 'விற்ற பசுவுக்குப் புல் இடுவார் உண்டோ?' என்று வைராக்கியமாகச் சொல்லி, முகம் கொடாமல் இருந்து விட்டார். மாமாவின் இந்த நிலை கோவிந்த பட்டருக்குச் சிறிதும் அதிருப்தி விளைவிக்கவில்லை. இவர் 'குருவின் கைங்கரியத்தை இழந்தோமே!' என்றுதான் வருந்தினார். மாமா புலப்படுத்திய குரு–சிஷ்ய நிலையைக் குறித்துச் சிந்தித்துக்கொண்டே, இராமா நுஜர் தம்முடன் அனுப்பியிருந்த ஸ்ரீவைஷ்ணவர்களுடன் காஞ்சிக்கு மீண்டார்.

இராமாநுஜர் நடந்ததை அறிந்துகொண்டார். கோவிந்தர் திருமலைநம்பியிடம் கொண்டிருந்த குரு பக்தியை மெச்சினார். அதைக்காட்டிலும் பாராட்டினார் திருமலைநம்பி வற்புறுத்திய விவேக வைராக்கிய நிலையை. கோவிந்தருக்கு இராமாநுஜரும் திருமலைநம்பியின் உள்ளத்தைத் தெளிவாகக்காட்டி, 'கோவிந்தப் பெருமாளே, இனி நீர் நம்முடைய திருவரங்கப் பணிகளில் மனமுவந்து பங்குகொள்வதே முறையாகும்' என்றார்.

அப்பால் இராமாநுஜரும் கோவிந்தரும் மற்றச் சீடர்களும் திருவரங்கத்திற்கு வந்து சேர்ந்தார்கள். 'அரங்கநாதனின் வடக்கு மாளிகைக்குப் போய்ப் பரிசும் பெற்றுவந்துவிட்டார் இராமாநுஜர்!' என்று தெரிந்ததும், திருவரங்கத்திலும் வெளியூர் களிலும் உள்ள மக்கள் கூட்டங் கூட்டமாகத் தரிசனத்திற்கு வந் தார்கள். ஓராண்டுக்கு மேலாக இவர் தரிசனத்திற்குத் தவித்துக் கொண்டிருந்த மக்கள், 'எங்கள் தாயந்திர மறுபடியும் தரிசிக்கப் பெற்றோமே!' என்று, மழைமுகம் கண்ட பயிர்போலத் தழைத் தார்கள்.

திருவரங்கத்திலே கோவிந்தபட்டரின் ஞானபக்தி வைராக் கியங்கள் மேலும் மேலும் வளர்ந்தோங்கிவந்தன. இப்போது

கோவிந்தர், தம் குரு திருமலைநம்பிகள் என்பதை அறவே மறந்து, 'இராமாநுஜரின் உரையாடல்களும் கைங்கரியங்களுமே நமக்குக் காலட்சேபம்; இவரது திருக்கூட்டத்தில் கிடைக்கும் அனுபவமே நமக்கு உரிய அனுபவம்; இவரே நம் பரமகுரு!' என்ற மனநிலையை அடைந்துவிட்டார்.

இந்த நிலையில் கோவிந்தரின் உள்ளத்தில் துறவு-மனப்பான்மை அதிகரித்தது. இவர் தாயார் வற்புறுத்தியும், இராமாநுஜரே வற்புறுத்திப் பார்த்தும், இவருள்ளம் மனைவியுடன் வாழும் இல்லறத்தை நல்லறமாக நோக்கவில்லை. இந்த நிலையில் இவர் இராமாநுஜரிடம் காவியாடையும் முக்கோலும் பெற்றுக் கொண்டு துறவியானார். துறவற வாழ்க்கையில் கோவிந்தபட்டர் எம்பார் என்று பெயர்பெற்று ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியக் குழுவில் இடம் பெற்றார்.

இராமாநுஜர் என்ற ஞான நந்தவனத்தில் பூத்ததொரு புனித மலராக எம்பாரும் காட்சியளிக்கிறார். எம்பார் என்ற பெயர் வந்த நிகழ்ச்சியிலேயே இவரது புனித வைராக்கிய உள்ளத்திற்கு ஒரு சான்று காணலாம். முக்கோலும் காவியாடையும் கொடுத்தபின் இராமாநுஜர், 'என் பெயரையும் உமக்குக் கொடுக்கிறேன்!' என்று சொல்லி 'எம்பெருமானார்' என்ற தம் பெயரைச் சூட்டி மகிழ்ந்தார். ஆனால், இது குறித்து அருளாளப் பெருமாள் எம்பெருமானார்போல் எம்பார் மகிழ்ச்சி அடையவில்லை.

புதுத் துறவியின் முகத்தில் வாட்டம் கண்டதும் இராமாநுஜர் திகைப்புற்றார். அப்போது கோவிந்தபட்டர், 'சுவாமி, திருவடி கேட்டவனுக்குத் திருப்பெயர் கொடுப்பது பொருந்துமா?— பொறுப்பதும் சாத்தியமோ?' என்று விண்ணப்பம் செய்து தண்டனிட்டுக் கிடந்தார். உடனே இராமாநுஜர், எம்பெருமானார் என்ற பெயரை எம்பார் என்று சுருக்கிக்கொடுத்தார்—பெரிய பெருமாள் என்பதைப் பெருமாள் என்று சுருக்குவது போலே!

இராமாநுஜர் எம்பாரின் தாயை, 'என்ன நோன்பு நோற்றீர், இவரைப்பெற்ற வயிறுடைய நீர்?' என்று புகழ்ந்தார். பிறகு மனைவியை நோக்கி ஆறுதல் சொல்ல விரும்பினார். அவள் பளிச் சென்று தண்டனிட்டு, 'அடியேனுக்கும் அந்தக் காவியாடை அருளவேணும்' என்று பிரார்த்தனை செய்தாள். இராமாநுஜர் அப்படியே செய்ய, அந்த அம்மை 'சிறிய ஆண்டாள்' என்ற தாஸ்ய நாமத்துடன் ஸ்ரீராமாநுஜ மடத்தில் பணிபுரியும் அம்மைமாரில் ஒருவராகிவிட்டார்.

# 18

# ஏடும் எழுத்தாணியும்

ஒரு நாள் இராமானுஜர் ஆளவந்தாரின் அருமை பெருமைகளைத் தம் திருக்கூட்டத்திற்கு எடுத்துரைத்தார். அப்போது இவருக்குத் தாம் ஏற்கெனவே செய்திருந்த சபதமும், அது நிகழ்ந்த சூழ்நிலையும் தெளிவாக நினைவுக்கு வந்தன. வேதாந்த சூத்திரங்கள் என்ற பிரம்மசூத்திரங்களுக்கு அந்த மகாத்மா ஆழ்வார்களின் கொள்கைகளுக்கு இசைய ஒரு பாஷ்யம் இயற்ற முடியவில்லையே என்று வருந்தினார் அல்லவா?

'அதை அடியேன் செய்து அவர் நோக்கத்தை நிறைவேற்றுவதாக வாக்களித்திருந்தேன். அது என் பரமகுருவுக்கு நான் கொடுத்துள்ள முதலாவது வாக்கு. அந்த வாக்கை நிறைவேற்று

வதற்குச் சமயம் வந்து விட்டது என்று நம்புகிறேன். இன்றே இப்போதே அந்த முயற்சி ஆரம்பமாக வேண்டும்' என்று கூறினார். 'அப்படியே செய்தருள வேண்டும்' என்று அங்குள்ள அனைவரும் ஒருமுகமாய் விண்ணப்பஞ் செய்து கொண்டார்கள்.

இராமாநுஜர், தாம் இயற்றப் போகும் ஸ்ரீ பாஷ்யத்திற்குப் 'போதாயன விருத்தி' அருந்துணையாகும் என்று சொல்லிவிட்டு, அதை முதலில் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும் என்று தீர்மானித்தார். போதாயன விருத்தி தென்னிந்தியாவில் இல்லை என்பது இராமாநுஜர் அறிந்ததே. அது காஷ்மீரத்தில் தான் உண்டு என்றும் கேள்விப்பட்டிருந்தார். உடனே கூரேசன் முதலானவர்களுடன் புறப்பட்டுக் காஷ்மீரத்தை நோக்கிச் சென்றார்.

காஷ்மீரத்துப் பண்டிதர்களை இவர் சந்தித்து, வேத வேதாந்த விஷயங்களைக் குறித்து உரையாடினார். இவரது புலமையும் வாக்குவன்மையும் அறிவுக் கூர்மையும் அவர்களைப் பிரமிக்கச் செய்தன. ஆனால் இவர், 'மகரிஷி போதாயனர் லட்சம் கிரந்தங்களில் பிரம்மசூத்திர பாஷ்யம் செய்திருக்கிறாரே, அதைச் சங்கரரும் குறிப்பிட்டிருக்கிறார்; அதை நான் படித்துப் பார்க்க விரும்புகிறேன்' என்று சொன்னதும், அவர்கள் இவருக்கு அதைக் காட்டக்கூடாது என்று தீர்மானித்துவிட்டார்கள். ஏனென்றால், அவர்கள் இவருடன் முரண்பட்ட மாயாவாதக் கொள்கையினர் ஆவர்.

இராமாநுஜர் அவர்களது மனநிலையை அறிந்து வருத்தமுற்றார். பிறகு இவர் காஷ்மீரத்தின் தலைநகரான ஸ்ரீநகரிலுள்ள அரசனிடம் போய், 'போதாயன விருத்தியைக் கொஞ்ச காலத்திற்குத் தந்து உதவவேண்டும்' என்று கேட்டுக் கொண்டார். ஒரு தடவை வாசித்துப் பார்ப்பதற்கு அனுமதி கிடைத்தாலும் போதும் என்று இவர் கூறியதும், அதனால் ஆபத்து ஒன்றும் வந்துவிடப் போவதில்லை என்று பண்டிதர்கள் நினைத்துவிட்டார்கள்.

அரசன் இராமாநுஜரின் முகப்பொலிவாலும் ஆழ்ந்த புலமையாலும் வசீகரிக்கப் பெற்றவனாய் இவரை நோக்கி, 'அந்த ஏட்டை நீங்கள் உங்கள் நாட்டுக்கே எடுத்துச் செல்லலாம்' என்று அனுமதியளித்து விட்டான். அது பொறுக்காமல் அவ்வூர்ப் பண்டிதர்கள் சில தினங்களாக இவர்களைத் தொடர்ந்து வந்து அந்த நூலைத் திருடிக்கொண்டு போய்விட்டார்கள். ஸ்ரீபாஷ்யம் எழுதுவதற்குப் பெரிதும் பயன்படத்தக்க ஒரு நூலைப் பெற்றும் இழந்து விட்டோமே என்று பெரிதும் வருந்தினார் இராமாநுஜர்.

அப்போது கூரத்தாழ்வான் இராமாநுஜரை நோக்கி, 'தாங்கள் களைத்துத் தூங்கும்போதெல்லாம் நான் அதைப் படித்துக்கொண்டிருந்தேன். ஒரு தரம் படித்து முடித்துவிட்டேன். அதில் உள்ள பொருள்களை இப்போதே இங்கேயே சொல்லிக்காட்ட வேண்டுமா, அல்லது இரண்டு ஆற்றுக்கிடையே வந்து சொன்னால் போதுமா?' என்று கேட்டார்.

ஒரு தடவை படித்ததையோ கேட்டதையோ அப்படியே நெஞ்சில் பதிய வைத்துக்கொள்ளும் அற்புத ஆற்றல் ஆழ்வானுக்கு வாய்த்திருந்தது. இராமாநுஜர் இளநகை அரும்பியவராய், 'உம் பேராற்றலை நான் அறியாதவனா? அதனால்தானே உம்மைப் பவித்திரமாகப் போற்றி அணிந்து கொண்டிருக்கிறேன்!' என்றார்.

ஸ்ரீபாஷ்யத்தை இராமாநுஜர் சொல்லச் சொல்லக் கூரேசன் எழுதிக்கொண்டே போகவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. குரு சீடரை நோக்கி, 'நாம் சொல்லிக்கொண்டு வரும் பாஷ்ய வாக்கியம் உமது உள்ளத்திற்கு ஒத்திருந்தால் ஒழிய நீர் எழுத வேண்டாம்!' என்று தெளிவாகவும் திட்டமாகவும் கூறினார். ஆழ்வானிடத்தில் அவ்வளவு நம்பிக்கை இவருக்கு. ஆழ்வான் ஓலைபிடித்து எழுதியவர் மட்டும் அல்லர்; உசாத்துணையாக (வினவுவதற்கு உரிய துணைவராக) அமைந்து உதவியவரும் கூட.

ஒரே ஒரு சமயம்தான் கூரேசன் இவர் சொன்னதை எழுதாமல் சும்மா இருந்து விட்டார். 'பக்திமதமாகிய விசிஷ்டாத்வைதத்திற்கு இவர் இப்போது கூறுவது இசைவாக இல்லை' என்று துணிந்தார் சீடர். ஆனால், அதை வெளிப்படையாக அறிவிக்கத் துணியவில்லை. அது உத்தம சீடனின் நிலையன்று என்பது அவர் எண்ணம்.

இராமாநுஜர் ஆரம்பத்தில் தாம் சீடரிடம் கூறியிருந்ததை இப்போது நினைத்துப் பார்க்கவில்லை. தாம் சொன்ன வாக்கியத்தைத் திரும்பத் திரும்பச் சொன்னார். எனினும், 'அவர் எழுத்தாணிதானே நான்!' என்றிருந்த கூரேசனின் எழுத்தாணியும் எழுத மறுத்துவிட்டது! இராமாநுஜரின் உள்ளத்தில் இது சிறிது ஆத்திரத்தை மூட்டியது. 'ஆழ்வானே, நான் சொன்னதை எழுத உமக்கு விருப்பம் இல்லையென்றால், நீரே பாஷ்யம் செய்யும்' என்று சொல்லிவிட்டு எழுந்து போய்விட்டார்.

பிறகு சில சீடர்கள் ஆழ்வானிடம் வந்து தங்கள் அனுதாபத்தைத் தெரிவித்தார்கள். 'இராமாநுஜரை நம்பித்தானே நீர் உம்முடைய செல்வங்களையெல்லாம் துறந்து வந்து விட்டீர்;

அவரும் இப்போது உம்மைக் கோபித்துத் தள்ளிவிட்டாரே! இனி நீர் என்ன செய்யப் போகிறீர்?' என்றார் ஒருவர். வேறொரு சீடர், 'ஆழ்வானே, உம்முடைய கல்வியையும் நுண்ணறிவையும் அறியாதவரா இராமாநுஜர்? அப்படியிருந்தும் உம்மைப் புறக்கணித்துவிட்டாரே; இப்போது நீர் என்ன செய்ய நினைத்திருக்கிறீர்?' என்றார்.

ஆழ்வானோ, 'எனக்கு என்று ஒரு நினைப்பு இருக்க முடியுமா? உடையவரின் உடைமைதானே நான்!' என்று பதில் சொன்னார். இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே, இராமாநுஜர் திரும்பி வந்து விட்டார். தாம் சொன்னதும், ஆழ்வான் எழுத இசையாததுமான அந்த வாக்கியத்தைக் குறித்துச் சிந்தித்துப் பார்த்தார். தாம் கூறியது தவறு என்பதை உணர்ந்து கொண்டார்.

இராமாநுஜர் ஆழ்வானை நோக்கி, 'நான் இப்போது அந்த வாக்கியத்தை மாற்றியமைக்க வேண்டுமென்று தீர்மானித்து விட்டேன்' என்று சொல்லி, விசிஷ்டாத்வைதக் கொள்கைக்குப் பொருத்தமாகத் தம் கருத்தை உருவாக்கிக் கூறினார். ஆழ்வானும் அதிசீக்கிரமாக எழுதலானார்.

'ஜீவனுக்குச் சுதந்திரம் இல்லை, ஆண்டவனைச் சார்ந்திருப்பதே ஜீவனுக்கு உரிய நிலை, ஜீவன் வாழ்வதும் இயங்குவதும் எல்லாம் இறைவன் அருளால்தான்' என்று பொருள்படத் தம் வாக்கியத்தை மாற்றிச் சொன்னதும், கூரேசனின் எழுத்தாணி குதூகலமாய் எழுதிக் கொண்டே போயிற்று.

ஆத்மாவுக்கு ஆத்மாவான இறைவனைப் பரமாத்மா என்கிறோம். ஆத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள உறவை ஆண்டான்-அடிமை உறவு எனலாம். இந்த உறவைச் 'சேஷம்' என்பர். 'சேஷம்' என்றால் அம்சம். இறைவன் தான் முழுமை; ஜீவன் அம்சம்தான்—இக்கருத்தைத்தான் 'சேஷத்வம்' என்ற பதம் குறிப்பிடுகிறது.

ஆண்டான்—அடிமை என்றதும் அது துன்பமயமான உறவுதானே என்று தோன்றுவது இயல்பு. ஆனால் காதலனுக்குக் காதலியும், காதலிக்குக் காதலனும் அடிமைபோல் பணிபுரிவதில் துன்பத்திற்கு இடம் எங்கே? இவர்களுடைய உறவு இன்பமயமானதுதானே? இத்தகைய உறவு புருஷோத்தமனை பகவானுக்கும் ஜீவர்களுக்குமிடையே அமைந்திருக்கிறது. இந்த உறவை மறுக்க முடியாது, ஒழிக்க முடியாது. இதுவே நித்தியமான உறவு; சத்தியமான உறவு—இக்கருத்துகளை ஸ்ரீ பாஷ்

யத்தில் காணலாம். இக்கருத்துகளுக்கு மாறுபட்ட நிலையில் இராமாநுஜரின் ஒரு வாக்கியம் அமைந்தது என்றே ஆழ்வானின் எழுத்தாணி ஓடவில்லை.

ஸ்ரீ பாஷ்யத்தை இராமாநுஜர் சொல்ல ஆழ்வான் எழுதி வரும்போது, இடையில் தோன்றும் ஐயப்பாடுகள் குறித்து இராமாநுஜர் ஆழ்வானுடன் உரையாடித் தெளிந்து கொள்வது வழக்கம். ஆழ்வானும் தம் ஐயப்பாடுகளை மனைவியான ஆண்டாளிடம் உரையாடித் தெளிந்து கொள்வாராம். இராமாநுஜர் தம் 'புனித எழுத்தாணி'யை எப்படி உபயோகித்துக் கொண்டார், பாருங்கள்!

ஸ்ரீபாஷ்யம் இராமாநுஜரின் தனிப் பெருநூல். அதனால் இவரை ஸ்ரீ பாஷ்யகாரர் என்பர். சங்கரரின் பாஷ்யத்தைச் சங்கர பாஷ்யம் என்று சொல்லுகிறோம். இராமாநுஜ பாஷ்யத்தையோ **ஸ்ரீபாஷ்யம்** என்று சிறப்பித்துச் சொல்லுகிறார்கள். ஸ்ரீ பாஷ்யம் தவிர இராமாநுஜர் **வேதாந்த தீபம், வேதாந்த ஸாரம், வேதார்த்த ஸங்கிரகம்** முதலான நூல்களையும் எழுதியிருக்கிறார். சங்கரரைப் போல் பகவத் கீதைக்கும் ஒரு பாஷ்யம் எழுதியிருக்கிறார். இதை இராமாநுஜரின் **கீதாபாஷ்யம்** என்கிறோம்.

வேதார்த்த ஸங்கிரகத்தில், முரண்படுவது போலத் தோன்றும் சுருதி வாக்கியங்களை இசைத்துக் காட்டும் விசிஷ்டாத்வைத சாரமான கொள்கைகளைக் காணலாம். வேதாந்த தீபம் என்பது பிரம்ம சூத்திரங்கள் என்ற வேதாந்த சூத்திரங்களுக்கு ஒரு சுருக்கமான வியாக்கியானமாகும். ஸ்ரீ பாஷ்யம் விரிவாகக் கூறுவதை இது சுருங்கக்கூறி விளங்க வைக்கிறது எனலாம்.

இந்த ஐந்து நூல்களைத் தவிர, சரணு கதிகத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீ வைகுந்த கத்யம் என்ற மூன்று நூல்களையும் இவர் எழுதியிருக்கிறார். இம்மூன்றையும் 'கத்யத்ரயம்' என்பர். சரணுகதி கத்யம் என்ற பெயரிலிருந்தே, இது ஆழ்வார்களின் சரணுகதிக் கொள்கையை வெளியிடுகிறது என்று ஊகிக்கலாம். ஸ்ரீ ரங்க கத்யம் என்ற நூலிலும் சரணுகதி தருமம் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

ஸ்ரீவைகுந்த கத்யம் ஸ்ரீ வைகுந்தம் என்ற பேரின்ப உலகு குறித்தும், முக்தர்களின் நிலை குறித்தும் பேசுகிறது. நித்திய கிரந்தம் என்ற நூல் பக்தர்களுக்கு அன்றாடம் செய்ய வேண்டிய கடமைகளைக் குறித்து ஒரு வழிகாட்டியாக அமைந்திருக்கிறது. சிறப்பாக, பகவானை வழிபடுவதற்கு இது ஒரு வழிகாட்டியாகப் பாகவதர்களுக்கு உதவும்.

இராமானுஜருக்கு முன்பே, விசிஷ்டாத்வைத வேதாந்தம் உருவாகியிருந்தது. போதாயனரைத் தவிர டங்கர், குகதேவர், ஸ்ரீவத்ஸாங்கமிசிரர் முதலானவர்கள் விசிஷ்டாத்வைதக் கொள்கைகளை வெளியிட்டிருப்பதாகத் தெரிய வருகிறது. இவர்களில் திரமிடாசாரியர் என்பவரும் ஒருவர். இவர் பிரம்ம சூத்திரங் களுக்குச் செய்த பாஷ்யத்தைத் திரமிட பாஷ்யம் என்பர். இது குறித்து நமக்கு விசேடமாக ஒன்றும் தெரியாது.

'திரமிடம்' என்பது 'திராவிடம்' என்று இன்று பிரசித்த மாக இருக்கும் சொல்லை நினைவூட்டுகிறது. திரமிடோபநிஷதம் என்று நம்மாழ்வாரின் திருவாய்மொழியைக் குறிப்பிடுவதுண்டு. 'திரமிடோபநிஷதம்' என்றால் 'திராவிட உபநிஷதம்,—அதாவது, தமிழ் உபநிஷதம். தமிழ் என்ற சொல்லுக்கும் திராவிடம் என்ற சொல்லுக்கும் இடையே ஒரு சங்கிலித் தொடர்போல் காணப்படுகிறது திரமிடம் என்ற சொல்.

இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்ன? தமிழ் என்ற சொல்லே தமிளம், தமிடம், திரமிடம் என்றெல்லாம் பரிணமித்து, முடிவில் 'திராவிடம்' ஆகியிருக்க வேண்டும். இதிலிருந்து திரமிட பாஷ்யத்தை இயற்றிய திரமிடாசாரியர் என்பவர் ஒரு தமிழ்நாட்டுப் பேராசிரியர் எனத் துணிவது பொருத்தமே.

இவர்களுக்குப்பின் ஸ்ரீ நாதமுனிகள் விசிஷ்டாத்வைதக் கருத்துகளை உருவாக்கினார். நாதமுனிகளுக்குப் பின் இக் கருத்துகளை வளமாக்கி வளர்த்தவர் யாமுனாசாரியர். இத்தகைய ஆழ்ந்த அடிப்படைமீது நிற்பது ஸ்ரீபாஷ்யம். இதற்குத் தமிழகத்தில் தோன்றிய ஆழ்வார்கள் தங்கள் கருத்துகளாலும் கொள்கைகளாலும் அடிநிலம் அமைத்து உதவியிருக்கிறார்கள்.

ஸ்ரீபாஷ்யம் எழுதப்பட்ட பின்பே இராமானுஜர் பாரதபூமி யெங்கும் சென்று திக்குவிஜயம் செய்தார் என்பது பொதுவாக இன்றைய ஆராய்ச்சியாளர்களின் கருத்து. அகில இந்திய யாத்திரைக்குப் பின்பே இவர் ஸ்ரீபாஷ்யத்தை இயற்றினார், அதற்குமுன் இயற்றவில்லை என்று கருதுவோரும் உண்டு. இது எப்படியிருந்தாலும், காஷ்மீரத்திலே போதாயன விருத்தி உரை ஒன்று இருந்தது என்றும், அதை இராமானுஜர் எப்படியோ—காஷ்மீரத்திற்குச் சென்றோ, காவேரி தீரத்தில் இருந்து கொண்டோ-ஒரு முறையேனும் பார்த்திருக்க வேண்டும் என்றும் ஊகிக்கிறார்கள்.

'உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்து உளன்; என்று பகவானை நம்மாழ்வார் குறிப்பிடுகிறார். உடலுக்கு உயிர் போல் உலகத்திற்கெல்லாம் ஒருயிராக இருப்பவன் பரமாத்மா என்ற பரம்பொருள். இப்படியிருப்பதால்தான், உலகனைத்தும் உய்யுமாறு காத்து நிற்கும் அருள் இறைவனுக்கு உரியதாகும். இப்பொருளை 'விஷ்ணு', 'நாராயணன்' என்ற சொற்கள் நம் உள்ளத்தில் உய்த்துணர வைக்கின்றன.

பகவானை அடையப் பகவானுடைய அருளே உபாயம்; பக்தியையும் சரணாகதியையும் உயிர்நிலையாகக் கொண்ட கைங் கரியம் ஒன்றே வழி. இத்தகைய பெருங்கொள்கைக்கு இடம் தருவது, இராமாநுஜர் தம் ஸ்ரீபாஷ்யத்தில் வெளியிடும் ஸ்ரீவைஷ்ணவ விசிஷ்டாத்வைதக் கொள்கைதான் என்பது ஸ்ரீவைஷ்ணவ அறிஞர்களின் கருத்து.

இதனால் அருளே இறைவனது சொரூபம் என்பதும், அன்பே அடியவருக்கு உரியது என்பதும் நிலைநிறுத்தப்படுகின்றன. இத் தகைய அடிப்படைக் கொள்கை விசிஷ்டாத்வைதத்தின் உட் பொருள். இப்பொருள் விளங்குவது ஸ்ரீபாஷ்யத்திலே.

'பாஷ்யகாரரும் ஸூத்ரவாக்கியங்களை இதுகொண்டு ஒருங்க விடுவர்' என்கிறார், அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் என்ற ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர். இராமாநுஜர் ஸ்ரீபாஷ்யம் இயற்றும்போது உபநிஷதங்களிலும் பிரம்மசூத்திரங்களிலும் ஐயம்திரிபுகளுக்கு இடமாகவுள்ள பொருள்களையெல்லாம் நம் மாழ்வாரின் திருவாய்மொழியிலுள்ள கொள்கைகளைக்கொண்டு ஒழுங்குபடுத்திப் பொருள் கூறுகிறார் என்பது மேலே சொன்ன ஆசாரியப் பேரறிஞரின் அபிப்பிராயம்.

'விசிஷ்டஸ்ய அத்வைதம்' என்று விரிகிறது விசிஷ் டாத்வைதம் என்பது. உயிர்ப்பொருளையும் உயிர் அல்லாத பொருளையும் சரீரமாக உடைய வஸ்துவின் அத்வைதம் என்பது விசிஷ்டாத்வைதம் என்ற பதத்தின் பொருள். சித்து என்ற உயிர்ப்பொருளையும், அசித்து என்ற உயிரல்லாத பொருளையும் சரீரமாக உடைய வஸ்து அல்லது பரம்பொருள் இரண்டில்லை, ஒன்றே ஆகும் என்பதுதான் 'விசிஷ்டாத்வைதம்' என்பதில் வரும் அத்வைதத்திற்கு உரிய பொருளாகும்.

சித்து, அசித்து, ஈச்வரன் என்ற மூன்று பொருள்களும் என்றும் உள்ள பொருள்கள் என்றும், இந்த முப்பொருளின் கூட்டமே உலகம் என்றும், ஈச்வரன் எண்ணிறந்த அழகிய

மங்கள குணங்களை உடையவன் என்றும், ஸ்ரீபாஷ்யம் வெளியிடும் விசிஷ்டாத்வைதம் தெரிவிக்கிறது.

'சித்து அசித்தொடு ஈசன் என்று செப்புகின்ற மூவகைத் தத்துவத்தின் முடிவு கண்ட சதுமறைப் புரோகிதன்' என்று நம்மாழ்வாரைப் போற்றுகிறது ஸ்ரீவைஷ்ணவ உலகம். இந்த நம்மாழ்வாரின் உயிர்நிலைக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு உருவாகியிருக்கிறது ஸ்ரீபாஷ்யம் என்பது ஸ்ரீவைஷ்ணவ உலகும் ஒருமுகமாய் ஒப்புக்கொண்டிருக்கும் அபிப்பிராயம்.

# 19

# திக்குவிஜயம்

இராமாநுஜர் ஸ்ரீபாஷ்யம் எழுதி முடித்தபின், தம் கொள்கைகளைப் பாரத பூமி எங்கும் திரிந்து பரப்ப முயன்றார். குலசேகராழ்வார் 'தீதில் நன்னெறி' என்று குறிப்பிடுகிறார். பக்திப் பெருநெறியாகிய ஸ்ரீவைஷ்ணவ சமயத்தை. திருவரங் கத்திலிருந்து பாகவதப் பெரியோர்கள்—துறவிகளும் அடியவர் களும்—புறப்பட்டு எங்கும் திரிந்து பாகவத தர்மப் பிரசாரம் செய்து வந்தார்கள் என்ற குறிப்பைச் சிறப்பாகக் குலசேகரர் வாக்கிலும், பொதுவாக மற்ற ஆழ்வார்களின் வாக்கிலும் காண்கிறோம்.

இருந்தும் கிடந்தும் நின்றும் நடந்தும் தவம் செய்யலாம்: நடையாடும் தவசிகள் இந்தப் பக்திமதப் பிரசாரகர்கள்! சென்ற

இடமெல்லாம் நாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு பக்திப் பிரசாரம் செய்த பெரியோர்களைப் 'பரபரப்பாய்த் திரியும் யோகிகள்' என்று கூறுவதுமுண்டு. இத்தகைய பெரியோர்களாகப் பொய்கையார், பூதத்தார், பேயார் என்ற முதலாழ்வார்கள் மூவரையும் குறிப்பிடுவது பொருந்தும்.

அவர்கள் காலத்தில் தேச சஞ்சாரிகளான பாகவதர்கள் 'தீர்த்தகரர்' என்று குறிக்கப் பெற்றதும் உண்டு. தீர்த்தகரர் என்றால் சென்ற இடத்தைத் தூய்மையாக்குகிறவர்கள். இத்தகைய பெரியோர்கள் திரிந்து பிரசாரம் செய்வதால் உலகம் நலமுடையதாகும், பாக்கியம் பெறுவதாகும் என்ற கருத்தையும் ஆழ்வார்கள் வாக்கிலே காண்கிறோம்.

இவ்வாறு தேச யாத்திரை செய்து பக்திப் பெருங்கொள்கைகளைப் பரப்புவோர், 'திவ்ய தேசங்கள்' என்று சிறப்பாகக் குறிக்கப் பெறும் திருப்பதிகளுக்கெல்லாம் போவார்கள்; வேறு பிரதேசங்களுக்கும் சென்று தங்கள் கொள்கைகளை நிலைநிறுத்தி வருவார்கள்.

இராமாநுஜரும் தம் மடத்திலிருந்த சீடர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி, அவர்களில் விரும்பி உடன் வந்தவர்களையும் அழைத்துக் கொண்டு, தேச யாத்திரையும் திவ்ய தேச யாத்திரையும் செய்யத் தொடங்கினார். அந்தச் சீடர்களில் கூரத்தாழ்வான், அருளாளப் பெருமாள் எம்பெருமானார் முதலானோர் முக்கியமானவர்கள்.

இந்த யாத்திரை சோழ தேசத்திலிருந்து தொடங்கியது. கும்பகோணத்திற்குப் போனார்; அங்குள்ள திருக்கோயில்களில் வழிபாடு செய்தார். திருவாலி-திருநகரி என்ற தலத்திற்கு வந்தார். இது திருமங்கையாழ்வார் பிறந்த இடம்.

இந்தப் பிரதேசத்தில் இவர் தம் சீடர் குழாத்துடன் போய்க் கொண்டிருந்தபோது ஹரிஜன வகுப்பைச்சேர்ந்த பெண் ஒருத்தி இக் கூட்டத்தை நோக்கி வந்துகொண்டிருந்தாள். இராமாநுஜர் அவளை நோக்கி, 'அம்மணி! கொஞ்சம் விலகி நின்றால் அப்பால் நாங்கள் போய்விடுவோம்' என்று சொன்னார். இவருடன் அந்தக் கூட்டத்திலிருந்த ஒருவர் அப்படிச் சொன்னார் என்றும் கூறுவதுண்டு.

ஆனால் அந்த அம்மாள் ஒதுங்கவில்லை. 'எங்கே ஒதுங்கச் சொல்லுகிறீர்கள், சுவாமிகளே?' என்று கேட்டாள். வலது பக்கத்திலோ திருமங்கையாழ்வாருக்குப் பகவான் திருமந்திர உபதேசம் செய்ததாகக் கருதப்படும் இடம்; இடது பக்கத்திலோ

திருவாலியில் கோயில் கொண்டிருக்கும் பெருமாள் உறையுள், இப்படிச் சொல்லிவிட்டு அப்பெண், 'அடியேன் எங்கே ஒதுங்குவேன் ?'' என்று கேட்டாள்.

'உலகம் முழுதும் உலகளந்தான் சந்நிதியாக இருக்க, எங்கே ஒதுங்குவது ?' என்று அவள் கேட்டதாகவும் கூறுவர்.

உடனே இராமாநுஜர் அவளை நோக்கி, 'மன்னிக்கவேணும்' என்றார். 'வயது முதிர்ந்தும், ஆணவமும் முதிர்ந்து அறிவுக் கண்ணை மூடியிருக்கிறது. இந்தக் கர்வம் பிடித்த துறவியைக் காட்டிலும் வைஷ்ணவ சின்னங்கள் உனக்கே தகும் அம்மா,!' என்றும் சொன்னாராம்.

அவளை வைஷ்ணவியாக்கிக் கொண்டார் இராமாநுஜர். கோயிலில் பகவானுக்கு அருகே அவளுருவை இன்றும் காணலாம். (இச் செய்தி உயர்திரு சி. ஆர். ஸ்ரீநிவாஸையங்கார் எழுதியுள்ள 'ஸ்ரீ ராமாநுஜாசார்யாவின் வாழ்க்கையும் உபதேசங்களும்' என்ற நூலில் பக்கம் 172–ல் காணப்படுகிறது.)

சோழ வளநாட்டிலிருந்து இராமாநுஜர், செந்தமிழ் நாடு என்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட பாண்டிநாட்டுக்குச் சென்றார். இந்த நாடு பதினெட்டுத் திருப்பதிகளை உடையது. திருமாலிருஞ்சோலை, ஸ்ரீவில்லிபுத்தூர் முதலான தலங்களைத் தரிசித்துவிட்டு ராமேச்வரம் வரை யாத்திரை செய்தார். பிறகு 'பொருநை' என்றும், 'பொருநல்' என்றும் சொல்லப்படும் தாம்பிரபருணி ஆற்றங்கரையை நோக்கிப் புறப்பட்டார்.

தென்பாண்டி நாட்டிலுள்ள நவதிருப்பதிகளில் ஒன்றான திருப்புளிங்குடிக்கு இராமாநுஜர் வந்து தரிசனம் செய்தபின், திருக்குருகூரை நோக்கிப் புறப்பட்டார். மாடவீதியில் எதிரே இரண்டு பெண்கள் உரையாடி வருவது கண்டு, 'திருக்குருகூர் எவ்வளவு தொலைவில் இருக்கிறது ?' என்று விசாரித்தார். பெண்களில் ஒருத்தி நகைத்து, 'சுவாமிகளுக்குத் திருவாய்மொழி பாடம் இல்லையோ ?' என்று கேட்டாள். உண்டு என்று இராமாநுஜர் சொல்ல, மறுபடியும் அவள், "கூவுதல் வருதல்" என்ற பாசுரம் தெரியாதோ ? என்று கேட்டாள்.

'தெரியும், தெரியும்!' என்று இருமுறை சொல்லி அவர்களுக்குத் தண்டனிட்டார் இராமாநுஜர். 'பாசுரம் ஏற்கெனவே தெரியும் ; புளிங்குடியிலிருந்து குருகூர் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது என்று இப்போது தெரியும்' என்பது குறிப்பு. 'கூவுதல் வருதல்' என்ற ஆழ்வார் பாசுரத்திலிருந்து, ஆழ்வார் திருநகரி கூப்பிடு தூரத்தில் இருக்கிறது என்று ஊகம் செய்யலாம் என்பதை இராமாநுஜர் ஒரு நொடிப்பொழுதில்

உணர்ந்து கொண்டார். அந்த இளம் பெண்களின் நுண்ணறிவையும் பக்தியையும் தாம் பாராட்டியதற்கு அறிகுறியாகத் தம் வணக்கத்தையும் செலுத்தினர்.

அப்பெண்கள் தம் வீடுகளுக்கு விரைந்துபோய், நடந்ததைச் சொன்னார்கள். அவர்களுடைய தந்தையர் வெளியே வந்து இராமாநுஜரைக் கண்டதும் தண்டனிட்டு, 'ஐயோ, அபசாரம் நேரிட்டதே! எங்கள் குழந்தைகளை மன்னித்தருள வேணும்' என்று வேண்டிக் கொண்டார்கள்.

பிறகு அவர்கள் இவரைத் தங்கள் இல்லங்களுக்கு அழைத்துப்போய் உபசரித்தார்கள்; அப்பெண்களுடன், இவரை வழிபட்டார்கள். இராமாநுஜரோ, 'எத்தனையோ இடங்களில் பொருள்—விசேடங்கள் பெற்றிருக்கும் நமக்கு, இங்கும் பொருள்—விசேடம் ஒன்று கிடைத்ததே!' என்று பூரித்துக் குருகூரை நோக்கிச் சென்றார்.

சாரற்காலம் என்ற பருவகாலத்து வெள்ளம் பெருகிப் பொருநையாறு மிகவும் அழகாய்க் காட்சியளித்தது. நீர்வள நிலவளங்களுடன் தமிழ் தழுவிய பக்திவளமும் கொழித்த திருநகரியை இராமாநுஜர் புறக்கண்ணாலும், மனோபாவம் என்ற அகக்கண்ணாலும் பார்த்துப் பரவசமானார்.

> **இதுவோ திருநகரி, ஈதோ பொருநல்,**
> **இதுவோ பரம பதத்து எல்லை!—இதுவோதான்**
> **வேதம் தமிழ்செய்து மெய்ப்பொருட்கு முப்பொருளால்**
> **ஓதும் சடகோபன்** ஊர்

என்ற பாட்டாகப் பரிணமித்தது இவரது பரவச உணர்ச்சி.

ஆழ்வார்திருநகரியில் இருக்கும்போது நம்மாழ்வாரின் பெயரைத் தகுதி வாய்ந்த தம் சீடர் ஒருவருக்கு இட்டு மகிழ விரும்பினர். பெரிய திருமலைநம்பியின் புதல்வரான பிள்ளான் இவர் திருவடிகளில் வணங்கி, 'அடியேனுக்கு இந்த ஆழ்வாரின் திருப்பெயரைச் சூட்டிக்கொள்ள ஆசை' என்றார். திருக் குருகைப்பிரான் பிள்ளான் என்று அன்று முதல்தான் பிள்ளான் குறிக்கப் பெற்றார் என்பது நேர் ஐதிகம்.

ஆழ்வார்திருநகரியைத் திருக்குருகூர் என்றும் குருகை என்றும், நம்மாழ்வாரைக் குருகைப் பிரான் என்றும் கூறுவர். 'குருகு' என்ற தமிழ்ச் சொல்லுக்கு நாரை, கோழி, குருக்கத்தி முதலான பொருள்கள் உண்டு. இடைச்சங்க நூல் என்று கருதப்படும் ஒரு நூல் இப்பெயரால் குறிக்கப்படுவதையும்

காண்கிறோம். குருகூர், குருகை என்பன பழைய தமிழ்ப் பெயர்கள் என்பதில் ஐயமில்லை. எனவே குருகையைப் பண்டைத் தமிழ் ஊர்களில் ஒன்று எனக் கருதலாம்.

பண்டைத் தமிழர்களின் நாகரிகத்திற்கும் பண்பாட்டுக்கும் ஒரு வளர்ப்புப் பண்ணையாக இருந்த இவ்வூர், நம்மாழ்வார் வாழ்ந்ததால் ஆழ்வார்திருநகரி என்றும், சுருக்கமாகத் திருநகரி என்றும் சொல்லப்படுகிறது. திருமங்கையாழ்வார் வாழ்ந்ததால், அந்த ஊர் திருவாலி-திருநகரி என்று கூறப்படுகிறதல்லவா ?

நம்மாழ்வாருக்குப் பல திருப்பெயர்கள் உண்டு. சடகோபன், மாறன், காரிமாறன், பராங்குசன், வகுளாபரணன், குருகைப் பிரான், குருகூர்நம்பி, குருகூரன், திருவாய்மொழிப் பெருமாள், வேதம் தமிழ் செய்த பெருமாள், பொருநல் துறைவன், குமரித் துறைவன், பவரோக பண்டிதன், முனிவேந்து, பரப்பிரம்ம யோகி, நாவலர்பெருமான், ஞான தேசிகர், ஞானப்பிரான், தொண்டர்பிரான்-இப்படிப் பல பெயர்களால் பகவானைத் தொழுவதுபோல் இவரையும் பக்தர்கள் தொழுதேத்துவர். இப்பெயர்களால் இராமாநுஜரும் நம்மாழ்வாரைத் தொழுது இன்புற்றார்.

உண்மையை வெளியிடும் நாவன்மையை இவர் சிறப்பாகப் பெற்றிருந்ததால் இவரை நாவீறர் என்றும், திருநாவீறு உடைய பிரான் என்றும் போற்றுவர். இவரது ஞானோதயம் பக்தருலகின் அக இருளைப் போக்கியதால், இவரை உதய பாஸ்கரர் என்றும், வகுள பூஷண பாஸ்கரர் என்றும் குறிப்பிடுகிறார்கள்.

ஞானத் தமிழுக்கு அரசு என்றும், ஞானத் தமிழ்க்கடல் என்றும், மெய்ஞ்ஞானக் கனி என்றும், தெய்வஞானச் செம்மல் என்றும் கூறுவதும் உண்டு. நாவலர்பெருமான் என்றும், பாவலர் தம்பிரான் என்றும் இவரைப் புகழ்வதும் உண்டு. வினவாது உணர்ந்த விரகர் என்றும் வியந்து போற்றுவர். குழந்தைமுனி என்றும் அகம் குழைந்து வாழ்த்துவர்.

வைஷ்ணவர்களைப் பிரபன்னர் என்றும் கூறுவதுண்டு; எனவே நம்மாழ்வார் பிரபன்னதிலகர் என்றும், பிரபன்னஜன கூடஸ்தர் என்றும் போற்றப் பெறுகின்றார். பிரபன்னர்கள் இவரைத் தங்களுக்குரிய தனிப்பெருஞ் செல்வம் என்று கருதி, ‘ நிதி ’ என்று சிறப்பித்துப் பேசுவர். ஆசாரியர்களுக்கெல்லாம் ஆசாரியர் என்று மதித்துப் பரமாசாரியர் என்பர். எல்லாவற்றுக்கும் மேலான தருமத்தைச் சுட்டிக் காட்டினார் என்று ‘ பரம தார்மிகர் ’ என்பர்.

தாம்பிரபருணி ஆற்றங்கரையில் சுமார் ஐம்பது மைல் பரப்புள்ள இன்றைய திருநெல்வேலி மாவட்டப் பகுதியை அன்று 'திருவழுதிவளநாடு' என்றார்கள். இந்த நாட்டைச் சேர்ந்த நம்மாழ்வாரைத் 'திருவழுதிவளநாடர்' என்று சிறப்பித்துப் பேசினார்கள்.

இந்தக் குழந்தைமுனி குழந்தையாக இருந்தபோது, பெற்றோர், 'எங்கள் குடிக்கரசே!' என்று வாயார இவரை அழைத்தார்களாம். பிரபன்ன குலம் என்ற தொண்டர் குலத்தை வாழ்விக்கவே தேசசஞ்சாரமும் திக்குவிஜயமும் செய்துவந்த இராமாநுஜரும், நம்மாழ்வாரை 'எங்கள் குடிக்கரசே!' என்று வாயார நெஞ்சாரப் போற்றி வழிபட்டார். நம்மாழ்வாருக்குக் 'குலபதி' என்றும் ஒரு பெயர் உண்டு.

நம்மாழ்வாரைத் 'தென்னரங்கன் பொன்னடி' என்றும் குறிப்பிடுவர். பெருமாளின் திருவடிகளை நம் தலையில் சூட்டுவதற்கு அறிகுறியாக ஸ்ரீசடகோபம் என்ற சடாரியைச் சூட்டுகிறார்கள் அல்லவா? நம்மாழ்வாரைப் பகவானின் திருவடி என்று பக்தருலகம் மதிக்கிறது என்பது இதன் பொருள். அப்படியே தம்மை நம்மாழ்வாரின் பொன்னடியாக உலகம் கருத வேண்டும் என்பது இராமாநுஜரின் ஆசைகளில் ஒன்று.

இந்த ஆசை நிறைவேற வேண்டுமென்று இராமாநுஜர் ஆழ்வார்திருநகரியில் நம்மாழ்வாரின் சந்நிதியிலேயே பிரார்த்தனை செய்துகொண்டார். இவர் விருப்பத்திற்கிணங்க, அதுவரை 'மதுரகவி' என்று அழைக்கப்பெற்று வந்த சடகோபரின் திருவடிநிலை அன்று தொட்டு இராமாநுஜர் பெயரால் அழைக்கப் பெற்று வருகிறது.

ஆழ்வார்திருநகரியில் இராமாநுஜர் தங்கியிருந்த காலத்தில், பகவானுடைய திருப்பெயர்களைக் கேட்பதுபோல், ஆழ்வாரின் பெயர்களைக் கேட்பதும் இவர் செவிக்குத் தேனாக இருந்தது. ஒரு நாள் திருநகரியின் நீராடுதுறையான சங்கணித்துறையில் நீராடிக் கொண்டிருந்தார். கரையேறி ஆடை உடுத்துத் திருமண்காப்பு அணிந்து கொண்டு சீடர்குழாம் புடைசூழ இவர் ஆழ்வார் கோயிலுக்குப் புறப்பட்ட சமயத்தில், சலவைத் தொழிலாளி (வண்ணான்) ஒருவன் இவர் திருவடிகளில் தலைசாய்த்து வணங்கினான்.

பிறகு அவன் சற்றுத் தூரத்திலிருந்த நாலு பிள்ளைகளையும் கூப்பிட்டு, இவர் திருவடிகளில் விழுந்து வணங்குமாறு சொன்னான். அப்போது அவர்களை ஒவ்வொருவராகப் பெயர் சொல்லி

அழைத்தான். முதலாவது பையனைச் 'சடகோபா! வா' என்று கூவி அழைத்தான். அடுத்த பையனைக் 'காரிமாறு!' என்று கூப்பிட்டான். 'வகுளாபரணு!' என்றான் மூன்றாமவனை' கடைக்குட்டியை வெகு அருமையாக இராமாநுஜருக்குச் சுட்டிக் காட்டி, பிறகு அவனை நோக்கி, 'குருகூர்நம்பி! நீயும் கும்பிடு,' என்றான்.

இராமாநுஜர் சிறிது பொழுது தன்னை மறந்து நின்றார் அருகிலிருந்த வைஷ்ணவர் ஒருவர் இராமாநுஜரை நோக்கி. 'ஆசாரிய சுவாமிகளே! இப்படித் தாங்கள் திகைத்து நிற்ப தற்குக் காரணம் யாதோ? அறிவித்தருள வேணும்' என்று வேண்டிக் கொண்டார்.

உடனே யதிராஜர், 'இந்த ஈரங்கொல்லியை (வண்ணானை)ப் போல் இல்லறத்தைத் தழுவி, "அமுது ஊறும்" ஆழ்வார் திருப்பெயர்களைக் குழந்தைகளுக்கு இட்டு ஆர்வத்துடன் அழைக்கும் பேறுபெற்றேன் இல்லையே; இப்படிக் காவிதாங்கி நின்றேனே!' என்று பதில் சொன்னார்.

குருகூரிலிருந்து, மதுரகவியாழ்வாரின் ஊராகிய திருக் கோளூருக்குப் போய்க் கொண்டிருந்தார் இராமாநுஜர். அவ்வூரிலிருந்து ஒரு பெண் எதிரே வந்தாள். இவரைக் கண்டதும், தண்டனிட்டு நின்றாள். அவள் திருக்கோளூரி லிருந்து வருவதாகத் தெரிந்து கொண்டதும் இராமாநுஜர், 'ஆழ்வார் பாசுரத்தில் "புகும் ஊர் திருக்கோளூரே" என்று வருகிறதே, அம்மா! உனக்கு அது புறப்படும் ஊராயிற்றே?' என்று கேட்டார்.

அவளோ, முயல்-புழுக்கை வயலிலே கிடந்தென்ன, வரப்பிலே கிடந்தென்ன? ஞானமில்லாத அடியேன் கோளூரில் இருந்தால் என்ன, வெளியே இருந்தால் என்ன?' என்று பதில் சொன்னாள். பிறகு அவள், 'அறிஞர் கூட்டத்திலோ, அன்பர் கூட்டத்திலோ வைத்து எண்ணப்படுவதற்கு அடியேனுக்கு என்ன தகுதி இருக்கிறது?' என்று சொல்ல விரும்பினாள். தன் கருத்தை அப்படியே சொல்லிவிடாமல், இனிமையான பொருள் புதைந்த ஒருவகை நாடோடித் தமிழ்நடையில் வெளியிடத் தொடங்கினாள்.

அவள் வார்த்தை எண்பத்தொரு வாக்கியங்களாக அமைந்து காணப்படுகிறது, சில குரு பரம்பரைச் சுவடிகளில். இங்கே சில உதாரணங்களை மட்டும் காண்போம்:

**அகம் ஒழித்து விட்டேனோ விதுரரைப் போலே**
**தாய்க் கோலம் செய்தேனோ அநுசூயை போலே**
**பிஞ்சாய்ப் பழுத்தேனோ ஆண்டாளைப் போலே**
**அந்தரங்கம் சொன்னேனோ திரிசடையைப் போலே**
**தெய்வத்தைப் பெற்றேனோ தேவகியாள் போலே**
**ஆயனை வளர்த்தேனோ யசோதையாள் போலே**
**அவல் பொரியை ஈந்தேனோ குசேலரைப் போலே**
**ஆயுதங்கள் ஈந்தேனோ அகஸ்தியரைப் போலே**
**இடைகழியில் கண்டேனோ முதலாழ்வார் போலே**
**வழிஅடிமை செய்தேனோ இளையாழ்வார் போலே**
**அக்கரையில் விட்டேனோ குகப்பெருமாள் போலே**
**கண்டு வந்தேன் என்றேனோ திருவடியைப் போலே**

இப்படிச் சொல்லிவந்தவளின் வாக்கிலே இராமாநுஜரின் தொடர்புள்ள சில வார்த்தைத் துளிகளும் வந்து விழுந்தன. உதாரணமாக,

**யான்சிறியேன் என்றேனோ**
**திருமலைநம்பியைப் போலே**

என்பதையும்,

**அந்தாதி பாடினேனோ**
**அமுதனாரைப் போலே**

என்பதையும் சுட்டிக்காட்டலாம்.

திருவரங்கத்து அமுதனார் இராமாநுஜ நூற்றந்தாதி பாடினார் என்பதையும், திருமலைநம்பி இராமாநுஜரிடம் 'என்னைக் காட்டிலும் சிறியவனை என்னால் காணமுடியவில்லை!' என்று சொன்னார் என்பதையும் தெற்கே திருக்கோளூரில் வசித்த இவளும் தெரிந்து கொண்டிருந்தாள். இது இராமாநுஜரின் புகழ் தேசமெங்கும் பரவியிருந்தது என்பதற்குச் சான்றாவதுடன் இந்தப் பெண்ணின் அறிவுத் திறனுக்கும் பக்திப் பிடிப்பிற்கும் சான்றுதான்!

திருக்கோளூரிலிருந்து ஆழ்வார் திருநகரி வந்து இராமாநுஜர் திருக்குறுங்குடிக்குச் சென்றார். அங்கே கோயில்-வழிபாட்டில் சில சீர்திருத்தங்களைச் செய்தார் என்பதைக் குரு பரம்பரை நூல்கள் ஒரு கதை வடிவில் தெரிவிக்கின்றன. திருக்குறுங்குடி நம்பியே இவருக்குச் சீடராகி, ஸ்ரீவைஷ்ணவநம்பி என்ற தாஸ்யநாமமும் பெற்றுக்கொண்டாராம். இவர் பலரையும் எப்படித் திருத்தி நெறிப்படுத்துகிறார் என்பதன் இரகசியத்தையும் 'ஸ்ரீவைஷ்ணவநம்பி' இவரிடம் தெரிந்துகொண்டாராம்.

பிறகு இராமாநுஜர் இப்போது திருப்பதிசாரம் என்று சொல்லப்படும் திருவண்பரிசாரத்திற்குச் சென்று வழிபட்டார். இது நம்மாழ்வாரின் தாய் பிறந்த ஊர். 'தேன் கொள்சோலை திருக்குறுங்குடி' என்று சொல்லப்படும் குறுங்குடி என்ற திருப்பதியில்தான் நம்மாழ்வாரின் தாய் தந்தையர் தங்களுக்கு மகப்பேறு அளிக்கவேண்டுமென்று எம்பெருமானைப் பிரார்த்தித்துக்கொண்டனர் என்றும், குறுங்குடி நம்பியின் அருளால் நம்மாழ்வார் தோன்றினர் என்றும், நம்மாழ்வார் வரலாறு தெரிவிக்கிறது.

இராமாநுஜர் திருவாட்டாறு முதலான தலங்களுக்கும் போய்த் திருவனந்தபுரத்தை அடைந்தார். அங்கே பத்மநாப சுவாமி கோயிலில் பூஜை முறையில் திருத்தம் செய்ய முயன்ற போது நம்பூரி அந்தணர்கள் இடம் கொடுக்கவில்லை. திருவனந்தபுரத்தில் படுத்துறங்கியவர் குறுங்குடிக்கு அருகில் ஒரு பாறை மீது கண்விழிக்க நேர்ந்தது என்று குரு பரம்பரை நூல்கள் கூறுகின்றன.

சீர்திருத்தத்தை விரும்பாதவர்கள், இரவிலேயே இவரைத் தூக்கிக் கொண்டுபோய்க் குறுங்குடிக்கருகில் விட்டுவிட்டார்கள் என்று கருதலாம். அனந்தசயனத்து எம்பெருமானாகிய பத்மநாபனே நம்பூரி அந்தணர்களுடன் சேர்ந்துகொண்டு, இவரை உறங்கும்போது திருக்குறுங்குடிக்கு அருகில் ஒரு பாறை மீது கிடத்திவிட்டதாகவும் கதை வழங்குகிறது! இப்படியெல்லாம் பக்தர் கதைகளில் உண்மை நிகழ்ச்சிகள் சிதைந்தும் திரிந்தும் அற்புத நிகழ்ச்சிகளாய்ப் பரிணமிப்பதுண்டு.

அனந்தசயனம் ஒப்புக்கொள்ளாத இராமாநுஜரின் சீர்திருத்த முறைகளைத் திருக்குறுங்குடி ஒப்புக்கொண்டு விட்டது என்று ஊகிக்கலாம். ஆழ்வார்திருநகரியில் இவரது கொள்கைகள் ஏற்கெனவே பரவியிருந்திருக்க வேண்டும். ஆழ்வாரின் கொள்கைகளை அடிப்படையாக அமைத்துத்தானே இவர் தமது சீர்திருத்த முறைகளை உருவாக்கியுள்ளார்.

இராமாநுஜர் தென் பாண்டிநாடு செல்லுமுன்பே, அழகர் கோயிலான திருமாலிருஞ்சோலை, ஸ்ரீவில்லிபுத்தூர் முதலான தலங்களைத் தரிசித்து அவற்றையும் தம் ஸ்ரீவைஷ்ணவப் பெருங் கொள்கைகளுக்கு உரிய வளர்ப்புப் பண்ணைகளாக்கிக் கொண்டார் என்று கருதலாம். 'பெரும் பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் (தங்கை)' என்று ஆண்டாளின் வாழ்த்துப்பாட்டு அறிவிக்கிறது.

இராமாநுஜர் ஸ்ரீரங்கத்திலிருந்து சோழ தேசமெங்கும் போய்விட்டுப் பாண்டிய நாட்டிற்கும் திருவனந்தபுரத்திற்கும்

சென்றபின் திரும்பி வந்து, நேரே திருப்பதிக்குச் சென்றூர் என்றும், பிறகு அகோபிலம், மகாராஷ்டிர தேசம் இவற்றின் மூலமாக, அங்கும் தம் கொள்கைகளைப் பரப்பியவண்ணம், சென்று வடநாட்டை அடைந்தார் என்றும் கூறுவர்

வடநாட்டிலே துவாரகை முதலான தலங்களைத் தரிசித்துக் கொண்டு வடமதுரை, காசி, பிரயாகை, ஹரித்வாரம் முதலிய இடங்களுக்குச் சென்றூர். பதரிகாசிரமத்திற்கும் போனூர். குருக்ஷேத்திரத்தின் மூலமாக அயோத்திக்கும் கயாவுக்கும் சென்றூர். அப்பால் வங்க நாட்டிற்கு வந்து, ஜகந்நாதத்திற்கும் சென்றூர். கடைசியாகத் திருவரங்கத்திற்கு வந்து தம் யாத்திரையை முடித்துக் கொண்டார். இப்படி இராமானுஜரின் யாத்திரை வழியைச் சிலர் குறிப்பிடுகிறூர்கள்.

வேறு சிலர் வேறு விதமாய்க் கூறுவர். ஸ்ரீரங்கத்திலிருந்து ஒரு நீண்ட யாத்திரைக்குத் திட்டமிட்டுப் புறப்பட்டவர், முதலில் காஷ்மீரத்திலுள்ள சாரதாபீடத்திற்குச் சென்றூர் என்றும், பிறகு வேறு இடங்களுக்குச் சென்றூர் என்றும், அப்பால் திருப்பதி வழியாய்த் திரும்பி வந்து தெற்கே ஆழ்வார்திருநகரி, திருக்குறுங்குடி முதலிய இடங்களுக்குப் போனூர் என்றும் சொல்லுகிறூர்கள். இவர்கள், இந்த நீண்ட யாத்திரைக்குப் பின்பே இராமானுஜர் தம் முக்கிய நூல்களை இயற்றினூர் என்றும் கருதுகிறூர்கள்.

இப்படிக் கருத்து-வேற்றுமைகள் இருந்தபோதிலும், இராமானுஜர் சென்ற இடங்களிலெல்லாம் தம் கொள்கைகளைப் பரப்பினூர் என்பது குறித்தும், பல்வேறு கொள்கையினருடன் வாதாடி வெற்றி பெற்றூர் என்பது குறித்தும் அபிப்பிராய பேதங்களுக்கு இடமில்லை. காஷ்மீரத்து அரசன் ஒருவன் இவருக்குச் சீடன் ஆனூன் என்று கூறுவதிலும், அதனூல் பண்டிதர்களுக்குப் பொறூமைக் காய்ச்சல் ஏற்பட்டது என்று கருதுவதிலும் கூடத் தவறு இருப்பதற்கு இடமில்லை.

'வதரி வணங்குதுமே' என்று திருமங்கை மன்னன் பாடியிருக்கும் பதரிகாசிரமத்திலும் இவர், ஒருவரைச் சீடராக ஏற்றுக் கொண்டு அவரை ஆண்டானுக்குச் சீடராக்கினூர் என்பர். ஜகந்நாதத்தில் இவர் கொள்கைகளுக்கு அங்குள்ள அர்ச்சகர்களால் எதிர்ப்பு ஏற்பட்டது என்று சொல்லுகிறூர்கள். அதனூல் இராமானுஜர் ஜகந்நாதத்திலிருந்தும் அப்புறப்படுத்தப் பட்டார் என்பர். இதையும் ஜகந்நாத க்ஷேத்திரத்தில் கோயில் கொண்டிருக்கும் எம்பெருமானூல் நிகழ்த்தப்பெற்ற ஓர் அற்புதமாக்கிக் கதை புனைந்திருக்கிறூர்கள்.

ஸ்ரீகூர்மம் என்ற தலத்தில் சில சீர்திருத்தங்களைச் செய்த பின், இவர் வாரங்கல், ஸ்ரீ காகுளம் முதலான இடங்களுக்குச் சென்றார் என்றும், அப்பால் அகோபிலம் சென்று திருப்பதிக்கு வந்தார் என்றும் கூறுகிறார்கள். எப்படியும், இராமாநுஜர் தம் காலத்தில் வடநாட்டிலும் வைஷ்ணவக் கொள்கைகளைப் பரப்ப முயன்றார் என்று கருதுவதற்கு ஆதாரம் உண்டு.

பின்பழகிய பெருமாள் சீயர் இயற்றிய ஆறாயிரப்படி குரு பரம்பரா ப்ரபாவம் என்ற நூலில், இராமாநுஜர் திருக்குடந்தை என்ற கும்பகோணம் முதலான திருப்பதிகளைத் தரிசித்தபின், திருமாலிருஞ்சோலை முதலான பாண்டி நாட்டுத் தலங்களைத் தரிசித்தார் என்ற செய்தி காணப்படுகிறது. திருபுல்லாணியைத் தரிசித்துச் சேது தரிசனம் செய்தபின் ஆழ்வார்திருநகரிக்குச் சென்றார் என்ற செய்தியையும் இங்கே காண்கிறோம்.

பிறகு திருக்குறுங்குடிக்கு வந்த செய்தி கூறப்படுகிறது. திருக்குறுங்குடிப் பெருமாளாகிய நம்பி இவருக்குச் சீடரான கதையும் கூறப்படுகிறது. திருவண்பரிசாரத்தையும் திருவாட்டாற்றையும் தொழுதபின் இவர் திருவனந்தபுரம் சென்றார் என்ற செய்தியையும் கேட்கிறோம்.

அனந்தசயனத்தில் இவர் எதிரிகளின் கொள்கைகளை முறியடித்து ஸ்ரீ ராமாநுஜ மடம் ஒன்றை ஏற்படுத்தியதாகவும் இந்தக் குருபரம்பரை நூல் தெரிவிக்கிறது. மலையாள தேசத்தில் உள்ள மற்றத் திருப்பதிகளுக்கும் இவர் சென்று ஸ்ரீவைஷ்ணவத்திற்கு விரோதமான கொள்கைகளை வாதில் வென்றார் என்றும் பின்பழகிய பெருமாள் சீயர் தெரிவிக்கிறார்.

அப்பால் மேலைக் கடற்கரை வழியாக இவர் வடநாட்டுக்குச் சென்றாராம். வடமதுரை, சாளக்கிராமம், அயோத்தி, பதரி, நைமிசாரண்யம் முதலிய இடங்களுக்கும் சென்றார் என்கிறது ஆறாயிரப்படி குருபரம்பரை நூல். ஆய்ப்பாடி (கோகுலம்), கோவர்த்தனகிரி, பிருந்தாவனம் முதலான திருப்பதிகளையும் சேவித்துக் கொண்டு, தவறான பிரசாரங்களைக் கண்டித்தார் என்றும் இந்த நூல் கூறுகிறது.

'ஸ்ரீபாஷ்யகாரர்' என்ற திருப்பெயர் கலைமகளாலேயே சூட்டப்பட்டது என்கிறார் பின்பழகிய பெருமாள் சீயர். இவர் யாதவப்பிரகாசருடன் போனபோது கங்கையாடவில்லை; இப்போது கங்கையில் இவர் நீராடியதாகவும், கண்டம் என்ற கடிநகரில் பெருமாளைச் சேவித்ததாகவும் சீயர் கூறுகிறார். ஜகந்நாதத்தில் ஜகந்நாதனைத் தொழுது அங்குள்ள வித்வான்

களின் தவறான கொள்கைகளைக் கண்டித்ததாகவும், அங்கு இராமானுஜ மடம் ஒன்று ஏற்படுத்தியதாகவும் இதே சீயர் கூறியுள்ளார். அகோபில நரசிம்மனைச் சேவித்தபின் இவர் திருப்பதிக்கு வந்தார்.

திருப்பதியில் சீர்த்திருத்தங்கள் செய்தபின், காஞ்சீபுரம், திருவல்லிக்கேணி, திருநீர்மலை, மதுராந்தகம், திருவயிந்திர புரம், வீரநாராயணபுரம் என்ற காட்டுமன்னார் கோயில் முதலான தலங்களைத் தரிசித்துக் கடைசியாகத் திருவரங்கம் பெரியகோயிலுக்கு வந்து சேர்ந்தார் ஸ்ரீபாஷ்யகாரர் என்று கூறி முடிக்கிறார் இந் நீண்ட யாத்திரை குறித்துப் பின்பழகிய பெருமாள் சீயர்.

ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பெற்றுள்ள 'ஸ்ரீராமானுஜ ரின் வாழ்க்கை' என்ற வங்கமொழி நூலில் ஸ்ரீசுவாமீ ராம கிருஷ்ணாநந்தர் இராமானுஜரின் திக்குவிஜயத்தை 23-ம் அத்தியாயத்திலே குறிப்பிடுகிறார். ஸ்ரீபாஷ்யம் இயற்றப்பட்ட பின்பே இந்த யாத்திரை நிகழ்ந்தது என்று இந்த ஆசிரியரும் கூறுகிறார்.

தம் 74 முக்கிய சீடர்களுடனும் வேறு பலருடனும் இராமானுஜர் யாத்திரை செய்தார் என்கிறார். இவரும் கேரளத் திலிருந்து இராமானுஜர் வடநாட்டுக்குச் சென்றதாகவே சொல்லுகிறார்.

காஷ்மீரத்தில் அரசனும் பண்டிதர்களும் இராமானுஜரின் சீடர்களாயினர் என்றும் சுவாமி ராமகிருஷ்ணாநந்தர் சொல்லு கிறார். காசியிலும் இவர் சில காலம் தங்கிப் பல பண்டிதர் களையும் வேதாந்திகளையும் தம் மதத்தில் சேர்த்துக் கொண்டார் என்கிறார்.

பூரிஜகந்நாதம் என்ற ஸ்ரீ புருஷோத்தம க்ஷேத்திரத்தில் இராமானுஜர் சில தினங்கள் தங்கி ஓய்வுகொண்டு, தம் சீடரான கோவிந்தரின் 'எம்பார்' என்ற பட்டப் பெயரால் 'எம்பார்' மடத்தை ஏற்படுத்தினார் என்கிறார் ராமகிருஷ்ணாநந்தர். பூரியில் இருந்த பண்டிதர்கள் இராமானுஜரிடம் வாதப் போரிடத் துணியவில்லையாம். எனினும் அர்ச்சகர்கள், பாஞ்சராத்திர ஆகமங்களுக்கு இணங்க ஜகந்நாதருக்குப் பூஜைமுறைகளை நடத்த வேண்டும் என்ற இவர் கொள்கையைப் புறக்கணித்து விட்டார்களாம். இராமானுஜர் நாடு கடத்தப்பட்ட செய்தியை ஓர் அற்புத நிகழ்ச்சியாகப் புனைந்துரைக்கும் கதையை ஸ்ரீராம கிருஷ்ணானந்தரும் குறிப்பிடுகிறார்.

தம் 'இராமாநுஜர் வாழ்க்கை வரலாற்றில்' உயர்திரு ஸி.ஆர். ஸ்ரீநிவாஸையங்கார் இராமாநுஜரின் அகில இந்திய யாத்திரையைப் பதினைந்தாம் அத்தியாயத்தில் கூறியுள்ளார். இவர் கூறியிருப்பது முக்கிய அம்சங்களில் ஆருயிரப்படி குரு பரம்பரை நூலைத் தழுவிச் செல்லுகிறது.

அடிக்குறிப்பு ஒன்றில், இராமாநுஜரின் ஆழ்வார்திருநகரி விஜயத்தைக் குறிப்பிடும்போது இவர், ஆழ்வார்திருநகரி என்ற திருக்குருகூரில் இராமாநுஜர் கேட்ட ஒரு கேள்விக்கு ஒரு சிறுமி பிரபந்தத்திலிருந்து ஒரு பாட்டை ஒப்பித்து விடை கூறினள் என்ற செய்தியை எடுத்துக் காட்டுகிறார். இச்சிறுமியின் அறிவையும் பக்தியையும் மெச்சியவராய் இராமாநுஜர் இவளுடன் சென்று இவள் வீட்டிலும் தங்கினார் என்கிறார்.

இந்த நிகழ்ச்சியால், இராமாநுஜர் காலத்தில் திவ்யப் பிரபந்தப் பயிற்சி ஆழ்வார்திருநகரியில் சிறப்பாகக் காணப்பட்டது என்று ஊகிக்கலாம். இவருக்குக் குழந்தைகள்மீதும் சிறுவர் சிறுமியர் மீதும் இருந்த அபிமானத்திற்கும் இந்த நிகழ்ச்சி ஒரு நல்ல சான்றாகும்.

இராமாநுஜர் கேரள நாட்டிலிருந்து வடக்கு நோக்கிச் சென்றதாகவே திரு. ஸி. ஆர். ஸ்ரீநிவாஸையங்கார் கூறுகிறார். திருப்பதி, அகோபிலம், மகாராஷ்டிர நாடு மூலமாக இராமாநுஜர் வடநாட்டிற்குச் சென்றார் என்ற செய்தி அடிக் குறிப்பில் தரப்பட்டிருக்கிறது.

★ ★ ★

சோழ சக்ரவர்த்திகள் திக்குவிஜயம் செய்ததுபோல் இராமாநுஜரும் செய்தார். அரசர்களின் திக்குவிஜயம் பெரும்பாலும் நாசவேலையாகவே முடிந்தது. யதிராஜரின் திக்குவிஜயமோ ஆக்கவேலையாகி மக்களை வாழ்வித்தது.

இராமாநுஜர் திருவரங்கத்திற்குத் திரும்பி வந்ததும் நகரவாசிகளும் பிறரும் பல்லாயிரக்கணக்காகக் கூடி வரவேற்றனர். அப்போது, 'சுவாமிகளே, சௌக்கியமாகப் பயணம் செய்து வந்தீர்கள் என்று நினைக்கிறோம்' என்று விசாரித்தவர்களைக் குளிர நோக்கி இராமாநுஜர், 'அருமருந்தாகிய நம்பெருமாள் எப்போதும் நம்முடன் இருக்க, சௌக்கியக்குறைவும் உண்டோ?' என்று மறுமொழி கூறினர். இத்தகைய அசையாத நம்பிக்கை இவரது திக்கு விஜயத்தை மக்களுக்கே ஒரு வெற்றியாக்கி விட்டது.

# 20

# அப்பனுக்குச் சங்காழி அளித்த அண்ணல்

திக்கு விஜயம் செய்து வடநாட்டிலிருந்து திரும்பிவரும் வழியில் இராமாநுஜர் அகோபிலத்திற்கு வந்து விட்டுத் திருமலைக்கும் வந்து சேர்ந்தார். இது இரண்டாவது திருப்பதி விஜயம். இப்போது திருமலையில் சைவர்களுக்கும் வைஷ்ணவர் களுக்குமிடையே கருத்து-வேற்றுமைகள் ஏற்பட்டிருந்தன. திருவேங்கடத்து அப்பனைச் சைவர்கள் ' எங்கள் நாயனார் '— அதாவது எங்கள் தலைவர்—என்று உரிமை கொண்டாடியதாக ஆறுயிரப்படி குரு பரம்பரை நூல் தெரிவிக்கிறது.

சிவ பக்தர்கள் உரிமை கொண்டாடியதற்குப் பேயாழ்வாரின் ஒரு பாட்டும் சான்றாகும் என்கிறார்கள்.

தாழ்சடையும் நீள்முடியும்
ஒண்மழுவும் சக்கரமும்
சூழ்அரவும் பொன்நாணும்
தோன்றுமால்,—சூழும்
திரண்டருவி பாயும்
திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய்
இசைந்து

என்பது முதலாழ்வார் மூவருள் ஒருவரான பேயாழ்வாரின் திருவாக்கு.

இப்பெருமாளிடம் ஜடையும் காணப்படுகிறது, கிரீடமும் காணப்படுகிறது என்று தொடங்குகிறது பேயாழ்வார் பாட்டு. மழுவும் காணப்படுகிறது, சக்கரமும் காணப்படுகிறது என்றும் சொல்லுகிறார். சிவபெருமானுக்குரிய பாம்பாகிய அணியும் இவரிடம் தோன்றும், திருமாலுக்குரிய பொன்நாணும் தோன்றும் என்றும் கூறுகிறார். ஹரிஹர உருவங்கள் இரண்டும் ஒருங்கே இசைந்திருக்கின்றன இப்பெருமாளிடம் என்கிறார்.

'திரண்டு அருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு' உரியதொரு நிலை என்று பேயாழ்வார் சைவத் தொடர்பையும் ஒப்புக் கொள்வது போல் அமைந்திருக்கிறது இந்தப் பாசுரம்.

• இதிலிருந்து, சிவசின்னங்களும் பேயாழ்வார் காலத்தில் திருவேங்கட முடையானுக்கு உரியனவாக இருந்தன என்று கருதுவோரை இன்றளவும் காண்கிறோம். இவர்கள், இந்த நிலை இராமாநுஜரால் மாற்றப்பட்டது என்று ஊகிக்கிறார்கள். தங்கள் ஊகத்திற்கு ஆதாரமாகக் குரு பரம்பரைக் கதைகளையும் சுட்டிக் காட்டுகிறார்கள். இது சரியா ?-பொறுமையுடன் நிதானமாய்ப் பார்ப்போம்.

ஆறாயிரப்படி குருபரம்பரை நூலில், இராமாநுஜர் சைவர்களை நோக்கி, 'உங்கள் தம்பிரானுக்கு (கடவுளுக்கு) அசாதாரண சின்னமான திரிசூல-டமருகத்தையும், எங்கள் பெருமாளுக்கு அசாதாரண சின்னமான திருவாழி, திருச்சங்காழ்வார்களையும் (சக்கரத்தையும் சங்கையும்) பண்ணித் திருவேங்கடமுடையான் திருமுன்பே வைக்கலாம். அவர் எத்தை எடுத்துத் தரித்துக் கொள்ளுகிறாரோ அத்தை இட்டு அவர் சொரூப நிருபணம் பண்ணக்கடவது' என்று சொன்னதாக வருகிறது.

இதிலிருந்தே இராமாநுஜர் காலத்தில் வேங்கடவன் சங்கு சக்கரங்களைத் தரித்திருக்கவில்லை என்பது புலனாகிறதல்லவா ?—

என்று கேட்கிறுர்கள். இது ஒரு முக்கியமான கேள்வி. மேலும் தொடர்ந்து பார்ப்போம், ஆருயிரப்படியில் பின்பழகிய பெருமாள் சீயர் மேலும் கூறுவதை.

'அவ்வாயுதங்களைப் பண்ணி அவர் ஸந்நிதியிலே வைத்துக் கர்ப்பக்கிரகத்தில் ஒருத்தருமில்லாதபடி சோதித்துத் திருக்காப்பைச் சேர்த்துக்கொண்டு புறப்பட்டு வந்து......' என்று மேலும் செல்லுகிறது ஆருயிரப்படியில் காணும் செய்தி. காலை வேளையில் பூட்டைத் திறந்து பார்க்கும்போது சங்கும் சக்கரமும் தரித்துக் கொண்டிருந்தாராம் பெருமாள். திரிசூலத்தையும் டமருகம் என்ற உடுக்கு வாத்தியத்தையும் அணிந்து கொள்ளவில்லையாம். இதன் பொருள் என்ன? ஏதோ ஒரு சூழ்ச்சி நடந்திருக்கக் கூடுமா?

இப்படித் திருப்பதியைச் சீர்திருத்தியபின் இராமாநுஜர் 'திருவேங்கடத்து எந்தையைத் திருவடிதொழுது, அப்போதே திருமலையில் (திருமலையிலிருந்து) இறங்கித் திருத்தாழ்வரையில் (மலையடிவாரத்தில்) ஆழ்வார்களையும் திருவடி தொழுது புறப்பட்டு நேரே காஞ்சீபுரம் நோக்கிப் போய்விட்டார்' என்கிறது ஆருயிரப்படி—குருபரம்பரை நூல். இந்தச் செய்தியிலிருந்து, இராமாநுஜர் காலத்திலேதான் திருப்பதிப் பெருமாள் சங்கு சக்கரம் தரித்திருக்க வேண்டும் என்று ஊகம் செய்வது சரித்திர மனப்பான்மையாகுமா? முன்னும் பின்னும் பார்த்தும், உற்றுப் பார்த்தும் ஊகிப்பதன்றோ முறை?

வேறு குருபரம்பரைக் கதைகளில் இச்செய்தி சிற்சில கூட்டல்—கழித்தல்களுடன் காணப்படுகிறது. பிரபந்நாம்ருதம் என்ற நூலில் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளின் திருமார்பில் இராமாநுஜர் திருமகளின் உருவை அமைத்தார் என்ற செய்தியையும் கேட்கிறோம். இப்படி இவர் வேங்கடேசரின் 'மாமனுர்' ஆகிவிட்டதாக இந்நூல் தெரிவிக்கிறது.

ஏற்கெனவே வேங்கடேசப் பெருமாள் தமது அருமைத் தொண்டனை தொண்டைமான் சக்கரவர்த்திக்கு எதிரிகளை வெல்வதற்காகத் தம் சங்கு சக்கரங்களைக் கொடுத்திருந்ததால் இராமாநுஜர் அந்த நஷ்டம் தீரத் தாம் சங்காழி (சங்கும் திருவாழியும்) கொடுத்தார் என்ற செய்தியையும் குருபரம்பரைக் கதைகளில் கேட்கிறோம். இதனுல் இவர் வேங்கடேசனுக்குக் 'குரு'வும் ஆனுர் என்கிறுர்கள்.

இத்தகைய குருபரம்பரைக் கதைகளில் எல்லாம் திருப்பதியில் சைவர்களுக்கு உரிமை இருந்தது, அது இராமாநுஜர் காலத்தில் நீங்கியது என்பதற்குச் சான்றுகள் கிடைக்கின்றன

என்பர். கோவிந்தராஜப் பெருமாளையும் நடராஜர் கோயிலில் காண்கிறோமல்லவா? • அந்தமாதிரி வேங்கடவன் கோயிலும் சிவன் கோயிலாக இருந்து அங்கே பெருமாளின் சின்னங்களும் காணப்பட்டிருக்கலாமே எனக் கருதுவோரும் உண்டு.

திருவண்ணாமலை போன்ற பிரசித்தமான சிவஸ்தலங்களிலும் கோயிலில் திருமாலைக் காண்கிறோமல்லவா? இக்கோயில்களில் திருமால் பரிவார தேவதைகளில் ஒன்றாக அமைந்து சிவவழிபாடு செய்வதாகச் சைவ ஐதிகம் அறிவிக்கிறது என்பதையும் எடுத்துக் காட்டுகிறார்கள். இப்படிக் கூறுவது ஆராய்ச்சி முறையா?

திருவேங்கடம் சிவஸ்தலமாக இருந்தால், தேவாரம் பாடிய மூவருள் ஒருவரும் இதைப் பாடாமல் விட்டுவிட்டதற்குக் காரணம் என்ன? அவர்கள் பாடாத இக்கோயிலை ஆழ்வார்கள் பாடியிருக்கிறார்கள்; திருவரங்கத்திற்கு அடுத்தபடியாக இதுவே முக்கிய விஷ்ணுஸ்தலம் என்று பொருள்படப் பாடியிருக்கிறார் கள். பேயாழ்வார் உள்ளிட்ட முதலாழ்வார்களின் வாக்கிலிருந்து, திருவேங்கடம் அக்காலத்தில் திருவரங்கத்தைக் காட்டிலும் பிரசித்தமான விஷ்ணுஸ்தலமாக இருந்தது என்றும் தெரிய வருகிறது. எனவே, பேயாழ்வாரின் ஒரு பாட்டிலிருந்து ஊகங் கள் செய்வது சரியன்று. ' தனிமரம் தோப்பாமா?'

• சிலம்புச் செல்வம் என்று இந்நாளில் பிரசித்தமாகச் சொல் கிறோமே, அந்தச் சிலப்பதிகாரம் திருவேங்கடத்தைத் திருமாலின் திருப்பதியாகப் பாடியிருக்கிறது என்பதை அறியாத தமிழறிஞரும் உண்டோ? இளங்கோவடிகள் வாக்கில் திருமாலின் இத் திருப்பதி,

**வீங்குநீர் அருவி**
**வேங்கடம்**

என்று குறிக்கப் பெற்றிருக்கிறது.

' வேங்கடத்து உச்சியில் ' என்ற ஆழ்வார் வாக்கை நினை வூட்டும்படி அமை து,

**ஓங்குயர் மலையத்து**
**உச்சி மீமிசை**

என்ற சிலப்பதிகார ஆசிரியர் வாக்கு.

திருவேங்கடத்து எம்பெருமான் சங்கு சக்கரங்களை அணிந் திருந்தான் என்பதைத் தெளிவாகக் கூறுகிறார் சிலப்பதிகார ஆசிரியர். சக்கரத்தை ' ஆழி ' என்றும், சங்கைப் ' பால் வெண் சங்கம் ' என்றும் இவர் குறிப்பிடுகிறார்.

இவற்றைத் தன் ' தாமரைச் கை 'யில் இப்பெருமான் ஏந்தி யிருப்பதாகச் சொல்லுகிறார் இவ்வாசிரியர். நீலமேகம் ஒன்று

இருபுறமும் சூரியனும் சந்திரனும் (ஞாயிறும் திங்களும்) ஒருங்கே விளங்கக் காட்சிதருவதுபோல் திருப்பதி எம்பெருமான் காட்சி வழங்குவதாய்க் கூறுகிறது சிலப்பதிகாரம்.

'செங்கண் நெடியோன் நின்ற வண்ணம்' இது என்று இப் பகுதி முற்றுப்பெறுகின்றது. இப்படித் திருமாலின் நின்ற திருக் கோலத்தைத் திருப்பதியில் வருணித்திருக்கும் இளங்கோவடிகள், திருவரங்கத்துச் சயனத் திருக்கோலத்தையும் பாடுகிருர். திருவ ரங்கத்தில் கிடந்த வண்ணம் காணப்படுவதுபோல் அதே திருமாலின் 'நின்ற வண்ணம்' காணப்படுகிறது திருவேங்கடத் திலே என்று பொருள்படப் பாடியிருக்கிருர். ஸ்ரீரங்கநாதனின் 'வடக்கு மாளிகை' திருவேங்கடம் என்ற வைஷ்ணவர் கொள் கையை இளங்கோவடிகள் பதிவு செய்திருப்பதுபோல அவர் மணிவாக்கு அமைந்திருக்கிறது சிலம்புச் செல்வத்திலே.

'வீங்குநீர் அருவி வேங்கடம்' என்று இளங்கோவடிகள் கூறுவதையே, 'திரண்டருவி பாயும் திருவேங்கடம்' என்று பேயாழ்வாரும் கூறியுள்ளார் எனலாம். சிலப்பதிகார காலம் முதலாழ்வார்கள் காலத்திற்கும் முற்பட்டது. எனவே இளங்கோ வடிகள் கண்ட திருமாலேயே ஆழ்வார்களும் கண்டனர், பேயாழ் வாரும் கண்டார் என்று கருதுவதே முறையாகும். ஆனல் பேயாழ்வாரின் வேங்கடப் பெருமாள் சைவ வைஷ்ணவ சமரஸ மூர்த்தியாகவும் தரிசனம் அளிக்கிருர்.

இத்திருப்பதி எம்பெருமான் நம்மாழ்வாருக்கு 'அலர்மேல் மங்கை உறைமார்ப'ஞகத் தரிசனம் அளிப்பதையும் காண் கிருேம். எனவே, இராமாநுஜர் காலத்திற்கு முன்பே திருமலே-வேங்கடவன் சங்கு சக்கரங்களுடனும் மார்பில் மகாலட்சுமியுட னும் காட்சியளித்தான் என்பது உறுதி. இராமாநுஜர் காலத் தில் தனக்குரிய சின்னங்களே இப்பெருமான் இழந்திருந்தான் என்று ஊகிப்பது பொருந்தும்.

இழந்திருந்த சின்னங்களே மீட்டுக் கொடுத்து நாட்டை வாழ்வித்தருளினுர் இராமாநுஜர் என்று கருதிய மக்கள் நன்றியறி வுடன் இவரை வேங்கடவனுக்குக் குருவாகவும் மாமனுராகவும் உபசரித்துப் பேசுகிருர்கள் என்று கருதுவதே பொருத்தமாகும்.

கையிலுள்ள சங்கு சக்கரங்கள் திருமாலின் சர்வசக்திக்கு அறிகுறி. மார்பில் உள்ள மகாலட்சுமி சத்தியத்தின் மார்பில் தான் உண்மையான அழகு திகழும், அருள் திகழும் என்ற மகத் தான உண்மைக்கு நினைவுக்குறி. இத்தகைய பேருண்மைகளே நிலைநாட்டி நாட்டை வாழ்வித்தார் இராமாநுஜப் பெருவள்ளல்

என்ற வரலாற்றுச் செய்தியைத்தான் விநோதமாகவும் ஓர் அளவு இரசமாகவும், சிவபக்தர்களுக்குச் சற்று விரசமாகவும், ஸ்ரீவைஷ்ணவ குரு பரம்பரை வரலாறுகள் குறிப்பிடுகின்றன.

திருப்பதி மான்மியம் கூறும் திருவேங்கடத் தலபுராணம் என்ற ஒரு நூல் உண்டு. இது வடமொழியிலும் இருக்கிறது, தமிழிலும் இருக்கிறது; செய்யுள் வடிவிலும் இருக்கிறது, வசனத்திலும் இருக்கிறது. 'திருவேங்கடேசுவரன் ஆராய்ச்சிக் கழக'த் தமிழ் ஆராய்ச்சியாளராக இருந்த திருவாளர் டி. பி. பழனியப்ப பிள்ளை இத்தலபுராண வசனம் ஒன்று எழுதியிருக்கிறார். இதில், 'இராமாநுஜன் பிரார்த்தனைப்படி ஸ்ரீநிவாசன் சங்கு சக்கரம் தரித்த அத்தியாயம்' என்பது 29-ம் அத்தியாயமாகக் காணப்படுகிறது.

நூறு ஆண்டுகளுக்கு முன்பு திருவேங்கடத் தலத்தின் கதைகளையும் செய்திகளையும் பல பழைய நூல்களிலிருந்து திரட்டி ஸ்ரீவீரராகவசுவாமி ஐயங்கார் திருவேங்கடத் தலபுராணம் என்ற பெயரால் 1,500 தமிழ்ச் செய்யுள் அடங்கிய ஒரு நூல் பாடியிருக்கிறார். அதுதான் திரு. தி. பொ. பழனியப்ப பிள்ளையால் வசன நடையில் எழுதப்பட்டிருக்கிறது.

இதில் மேலே குறித்த அத்தியாயத்தில் பின்வரும் வாக்கியங்கள் காணப்படுகின்றன. 'தொண்டைமான் சக்கரவர்த்தி வெற்றிபெறும் பொருட்டு முன்பு தன் சங்கு சக்கரங்களை அவன் கையில் கொடுத்து அவனுக்கு வரம் கொடுத்தபடியாகவே பலநாள் ஸ்ரீநிவாஸப்பெருமாள் தன் சங்குசக்கரங்களை உலகினர் கண்களுக்குப் புலப்படாதபடி ஒளித்து வைத்தனன். அப்பெருமானின் திருவடிவைக் கண்டவர்கள் தம்தம் கருத்துக்கு இயைந்தபடி அரன் என்றும் குமரன் என்றும் மாயவன் என்றும் பலவாறு சொல்லிச் சமய வாதங்களால் வேறுபாடு உற்றுப் பகைமை கொள்வார்கள்.'

இந்தச் சூழ்நிலையில் இராமாநுஜர் திருப்பதிக்கு வந்ததாக இத்தலபுராணம் தெரிவிக்கிறது. 'பண்டைய வேத நெறியோடு திருக்குருகூரின்கண் வந்த மெய்ஞ்ஞானத் தமிழ் மறையாகிய திருவாய்மொழி ஓங்கும்படிச் செய்து, சரசுவதி தலைமேல் கொண்டு பாராட்டும்படி ஸ்ரீபாஷ்யம் இயற்றிய' எதிராஜர் என்று இராமாநுஜர் இங்கே குறிக்கப் பெறுவதைக் காண்கிறோம்.

இவர் வேங்கடமலையை அணுகி அங்குள்ள குதர்க்கவாதிகளை வாதத்தால் வென்று அடக்கி 'வேங்கடத்து அண்ணலை வாழ்த்

திஞர்' என்றும் இத்தலபுராணம் சொல்லுகிறது. 'உலகினர் யாவரும் அறியுமாறு சங்கு சக்கரங்களைத் தாமரைக் கைகளில் தரித்தருளித் தரிசனம் தந்தருளல் வேண்டும் என்று இராமாநுஜர் வேண்டிக் கொள்ள, அவ்வண்ணமே அப்பொருமான் தரிசனம் தருவான்' என்று எதிர்காலம் உரைப்பதுபோல் கூறுகிறது தல புராணம். இது,

**பகைஅணங்கு ஆழியும்**
**பால்வெண் சங்கமும்**
**தகைபெறு தாமரைக்**
**கையின் ஏந்தி**

என்று சிலப்பதிகாரத்தில் வருவதை நினைவூட்டுவதாய்க் கருதலாம்.

❋ ❋ ❋

'வடவேங்கடம் தென்குமரி' என்பவை தமிழகத்தின் வட எல்லையாகவும் தென் எல்லையாகவும் முறையே குறிக்கப் பட்டுள்ளன. இப்படித் தொடங்கும் தொல்காப்பியத்திற்கு உரைகண்ட 'உச்சிமேல் புலவர்கொள் நச்சிஞர்க்கினியர்', 'நிலம் கடந்த நெடுமுடி அண்ணலை நோக்கி உலகம் தவஞ் செய்து வீடுபெற்ற மலையாதலானும், எல்லாரும் அறியப்படுத லானும், வடவேங்கடத்தை எல்லையாகக் கூறிஞர்' எனக் கூறி யுள்ளார். இந்த நச்சிஞர்க்கினியர் சைவ அத்வைதி என்று கருதப்படுபவர்.

இளங்கோவடிகள் வைணவரும் அல்லர், சைவரும் அல்லர். இவர் திருவேங்கடவனின் நின்ற திருக்கோலத்தைக் குறிப்பிடுவ துடன் இத்திருமலையை 'நெடியோன் குன்றம்' என்று குறிப் பிடுவதையும் காண்கிறேம். கவிச் சக்கரவர்த்தியான கம்பரும்— சைவ வைஷ்ணவ சமரச மனப்பான்மையுடன் இராமாயணம் பாடியிருக்கும் இத்தனிப் பெருந் தமிழ்ப் புலவரும்,—இம்மலையை 'மழைநிற வானவன்......தாளிணை தாங்கிய அம் மலை' என்று சுட்டிக் காட்டுகிருர். 'புகழ் பொதிந்த மெய்யேபோல் பூத்து நின்ற... வேங்கடம்' என்கிருர்.

சங்க காலத்திலேயே திருப்பதி மலை, கோவிலும் திருவிழாவு மாய்ப் பிரசித்தி பெற்றிருந்தது. புறப்பொருள் வெண்பாமாலை என்ற பழந்தமிழ் நூலும் திருவேங்கடத்தைத் திருமாலின்



ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள், உத்ஸவமூர்த்தி, வஜ்ரஅங்கி சேவை, திருமலை

திருப்பதியாகவே குறிப்பிடுகிறது. பிற்காலச் சைவப் புலவர்களான சைவ எல்லப்ப நாவலர், சிவப்பிரகாசர் முதலானவர்களும் திருவேங்கடத்தைத் திருமால் வாழும் தமிழக எல்லையாகவே வருணித்திருக்கிருர்கள்.

இப்படியெல்லாம் தொன்று தொட்டு வந்திருக்கும் மரபை ஒட்டியே, இராமாநுஜர் தருமநெறி நோக்கித் தம் காலத்தில் திருவேங்கடவன் இழந்திருந்த சங்கு சக்கரங்களையும், திருமகளையும் மீட்டுக் கொடுத்து அனைவரையும் வாழ்வித்தருளினூர். இக்காரணம் பற்றியே 'அப்பனுக்குச் சங்காழி அளித்த வள்ளல்' என்ற திருப்பெயரும் இராமாநுஜருக்கு ஏற்பட்டிருக்கிறது.

# 21

# இராமாநுஜப் பெருவெள்ளம்

இராமாநுஜரின் மடாலயத்திற்குரிய தனிப்பெருஞ் செல்வம் கூரத்தாழ்வான், முதலியாண்டான், அருளாளப் பெருமாள் எம்பெருமானார், கிடாம்பியாச்சான், அனந்தாழ்வான், அகளங்கன், எம்பார், வடுகநம்பி முதலான சீடர்களின் தொகுதியாகும். இத்தொகுதியில் பொன்னாச்சியார் என்ற பெண்மணிக்கும் இடம் உண்டு.

இராமாநுஜரின் சீடர்களில் கூரேசன் என்ற கூரத்தாழ்வானுக்கு ஒரு தனிச் சிறப்பு. 'ஊரும் நாடும் உலகமும் நம்மைப் போல ஆகச் செய்ய' வேண்டும் என்ற ஒரே நோக்குடன் வாழ்ந்த இராமாநுஜருக்குப் பவித்திரமாக அமைந்து ஸ்ரீபாஷ்

யத்தை இயற்றும் போது உசாத்துணையாகவும் அமர்ந்திருந்த கூரத்தாழ்வான், இராமாநுஜரது வாழ்க்கையின் ஜீவநாதத்தை மற்றவர்களைக்காட்டிலும் தம் உட்செவியில் தெளிவாகக் கேட்டு உள்ளத்தில் நன்றாகப் பதிவு செய்துகொண்டிருந்தார் என்பது திண்ணம்.

தமது பெரும் பொருட் செல்வத்தை முற்றும் துறந்து மனைவியுடன் திருவரங்கத்தில் வசித்துக்கொண்டிருக்கும்போது கூரத்தாழ்வான் உபாதானம் செய்தே காலங்கழித்து வந்தார். ஒரு நாள் உச்சிப்பொழுதுவரை மழை பெய்தவண்ணமாயிருந்தது. உபாதான காலமும் தவறிவிட்டது; இல்லத்திலும் உணவு தயாரிக்க வசதியில்லை. திருவாய்மொழியே உண்ணும் சோறும் பருகும் நீரும் என்று கருதியிருப்பவரானதால் இப்பாசுரங்கள் சிலவற்றை ஓதியபின் பட்டினியாகவே படுத்துக்கொண்டார்.

அந்த வேளையில் அரங்கநாதனுக்குப் பிரசாதம் நிவேதனமாயிற்று. அதற்கு அறிகுறியாகச் சின்னம் ஊதப்பட்டது. அந்த நாதம், தம் கணவர் பசித்திருக்கிறாரே என்ற கவலையுடன் கண்விழித்திருந்த கூரத்தாண்டாள் செவியில் விழுந்தது. கூரேசனின் மனைவியான ஆண்டாளைக் கூரத்து ஆண்டாள் என்று கூறுவதும் உண்டு. அவள் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்; இவள் கூரத்து ஆண்டாள் என்று சொல்லும்படி அவ்வளவு ஞானபக்தியுடன் வாழ்க்கை நடத்தியவள். அவள் கடவுளைக் காதலித்தாள்; இவளுக்குக் கணவரே உலாவும் பெருமாள்!

பெருமாள் அமுது கொள்வதற்கு அறிகுறியாக ஊதப்பெற்ற திருச்சின்னத்தைக் கேட்டதும் ஆண்டாள் அந்தத் திசையை நோக்கி, 'உம்முடைய பக்தர் பட்டினி கிடக்க, நீர் மாத்திரம் உலாவிக் குலாவி அமுது செய்கிறீரே!' என்று பெருமானுடன் பேசுவதுபோல் சொல்லிவிட்டாள். சிறிது நேரத்தில் கோயிலைச் சார்ந்த உத்தமநம்பி, கூரத்தாழ்வான் இல்லத்திற்கு வந்து சேர்ந்தார். பிரசாதம் கொண்டு போய்க் கொடுக்கலாம் என்று, பொங்கல் முதலியவற்றை எடுத்து வந்தார். அன்று மழையாக இருந்ததால் ஆழ்வான் உபாதானத்திற்குப் போயிருக்க மாட்டாரே என்று உத்தமநம்பி நினைத்திருக்கலாம்; அல்லது தற்செயலாக 'இப்பெரியாருக்குப் பிரசாதம் கொண்டு போவோம்' என்ற நினைப்பிலும் வந்திருக்கலாம். பாகவதர்களுக்கோ எல்லாம் தெய்வச் செயல்தான்; தற்செயலாக நிகழ்வதும் தெய்வச் செயலாகவே நிகழ்வதுதான்!

உத்தம நம்பி வருவதை அறிந்ததும், கூரத்தாழ்வான் பதறியெழுந்தார். 'இது என்ன?' என்று திகைத்து எதிர்கொண்டு

வந்தார். 'கொள்ளீர் ஆழ்வானே!' என்று கொடுத்தார் நம்பி. ஆழ்வான் பிரசாதங்களை வாங்கிக்கொண்டு உள்ளே சென்றார். ஆண்டாள் பெருமாளை நோக்கித் தான் விண்ணப்பம் செய்து கொண்டதாகத் தெரிவித்தாள். ஆழ்வானுக்கோ அதிருப்தி தான்; 'அவள் அப்படிச் செய்தது சரியன்று' என்றே கருதினார்.

ஆழ்வான் ஆண்டாளை நோக்கி, 'உன் விண்ணப்பத்தை முன்னிட்டுப் பெருமாள் அனுப்பியிருக்கும் இந்தப் பிரசாதத்தில் உனக்குத்தான் சிறப்பாக உரிமை உண்டு. எனவே நீ இரண்டு பாகம் கொள்வாய், நமக்கு ஒரு பாகம் போதும்' என்று சொன்னார். 'மன்னன் வார்த்தைக்கு மறு வார்த்தை உண்டோ?' என்று அவர் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு வந்த ஆண்டாளும் அவர் சொன்னபடியே செய்தாள்.

இப்படி வாழ்க்கை நடத்தியவளுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்தன. முதல் குழந்தை பிறந்ததும் இராமாநுஜர் பார்க்க விரும்பினார்; ஆழ்வானின் இல்லத்திற்கு எம்பாருடன் போனார். எம்பாரை நோக்கி, 'குழந்தையை எடுத்துக்கொண்டு வாரும்' என்றார். அவரும் உள்ளே ஆண்டாளிடம் சென்று குழந்தையை வாங்கித் தம் மார்பில் அணைத்துக்கொண்டு வந்தார். இராமாநுஜர் தம் கைகளால் குழந்தையைத் தூக்கியெடுத்துக் கண் குளிர நோக்கினார்.

ஐம்படைத்தாலி என்ற பஞ்சாயுத அணியைப் பசுங்குழந்தைக்குத் தாமே அணிந்தார். பராசர முனிவரின் பெயரை இட்டார். அதனால், ஏற்கெனவே ஸ்ரீபாஷ்யம் இயற்றி ஆளவந்தாரின் முதல் விருப்பத்தை நிறைவேற்றிய இராமாநுஜருக்கு அப் பெரியாரின் வேறொரு விருப்பத்தை நிறைவேற்றி வைக்கும் வாய்ப்பும் நேர்ந்துவிட்டது என்கிறது ஆறாயிரப்படி குரு பரம்பரை நூல். குருகைப்பிரான் பிள்ளான் என்ற பெயரால் ஆளவந்தாரின் ஒரு குறை ஏற்கெனவே தீர்ந்துபோய்விட்டதாகத் திக்குவிஜயம் என்ற அத்தியாயத்தில் தெரிந்துகொண்டிருக்கிறோம். ஆனால் அக் குறை வேறொரு வகையில் தீர்ந்ததாக இச் சந்தர்ப்பத்தில் குறிப்பிடுகிறது ஆறாயிரப்படி குரு பரம்பரை நூல்.

எம்பாருக்கு ஒரு தம்பி; சிறிய கோவிந்தப்பெருமாள் என்று அவரைக் குறிப்பிடுவதுண்டு. அவருக்கு ஒரு குழந்தை பிறந்ததும், இராமாநுஜர் அந்த இல்லத்திற்குப் போய் அந்தக் குழந்தையையும் குளிர நோக்கி அதற்குப் 'பராங்குசநம்பி' என்று பெயரிட்டு ஆளவந்தாரின் மூன்றாம் குறையும் நிறை

செய்தார் என்று 'லட்சுமீ காவியம்' என்ற வடமொழிநூல் கூறுவ தாக ஆருயிரப்படி தெரிவிக்கிறது. லட்சுமீ காவியத்தை இயற் றியவர் **உத்தமநம்பி.** •

காஞ்சிக்கு மேற்கே இரண்டுமைல் தொலைவிலுள்ள கூரம் என்ற அக்கிரகாரத்தில் வசித்தவர் ஒரு பெரிய நிலப்பிரபுவாக இருந்ததால் கூரேசன் என்றும் கூரநாதன் என்றும் சிறப்பித்துச் சொல்லப்படுகிறார் என்கிறது 'லட்சுமீ காவியம்.' ஆண்டாள் இவருக்கு மிகவும் இசைந்த வாழ்க்கைத் துணைவி என்பதையும் இக்காவியத்தில் தெரிந்து கொள்கிறோம்.

கூரேசன் தன் பெருஞ் செல்வத்தை அநாதைகள் பொருட்டும் அங்கஹீனர் பொருட்டும் செலவிட்டு வந்ததால், இவர் அப்பெரும்பொருளுக்கு ஒரு தர்மகர்த்தாவாகவே தம்மைப் பாவித்துக் கொண்டார் என்று ஊகிக்கலாம். கூரேசனின் இல்லம், 'அது வரதராஜர் ஆலயம் என்றால் இது தர்மாலயம்' என்று மக்கள் சொல்லும்படி விளங்கிற்று.

பிள்ளைப்பருவம் முதல் இவருக்கு இராமானுஜரிடம் பெரு மதிப்பு இருந்ததென்றும், இராமானுஜர் துறவு பூண்டபின், கூரேசனும் மனைவியும் சீடராகிப் பெரும்பாலும் இவருடன் இருந் தனர் எனறும், கூரேசனது பெரும்புலமையும் அபார நினை வாற்றலும் இராமானுஜருக்குப் பெரிதும் பயன்பட்டன என்றும் 'லட்சுமீ காவியம்' தெரிவிக்கிறது.

கூரேசனின் அரண்மனை போன்ற வீட்டில் நட்டநடுநிசி வரை 'எடு, கொடு' என்ற சொற்கள் கேட்டுக்கொண்டே யிருக்குமாம். பிறகு பெரிய இரும்புக்கதவு அடைக்கப்படும்,— வேலைக்காரர்களுக்கு ஓய்வு கொடுக்கத்தான். அதிகாலை யிலேயே மறுபடியும் திறக்கப்படுமாம். இராமானுஜர் திருவரங் கம் சென்றதும், கூரேசனுக்குத் தம் உடைமைகள் மீது சிறிதும் ஆசையில்லாமற் போய்விட்டது.

இராமானுஜரின் துறவு இவரை இல்லறத்திலேயே துறவி யாக்கிவிட்டது. வரதராஜர் கோவிலுக்கு லட்சுமிதேவியின் தரிசனத்திற்காக வரவேண்டும் என்று திருக்கச்சிநம்பி அழைத்த போது பார்ப்பனப் பேரறிஞரான இவர், 'நீசனேன் நிறைவு ஒன்றும் இலேன்!' என்ற ஆழ்வார் வாக்கை நினைத்துக் கொண்டு, தமது செல்வம் தம்மை நீசராக்கிவிட்டதாய்க் கூறி, 'தரிசனத்திற்கு வர என்ன உரிமை இருக்கிறது எனக்கு?' என்று கண்ணீர் வழியக் கேட்டாராம்.

திருமாமகளின் உண்மைத்திருவை அடைவதற்குப் பட்டா டைகள் பயன்படுவன அல்ல என்று கருதிச் சாதாரண ஆடை

உடுத்துக்கொண்டு கச்சிநம்பியை நோக்கினார்.

தாயாரின் அருள்பெற்று உய்யவே அடியேன் இந்தப் பொருட் செல்வம் என்ற அழுக்கைக் கழுவித் தூய உள்ளமும் உடலும் பெற்றுக்கொள்ள விரும்புகிறேன். குருவின் ஸ்ரீபாத தீர்த்தமே இதற்கு உபாயம். தங்கள் ஆசியால் இந்த நோக்கம் விரைவில் இனிது நிறைவேறும் என்று நம்புகிறேன்' என்று சொல்லிவிட்டு, அப்படியே திருவரங்கத்திற்குப் புறப்பட்டுவிட்டாராம், இராமா நுஜரோ, கூரேசனையும் ஆண்டாளையும் கண்டதும் 'இனி,யானே பெருஞ் செல்வன்!' என்று பூரித்துப்போனார்.

இழந்த செல்வம் குறித்த நினைப்பே இன்றி ஆழ்வானும் ஆண்டாளும் திருவரங்கத்தில் வாழ்ந்துவரும்போது இவர்களுக் குக் கிடைத்த இரட்டைச் செல்வமே பராசரபட்டரும் சீராம பிள்ளை என்ற இளைய பிள்ளையும். இவர்கள் இரட்டைப் பிள்ளை களாகப் பிறந்தனர் என்று 'லட்சுமி காவியம்' தெரிவிக்கிறது. இந்த இரட்டைக் குழந்தைகளுக்கும் ஐம்படைத்தாலி என்ற அணிகளை இராமாநுஜரே அணிந்தார் என்றும் இக் காவியம் அறிவிக்கிறது.

மூத்த பிள்ளைக்குப் பராசரர் என்று பெயரிட்டவர் இளைய பிள்ளைக்கு வியாசர் என்று பெயரிட்டார் என்றும், அதே சமயம் கோவிந்தபட்டரின் தம்பி குழந்தைக்குப் பராங்குசநம்பி என்ற ஆழ்வார் பெயரைச் சூட்டி ஆளவந்தாரின் மனக்குறைகளை முற்றும் போக்கினார் என்றும் 'லட்சுமி காவியம்' கூறுகிறது.

பராசரபட்டர் ஐந்து வயதானதுமே மேதையாகித் தந்தை யாரும் திகைக்கும்படி கேள்விகள் கேட்பாராம். ஒரு நாள் குழந்தை-பராசரபட்டர் வீதியிலே புழுதி அளைந்து விளையாடிக் கொண்டிருந்தபோது, 'ஸர்வக்ஞபட்டன்' என்று பட்டப் பெயர் கொண்டிருந்த ஒருவன் பல்லக்கில் ஏறிக் காளம் ஊதிக் கட்டியம் கூறுவித்து, வீதியிலே தோன்றினான். ஸர்வக்ஞன் என்றால் எல்லாம் அறிந்தவன். இப்படி ஒருவன் விருது ஊதி இராமா நுஜர், ஆழ்வான்,ஆண்டான், எம்பார், அருளாளப் பெருமாள் எம் பெருமானார் முதலான பெரியோர்கள் வாழும் இடத்திற்கு வந்த துணிவுதான் என்னே! 'அவர்களுக்கு முன்பே இவனை நாம் சோதித்துப் பார்க்கலாமே!' என்று தோன்றியதாம் ஐந்து வயதுப் பட்டருக்கு.

ஒரு கையில் புழுதிமண்ணை அள்ளிக் கொண்டுபோய் வழிமறிப்பதுபோல் எதிரே நின்றார் குழந்தைப் பட்டர். 'இது எவ்வளவு? பதில் சொல்லிவிட்டு விருதை ஊதிக்கொண்டு போகலாமே!' என்றார். அவனோ அந்தப் புழுதிக்கு அளவு

சொல்வது எப்படி என்று பிரமித்தான். இவர் சிரித்துக் கொண்டே 'ஒரு கைப்புழுதி என்று சொல்லத் தெரியாத நீரோ ஸர்வக்ஞர்? அழகு, அழகு; விருதை நிறுத்தும்!' என்றாராம்.

மழலைச்சொல் முற்றும் மாறியிராத மேதையின் அந்த வார்த்தையைக் கேட்டதும் ஸர்வக்ஞபட்டன், 'இவன் யார்?' என்று அங்கிருந்தவர்களை விசாரித்தான். 'ஆழ்வானின் பிள்ளை' என்று அவர்கள் சொல்ல, 'அம்மம்ம! பறப்பதன் குஞ்சு தவழுமோ?' என்று சொல்லி இவரைத் தன்னுடைய தண்டிகையில் தூக்கி வைத்துக்கொண்டான். சிறுவனை உச்சிமோந்து, 'குழந்தாய்! நீ என் குரு, என்னுடைய குட்டிக்குருநாதன்' என்றான். இப்பராசரபட்டர் பெரியநம்பியின் உறவினர் ஒருவரது இரு புதல்வியரையும் மணந்துகொண்டு இல்லறம் நடத்தினார் என்கிறது 'லட்சுமி காவியம்.'

குழந்தைப்பட்டரைச் சிவிகையில் வைத்துக் கூரத்தாழ்வானின் இல்லத்தில் கொண்டு சேர்த்தான் ஸர்வக்ஞபட்டன். அங்கேயிருந்த பொன்னாச்சி, நடந்ததை அறிந்து பட்டரை வாரியெடுத்துக்கொண்டு முன்தானையால் மூட்டாக்கிட்டு உள்ளே போய் ஆண்டாளிடம் சேர்ப்பித்தாள். அப்போது இவள் ஆண்டாளை நோக்கி, 'கண் எச்சில் (திருஷ்டிதோஷம்) உண்டாகும்படி இப்பிள்ளையை வீதியில் போகவிடலாமா?' என்றும் கண்டித்தாளாம். 'இவர் உலகத்தில் நெடுநாள் இருப்பாரோ?' என்று கூடக் கவலைப்பட்டாளாம். கூரத்தாழ்வாரோ, 'ஈச்வர குடும்பத்திற்கு நாம் கவலைப்படுவானேன்?' என்ற ஒரே மனப் பான்மையில் ஊன்றி நின்றார்.

இத்தகைய கூரேசனைப் பவித்திரமாகக் கொண்டிருந்த இராமாநுஜர், பட்டர் பிறந்து அறிவில் அதிசயமாக வளர்ந்து வருவதை அருளுடன் நோக்கினார். இறையருளால் ஸ்ரீவைஷ்ணவ விசிஷ்டாத்வைதத்தின் புகழ் சமீப எதிர்காலத்தில் எங்கும் பரவுவதற்கு உரியதொரு மங்கள முற்கூறி என்றார், பட்டரின் பால (ஞான) லீலைகளை. கூரேசனுக்கு அடுத்தபடியாகத் தமது மருகரான முதலியாண்டானையும் இராமாநுஜர் மதித்தார்.

இத்தகைய சீடர்களை மட்டுமா?—பிள்ளை உறங்காவில்லி போன்றவர்களையும் தம் அரும்பெருஞ் செல்வமாக மதித்தது உடையவர் உள்ளம். சீடர்களும், 'நாம் அனைவரும் உடையவர் உடைமைகளே!' என்ற மனஉறுதியுடன் ஏற்றத் தாழ்வின்றி ஒரே பாகவத சமுதாயமாகத் திகழ்ந்தனர்.

ஒருநாள் உடையவர் காலட்சேபம் நடத்திக் கொண்டிருக்கும்போது, பிள்ளை உறங்காவில்லிதாசர் எழுந்து நிற்க 'பிள்ளாய், உமக்கு என்ன வேண்டும்?' என்று பரிவுடன் கேட்டார். அப்போதுதான் 'விபீஷ்ண சரணாகதி' குறித்து இராமாநுஜர் சொல்லிக் கொண்டிருந்தார். அந்த இராமாயணக் கதைப் பகுதி பிள்ளை உறங்காவில்லியின் உள்ளத்தில் பதிந்திருந்தது. விபீஷணன் ராமசந்நிதியில் நின்ற நிலையும், வானரர்கள் அவனைச் சந்தேகித்துப் பார்த்துக் கொண்டிருந்த நிலையும் சித்திரக் காட்சிபோல் வில்லியின் அகக்கண்முன் வந்தது.

உறங்காவில்லி இராமாநுஜரை நோக்கிச் சொன்னார்: 'சரணாகதிக்கு இடையூறாக இருந்த உறவுகளையெல்லாம் அறுத்துக்கொண்டு 'பெருமாள் திருவடிகளே சரணம்' என்று வந்தவன் விபீஷணாழ்வான். மண்ணில் கால் பாவாது வான வீதியில் நின்ற வண்ணமே சரணடைந்த அவனையும் சந்தேகித்து, "அடித்து நொறுக்கி விடுவோம்" என்று கல்லும் தடியுமாக இருந்தார்களே இராமன் குழுவினர்! அப்படியிருக்க, இந்த நீசனும் உமது கோஷ்டியில் நிலைபெற்றிருக்க முடியுமோ? அடியேனும் ஆளாகிப் பேறு பெறுவேனோ?'

அது கேட்ட இராமாநுஜரின் திருமுகம் கருணை-நிலவு வீசிய ஒரு புதுமைப் பூரண சந்திரன்போல் பொலிந்தது; 'பிள்ளாய், அஞ்சாதே கொள்ளும் நீர் அந்தப் பேற்றை! நான் பெற்றேனாகில் நீரும் பெறுகிறீர். பெரியநம்பி பெற்றாராகில் அடியேன் பெறுகிறேன். நம்மாழ்வார் பெற்றாராகில், நாதமுனி தொடக்கமாக வரும் ஞானபரம்பரையில் நாமும் பெறுகிறோம். "அவா அற்று வீடு பெற்ற குருகூர்ச் சடகோபன்" என்று ஆழ்வார் தம்மைக் கூறிக் கொள்ளும் அதே வாக்கில், அவர் பெற்றது திண்ணம் என்பது தெள்ளத் தேறித் தெளிந்து காணப்படுகிறது. இப்படி உடைக்க முடியாத ஒரு பொற் சங்கிலித் தொடராக நீண்டு வளர்ந்திருக்கிறது நம் பாகவத பரம்பரை. எனவே, அச்சம் வேண்டாம்; ஆழ்வார் காட்டும் ஆதிபகவனும், சாதாரண வாழ்க்கை நடத்தும் பாகவதர்களும் ஒரே சங்கிலித் தொடரில் இருக்கிறார்கள் என்பதை ஏன் மறந்துவிட்டீர்?'

மேலும் சொன்னார் இராமாநுஜர்: 'கமுகுக்குப் பாய்ச்சிய தண்ணீரை அத் தோப்பிலுள்ள வாழையும் உண்டு வாழும் என்பதை அறியீரோ? விபீஷணாழ்வாரோடு வந்த நால்வரை வானரர்கள் தடுத்தபோதும், தனித்துத் தடுத்ததில்லையே. "ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்று அவரைச் சார்த்தியிருப்

பாச் தவம்'' என்றவாறு உம்முடைய தவம் என் தவத்திற்கும் மேலானது! ஏத்தியிருந்த பெரியாழ்வார் தவத்தைக்காட்டிலும் அவரைச் சார்ந்திருந்த ஆண்டாளின் தவம் பெரிதன்றோ? நீர் அஞ்சாது சுகமாயிரும்'.

இராமாநுஜரின் இதயத்தைக் கையிற் கனியாகக் கண்டு கொண்டார் பிள்ளை உறங்காவில்லி. 'உம்மைப் பற்றி நிற்பது எனக்குச் சரணுகதி; உமது திருப்பெயரே எனக்குத் திருமந்திரம்; உமது திருவடிகளே எனக்குத் திவ்ய தேசங்கள்! உமது அடிகளில் பணிபுரிவதே எனக்குப் பேறு!' என்ருர். இராமாநுஜ!ரைத் தொழும் தொண்டர்களுக்கெல்லாம் அன்புகாட்டிப் பணி புரிய வேண்டும், அவர்களிடம் மாருத பக்தியும் நம்பிக்கையும் கொள்ளவேண்டும் என்ற விரதத்தையும் உள்ளத்திற்குள்ளே புதுப்பித்துக்கொண்டு உவகை அடைந்தார் வில்லிதாசர்.

வில்லிதாசரை ஆட்கொண்ட கருணை, ஒருநாள் ஊமை ஒருவனுக்கும் இரங்கி அருள்புரியலாயிற்று. அவனுள்ளம் தெரிந்து உபதேசம் செய்ய விரும்பி இராமாநுஜர் அவனைத் தனியிடத்தில் வைத்துக்கொண்டு கதவைச் சாத்திவிட்டுச் சைகைகள் காட்டிச் சில உண்மைகளைப் புலப்படுத்த முயன்ருர். இது கூரேசனுக்குத் தெரிந்துவிட்டது. அவர், 'சொறியத் தீரும் தினவு; அறியத் தீரும் அறிவுத் தினவு!' என்ற கருத்துக் கிணங்க இதைத் தினவு தீர அறிந்து கொள்வோம் என்று கதவுத் துவாரத்தின் வழியாகப் பார்த்தார்.

ஊமைக்கு அப்படி உபதேசம் செய்த அந்தப் பேரருள் ஆழ்வானை வசீகரித்துவிட்டது. சற்று மெய்ம்மறந்து நின்ருர். பிறகு தெளிந்து, 'ஐயோ, கூரத்தாழ்வானுய்ப் பிறந்து வேத சாஸ்திரங்களைக் கற்றுக் கெட்டேன்! ஒன்றும் அறியாத ஊமையாய்ப் பிறந்திருந்தால் அடியேனுக்கும் உடையவர் அப்படி இரங்கி அருளுவாரே!' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார். அந்த ஊமையைப் போல், 'எம்பெருமானின் திவ்யமங்களத் திருமேனியே தஞ்சம்' என்று நினைத்திருப்பதே போதும் என்றுகூடத் தோன்றிவிட்டதாம், 'புலவர் ஏறு' என்று புகழ் பெற்றிருந்தவருக்கு.

உடையவரின் சீடர்களில் வடுகநம்பி என்பவரும் ஒருவர். இவரை ஆந்திரபூர்ணர் என்று குறிப்பிடுவதும் உண்டு. இவர் தெலுங்கு நாட்டிலிருந்து வந்தவர். இராமாநுஜரின் அடிநிழலில் வாழ்ந்த சீடர்களில், இராமாநுஜரின் திருவடிநிலைகளான

பாதரட்சைகளையே திருவாராதனப் பெருமாளாக மதித்துப் போற்றியவர். இராமாநுஜருக்குப் பால் காய்ச்சிக் கொடுக்கும் பணியையும் இவர் மேற்கொண்டிருந்தார்.

மற்றைய சீடர்களுடன் வடுகநம்பியும் இராமாநுஜரை யாத்திரைகளில் தொடர்ந்து போவதுண்டு. ஏதாவது ஒரு திருப்பதியை நெருங்கியதும், இராமாநுஜர் பாதரட்சைகள் இல்லாமல் நடந்தே போவார்; அந்தத் திருப்பதியைத் தரிசித்துக் கடந்ததும் பாதரட்சைகளை மீண்டும் அணிந்துகொள்வார். அந்த வழக்கப்படி இராமாநுஜர் ஒரு சமயம் திருவரங்கத்திற்கு வடக்கேயுள்ள திருவெள்ளறைத் தலத்தைத் தரிசிக்கப் புறப்பட்டுப் போயிருந்தார். அந்தத் தலத்தை நெருங்கியதும் பாதரட்சைகளைக் கழற்றினார். வடுகநம்பி இவரது ஆராதனப் பெருமாளான வரதராஜ விக்கிரகத்துடன் ஒரே மூட்டையாக இவரது பாதரட்சைகளையும் சேர்த்துக் கட்டுவதைப் பார்த்து விட்டார். திகைத்துத் திக்பிரமை கொண்டவராய், 'வடுகா, என்ன செய்தீர்?' என்று கேட்டார். வடுகரோ அமைதியாக, 'தங்கள் தேவரில் எங்கள் தேவருக்கு வந்த குறை என்னவோ?' என்று விண்ணப்பம் செய்தார். 'இப்படியும் ஒரு பக்தியா?' என்று மற்றைச் சீடர்கள் பிரமித்துப் போயினர். இராமாநுஜரும் ஆச்சரிய பரவசராகி ஆலோசனையில் ஆழ்ந்தார்.

இத்தகைய பக்தி வாய்ந்த வடுகநம்பி இராமாநுஜரின் புகழொளி பரவுவதற்குத் தக்கதொரு சாதனமாக இருந்தார் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? இராமாநுஜருடன் பெருமாளைச் சேவிக்கப் போனாலும், தாம் பெருமாளைச் சேவிக்காமல் இராமாநுஜரையே பார்த்துக்கொண்டிருப்பாராம். ஒரு சமயம் இராமாநுஜர், 'பவளவாய் கமலச் செங்கண்' என்ற தொண்டரடிப்பொடியாழ்வார் வாக்கை நினைவூட்டி, 'அந்தக் கமலக் கண்ணழகைப் பாரீர்!' என்றார் வடுகநம்பியை நோக்கி. சீடரோ இவர் கண்ணழகைப் பார்த்துவிட்டு 'என் அமுதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே!' என்ற திருப்பாணாழ்வாரின் வாக்கிலேயே இராமாநுஜருக்குப் பதில் சொல்லிவிட்டார்!

ஒருநாள் வடுகநம்பி இராமாநுஜருக்குப் பக்குவமாகப் பால் காய்ச்சிக் கொண்டிருந்தார். இராமாநுஜர் தம் மடத்து வாசலில் நின்று கொண்டு, 'வடுகா! பெருமாளைச் சேவிக்க வாரும்' என்று கூப்பிட்டார். வடுகநம்பியோ, 'உம்முடைய பெருமாளைச் சேவிக்க வந்தால் நம்முடைய பெருமாளுக்குக் காய்ச்சுகிற பால்

பொங்கிப் போகுமே!' என்று சொல்லிவிட்டார். 'உமக்குத் தோற்றேம்; பன்முறையும் தோற்றேம்!' என்றார் குரு.

பெருமாளின் பெரிய திருநாள் ஒன்றை முன்னிட்டு இராமாநுஜர் காவேரியில் சில சீடர்களுடன் நீராடச் சென்றார். போகும்போது தாம் தண்டம் என்று கருதிய முதலியாண்டானின் கையைப் பற்றிக் கொண்டார். நீராடி மீளும்போது பிள்ளை உறங்காவில்லிதாசரின் கையைப் பிடித்துக் கொண்டு வந்தார். அது கண்ட பலரும் திகைத்தார்கள். இப்படிச் செய்வதற்குக் காரணம் என்ன என்று கேட்டார்கள்.

அதற்கு இராமாநுஜர், 'ஜன்மம் உயர்ந்திருக்கச் செய்தே தாழநில்லா நின்றேமே!—என்கிற அபிமானம் உண்டே நம் எல்லோருக்கும்; அக்குறையும் இல்லாதவர் இவர் (வில்லிதாசர்)!' என்று பதில் சொன்னதாக ஆறாயிரப்படி குருபரம்பரை நூல் தெரிவிக்கிறது. முதலியாண்டானும் வில்லிதாசரைப் போல் பணிவுள்ளவர் என்பது குறித்து இராமாநுஜருக்கு ஐயம் ஒன்றும் இல்லை. அப்படியிருந்தும் இப்படி இவர் பதில் சொன்னது கூர்ந்து நோக்கத்தக்கது.

முதலியாண்டான் பார்ப்பன வகுப்பினர் மட்டுமல்லர்; இராமாநுஜரின் மருகரும் கூட. பெரும் புலவராகவும் இருந்தார்; பெருஞ்செல்வரும் கூட. இப்பேர்ப்பட்டவர் பெரும்பணிவுணர்ச்சியுடன் நடந்து கொண்டார் என்பதன் மனோதத்துவ உட்பொருளைத்தான் இராமாநுஜர் உணர்த்த முயன்றார்,—'உயர்ந்திருக்கும் நாம் தாழ்ந்திருக்கிறேம்!' என்ற உணர்ச்சியை அறவே துடைத்துவிட முடியாது என்ற அதே மனோதத்துவ அடிப்படையை. 'அந்தக் குறையும் பிள்ளை உறங்காவில்லி தாசருக்கு இல்லையே!' என்றார்.

பிறகு இராமாநுஜர் நாள்தோறும் நீராடச் செல்லும்போது தம் அந்தரங்கச் சீடர்களான முதலியாண்டானையும் கூரத்தாழ்வானையும்—ஆம் தண்டு பவித்திரங்களை—உடன் அழைத்துக் கொண்டு போவார். இருவரையும் இருபுறமும் ஆதரவாய்ப் பற்றிச் செல்வார். காவிரியில் நீராடித் திரும்பும்போது இவர் இருவர் கைகள் மீதும் ஈரத் துணியிட்டுப் பிடித்துக்கொண்டு வருவார். ஒரு நாள் இவர் இப்படி நீராடித் திரும்பும்போது இராமாநுஜரை அடிதொழுது நின்றார் உறங்காவில்லி. உடனே இவர் தம் கையை வில்லியாரின் வெறுந் தோள்மேல் வைத்து நடந்துவந்தார்.

இந்த மனப்பான்மையை இராமாநுஜரே ஒரு சமயம் விளக்கி யும், திருவரங்கத்தில் உள்ளவர்களில் பெரும்பாலாருக்கும் இது புதியதொரு புதிராகவே இருந்தது. 'நீராடியபின்பு கூரேசன்' முதலியாண்டான் போன்ற அந்தணர்களையும் ஈரத் துணி கொண்டு தீண்டும் இவர், வேட மறக்குலத்தினரான உறங்கா வில்லியிடம் நடந்துகொள்ளும் முறை பொருத்தமாகத் தோன்ற வில்லையே!' என்று பலரும் தமக்குள்ளே இரகசியமாய்ப் பேசிக் கொண்டார்கள்.

அதைக் குறிப்பால் உணர்ந்த இராமாநுஜர், 'இந்த வில்லி தொண்டர்குலம் தவிர வேறு எந்தக் குலத்தையும் சேர்ந்தவ ராகத் தம்மைக் குறித்துக் கனவிலும் நினைப்பதில்லை. "தான்" என்ற அகப்பற்றையும், "தனது" என்ற புறப்பற்றையும் அறவே விட்டவர்' என்று ஒரு நாள் தம் மடத்தில் கூடியிருந்த ஒரு பெருங் கூட்டத்தினருக்குத் தெரிவித்தார். தாம் சொன்னதை அடுத்து, 'எல்லாவற்றுக்கும் மேலாக வில்லி, பொன்னுச்சி யாரின் தொடர்பால் புனிதபாகவத உள்ளத்தைச் சிறப்பாகப் பெற்றிருக்கிறார்' என்றும் சொன்னார்.

ஆயினும், இல்லறத்தாரும் வேடக்குலத்தினருமான அவர் களிடம் இராமாநுஜர் மிக்க அன்பு பாராட்டி வருவது மடத்தி லிருந்த போலித் துறவிகளான சிலருக்குப் பொறாமைக் காய்ச்சலை உண்டாக்கிற்று. இந்தக் காய்ச்சலுக்கு மருந்து தெரியாதவரா இராமாநுஜர்?

மடத்தில் உலர்ந்து கொண்டிருந்த துறவிகளின் காவி ஆடைகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு முழத்தைக் கிழித்துக் கொண்டு வரும்படி ஒரு ஸ்ரீவைஷ்ணவருக்குக் கட்டளையிட்டார். துறவிகள் உணவு உட்கொண்ட பின்பு ஈர ஆடைகள் கிழிக்கப் பட்டிருந்ததைக் கண்டார்கள். 'யார் இப்படிச் செய்தது?' என்று பலவாறு வைதார்கள். அதுகண்ட இராமாநுஜர் அவர் களை நோக்கி, 'அந்தக் கள்வன் கருணை வள்ளலாகவும் இருக்க வேண்டும். ஏதாவதொரு நோக்கம் இல்லாவிட்டால் ஒவ்வொரு முழத்தை மட்டும் கொண்டுபோய் மிகுதியான ஆடையை உங்களுக்கு விட்டுச் செல்வானா?' என்றார். இந்த வார்த்தை யாலும் துறவிகள் திருப்தியடையவில்லை.

பிறகு, 'ஆடையில் ஒரு முழம் போனதால் உங்களுக்கு அதிக நஷ்டமில்லையே!' என்று சொல்லிப் பார்த்தார். கடைசி யாக 'ஸ்ரீவைஷ்ணவர்களைத் தவிர வேறு எவர் இங்கே வந்து இப்படிச் செய்திருக்க முடியும்?' என்றும் சொல்லிப் பார்த்தார்.

அவர்கள் உரக்கத் திட்டாமல் முணுமுணுத்துக் கொண்டே இருந்தார்கள். இராமாநுஜரோ, 'இந்தத் துறவிகளின் நிலை என்ன; உறங்காவில்லியின் உத்தம பக்தி என்ன!' என்று எண்ணமிட்டார்.

'நமது மடத்திலும் போலித் துறவிகள் புகுந்திருக்கிறார்கள்; இவர்களை வழிப்படுத்தவேண்டும். இதற்கும், உறங்காவில்லியின் உத்தம பக்தியுடன் பொன்னாச்சியின் தியாக புத்தியை வெளிப் படுத்துவதற்கும், ஒரு தந்திரம் செய்யலாமா?' என்று ஆலோசித் துப் பார்த்தார். இராமாநுஜர் இரண்டு பாகவதர்களை இரகசிய மாக அழைத்து, 'துறவிகளுக்கு ஒரு பாடம் கற்பிக்க விரும்பு கிறேன். நீங்கள் போய், உறங்கிக்கொண்டிருக்கும் பொன்னாச்சி யாரின் நகைகளையெல்லாம் கொண்டு வாருங்கள். இது ஒரு பரீட்சை!' என்று சொன்னார்.

அந்தப் பாகவதர்களிடம், 'இன்றிரவு வில்லிதாசர் வெகு நேரம் சில அரும்பொருள்கள் கேட்டுக் கொள்ள விரும்புகிறார். ஆகவே, நீங்கள் உங்கள் காரியத்தை முடித்துக் கொண்டு வந்து விடலாம்' என்றும் சொன்னார். அவர்களும் இரவில் ஊரடங்கிய பின் பொன்னாச்சியின் விட்டிற்குப் போனார்கள். அவள், தன் கணவர் வந்துவிடுவாரே என்று கதவை அடைத்துத் தாளிட்டுக் கொள்ளவில்லை.

• அவள் ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பதாகக் கருதிய பாகவதர் கள், ஒரு பக்கமாய்ச் சாய்ந்து படுத்துக் கொண்டிருந்த பொன்னாச் சியின் அந்தப் பக்கத்து அணிகளைக் கழற்றிக் கொண்டனர். பொன்னாச்சி அதை அறிந்திருந்தும் அசையாது படுத்திருந்தாள். 'யாரோ இந்தப் பாகவதர்கள்? எவ்வளவு வறுமையோ? இந்தப் பக்கத்திலுள்ள அணிகள் எல்லாவற்றையும் இவர்கள் எடுத்துக் கொண்ட பின்பு மறுபக்கம் திரும்பிப் படுப்போம்' என்று எண்ணமிட்டாள். புரண்டு உறங்குபவள் போல் மெல்லென மற்றொருபுறம் திரும்பினாள். பாகவதர்களோ, 'அம்மை விழித்துக் கொண்டாள்' என்று அஞ்சிப் போய் விட்டனர்.

பாகவதர்கள் மடத்திற்குத் திரும்பியபின்பு, இராமாநுஜர் பிள்ளை உறங்காவில்லிதாசரை விடைகொடுத்து விட்டுக்கு அனுப்பினார். பிறகு அந்த இரு பாகவதர்களை நோக்கி, 'நீங்கள் அவரைப் பின்தொடர்ந்து செல்லுங்கள். அவருக்குத் தெரியாமல் ஜாக்கிரதையாகச் செல்ல வேண்டும். அந்தக் கணவர்-மனைவிய ரிடையே நிகழும் உரையாடலை மறைந்திருந்து கேட்டு வாருங் கள்' என்றார். அவர்களும் அப்படியே செய்தார்கள்.

உறங்காவல்லி தன் மனைவியைக் கண்டதும், 'ஒரு பக்கத்து நகைகளைக் காணவில்லையே! ஏன்?' என்று கேட்டார். அவள் நடந்ததைச் சொன்னாள். 'நான் உங்கள் வரவை எதிர்பார்த்துக் கொண்டு, இராமாநுஜர் நம்மிடம் காட்டிவரும் அன்பையும் அருளையும் வியந்து ஒரே தியானமாக இருந்தேன். அப்போது அந்த ஏழைப் பாகவதர்கள் நான் தூங்குவதாக நினைத்துக் கொண்டு, என்னுடைய ஒரு புறத்து நகைகளைக் கவர்ந்து கொண்டார்கள். நான் அதைத் திருட்டாகக் கருதவில்லை; ஏதோ தங்கள் தேவையையோ வறுமையையோ முன்னிட்டு எடுத்துக் கொண்டதாகவே நினைத்தேன். மற்றப் பக்கத்து நகைகளையும் அவர்கள் எடுத்துக் கொண்டு போகட்டும் என்றே சற்றுப் புரண்டேன். ஐயோ, என் அதிர்ஷ்டக் குறைவு! அவர்கள் ஓடிப்போய் விட்டார்கள்' என்று அந்த நிகழ்ச்சியை விவரித்தாள் பொன்னாச்சி. உறங்காவில்லியோ கோபம் கொண்டார்.

அவள் பறிகொடுத்தாளே என்றோ, அக்கள்வர்கள்மீது தயாள சிந்தை கொண்டிருந்தாளே என்றோ உறங்காவில்லி கோபம் கொள்ளவில்லை. எப்படியோ அவள் அவர்களைப் பயமுறுத்திவிட்டாளே என்றுதான் கோபித்துக் கொண்டார். 'என் நகைகளை அவர்களுக்குக் கொடுப்பேன் என்று அவள் எண்ணியதே ஆணவம்தான்; எல்லாம் பாகவதருடைமை!' என்பது உறங்காவில்லியின் உளப்பான்மை.

இந்த நிலைமையைக் கேட்டும் ஊகித்துக் கொண்டும் திரும்பி வந்து பாகவதர்கள் இராமாநுஜருக்குச் செய்தி சொன்னார்கள். இரவு வெகு நேரமாகிவிட்டது. பாகவதர்களை விடை கொடுத்து அனுப்பிவிட்டு இராமாநுஜர் ஓய்வு பெறச் சென்றார். வழக்கம்போல் சிற்றஞ்சிறு காலையில் துயிலுணர்ந்து எழுந்து கடன்களை முடித்துக் கொண்டு காலட்சேப மண்டபத்திற்கு வந்தார்.

மன்றத்தில் வந்திருந்தவர்களுக்கெல்லாம், இராமாநுஜர் நடந்ததைத் தெரிவித்தார். 'ஆடையில் ஒரு முழம் கிழித்ததற்காக அல்லற்பட்டு ஆற்றாது திட்டியவர்கள் எங்கே? நகைகள் களவாடப்பட்டும் பாகவத மனப்பான்மையுடன் ஒருவரோடொருவர் போட்டியிட்ட வில்லியும் பொன்னாச்சியும் எங்கே?' என்று கேட்டார். அந்தத் துறவிகள் நாணத்தால் தலைகவிழ்ந்திருந்தனர்.

மன்றம் ஒரு முகமாய் வில்லிதாசரின் பக்தியையும் பொன்னுச்சியின் தியாகபுத்தியையும் பாராட்டியது. அன்று கற்றுக்கொண்ட பாடம், அத்துறவிகளைச் சீர்திருத்தி அவர்களில் சிலர் பின்னாளில் மடங்களில் பெரும்பதவி வகிப்பதற்கும் காரணமாகிவிட்டது.

பொன்னுச்சியின் மனநிலையை - காதல் உள்ளத்தையும் பாகவதப் பண்பாட்டையும்—உறங்காவில்லிதாசர் உணர்ந்திருந்தார் என்பதில் ஐயமில்லை. நன்குணர்ந்திருந்ததாகவே கணவரும் நினைத்தார், காதலியும் நம்பினாள். எனினும், வில்லி பொன்னுச்சியின் தியாக மனப்பான்மையை ஆழம் கண்டு அறிந்திருந்தார் என்று சொல்வதற்கில்லை.

பெண்களுக்கு உள்ள நகைப் பைத்தியம், பொன்னுச்சியின் உள்ளத்திற்குள்ளும் பதுங்கியிருந்திருக்க வேண்டும் என்றும், உடைமைகள் மீதுள்ள ஆணவப் பற்றும் அந்தப் பைத்தியத்துடன் கலந்திருக்கவேண்டும் என்றும் கருதிய உறங்காவில்லி, பொன்னுச்சி மறுபக்கம் திரும்பியதற்குச் சொன்ன காரணத்தை ஒப்புக்கொள்ளவில்லை. அப்போது பொங்கிக் கொண்டிருந்த கோபம் அணைகடந்த வெள்ளமாயிற்று.

'அம்மா, இனி உன்னோடு வாழ்தல் தகுதியன்று' என்று வில்லி உணவு கொள்ளாமலே வெளியில் போய்விட்டார். 'நம்மை அறியாமலே பாகவதர்களைப் பயமுறுத்திவிட்டோமே' என்று வருந்திக்கொண்டிருந்த பொன்னுச்சிக்குக் கணவரின் சொல் வெந்த புண்ணில் வேலிட்டது போலாயிற்று. அவள் தன்னைத்தானே நொந்துகொண்டு உண்ணாமலும் உறங்காமலும் இருந்துவிட்டாள். இந்தச் செய்தி இராமானுஜர் செவிக்கும் எட்டியது.

இராமானுஜர் வில்லியையும் அவர் மனைவியையும் வரவழைத்து விஷயங்களை விசாரித்து அறிந்துகொண்டார். இருவர் எண்ணங்களும் பாகவத நெறியைத் தழுவி வறியவரை வாழ்விப்பதுதான். எனினும், பொன்னுச்சியின் உள்ளப்பாங்கை வில்லிதாசர் அப்படியே உணர்ந்துகொள்ளத் தவறிவிட்டார். வில்லியின் பாகவத அபிமானமே, பொன்னுச்சியின் உள்ளத்தில் நிகழ்ந்த உண்மையொளியைப் பார்க்க முடியாதபடி, அவர் அறிவுக்கண்ணை மூடிவிட்டது. 'இந்த நிலையில் இனி என் செய்வது?' என்று ஆலோசித்தார் இராமானுஜர்.

திடீரென்று வில்லியை நோக்கினார். அப்போது தரிசனத்திற்கு வந்திருந்த பலரும் அங்கே கூட்டமாகத் திரண்டிருந்த

னர். ‘ வில்லிதாசரே, அம்மையார் செய்த செயல் பெரும்பிழை என்கிறீர்; அதைப் பொறுக்க முடியாது என்கிறீர்; “ பொன்னுசையுள்ள பொன்னுச்சி என் மனைவி அல்லள்!” என்றும் என்னிடம் சொல்லிவிட்டீர். “ அவள் எங்கள் மரபிற்கிணங்க வேறு யாரையாவது மறுமணம் செய்து கொண்டாலும் பாதகமில்லை ” என்றும் துணிந்துரைத்தீர். அப்படியானால் தக்க பாத்திரம் கண்டு பொன்னைத் தானம் செய்வதுபோல் பொன்னுச்சியையும் பொருத்தமான ஒருவருக்குத் தானம் செய்துவிடலாமா? இப்போதே நான் அப்படிச் செய்வது உமக்கு இஷ்டமா?’ என்று கேட்டுவிட்டார் இராமாநுஜர்.

வில்லிதாசர் திகைத்தார், திடுக்கிட்டார். பொன்னுச்சியோ பைத்தியம் பிடித்தவள்போல் நின்றாள். இராமாநுஜரா இப்படிச் சொல்லுகிறார்? அவர்களுக்குத் தங்கள் செவிகளையும் நம்ப முடியவில்லை, கண்களையும் நம்ப முடியவில்லை. எனினும், வில்லிதாசர் ஒருவாறு உள்ளத்தைத் திடப்படுத்திக் கொண்டார்; ‘ சுவாமிகளே, தேவரீர் திருவுள்ளத்தின்படியே செய்யலாம் ’ என்று விடையிறுத்தார். பொன்னுச்சியோ, ‘ நான் உயிருடன் இருந்தால்தானே மறுமணம்?’ என்று தனக்குள் தானே சொல்லிக் கொண்டாள். ஆனால் வாய்விட்டு ஒன்றும் சொல்லவில்லை.

இராமாநுஜர் அங்குள்ள பாகவதர்களை நோக்கி, ‘ சபையோர்களே! உறங்காவில்லியின் கருத்தைத் தெரிந்து கொண்டீர்கள். அந்த அம்மை மௌனமாயிருப்பது கண்டு அவளும் சம்மதிப்பதாக நீங்கள் நினைக்கவும் கூடும். அது எப்படியிருந்தாலும், நான் இந்த வில்லியாரின் அபிப்பிராயத்திற்கிணங்க இந்த அம்மையைத் தக்கவரான யாருக்கேனும் தானம் செய்யத் துணிந்துவிட்டேன். பாகவத அன்பொளி வீசும் இப்பொன்னைத் தானமாக ஏற்றுக்கொள்ளத் தக்க பாத்திரம் வேண்டுமல்லவா? அது யாராயிருக்க முடியும் என்று துருவித்துருவி நோக்கினேன். ஒரே ஒருவர் தவிர வேறு யாரும் இருப்பதாக எனக்குப் புலப்படவில்லை. அந்த ஒருவர் யார் தெரியுமா? இதோ நிற்கிறாரே, இந்த வில்லிதாசர்தாம்! ஆதலால் இவருக்கே பொன்னுச்சியாரைத் தானம் செய்து தருகிறேன்!’ என்று ஓர் அறிவுரை நிகழ்த்தினார் மிக்க சாதுரியமாக. காரியம் முடிந்தது மங்களமாக.

ஆசாரியரின் கட்டளையை வில்லிதாசரால் மீறிப்போக முடியுமா? வில்லி வாய் பேசாது பொன்னுச்சியின் கைகளைப் பிடித்துக் கொண்டார்—புதிதாகப் பாணிக்கிரகணம் செய்து

கொண்டவர் போல! அந்தத் திருமணம் உடலுறவை ஏற்படுத்தியது; இந்த மறுமணமோ ஆன்ம உறவை உறுதிப்படுத்தியது. இந்தப் பிணைப்பை என்றேனும் இவ்விருவருள் ஒருவராலும் அறுத்துக்கொள்ள முடியாது. அப்படி ஆசியும் அருளும் பொழிந்துவிட்டது இராமாநுஜரின் கருணையுள்ளம்.

வில்லியையும் பொன்னாச்சியையும் சூழ்ந்துகொண்டு பாகவதர் பலரும் ஆனந்த ஆரவாரம் செய்தனர். சிலர் பல்லாண்டு பாடினார்கள்: சிலர் புதுமாப்பிள்ளையையும் மணமகளையும் வாழ்த்துவதுபோல் இவர்களை வாழ்த்தினர். வில்லி பொன்னாச்சியை நோக்கி,

**உறவேல் நமக்கு இங்கு**
**ஒழிக்க ஒழியாது!**

என்ற ஆண்டாளின் திருப்பாவை-வாக்கை நினைவூட்டி, 'இதன் பொருள் நமக்கு இப்படிப் பொருந்தும் என்று இதற்குமுன் நான் நினைத்ததில்லை' என்றார்.

பிறகு இராமாநுஜர் தம் சீடர்களை நோக்கி, 'வில்லியாரின் பாகவத நெறியையும் பொன்னாச்சியாரின் பாகவதப் பண்பினையும் கண்டுகொண்டீர்கள் அல்லவா? இவர்கள் இருவரிலும்பொன்னாச்சியாரே மேற்படியில் நிற்பவர் என்பதை நான் மறைக்க முடியாது; ஒருவரும் மறுக்க முடியாது. நடந்ததையெல்லாம் இருவரும் இதற்குள் நன்றாகத் தெரிந்து கொண்டிருப்பார்கள், மேலும் விவரமாகத் தெரிந்துகொள்வார்கள்' என்றார். உறங்கா வில்லியும் பொன்னாச்சியும் முன்பு இருந்ததைவிடப் பன்மடங்கு அன்பு பூண்டு ஒழுகலாயினர்.

பொன்னாச்சியைப்போல் வேறு பெண்களும் இராமாநுஜ மடத்திற்குச் சிறப்பாகவும், பாகவத சமுதாயத்திற்குச் சிறப்பாகவும் அணிகலங்களாய்த் திகழ்ந்தனர். இவர்களில் கூரத்து ஆண்டாள் தவிர, வேறொரு ஆண்டாளம்மையின் பெயரையும் ஆறாயிரப்படி குறிப்பிடுகிறது. தவிர, சூடிக்கொடுத்தாள், திருப்பாவை பாடினாள் என்ற பெயர்களை உடைய இரண்டு பெண்மணிகளும் திருமடத்திற்கு அணிகளாய்த் திகழ்ந்தனர்.

கொங்குப்பிராட்டியார் என்றும் கொங்கில் பிராட்டியார் என்றும் சொல்லப்படும் அம்மையைக் குறித்து, அவர் கொங்கு நாட்டிலிருந்து சீடப்பெண் ஆனதாக ஏற்கனவே அறிந்து கொண்டிருக்கிறோம். திருவரங்கத்துப் பெண்மணிகளிலும் சிலர் தீவிர பக்தமணிகளாயிருந்தனர் என்றும் தெரியவருகிறது. ஸ்ரீபெரும்பூதூரிலிருந்தும் பெண்கள் வந்து திருவரங்கத்து மடத்

தில் தொண்டாற்றினர் என்றும் தெரியவருகிறது. திருப்பதி ஸ்ரீகாரியம் செய்யும் அம்மை என்று ஒரு பக்தமணி குறிக்கப் பெறுகின்ருள். திருக்கண்ணபுரத்து அம்மை, திருநறையூர் அம்மை ஆகிய தொண்டர்கள் முறையே கண்ணபுரத்திலிருந் தும் திருநறையூரிலிருந்தும் வந்தவர்கள் எனலாம்.

திருவனந்தபுரத்து அம்மை, திருவாட்டாற்று அம்மை, திருவண்பரிசாரத்து அம்மை ஆகிய தொண்டர்களின் பெயர்களி லிருந்தே, தமிழகத்துத் தெற்குக்கோடியில் பெண்களிடையே இவரது கொள்கைகள் பரவியிருந்தது என்றும் தெரிந்துகொள் கிருேம். மன்னனூர்கோயில், திருக்குடந்தை முதலான ஊர்களி லும் இராமாநுஜ சம்பிரதாயத்தில் ஈடுபட்டிருந்த பெண்மணிகள் இருந்தார்கள் என்று ஊகிக்கலாம். யதிராஜவல்லியார் என்ற அம்மையின் பெயரே இவரது குருபக்திக்கு ஒரு நற்பெருஞ் சான்று. இப்பெண்களுக்கெல்லாம் தலைவியராகத் திகழ்ந்த வர்கள் கூரத்து ஆண்டாள், அத்துழாய் அம்மை, பொன்னுச் சியார் ஆகியவர்கள் என்று கருதுவதும் பொருந்துவதே.

சீடர்குழாம் பெருகியவண்ணமாயிருந்தது. கூரத்தாழ்வான் திருவரங்கத்து அமுதனுரைச் சீடராக்கிக்கொண்டார். இந்த அமுதனுரே 'இராமாநுச நூற்றந்தாதி' என்ற பிரபந்தத்தை இயற்றியவர். இவர் தம் குருநாதராகிய கூரேசனை 'வஞ்சமுக் குறும்பாம் குழியைக் கடத்தும் நம் கூரத்தாழ்வான்' என்று தம் 'இராமநுச நூற்றந்தாதி'யில் குறிப்பிடுகிருர்.

காமம், வெகுளி, மயக்கம் என்ற இந்த மூன்றையும் சாதாரண மாக முக்குறும்பு என்று சொல்லக்கூடும். ஆனல் இவற்றைக் காட்டிலும் கொடிய முக்குறும்புகளும் உண்டு என்பர். இம் முக்குறும்புகளையே வஞ்ச முக்குறும்பு என்கிருர் அமுதனுர். இவை தாம் சாதித் திமிர், செல்வத்திமிர், கல்வித் திமிர் ஆகியவை என்பர். குலமும் கல்வியும் செல்வமும் சிறந்தவையாகத் தோன்றி நம் மதியை வஞ்சித்துப் படுகுழியில் வீழ்த்திவிடும் என்பது குறிப்பு.

நாம் நடந்துசெல்லும் பாதையில் அபாயகரமான குழிகள் தாம் காமம், வெகுளி, மயக்கமும். ஆனல், இவற்றைக் கண்டு நாம் ஜாக்கிரதையாக விலகிச்செல்ல முடியும். வஞ்ச முக்குறும்பு களான குழிகளோ, குழிகள் என்று தெரியாதவாறு சாதாரணப் புல்லாந்தரை போலக் காணப்படும். காலை வைத்தால் படுகுழி தான்! எனவே, இந்த முக்குறும்பை அறுத்து ஒரு பாகவத சமு தாயத்தைப் படைத்துவிட அரும்பாடுபட்டார் இராமாநுஜர், தம்

அருமந்த சீடர்களான கூரேசன் முதலானவர்களின் ஒத்துழைப் புடன். இந்தச் சமுதாயம் திருவரங்கத்து மடாலயத்தை மைய மாகக்கொண்டு நாலு திசைகளிலும் பரவத் தொடங்கியது.

ஒருநாள் இராமாநுஜரும் சீடர்களும் பெரியநம்பியைப் பார்க்கப் போனார்கள். பெரியநம்பி எழுந்து கைகூப்பி இராமா நுஜரை வரவேற்றார். அருகேயிருந்த அத்துழாய் அம்மை ஆச்சரியமாக, 'அப்பா, ஏன் இப்படிச் செய்கிறீர்? எவ்வளவு பெரியவரானாலும் என் அண்ணாவான இராமாநுஜர் உமக்குச் சீடரே,—இல்லையா?' என்று கேட்டாள். அதற்குப் பெரிய நம்பி, 'நான் இப்போது இவரை என் சீடராகவா காண்கிறேன்? ஆழ்வாரின் சித்தாந்தத்திற்கு வளர்ப்புத் தாயை அல்லவா பார்க்கிறேன்? தாயைச் சேய் வணங்குவதில் என்ன தவறு?' என்று பதில் சொன்னார்.

வேறொரு சமயம், காவிரியில் நீராடிச் சீடர்களுடன் திரும்பி வரும் இராமாநுஜருக்கு எதிரே வந்து கொண்டிருந்தார் பெரிய நம்பி. உடனே காலில் விழுந்து வணங்கினார், பரமபக்தி விசுவாசத்துடன். சீடர்கள் ஆச்சரியப்பட்டார்கள். இராமாநுஜ ரும் ஆசி கூறினார். இப்படி இவர் நடந்து கொண்ட முறை சீடர்களை மேலும் ஆச்சரியத்தில் ஆழ்த்திவிட்டது. பிறகு இராமாநுஜர் சீடர்களை நோக்கினார். அவர்கள் இவரை நோக்கி, 'தங்கள் ஆசாரியன் தங்களை அடிவிழுந்து வணங்கி யது **விநோதமாக** இருந்ததென்றால், தாங்கள் அவருக்கு ஆசி கூறியது **விபரீதமாகவும்** தோன்றுகிறதே!' என்று துணிந்து கூறினார்கள்.

அதற்கு இராமாநுஜர், 'குருமூர்த்தியின் குறிப்பு அறிந்து ஒழுகுவது சீடரின் கடமையல்லவா?' என்று ஒரு கேள்வி கேட்டார். சீடர்கள் பெரியநம்பியை அணுகி, 'இப்புதிருக்குத் தாங்கள் விளக்கம் தரவேண்டும்' என்று பிரார்த்தித்தார்கள். அவரோ, 'நான் என் குருமூர்த்தியான ஆளவந்தாரையும் அவருடைய சீடர்களையும் கண்டது போன்ற பரவச உணர்ச்சி அடைந்தேன்' என்று பதில் சொன்னார். ஒரு பெரிய குருவுக் கும் ஒரு பெரிய சீடருக்கும் வேற்றுமை இல்லை என்ற உண்மை யைப் பெரியநம்பியின் வாக்கின் மூலமாக உணர்ந்து இன்ப முற்றது இந்தச் சீடர்குழாம்.

★ ★ ★

இச்சீடர்குழாம் பெருகிப்பெருகி இராமாநுஜப் பெருவெள்ள மாகி விட்டது. முதியவர்களைப் போல் இளைஞரும், ஆண்களைப் போல் பெண்களும், பண்டிதர்களைப்போல் குடியானவர்களும்

இராமாநுஜரின் பக்திப் பெருங்கொள்கைகளால் வசீகரிக்கப் பெற்றுச் சீடர்களாயினர். இத்தகைய செல்வாக்கே சில உள்ளங்களில் பொருமையைத் தூண்டியது; வெறுப்புணர்ச்சியையும் பகைமை உணர்வையும் கூடத் தூண்டி விட்டது.

அக்காலத்துச் சோழ சக்கரவர்த்தியையும் பயமுறுத்தி விட்டது, இராமாநுஜரின் செல்வாக்கு. எனவே, அவன் எத்தகைய அடக்குமுறையை மேற்கொள்ளலாம் என்று ஆலோசிக்கத் தொடங்கினும். இந்தச் சோழ சக்கரவர்த்தியைக் கிருமிகண்டன் (கழுத்து அல்லது மிடறு புழுத்தவன்) என்று ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரைக் கதைகள் எல்லாம் ஒரு முகமாகக் குறிப்பிடுகின்றன. ஆனால் இந்தச் சோழன் யார்? இது குறித்து ஆராய்ச்சியாளரிடையே கருத்து வேற்றுமைகள் உண்டு.

இராமாநுஜரோ தம் அன்புநெறியிலேயே தம்மை முழுக்க இழந்தவராய், 'அறுபது ஆண்டுகளாக நான் பேணி வளர்த்து வந்திருக்கும் பயிர் அனைவருக்கும் நல்லுணவு தரும்' என்ற நம்பிக்கையுடன் கருமமே கண்ணாகியிருந்தார்.

# 22

# மைசூர்ச் சீமையில் ஞானவெள்ளம்

மடத்தில் ஸ்ரீபாஷ்யம் ஒழுங்காக ஓதப்பெற்று விவகரிக்கப் பட்டு வந்தது. கூரேசன், முதலியாண்டான், அருளாளப்பெரு மாள் எம்பெருமானார் முதலானவர்கள் இவ்ஆராய்ச்சிகளில் பங்கு கொண்டனர். பொதுமக்கள் பலருக்கும் பயன்பெறத்தக்க முறையில் உபதேசங்களும் இராமாநுஜரால் முறையாகச் செய்யப்பட்டு வந்தன. எல்லாம் சுகமாக, இனிதாக நடப்பது போன்ற உணர்ச்சிதான் இராமாநுஜரின் அன்பர் குழாத்தில் பரவியிருந்தது.

வானம் தெளிவாகத்தான் இருந்தது; மேகம் இல்லை; மின்னல் இல்லை. எனினும் திடீரென்று இடிவிழுவதுபோல் ஒரு

நிகழ்ச்சி. இராமாநுஜர் நீராடிக் கொண்டிருக்கிறார். கூரத்தாழ்வான் தண்ணீர் முகந்து கொடுக்கிறார். அப்போது ஒரு வைணவர் அங்கு வந்து, இரகசியமாகக் கூரத்தாழ்வான் செவியில் ஏதோ சொல்லுகிறார். உடனே ஆழ்வான், இராமாநுஜர் நீராடிய பின் உடுத்துக் கொள்வதற்காக வைத்திருக்கும் காவி ஆடையைத் தாமே உடுத்துக் கொள்ளுகிறார்; முக்கோல் முதலிய வைணவத் துறவிக்குரிய சின்னங்களையும் தரித்துக் கொள்ளுகிறார். இராமாநுஜரிடத்திலும் சொல்லிக் கொள்ளாமல் வெளியே போய்விடுகிறார்.

இராமாநுஜர் ஈரம் துடைத்துக் கொண்டபின், 'என் காவி ஆடை முதலியவற்றைத் தாருங்கள்' என்று அருகிலிருந்த பணியாளர்களைக் கேட்கிறார். அப்போது அங்கே வந்து சேர்ந்த முதலியாண்டான், 'அவற்றைத் தரித்துக் கொண்டு கூரத்தாழ்வான் போய்விட்டார்' என்று பதில் சொல்லுகிறார். 'எங்கே? எதற்காக? என் ஆடையைத் தரித்துக்கொண்டு போவானேன்? ஏன் இந்த அவசரம்?' என்ற வினாக்கள் ஸ்ரீபாஷ்யத்தை உருவாக்கிய திருவுள்ளத்தைச் சற்றுக் கலக்கி விடுகின்றன.

பணியாளர்களும், முதலியாண்டான் முதலானவர்களும் மெள்ளப் பேசிக்கொண்டதிலிருந்தே இராமாநுஜருக்கு இப்போது விஷயம் புரிந்துவிட்டது. தம்முடைய ஸ்ரீவைஷ்ணவ விசிஷ்டாத்வைதக் கொள்கைகள் பரவிவருவது சோழ மன்னனுக்குப் பிடிக்கவில்லை என்பதை ஏற்கெனவே அறிந்திருந்தார். தன்னுடைய நாட்டிலுள்ள புலவர்களையெல்லாம் திரட்டித் தன் கொள்கைக்கு ஆதரவு தேடப் பார்க்கிறான் அரசர்பிரான் என்பதையும் அறிந்திருந்தார். தன் இஷ்ட தெய்வத்திற்கு மேலான தெய்வம் இல்லை என்று பொருள்பட எழுதிச் சோழர்கோமான் பண்டிதர்களிடம் கையெழுத்துகள் வாங்கி வருவதாகவும் கேள்விப்பட்டிருந்தார். அரசனது ஆணைக்கு அஞ்சிக் கையெழுத்திட்டவர்களும் உண்டு; அரசனுக்கு இணங்கி நடப்பதால் தங்கள் ராஜபக்திக்குப் பரிசுபெற்று வீடுகட்டி வாழலாம், செல்வம் கொழிக்கச் சுகமாக வாழ்க்கை நடத்தலாம் என்று ஏழைப் பண்டிதர்கள் எண்ணிக் கையெழுத்திட்டதும் உண்டு. ஆனால், அந்த நிலைமை, இவ்வளவு விரைவில் தமக்கும் ஒரு சோதனையாக நேர்ந்துவிடக்கூடும் என்பதை இவரது மேதையும் உணர்ந்திருக்கவில்லை.

சோழ மன்னனின் அமைச்சர் குழுவில் நாலூரான் என்பவனும் ஒருவன். அவன் கூரத்தாழ்வானின் சீடன். அந்த

அமைச்சன் அரசனை நோக்கி, 'சக்கரவர்த்தியே! தங்கள் சாசனத்தில் எத்தனை பண்டிதர்கள் கையெழுத்திட்டால்தான் என்ன பயன்? இராமாநுஜரும் கூரேசனும் எழுதுவதன்றோ எழுத்து?' என்று துர்ப்போதனை செய்துகொண்டிருந்தான் என்பதை இராமாநுஜர் எப்படி அறிந்திருக்க முடியும்? எனினும், நாலூரான் அமைச்சனாக இருந்ததால் தங்களை நோக்கி ஆபத்து விரைந்து வந்துவிட்டது என்ற எண்ணம் பாகவதர் குழாத்தில் தோன்றியிருக்கவும் கூடும்.

இராமாநுஜர் தம் கொள்கைக்கு ஸ்ரீ பாஷ்யம் என்ற கோட்டையையும் கட்டி வைத்திருக்கிறார், திக்கு விஜயம் செய்து தம் சித்தாந்தத்தைப் பரப்பியும் வந்திருக்கிறார் என்பவற்றைப் பலரும் தெளிவாகத் தெரிந்து கொண்டிருந்தது போல், சோழ மன்னனும் தெரிந்து கொண்டிருந்தான் என்று கருதுவது பொருத்தமே. அதனால்தான் தன் வழிபடு கடவுளுக்கு மேல் ஒன்றும் இல்லை என்று பண்டிதர்களிடம் கையெழுத்து வாங்கித் தானும் தன் கொள்கைக்குப் பாதுகாப்பாக ஒரு கோட்டை கட்ட விரும்பினான். அந்த நிலையில் நாலூரானின் ஆலோசனை அரசனுடைய முயற்சியையும் அந்தரங்க நோக்கத்தையும் துரிதப் படுத்திவிட்டது என்றே கருத வேண்டும். 'எம்பெருமானார், கூரத்தாழ்வான் தொடக்கமான மகாவித்வான்கள் உபய வேதாந்தங்களில் வல்லவர்களாகையாலே, அவர்கள் கையெழுத்தை வாங்கினீராகில் இது நிலைபெறும்' என்று தன் அரசனிடம் நாலூரான் தெரிவித்ததாகக் கூறுகிறது ஒரு குருபரம்பரை வரலாறு.

நாலூரான் சொன்னதைக் கேட்டதும் சோழன் அப்போதே, 'இராமாநுஜனை அழைத்துக் கொண்டு வாருங்கள்' என்று பணியாளர் சிலருக்குக் கட்டளையிட்டுத் திருவரங்கத்திற்கு அனுப்பி வைத்ததாக ஆறுயிரப்படி குருபரம்பரை நூல் தெரிவிக்கிறது. அந்தப் பணியாளர்கள் மடத்து வாசலிலே வந்து, 'இராமாநுஜன் எங்கே?' என்று கேட்க, அந்தச் செய்தியைத்தான் வைஷ்ணவர் ஒருவர் உள்ளே போய்க் கூரத்தாழ்வான் செவியில் இரகசியமாகச் சொன்னார். அந்த வைஷ்ணவர் 'திருவாசல் காக்கும் முதலிகள்' என்று சொல்லப்படும் மடாலயப் பணியாளர்களில் ஒருவர்.

வாசல் காக்கும் அந்த வைஷ்ணவர்கள் அரசனது பணியாளர்களிடம் தந்திரமாகச் சில நல்வார்த்தைகளாடி அரசன் இராமாநுஜரை வரவழைக்கிற காரியம் இன்னது என்று ஊகித்

துக் கொண்டார்கள். கூரத்தாழ்வான் காதில் செய்தி விழுந்ததுமே, 'ஏதோ அனர்த்தம் விளையப்போகிறது; நம் குருநாதரைத் தனியே போகவிடலாகாது' என்ற எண்ணம் முதல் முதல் ஏற்பட்டது. அடுத்தபடியாகத் தாமே போகவேண்டுமென்று தீர்மானித்து விட்டார். ஆழ்வானைத் தனியே விடலாகாது என்று எண்ணிப் பெரியநம்பியும் உடன் புறப்பட்டார்.

கூரத்தாழ்வான் தம்முடைய காவி ஆடையைக் கட்டிக் கொண்டு போய்விட்டார் என்று முதலியாண்டான் சொன்னதுமே, 'அப்படியானல் அவருடைய வெள்ளையைத் தாருங்கள்' என்று வாங்கிக்கொண்டார் இராமாநுஜர் என்று ஆருயிரப்படி கூறுகிறது. இதன் பொருள் என்ன? ஆழ்வானுடைய உள்ளம் இராமாநுஜருக்குத் திறந்த புத்தகம் போல் தெரிந்துவிட்டது. வைஷ்ணவ வளர்ச்சியை முன்னிட்டு இராமாநுஜர் வாழவேண்டும்; அதே வளர்ச்சிக்காகத் தாம் உயிர்த்தியாகமும் செய்ய முற்படவேண்டும்—இதுதான் சீடர் திலகமான கூரேசனின் உள்ளக் குறிப்பு என்பது பளிச்சென்று மின்னிட்டது இராமாநுஜரின் உள்ளத்திலே.

வெள்ளை உடையை அணிந்து கொள்ளும்போதே, 'ஆழ்வானுக்கும் பெரியநம்பிக்கும் என்ன தீங்கு வரப்போகிறதோ?' என்ற கவலை இராமாநுஜர் உள்ளத்தை வாட்டியது. தம்மைக் காப்பாற்றுவதற்காக வயது முதிர்ந்த குருவும் அல்லவா தியாகம் செய்யத் துணிந்து விட்டார்?—இப்படி இவர் எண்ணமிடும் போதே முதலியாண்டான் உள்ளிட்ட பாகவதர்கள், 'தேவரீர் இனி இங்கே தங்கியிருக்கக் கூடாது' என்று காலில் விழுந்து விண்ணப்பம் செய்து கொண்டனர்.

இராமாநுஜர் ஸ்ரீ ரங்கநாதனின் சந்நிதிக்குப் போனர்—, வெள்ளை சாத்தியபடியேதான். பகவானைச் சரணமாக அடைந்து உள்ளம் தெளிந்து சடக்கென்று அரங்கநகரை விட்டுப் புறப்பட்டார். சில பாகவதர்களும் இராமாநுஜரைத் தொடர்ந்து சென்றார்கள். 'இராமாநுஜர் தப்பி விட்டார்!' என்று சோழனின் சேவகர்கள் அங்குமிங்கும் தேடத் தொடங்கினார்கள். இராமாநுஜரும் பாகவதர்களும் விரைந்து நடந்தார்கள். இவர்களைப் போக விடாமல் தடுக்க வேண்டுமென்று தொடர்ந்தவர்கள் நெருங்கிச் சென்றதும் உண்டு; இதை அறிந்து பாகவதர்கள் பயந்ததும் உண்டு; இராமாநுஜரே திகைத்ததும் உண்டு. எனினும், இராஜ சேவகர்களால் தப்பிச் சென்றவர்களைக் கண்டு

பிடிக்க முடியவில்லை. இராமாநுஜரோ, 'அரங்கநகர் அப்பனே நமக்கு வழித்துணை' என்று, மற்றவர்களுக்குத் தைரியம் சொல்லிக் கொண்டே நடந்தார்.

நீலகிரிச் சாரலில் சில வேடர்கள் வைஷ்ணவ அபிமான முள்ளவர்களாக இருந்தனர். அவர்கள் நல்லான் சக்கரவர்த்தி என்ற ஆசாரியரின் சீடர்கள். நல்லான் சக்கரவர்த்தியின் முழுப்பெயர் திருமலை நல்லான் சக்கரவர்த்தி. இவரும் இராமாநுஜரின் சீடர்களில் ஒருவர்; இராமாநுஜரின் கொள்கைகளை ஊடுருவி நோக்கித் தாம் கண்ட உண்மைக்கு இணங்க வாழ்க்கை நடத்தியவர். இவர் உள்ளத்தில் சாதிச்செருக்கு ஒரு சிறிதும் இடம் பெறவில்லை.

ஒரு சமயம் நல்லான் சக்கரவர்த்தி 'தீண்டாதவர்கள்' என்று ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த வகுப்பினருள் ஒருவனது பிரேதம் ஆற்று நீரில் மிதந்து வந்ததைக் கண்டார். அதில் வைஷ்ணவருக்கு உரிய சங்கு சக்கர முத்திரைகளைக் கண்ணுற்றதும், அந்தப் பிரேதத்துக்குச் சாஸ்திர முறைகளுக்கு இணங்கத் தகன ஸம்ஸ்காரம் முதலான சடங்குகளைச் செய்தார். இது கண்டு பலர் இவரை வெறுத்தார்கள், சாதி வரம்பை மீறிப் போய் விட்டார் என்று. ஆனால் 'நாட்டுக்குப் பொல்லான், நமக்கு நல்லான்!' என்று பகவானே அர்ச்சகர் முகமாக ஆவேசித்து இவரது பெருமையைத் தன் மக்களுக்கு அறிவித்தானும்.

நல்லான் சக்கரவர்த்தியின் சீடர்களான வேடர்களின் சேரிக்கு ஒரு வைஷ்ணவர் திருவரங்கத்திலிருந்து வந்து சேர்ந்தார். அவர் இராமாநுஜரைத் தேடிக்கொண்டு வந்தார். அவரை வைஷ்ணவர் என்று தெரிந்து கொண்ட வேடர்கள், 'நீர் எங்கேயிருந்து வருகிறீர்?' என்று அன்புடன் கேட்டார்கள். அதற்கு அவர் திருவரங்கத்திலிருந்து வருவதாகத் தெரிவித்ததும், அவர்கள் அவரைத் தண்டனிட்டு, 'எம்பெருமானர் பாங்காய் இருக்கிருரா? ஸ்ரீரங்கராஜாவின் செல்வத்திற்கு ஒரு குறையும் இல்லையே?' என்று ஆவலாக விசாரித்தார்கள்.

ஸ்ரீரங்கத்து வைஷ்ணவருக்குத் துக்கம் பொங்கி விட்டது. 'ரங்கராஜாவாவது, அவர் செல்வமாவது! ரங்கப்பெருஞ் செல்வம் எங்கேயோ போய்விட்டதே! அந்தச் செல்வம் தானே உங்கள் எம்பெருமானர்? அவரையும் பறிகொடுத்துவிட்டனரே பெரிய பெருமாளும் பெரிய கோயிலும்!' என்று கண்ணீரைத் துடைத்துக் கொண்டு பேசினர். வேடர்கள் திடுக்கிட்டார்கள்.

‘ இராமானுஜர் மேற்கு நோக்கிச் சில வைஷ்ணவர்களுடன் சென்றதாகக் கேள்வி ; அவரை நாடித் தவிக்கிறது என் உள்ளம் ; தேடித் திரிகின்றன என் கால்கள். நீங்களோ புகைந்து கொண்டிருக்கும் நெருப்பில் நெய்யை ஊற்றுகிறீர்கள்!’ என்றார் ஸ்ரீரங்கத்து வைஷ்ணவர். அதுகேட்ட வேடர்கள் தாங்கள் அப்போது ஈடுபட்டிருந்த தொழில் முயற்சிகளை அப்படியே விட்டுவிட்டு அழுத கண்ணீருடன் திருவரங்கத்தை நோக்கித் தொழுதார்கள். ‘ அரங்கனே! நீ எம்பெருமானாரை ஒருபோதும் கைவிடமாட்டாய் ; விரைவில் அவர் இருக்கும் இடத்தை எங்களுக்குக் காட்டி அருளவேணும் ’ என்று பிரார்த்தித்தார்கள். அந்த வேடர்கள் பட்டினியாகவே இராமானுஜரைத் தேடித் திரிந்தார்கள்.

ஐந்து தினங்கள் இப்படிக் கழிந்தன. ஆறும் நாள் மழை அடைத்துச் சொரிந்தது. அன்று இரவு அந்த மலையடியிலே இராமானுஜரும் குழுவினரும் மழையால் நனைந்து குளிரால் வருந்தியவண்ணம், ‘ தங்குமிடம் எங்கேயாவது கிடைக்குமோ ?’ என்று தேடிக் கொண்டு வந்தார்கள். சிறிது தூரத்திலிருந்த இந்த வேடச்சேரியில் நெருப்பின் ஒளி கண்டதும் இந்தத் திசையே வந்தார்கள். சேரியின் பொது வேலியைக் கண்டதும் இவர்கள், ‘ வழி எங்கே ? பிள்ளைகளே !’ என்று கேட்டார்கள்.

சில வேடர்கள், ‘ அது என்ன ? களைத்துப் போன குரலாய்க் கேட்கிறதே !’ என்று ஓடிவந்து வேலியை விலக்கி வழிகாட்டி, ‘ இங்கே வாருங்கள் ’ என்று அழைத்தார்கள். இராமானுஜரும் மற்றவர்களும் சேரிக்குள்ளே சென்றார்கள். இவர்களுக்கு வேடர்கள் வேறு ‘உலர்ந்த’ உடைகள் கொடுத்து, இவர்களது ஈர உடைகளை வாங்கிப் பிழிந்து உலரவிட்டார்கள். உடம்பின் சிலிர்ப்பு நீங்குமாறு குளிர்காய்ந்து இளைப்பாறவும் வசதி செய்து கொடுத்தார்கள்.

பிறகு வேடர்கள் இவர்களை நோக்கி, ‘ தாங்கள் எங்கேயிருந்து வருகிறீர்களோ ?’ என்று கேட்டார்கள்.

‘ கோயிலிலிருந்து (ஸ்ரீ ரங்கத்திலிருந்து) புறப்பட்டோம்.’

‘ அங்கே எம்பெருமானார் நலமாக இருக்கிறாரா ? ஏதோ கெட்ட செய்தி காதில் விழுந்ததே !’

‘ எம்பெருமானாரை நீங்கள் அறிந்தது எப்படியோ ?’

‘ நாங்கள் நல்லான் சக்கரவர்த்தியின் அடிமைகள் ; அவர் எங்களிடம், “ நமக்கெல்லாம் பரமாசாரியர் எம்பெருமானார்” என்று அருளிச் செய்தார்.’

இராமாநுஜரின் குழுவினரான ஒருவருக்கும் வேடர்களின் தலைவனுக்கும் நடந்த உரையாடல் இது. தாங்கள் இராமாநுஜரைக் குறித்து அறிந்து கொண்ட விதம் இது என்று அவர்கள் தெரிவித்தபின், 'எங்கள் குருவின் ஆணைக்கு இணங்க நாங்கள் "எம்பெருமானார் திருவடிகளே சரணம்" என்று இருக்கிறோம், தொழில் செய்கிறோம், தொண்டு செய்கிறோம்' என்று சொல்லி முடித்தார்கள். உடனே இராமாநுஜக் குழுவினர், 'இவரே அவர்!' என்று சுட்டிக் காட்டினார்கள்.

அந்த வேடர்கள் இவர் திருவடிகளைக் கட்டிக்கொண்டு அழுதார்கள். தேனும் தினையும் கொண்டு வந்து வைத்தார்கள்; 'இதை வறுத்து இடித்துத் தேனில் கலந்து அமுது செய்ய வேணும்' என்று வேண்டிக்கொண்டார்கள். அன்று இரவு அந்தச் சேரியிலே உறங்கினார்கள் இராமாநுஜரும் குழுவினரும். மறுநாள் சிற்றஞ்சிறு காலையில் இராமாநுஜர், வேடர்களில் ஒருவனையும் தம் குழுவினருள் ஒருவனையும் நோக்கி, 'இருவரும் திருவரங்கம் போய் க்ஷேமத்தைச் சொல்லி வாருங்கள்' என்று கட்டளையிட்டு, அங்கேயிருந்து மேற்கே தொடர்ந்து பிரயாணமானார்.

இராமாநுஜருடன் நாற்பத்தைந்து பேர் திருவரங்கத்திலிருந்து மேல்நாட்டிற்கு (இன்றைய மைசூர்ச் சீமைக்கு)ப் புறப்பட்டதாக ஆறுயிரப்படி குருபரம்பரை நூல் தெரிவிக்கிறது. வேடர்கள் தங்கள் சேரியில் தங்கிப் புறப்பட்டவர்களை மலைக்கு மேலே ஆறு காத வழிதூரம் கொண்டுபோய், ஒரு வேடனிடம் ஒப்படைத்தார்கள். அவன் இவர்களை ஒரு கிராமத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தான். அங்கே ஒரு பிராமணனுடைய மனைவி தண்டனிட்டு, 'நீங்கள் அமுது செய்ய வேண்டாமோ?' என்று கேட்டாள். 'வேண்டாம்' என்றார்கள் இவர்கள். அப்போது அவள், 'அடியேனுக்கும் எம்பெருமானாரின் திருவடித் தொடர்பு உண்டு' என்று சொல்லித் தன்னைக் 'கொங்குப் பிராட்டி' என்று இராமாநுஜர் அளித்திருந்த தாஸ்ய நாமத்தினால் அறிமுகப்படுத்திக் கொண்டாள்.

இராமாநுஜருக்குப் பழைய நினைவுகள் வந்தன. எனினும் பல ஆண்டுகளாகி விட்டதால், கொங்குப்பிராட்டியைப் பார்த்தவுடன் தெரிந்து கொள்ள முடியவில்லை. அவளும் இராமாநுஜரை நோக்கித் திகைத்து நின்றாள். 'இராமாநுஜரைப் போலவே இருக்கிறார், காவிஆடை இல்லாததால் உறுதிகூற முடியவில்லை' என்று எண்ணமிட்டாள். இராமாநுஜர், 'இன்னும் என்னைத்

தெரிந்து கொள்ளவில்லையா?' என்று கேட்டபின் கொங்குப் பிராட்டிகாலைப் பிடித்துக் கொண்டு அழுதாள். அந்த நாளில் கொங்குப்பிராட்டியின் கணவர் வைஷ்ணவராகி விடவில்லை. ஆனால் இராமாநுஜரையும் குழுவினரையும் விருந்தினராக வர வேற்று உபசரிக்கும் பாக்கியம் பெறவேண்டுமென்று வைஷ்ண வராகிவிட்டார் என்கிறது ஆருயிரப்படி குருபரம்பரை நூல்.

கடைசியாக இராமாநுஜர் மைசூர்ச் சீமையைச் சார்ந்த தொண்டனூருக்கு வந்து சேர்ந்தார், தம் குழுவினருடன். விட்டலதேவ ராயன் என்ற ஜைன அரசன் அந்த நாட்டுக்கு அதி பதியாக இருந்தான். அவனுடைய மகளுக்குப் பேய் பிடித்திருந் தது என்று நாடெங்கும் பேச்சாயிருந்தது. மந்திரவாதிகளாலும் வைத்தியர்களாலும் அந்தச் சித்தப் பிரமையைக் குணப்படுத்த முடியவில்லையாம். அரண்மனையில் உபாதானத்திற்குப் போயி ருந்த தொண்டனூர்நம்பி என்ற ஒரு பாகவதர், பெரிதும் வருத்த முற்றிருந்த அரசியைக் கண்ணுற்றுக் காரணத்தைத் தெரிந்து கொண்டு, 'நம் ஆசாரியர் எம்பெருமானார் இந்தப் பிரதேசத்திற்கு வந்திருக்கிறார். அவர் அருளால் அரசிளங்குமரி சுகம் அடைவாள்' என்று பதில் சொன்னாராம். அது கேட்ட அரசி அரசனுக்குச் செய்தி சொன்னாள். 'புதியவர் நம் புதல்வியைக் குணப்படுத்து வாராயின் அவரே நமக்கும் ஆசாரியர்!' என்று பதில் சொல்லி விட்டான் அரசன்.

இந்த நிலையில் விட்டலதேவன் தன் குருமார்களுக்கு விருந் திட விரும்பினான். அப்போது அரசி தன் கணவனை நோக்கி, 'அவர்கள் நம் விருந்துக்கு வரமாட்டார்கள்' என்றாள். 'ஏன்?' என்று அரசன் கேட்க, 'நீர் அங்கஹீனர் என்பதற்காக அவர்கள் வரப்போவதில்லை' என்று அவள் பதில் சொன்னாள். அரசனே பிடிவாதமாக அவர்களை அழைக்கத் துணிந்தான். அரசி சொன்னபடியே அந்தக் குருமார்கள், 'உடலில் குறையுள்ளவன் அகத்திலே உண்ணலாகாது என்று நமது நூல் கூறுகிறதே, நாங்கள் என்ன செய்வோம்?' என்று இராஜசேவகரிடம் சொல்லியனுப்பிவிட்டார்களாம்.

உண்மை என்னவென்றால், இந்த அரசனைப் பிடித்துக் கொண்டுபோன எதிரி அவனை அங்கஹீனனாக்கி விடுவித் தான். 'டில்லீச்வரனை துருஷ்கன்' என்று குரு பரம்பரை வரலாறுகள் தெரிவிக்கின்றன. இப்போது தன் குருமார்கள் ஒரு குறை கருதித் தன்னை அலட்சியம் செய்துவிட்டார்களே என்ற ஆத்திரம் அரசனின் உள்ளத்தில் எழுந்து புதைந்துகொண்

கோயில் முன்வாசல் தோற்றம், திருநாராயணபுரம், மேல்கோட்டை



டிருந்தது. அதே சமயம் அரசி 'இராமாநுஜரை நாம் புதிய குருவாகக் கொண்டு உய்ந்துபோகலாகாதோ?' என்று சொன்னாள்.

அரசன் தன் அரண்மனைக்கு வரும்படி இராமாநுஜரை அழைக்க ஆள் அனுப்பி வைத்தான். இராமாநுஜரோ, 'தேசாந்தரியாகிய நாம் இராஜதானியை மிதிப்பானேன்?' என்று சொன்னார். அருகிலிருந்த தொண்டனூர் நம்பி முதலானவர்கள் இவரை நோக்கி, 'அரசனுக்குச் சிறப்பாக அருள்புரிவதால் நம் தரிசனம் வளர இடமுண்டு' என்று வற்புறுத்தி வேண்டிக்கொண்டார்கள். இராமாநுஜரும் சம்மதித்து விட்டலதேவனின் அரண்மனைக்குச் சென்றார்.

அரசனது புதல்வியை இவரது ஸ்ரீபாத தீர்த்தத்தினாலேயே தொண்டனூர் நம்பி முதலானவர்கள் சித்தப்பிரமை தெளிவித்துக் குணப்படுத்திவிட்டதாகக் குருபரம்பரை ஐதிகங்கள் தெரிவிக்கின்றன. பிறகு அரசனும் குடும்பத்தினரும் சீடராயினர். விட்டலதேவனுக்கு விஷ்ணுவர்த்தன ராயன் என்ற பாகவதப் புனை பெயரான தாஸ்ய நாமத்தை இராமாநுஜர் சூட்டினார்.

பிறகு ஆயிரக்கணக்கான ஜைனர்கள் இராமாநுஜரிடம் தர்க்கவாதம் செய்யவந்து தோற்றுப் போனார்கள் என்றும், அவர்களில் சிலர் ஸ்ரீவைஷ்ணவர்களாகி விட்டார்களென்றும் குருபரம்பரை நூல்கள் கூறுகின்றன. இந்த நிகழ்ச்சிக்குப் பின், இராமாநுஜர் அங்கே வேதாந்த வியாக்கியானம் செய்யத் தொடங்கினார்.

அப்பால் இராமாநுஜர் தம் சீடர்களுடன் திருநாராயணபுரத்திற்குச் சென்றார். இதை யதுகிரி என்றும், யாதவாத்ரி என்றும் கூறுவதுண்டு. இப்போதுள்ள பெயர் 'மேல்கோட்டை'.

ஒருசமயம் இங்கேயுள்ள துளசிக்காட்டில் போய்க்கொண்டிருந்தபோது இராமாநுஜர் ஒரு புற்றுக்குள்ளே விக்கிரகம் ஒன்றைக் கண்டுபிடித்தார். அது பெருமாளின் விக்கிரகம். முஸ்லிம்களின் ஒரு படையெடுப்பு நிகழ்ந்தபோது, பக்தர்கள் இந்த விக்கிரகத்தை இங்கே மறைத்து வைத்துவிட்டுப் போனதாக இவ்வூரிலுள்ள முதியவர்கள் செய்தி சொன்னார்கள். விஷ்ணுவர்த்தனனும் வந்து தரிசித்து மகிழ்வெய்தினான். இங்கே ஒரு கோயில் கட்டுவதற்கு ஏற்பாடு செய்தான்; ஒரு பெரிய குளமும் தோண்டுவித்தான்.

இராமாநுஜர் பெருமாளுக்குத் தாமே மூன்று நாள் ஆராதனம் செய்தார். பின்பு கல்யாண ஸரஸ் என்ற அந்தக் குளக் கரையின் மூலையில் பாலாறுபோல் பொங்கிக் கிளம்பிய திருமண்ணைக் கண்டு மகிழ்வெய்தினர். திருவரங்கத்திலிருந்து ஏற்கெனவே கொண்டுவந்திருந்த திருமண் செலவாகிவிட்டதால் அதை இங்கே கண்டுபிடித்ததும், இராமாநுஜருக்கும் சீடர்களுக்கும் பகவானுடைய விசேஷ அருளுக்கு ஒரு சான்ருகவே தோன்றியது.

திருநாராயணபுரத்துப் பெருமாளைத் திருநாராயணன் என்ற பெயரால் அழைத்து வழிபட்டார்கள். இப்பெருமாளுக்கு விழாக்கள் நடத்த வேண்டும் என்று தீர்மானித்தார் இராமாநுஜர். ஆனால் உத்ஸவ விக்கிரகம் காணப்படவில்லை. 'ராமப்ரியர்' என்ற அந்த உத்ஸவ விக்கிரகம் டில்லியில் 'துருஷ்க ராஜக்ருஹத்திலே' இருப்பதாகத் தெரியவந்தது.

இராமாநுஜர் டில்லிக்குச் சென்றதாகவும், அங்கே அந்த அரசனிடம், 'எங்கள் குலதெய்வமான ராமப்ரியர் இங்கே எழுந்தருளியிருக்கிறர்; அவரைத் தரவேணும்' என்று வேண்டிக் கொண்டதாகவும், அதற்கு டில்லி அரசன், 'கொள்ளை கொண்டு சிறை வைத்த எம்பெருமான்கள் சிறைச்சாலையைச் சோதித்துக் கொள்ளீர்!' என்று பதில் சொன்னதாகவும் ஆருயிரப்படி குரு பரம்பரை அறிவிக்கிறது. ஆனால் அந்தச் 'சிறைச்சாலை'யில் ராமப்ரியர் காணப்படவில்லை.

பிறகு இராமாநுஜர் தாம் தேடிவந்த விக்கிரகம் டில்லி அரசனின் மகள் வசமாகியிருப்பதாகத் தெரிந்து கொண்டார். இதை இவர் அரசனுக்கு அறிவித்ததும், அவன் இவரை அங்கே அழைத்துக்கொண்டு போனன். கடைசியாக ராமப்ரியரைக் கொண்டு போவதற்கும் டில்லி அரசன் சம்மதித்துவிட்டானும்.

ராமப்ரியர் தம் மடியிலே இருக்கக் கண்டதும் இராமாநுஜர் மார்பும் தோளும் பூரித்து ஆனந்தக் கண்ணீர் பெருக, 'என்னுடைய செல்வப்பிள்ளையோ!' என்று எடுத்து அணைத்துக்கொண்டாராம். அது முதல் ராமப்ரியருக்குச் 'செல்வப்பிள்ளை' என்ற திருப்பெயர் வந்தது என்பர். செல்வப்பிள்ளையை 'யதிராஜ குமாரர்' என்றும் கூறுவதுண்டு.

இராமாநுஜர் திருநாராயணப் பெருமாளுடன் செல்வப் பிள்ளையைச் சேர்த்தார். அப்பெருமானுக்கு உத்ஸவமூர்த்தி மீண்

டும் கிடைத்துவிட்டதால், விழாக்கள் நடத்துவதற்கு வேண்டிய திட்டம் ஒன்றையும் வகுத்துக் கொடுத்தார்.

திருநாராயணபுரத்தில் தம் பெயரால் யதிராஜமடம் என்ற ஒரு மடமும் கட்டிவைத்தார் இராமாநுஜர். பிறகு பத்மகிரியில் உள்ள பௌத்தர்களை வாதில் வென்றதாகவும் ஆறுயிரப்படி குருபரம்பரை தெரிவிக்கிறது. பன்னிரண்டு ஆண்டுகள் இராமாநுஜர் ஸ்ரீபாஷ்யக் கொள்கைகளைப் பிரசாரம் செய்து கொண்டு திருநாராயணப் பெருமாளின் அடிநிழலில் வாழ்ந்தார் என்றும் ஐதிகங்கள் தெரிவிக்கின்றன. அப்பால் ஒரு வைஷ்ண வர் திருவரங்கத்திலிருந்து வந்து, சோழராஜ சபையில் நடந்ததை யெல்லாம் விவரித்தார் என்பது வரலாறு.

இராமாநுஜர் டில்லியிலிருந்து 'செல்வப்பிள்ளை'யுடன் திரும்பிவரும் வழியில் ஓரிடத்தில் திருடர்கள் இவரையும் இவரு டைய சீடர்-குழுவையும் எதிர்த்து ராமப்ரிய விக்கிரகம் உள்ளிட்ட எல்லாவற்றையும் கொள்ளையடித்துக்கொண்டு போக முயன் றனராம். அப்போது அருகில் வசித்துவந்த 'ஹரிஜன' வகுப்பினர் உதவிக்கு ஓடிவந்து திருடர்களைத் துரத்திவிட்டு இராமாநுஜரை யும் சீடர்களையும் ராமப்ரிய விக்கிரகத்தையும் ஆபத்திலிருந்து காப்பாற்றித் திருநாராயணபுரத்தில் கொண்டுவந்து சேர்த்தார் களாம்.

கைம்மாறு கருதாது இவர்கள் செய்த அந்த உபகாரத்திற்கு நன்றி தெரிவிக்கவேண்டுமென்று திருநாராயணபுரத்தில் நடக் கும் பிரமோத்ஸவ காலத்தில் இவர்களுக்குச் சில வரையறை களுடன் ஆலயப்பிரவேச அனுமதி கொடுத்தாராம். அந்த வழக்கம் திருநாராயணபுரம் முதலான க்ஷேத்திரங்களில் இன்றும் நடைமுறையில் இருக்கிறது.

டில்லி முஸ்லிம் அரசனின் படை வீரர்கள் இராமாநுஜரைத் துரத்திவந்ததாகவும், அப்போது 'ஹரிஜன' வகுப்பினர் உதவி புரிந்ததாகவும், அதற்காக இராமாநுஜர் திருநாராயணபுரத்துக் கோயிலில் மூன்று நாள் ஹரிஜனங்களுக்கு ஆலயப் பிரவேச உரிமை அளித்ததாகவும் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துப் பதிப்பாகிய 'ராமாநுஜரின் வாழ்க்கை வரலாறு' கூறுகிறது.

காந்தியடிகளால் 'ஹரிஜனங்கள்' என்று இவ்வகுப்பினர் அழைக்கப்பெற்றதற்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்பே இராமாநுஜர் இவர்களைத் 'திருக்குலத்தார்' என்று அழைத்து, இவர்கள் முன்னேற்றத்திற்கு அடிக்கல் நாட்டினர் என்பது ஐதிகங்கள்பலவும் ஒருமுகமாய் ஒப்புக்கொள்ளும் செய்தி. இதைச்

சுட்டிக்காட்டும் ஆட்கொண்ட வில்லி கோவிந்தாசாரிய சுவாமி, பேலூர், மேல் கோட்டை ஆகிய தலங்களிலுள்ள கோயில் களில் ஆண்டுக்கு ஒரு முறை பிரவேசிக்க ஹரிஜனங்களுக்கு இராமானுஜர் அனுமதியளித்ததாகவும் சொல்லுகிருர். இச்சந்தர்ப் பங்களில் இவர்கள் தொடும்படி நேர்ந்துவிட்டாலும் பிரா மணர்கள் குறை கூறக்கூடாது என்பதையும் ஆட்கொண்ட வில்லி சுவாமி குறிப்பிடுகிருர்.

(இச் செய்தியைக் காலம் சென்ற மகா வித்வான் ஸி. ஆர். ஸ்ரீநிவாஸையங்கார் எழுதியுள்ள 'ஸ்ரீ ராமானுஜாசாரியாரின் வாழ்க்கையும் உபதேசங்களும்' என்ற ஆங்கில நூலின் 224-ம் பக்கத்து அடிக் குறிப்புகள் ஒன்றில் காணலாம். 'ஹரிஜனங்கள்' மைசூர்ச் சீமையை நோக்கி ராமநுஜரும் சீடர்களும் சென்று கொண்டிருந்தபோது உதவிபுரிந்தார்கள் என்ற ஐதிகமும் உண்டு.

எந்த வகுப்பினரும் வைஷ்ணவராகலாம், அப்போது அவர்கள் பண்டைக் குலத்தை விட்டுத் தொண்டக்குலத்தினர் ஆகிவிடுகிருர்கள், இந்த நிலையில் அவர்களைப் பண்டைக்குலத் தினராகக் கருதுவது பழிப்பும் பாவமுமாகும் என்பது இராமாநுஜர் வளர்த்துவிட்ட ஸ்ரீவைஷ்ணவ தரிசனம். இத் தொண்டக் குலத் தினருள் 'தாழ்த்தப்பட்டிருந்தவர்' களைத் 'திருக்குலத்தார்' என்று குறிப்பிட்டது இராமாநுஜர் மேதை. இதனுல் 'தாழ்ந்தவர்' உயர்ந் தனர், 'உயர்ந்தவர்' என்று செருக்குற்றிருந்தவர்களின் அக இருள் நீங்கியது என்பர்.

ஸ்ரீரங்கநாதனை 'அற்றவர்சேர் திருவரங்கப் பெருமாள் என் கிருர், திவ்ய கவி அழகிய மணவாளதாசர். 'ஏழை, ஏதலன், கீழ்மகன்' என்று பாராது குகனையும் தோழனுகக்கொண்டவன் அரங்கநாதன் என்கிருர்.

**அற்றவர்சேர் திருவரங்கப்**
**பெருமாள் தோழர்**
**அவதரித்த திருக்குலம்என்(று)**
**அறியாய் போலும்!**

என்பது திவ்யகவிஞர் வாக்கு. இந்த வாக்கில் வரும் திருக்குலம், கதியற்றவர்களுக்கும், 'தாழ்ந்தவர்' என்று ஒதுக்கப்பட்டிருந்த வர்களுக்கும் இராமாநுஜர் அருள்சுரந்து சூட்டிய அருமைத் திருப்பெயர்.

இராமாநுஜரைப் 'பத்தியின் கொழுந்து' என்றும், 'புத்தி யின் கொழுந்து' என்றும், 'நான்மறையின் தவக்கொழுந்து'

என்றும் கூறுவதுண்டு. வேரில் பட்டால் கொழுந்து முதல்முதல் வாடும். தாழ்ந்தார்க்கு 'ஐயோ!' என்று முகங்காட்டி அருள் சுரந்தார் இராமாநுஜர்.

* * *

தொண்ணூர் என்ற தொண்டனூர் ஸ்ரீரங்கப் பட்டணத்திற்கு வடக்கில் சுமார் பத்து மைல் தூரத்தில் இன்று ஒரு பாழடைந்த கிராமமாகக் காணப்படுகிறது. சென்ற காலத்தில் பெருவாழ்வு வாழ்ந்து இப்போது ஏழைமையோடு தோழமை பூண்டு 'ஆர்?' என்று அறியத்தகாத நிலையில் வாழும் ஒரு. சீமானை நினைவூட்டுகிறது இவ்வூர். 'வாழ்கிறோமா, என்ன? தாழ்ந்திருக்கிறோம்; தாழ்ந்து கொண்டேயிருக்கிறோம்!' என்று சீமான் சொல்லக் கூடுமே, அந்த மாதிரி ஒரு மௌனப் பிரசங்கம் செய்கிறது தொண்டனூர்.

'அந்த நாளில் அள்ளிப் பொழிந்து விட்டோமே, அதீதமாய்க் கொட்டிவிட்டோமே!' என்று வெள்கி வெறுத்து அதிர்ஷ்டதேவி தன் முகத்தைத் திருப்பிக் கொண்டு விட்டாளோ?—என்று சொல்லும்படியிருக்கும் தலங்களில் இதுவும் ஒன்று என்கிறார் ஹில்ட்டன் ப்ரௌன்,—'இராமாநுஜர் அற்புதங்கள் புரிந்த இடம்' என்ற தலைப்பில் தொண்ணூரைக்குறித்து எழுதும்போது.

'ஹொய்ஸள' வம்சத்து அரசனை விட்டலதேவனின் அரண்மனையில் அரசிளங்குமரியைப் பிடித்துப் பீடித்துக்கொண்டிருந்த பேயை இராமாநுஜர் ஓட்டினார் என்பதைத்தான் அற்புதமாகச் சாதாரண மக்கள் குறிப்பிடுவர். ஆனால் 'நம்பிக்கை-வைத்தியம்' செய்து சித்தப்பிரமையைக் குணப்படுத்தியது இன்றளவும் நடைபெற்றுவரும் நிகழ்ச்சிதான் என்று தற்கால மனோதத்துவ விஞ்ஞானிகள் சொல்லிவிடுவார்கள். எனவே இதைக் காட்டிலும் அற்புதம் என்று சொல்லக்கூடியது, இராமாநுஜர் அரசனை அங்கஹீனன் என்று புறக்கணித்து விடாமல் அரண்மனைக்குச் சென்று கருணைகூர்ந்து அவனை ஆட்கொண்டதும், பலரையும் ஸ்ரீவைஷ்ணவராக்கிக் கொண்டதுமாகிய நிகழ்ச்சிதான்.

பாழடைந்துகிடக்கும் கோயில்கள் மண்டபங்கள் முதலியன, ஒரு காலத்தில் தொண்ணூர் ஹொய்ஸள மன்னனின் தலைநகரமாயிருந்தது என்பதற்கும் இராமாநுஜரின் பக்திப் பெருந்தொண்டுகளுக்கும் சான்றாகக் கருதத்தக்கன. மைசூருக்குத் தப்பிவரும்போது இராமாநுஜரின் வயது சுமார் எண்பது என்றும், அந்த வயதில் இவர் திருச்சியிலிருந்து பாத யாத்திரையாகத்

தொண்ணூருக்கு வந்து சேர்ந்தார் என்றும், அதனுல் உடல்நிலை பாதிக்கப்படாமல் மேலும் நாற்பது ஆண்டுகள் வாழ்ந்ததே அற்புதம்தான் என்றும் ஹில்டன் ப்ரெளன் எழுதியிருக்கிருர்.

சுமார் இற்றைக்கு எண்ணூற்றறுபது ஆண்டுகளுக்கு முன் இராமாநுஜர் ஸ்ரீரங்கப்பட்டணம்—மேல்கோட்டைப் பகுதியில் சஞ்சரித்துப் பணிகள் புரிந்ததைக்குறிப்பிடும்போது, ஆலயப்பணிகளுடன் பிரசாரத்திற்காக இவர் தொண்ணூரில் பல மடங்களை ஏற்படுத்தியிருந்தார் என்பதையும் நினைவூட்டுகிருர் ஹில்ட்டன் ப்ரெளன். சுமார் நூற்றறுபது ஆண்டுகளுக்கு முன்புவரை இராமாநுஜர் நியமித்திருந்த மடாதிபதிகளின் பரம்பரையினர் இடையருது பணிபுரிந்து வந்திருந்ததாக புக்கானன் என்ற ஐரோப்பியர் அறிவிக்கிருர்.

புக்கானனிடம் மேல்கோட்டையிலுள்ள பிராமணர்கள் எழுநூறு மடங்களைத் தொண்டனூரிலே இராமாநுஜர் ஏற்படுத்தியிருந்ததாக அந்த நாளில் தெரிவித்தார்கள். அவர்களிடமிருந்து, 'மோதி தலாப்' என்ற தடாகத்தை உருவாக்க ஆதி அணையை இராமாநுஜரே அமைத்தார் என்ற செய்தியையும் புக்கானன் தெரிந்துகொண்டார்.

தொண்டனூரில் இன்றும் இராமாநுஜர் கருணை கூர்ந்து செய்த அதிசயப் பணியாக நிலைநிற்பது 'மோதி தலாப்' என்ற ஏரிதான். குன்றுகளுக்கு இடையே ஆங்கில எழுத்தான V–வடிவமுள்ள துவாரத்திலிருந்து பெருகிவரும் ஒரு சிற்ருற்றை அணைகட்டித் தடுத்து இப்படிப்பட்ட பெரிய, அழகுவாய்ந்த, நீர்நிலை ஒன்றை உருவாக்க முடியும் என்ற கனவு இராமாநுஜரின் கருணையுள்ளத்தில்தான் முதல்முதல் உதயமாயிற்று என்று அசைக்க முடியாத செவிவழி வரலாற்றுச் செய்தி தெரிவிப்பதாக ஹில்டன் ப்ரெளன் கூறியுள்ளார்.

அக்காலத் தலைநகரின் தாகமும் தாபமும் தீர ஏரி அமைப்பதற்கு அணைகட்ட வேண்டிய இடம் இதுதான் என்று இயற்கை இராமாநுஜருக்கு அறிவித்தது; குறித்த இடத்தில் அணை கட்டினுல் ஏரியை அமைக்கும் பணி எளிதாகி விடும் என்று ஊகித்துக்கொண்டார். கருணை மேதையாகிய இராமாநுஜரே இந்த ஏரியைத் தோற்றுவித்தார் என்பது முற்றும் நம்பத்தக்க செய்திதான் என்று முடிவு கட்டுகிருர் ஹில்ட்டன் ப்ரெளன்.

மிகவும் சிறியதொரு அணையால் தண்ணீரைப் பேரளவில் தேக்கி வைத்துக்கொண்டு பயன்படுத்திக் கொள்ளலாம் என்று கருதிய உள்ளத்தில் கருணையும் மேதையும் போட்டியிட்டிருக்க வேண்டும்.

நீரத நெறியில், வாவி
நிறைந்தநீர் என்ன நின்றான்

என்று வேதவியாசரை வில்லிபுத்தூரார் தம் பாரதத்தில் வருணித்திருக்கிறார். அப்படியே இராமாநுஜரும் ஞான வெள்ளமாக வந்து சேர்ந்தார் மைசூர்ச் சீமையின் இந்தப் பிரதேசத்திற்கு. இந்தக் கருணை வள்ளல் நீர் நிறைந்த ஏரி ஒன்றையும் நிர்மாணிக்க உதவினார் என்றால், இதை மைசூரில் இவர் இழைத்த அற்புதப் பணிகளுக்கெல்லாம் ஒரு நினைவுக்குறியாகக் கொள்ளக் கூடுமல்லவா ?

தொண்ணூரின் தெருவிலிருந்து பார்த்தாலும் இந்த ஏரி கட்புலனாவதில்லை; எனினும் ஏரியின் நீளம் இரண்டரை மைல்; குறுக்களவு ஒரு மைல். இப்படி ஒதுங்கிக் குன்றுகளின் மறைவில் இருக்கிறது இந்த ஏரி—நாணி ஒதுங்கி நிற்கும் ஒரு நங்கை போலே !

கருணைக்கடலை முகந்து சுருக்கிக்கொணர்ந்து இராமாநுஜர் என்ற மாமேகம் மைசூர்ச் சீமையில் பொழிந்த ஞானவெள்ளத்திற்கு இந்த ஏரி ஓர் அறிகுறிதான். ஆனால் ஏரி தன் அளவிற்குத் தகுந்தபடி பயன் தரவில்லை. இராமாநுஜரின் ஞானவெள்ளமோ மைசூர்ச் சீமையிலும் வடநாட்டிலும் நிலைத்த நற்பயன் விளைத்து வந்திருக்கிறது.

# 23

# கூரேச விஜயம்

திருவரங்கத்திலிருந்து வந்து சேர்ந்த ஸ்ரீவைஷ்ணவரை நோக்கி இராமாநுஜர், 'பெரிய பெருமாளும் (ஸ்ரீரங்கநாதனும்) பெருந்திருச் செல்வமும் எப்படி?' என்று கேட்டார். அதற்கு அவர், 'தேவரீர் இல்லாத குறை ஒன்று தான்; மற்றொரு குறையும் இல்லை' என்று பதில் சொன்னார்.

ஆய்ப்பாடியின் பெருஞ் செல்வம், கண்ணன் அன்புகொண்டிருந்த செல்வச் சிறுமியரான கோபிகைகளே என்பார்கள். அப்படியே அரங்கநாதனின் பெருஞ்செல்வம் பாகவத சமுதாயம் தான் ; பாகவத அன்பர்களின் பெருவாழ்வு பெருமாள்தான் !

ஸ்ரீவைஷ்ணவர் சொன்னதிலிருந்து, திருவரங்கத்தில் இப்போதுள்ள நிலையில் பழைய பயங்கர அடக்குமுறை நீடித்திருக்க

வில்லை என்பது புலனாகிவிட்டது. எனினும், இது குறித்து இராமாநுஜர் மகிழ்ச்சி அடையவில்லை.

அந்த நாளிலே கூரேசனையும் பெரியநம்பியையும் ராஜ சேவகர்கள் அழைத்துக் கொண்டு போய்ச் சோழன் முன்னே விட்டார்கள்—என்று சொல்லிக்கொண்டே போனார் ஸ்ரீவைஷ்ண வர். அதே சமயம் இராமாநுஜர் திருவரங்கத்திற்கு மேற்கே பெரிய காட்டுக்குள்போய்க்கொண்டிருந்தார். முதலியாண்டான், பிள்ளையுறங்காவில்லிதாசர், எம்பார் முதலான சீடர்களும் வந்து சேர்ந்தனர். அந்த அடர்ந்த காட்டுக்குள்ளே அவர்கள் இரண்டு நாள் தொடர்ந்து போய்க்கொண்டேயிருந்தனர். ஓய்வு சிறிதும் இல்லாமல் காட்டுப்பாதையில் நடந்து சோழ மகாராஜ்யத்தின் எல்லைக்குப் போய்விட்டார்கள். இந்த நினைவுகள் இராமாநுஜர் உள்ளத்தில் எழுந்தன.

இவர் தம் சீடர்குழாத்துடன் சோழ ஸாம்ராஜ்யத்தைத் தாண்டுவதற்குள் கொடிய நிகழ்ச்சிகள் நடந்துவிட்டன சோழ ராஜசபையிலே—என்பது இந்த வைஷ்ணவரின் வாக்குமூலமாகத் தெரிந்துவிட்டது. ‘தங்கள் காவி உடையைத் தரித்துக் கொண்டு முக்கோல் ஏந்திக் கமண்டலத்துடன் தங்கள் அருமைச்சீடரும் எங்கள் வழிகாட்டியுமான கூரேசன் தங்கள் பரமாசாரியரான பெரிய நம்பிகளுடன் ராஜசபையில் தோன் றினார். “தொண்டு கிழவ”ரான தன் தந்தையைத் தொடர்ந்து தங்கள் அன்புத் தங்கையான அத்துழாயம்மையும் போயிருந் தாள்’ என்று வைஷ்ணவர் சொல்லிக்கொண்டே போனார். இராமாநுஜர் ஒரே கவனமாய்க் கேட்டுக் கொண்டிருந்தார்.

அரசன் இவர்களை ஏற்கெனவே பார்த்ததில்லை. கூரேசனை இராமாநுஜர் என்றே நினைத்து விட்டான். ‘என்ன ஒளி! என்ன இளமை!’ என்று அதிசயித்த வண்ணம் கூரேசனை முதல் முதல் முகமன் கூறி வரவேற்றான். தக்கதோர் ஆசனத்தில் இரு வரையும் அமரச்செய்து இவர்களது கொள்கையை அறிந்து கொள்ள விரும்பினான். அப்போது நாலூரான் என்பவனும் அங்கே இருந்தான்.

இந்த நாலூரானைக் கூரேசனின் சீடருள் ஒருவனாகவும் ஏற் கெனவே தெரிந்து கொண்டிருக்கிறோம். இராமாநுஜரை வர வழைத்துச் சோழன் தன் கொள்கைக்கு இணங்கக் கையெழுத் திடுமாறு [வற்புறுத்தவேண்டும் என்ற ஆலோசனையும் இவன் மூளையில் உதித்ததே என்பதையும் நாம் தெரிந்துகொண்டிருக் கிறோம் அல்லவா?

இப்போது இவன் சோழ மன்னனை நோக்கி, 'தாங்கள் இராமாநுஜர் என்று கருதி மரியாதை செய்தீர்களே, அவர் இராமாநுஜர் அல்லர்!' என்று மெல்லச் சொன்னான். அரசன் திகைத்தான்.

நாலூரான் மேலும் சொன்னான்: 'இவர் இராமாநுஜரின் சீடர்; ஆயினும் வித்தையிலும் நுண்ணறிவிலும் அவருக்குச் சமானர்.'—அரசனுக்குக் கோபம் அதிகரித்தது.

அவன் தன் வேலைக்காரர்களை நோக்கி, 'இராமாநுஜரை அழைத்துவரும்படியல்லவா உங்களை அனுப்பிவைத்தேன்? அவர் தப்பிவிட்டாரே!' என்று கர்ச்சித்தான்; கடிந்துகொண்டான். எப்படியாவது அவரைக் கொண்டுவரவேண்டுமென்று வேறு பலரை—பணியாளர்களையும் ஒற்றர்களையும் அனுப்பிவைத்தான்.

பிறகு அரசன் கூரேசனையும் பெரியநம்பியையும் நோக்கி, 'நீங்கள் யாராயிருந்தாலும் இதோ இதை வாசித்துப் பாருங்கள், வித்வான்களே! இதில் நீங்கள் கையெழுத்து இடவேண்டும்' என்று ஓலையொன்றை நீட்டினான். அதில் 'சிவாத் பரதரம் நாஸ்தி' என்று எழுதியிருந்தது. 'சிவனுக்கு மேலே உயர்ந்த பொருள் இல்லை' என்பது இந்த வாக்கியத்தின் பொருள்.

கூரத்தாழ்வான் தன் சமயக் கொள்கையை 'மறந்தும் புறம் தொழா மாந்தர்' என்று சொல்லப்படும் ஸ்ரீவைஷ்ணவர்களின் நிலைக்கு இணங்க விளக்கலுற்றார். இவர் விரிவாக உபன்யசித்தார் என்று ஆறாயிரப்படி குருபரம்பரை நூல் தெரிவிக்கிறது.

அரசனோ, 'நீர் பெரிய வித்வானாகையாலே உமக்கு வேண்டினபடியெல்லாம் சொல்லவல்லீர்! நாம் சொன்னபடியே "சிவாத் பரதரம் நாஸ்தி" என்ற ஓலைக்கு எழுத்திடும்' என்று நிர்ப்பந்தித்தான்.

உடனே கூரத்தாழ்வானும் 'சிவாத்பரதரம் நாஸ்தி-த்ரோணமஸ்தி தத: பரம்' என்று ஓலைக்கு எழுத்திட்டார் என்கிறது ஆறாயிரப்படி நூல்.

சிவம் என்பதற்கு மரக்கால் என்று பொருள் கொண்டு மரக்காலைக் காட்டிலும் பெரிது பதக்கு என்று கூரேசன் பரிகசித்து ஓலைக்கு ஒப்பமிட்டார். அது கண்ட சோழனுக்குக் கண்கள் சிவந்தன; மீசை துடித்தது. எரிகிற நெருப்புக்கு மேலும் விறகிட்டு அதன்மேல் நெய்யும் சொரிந்தது போலாயிற்று, கூரத்தாழ்வான் எழுதிய பரிகாச வாக்கியம்.

'இவருடைய கண்களைப் பிடுங்கிவிடுங்கள்' என்ற கட்டளை பிறந்தது. உடனே கூரேசன் அரசனை நோக்கி, 'உன்னைப் பார்த்த கண்களைப் பிடுங்கி எறியவேண்டியதுதான்!' என்று தாமே தம்முடைய கைநகங்களாலே கீறிக் கண்களைத் தோண்டிப் போட்டுவிட்டார் என்கிறுர் பின்பழகிய பெருமாள் சீயர் தம் ஆருயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்திலே.

அரசன் பெரியநம்பியை அழைத்து, 'நீர் கையெழுத்திடும்' என்று நிர்ப்பந்தித்தான். அவர் தம் கொள்கையைத் தெளிவாய்க் கூறி, அரசன் தந்த ஓலையில் ஒப்பமிட மறுத்துவிட்டார். சோழன் பொறுமையை இழந்து, 'இவர் கண்களையும் பிடுங்கி விடுங்கள்' என்று சில வேலைக்காரர்களுக்குக் கட்டளையிட்டுப் போய்விட்டான்.

அவர்கள் பெரியநம்பியைப் பிடித்துக்கொண்டுபோய் அரசன் சொன்னதுபோல் செய்துவிட்டார்கள். அவர்களைத் தொடர்ந்து போன அத்துழாய் கதறிக் கண்ணீர் வடித்தவண்ணம் தன் தந்தையை அந்தப் படைவீட்டிலிருந்து மெல்ல வெளியே கூட்டிக்கொண்டு போனுள்.

இராஜசபையில் தம் கண்களைத் தாமே தோண்டியெறிந்த கூரேசன், 'இந்த இடத்திலிருந்து நான் வெளியேற வேண்டும்; அதற்கு உதவி புரிபவர் உண்டோ? இங்கே பாகவத தருமத்தைப் பின்பற்றுபவர் ஒருவரும் இல்லையா?' என்று, தம் பெருந்துன்பத்தை எப்படியோ அடக்கிக்கொண்டு, உரக்கச் சொன்னுர். உடனே 'இதோ அடியேன் இருக்கிறேன்' என்று ஒரு குரல் கேட்டது,—திகிலடைந்து செயலற்றிருந்த சபையில் அந்த மௌனத்தைக் கடைந்துகொண்டு.

பெண் ஒருத்தி தோன்றினுள். பணிப்பெண்தான். சோழ சக்கரவர்த்தியின் பணிப்பெண் அவள். மன்னர்பிரானின் வாளாயுதத்தை ஏந்தி அவனுக்கு முன்னே செல்லும்படி நியமிக்கப் பெற்றிருந்தவள். அவள் இப்போது தன் கையிலிருந்த வாளை எறிந்துவிட்டு, 'இதோ அடியேன் இருக்கிறேன் 'சுவாமி! அந்தப் பாகவத தருமம் என் காதிலும் விழுந்திருக்கிறது!' என்று கண்ணீர் பெருகச் சொன்னுள்.

பிறகு அவள் கூரேசனைச் சபாமண்டபத்திலிருந்து வெளியே அழைத்துக்கொண்டு போனுள். வீதிகளைக் கடந்து ஊருக்கு வெளியே காட்டுப்புறத்திலிருந்த ஒரு தோட்டத்தில் இவரைக் கொண்டுபோய்விட்டாள். உடனே வைத்தியர் ஒருவர் உதவி பெற்றுச் சிகிச்சைக்கும் ஏற்பாடு செய்து தன்னுல் இயன்ற பணிகளையெல்லாம் செய்துகொண்டிருந்தாள்.

இதே இடத்திற்கு அத்துழாயம்மையும் தன் தந்தையைக் கையைப் பிடித்து மெல்ல மெல்ல அழைத்துக்கொண்டு வந்து சேர்ந்தாள்.

பெரியநம்பி தம்மை ஹிம்ஸித்துக் கண்களைப் போக்கிவிட்ட ராஜசேவகர்கள் மீதும் பகைமை பாராட்டவில்லை; சிறிதும் கோபம் அடையவும் இல்லை. அதற்கு மாருகத் தம்மைத் துன் புறுத்தியவர்களின் அறிவு திருந்தவேண்டுமென்று பகவானைப் பிரார்த்தித்துக் கொண்டார் என்கிறது ஓர் ஐதிகச் செய்தி.

கூரேசனும் தம்மை ஹிம்ஸித்தவர்களுக்காகப் பரிவுற்றுப் பிரார்த்தனை செய்துகொண்டாராம். இச்செய்தியை ஸ்ரீராம கிருஷ்ணமடத்துப் பதிப்பாகிய 'ஸ்ரீராமானுஜரின் வாழ்க்கை வரலாறு' என்ற நூலில் 211-ம் பக்கத்தில் காண்கிறோம்.

'நம் குருமூர்த்தியை எத்தகைய கஷ்ட நிலையிலிருந்து பாது காக்கும் பேறு பெற்றோம்!' என்ற மகிழ்ச்சியும் கூரேசனின் இதயத்தில் குமிழியிட்டதாம், ஸ்தூல உடம்பு அனுபவித்த 'நரக' வேதனைகளுக்கு இடையே. 'எனக்கு உயிரைக் காட்டிலும் இனிய வர், பாகவத சமுதாயத்திற்கு ஓருயிர், நான் உயிரைக் கொடுத்தும் பாதுகாக்க வேண்டிய பரமஞான பொக்கிஷம்! எங்கேயாவது நலமுற்றிருந்து நமது சம்பிரதாயத்திற்குத் தொடர்ந்து பணிசெய்துவரவேண்டும்' என்றெல்லாம் எண்ண மிட்டார்.

தம்மை இகழ்ந்து துன்புறுத்தியவர்களைத் தண்டனிட்டுக் கூரேசன், 'நீங்கள் என் உண்மையான நண்பர்கள்; உங்களைப் பகவான் ஆசீர்வதிப்பாராக!' என்று சொன்னதாகவும், அவர் களும் பச்சாத்தாபமுற்றுப் பயபக்தியுடன் இவரையும் பெரிய நம்பியையும் வணங்கியதாகவும் கூறும் ஐதிகமும் உண்டு. இத் தகைய ஐதிகங்களைத் தழுவிய செய்திகளை ஸ்ரீராமகிருஷ்ண மடத்து வெளியிட்டிலும், 'சேஷாவதார ஸ்ரீராமானுஜாசார்ய' என்ற ஹிந்தி நூலிலும் காண்கிறோம்.

பெரியநம்பிக்கு அப்போது வயது நூற்றைந்து என்று பிரபந்நாம்ருதம் என்ற நூல் தெரிவிக்கிறது. இவரால் கூரேச னுடன் திருவரங்கத்திற்குப் புறப்படமுடியவில்லை. வேதனை மரண வேதனையாகிவிட்டது. அந்தக் காட்டுப்புறத்திலே கூரத்தாழ் வான் மடியிலே தலையை வைத்துக்கொண்டு, அத்துழாய்மடியிலே காலை நீட்டிக்கொண்டு, அப்படியே அந்தக் கரடுமுரடான தரை யில் படுத்துக்கிடந்தார் பெரியநம்பி.

அப்போது அத்துழாயம்மையும் கூரேசனும், 'நீர் பிறந்த திருவரங்கமும் பெருமாளும் இருக்க, ஸ்ரீபாஷ்யகாரரும் இருக்க, இந்தக் கங்கைகொண்ட சோழபுரத்தில் ஒரு கொல்லைத் தலைமாட்டிலிருந்து உயிர்விடத் திருவுள்ளமோ!' என்று புலம்பினார்கள். அப்போது பெரியநம்பி மூர்ச்சை தெளிந்தவராய், 'பாகவதர் மடியைக் காட்டிலும் மகிமை வாய்ந்ததோ திருவரங்கம்?' என்று சமாதானம் சொன்னார்.

பிறகு பெரியநம்பி தம் ஆசாரியரான ஆளவந்தாரின் திருவடிகளைத் தியானித்துக்கொண்டே பரமபதம் அடைந்தார். பாகவதன் அல்லது பிரபந்நனுக்கு, 'காசியில் இறக்க முத்தி' என்பதுபோன்ற நியமம் இல்லை. பாகவதன் தொண்டாற்றியோ தியாகம் செய்தோ உயிர்விடும் இடமே புனித நிலம். இக்கருத்தையும் குறிப்பாக வெளியிட்டார் பெரியநம்பி எனலாம்.

அந்தப் பிரதேசத்திலுள்ள சில ஸ்ரீவைஷ்ணவர்கள் வந்து பெரியநம்பிக்கு இறுதிக்கடனைப் பாகவதப் பெரியோருக்குச் செய்ய வேண்டிய முறையில் பரம பக்தி விசுவாசங்களுடன் சிறப்பாக நிறைவேற்றினார்கள். பிறகு அவர்கள் கூரேசனைத் திருவரங்கத்தில் இரவிலே ஒருவரும் காணாதபடி ஒரு கட்டடத்தில் தூக்கிக் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள்.

அப்போது கூரேசன், 'பெரிய நம்பியைப்போல் அடியேனுக்கும் இந்தச் சரீரம் போய்விடவில்லையே!' என்று மிகவும் வருந்தினார். திருவரங்கத்துப் பாகவதர்களோ, 'தரிசனத்திற்குத் தரிசனம் கொடுத்தவர் வந்தார்!' என்று, சோகத்துடன் பூரிப்பும் அடைந்தார்கள். ('தரிசனம்' என்பது இராமாநுஜ தரிசனத்தையும் கண் பார்வையையும் குறிப்பிடும் சொல்.)

ஒரு நாள் கூரத்தாழ்வான் கோயிலில் பெருமாளைச் சேவிக்க வேண்டுமென்று கையால் தவழ்ந்து தவழ்ந்து வந்தார். இராமாநுஜருடன் தொடர்புள்ளவர்களில் ஒருவரையும் சேவிக்க விடக்கூடாதென்று அரசாங்கம் அப்போதுதான் கட்டளை பிறப்பித்திருந்தது. அதற்கு இணங்கக் கோயில் நிர்வாகிகள் வாசல் காப்பவர்களுக்கு உத்தரவு கொடுத்திருந்தார்கள். இந்த நிலையில், கோயில் காப்பவர்கள் கூரேசனை நோக்கி, 'தாங்கள் இராமாநுஜரின் சீடரல்லவா?' என்றார்கள், கூரேசனும் 'ஆம்' என்றார்.

அவர்கள் வருத்தத்துடன், 'தேவரீருக்கு எம்பெருமானாரின் உறவு தேவையில்லையென்றால், சேவிக்கவிடுகிறோம்!' என்று சொன்னார்கள். கூரேசன் உடனே காதைப் பொத்திக்கொண்டு

'எம்பெருமானாரின் உறவை அறுத்துக்கொண்டு எம்பெருமானைச் சேவிக்க வேண்டாம்!' என்று சொல்லிவிட்டு, மீளவும் தம் முடைய இல்லத்திற்குத் தவழ்ந்து சென்றார். அங்கே போனதும், 'முறையோ?—அரவணைமேல் பள்ளிகொண்ட முகிலே!' என்று புலம்பினார்.

இந்தச் செவிசுடு வார்த்தையை ஸ்ரீவைஷ்ணவர் விண்ணப் பம் செய்ததுதான் தாமதம், இராமாநுஜர் வேரற்ற மரம்போல் விழுந்துகிடந்தார், துடித்தார்; 'கேட்டாயோ?—கண்ணபிரானே! இது முறையோ, அறமோ?' என்று அலறினார். அருகிலிருந்த பாகவதர்கள் தேற்றச் சற்றுத் தேறினார். கடைசியாக, 'நம் ஆழ் வான் திருமேனியோடு இருக்கப் பெற்றோமே!' என்று, தம்மைத் தாமே முழுதும் தேற்றிக்கொண்டார்.

பெரியநம்பிக்குத் தாம் ஞானபுத்திரர் என்ற நிலையில் செய்ய வேண்டிய சடங்குகளை இராமாநுஜர் செய்தார். மறுபடியும் 'தரிசனத்திற்கும் நமக்கும் கண்ணாக இருந்தவர் தம் கண்களை இழந்தாரே!' என்ற நினைப்பில் தாமே கண்களை இழந்தவர் போல், 'கண் போச்சுதே! கண் போச்சுதே!' என்று கதறினார்.

மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டான் என்ற சீடரை அழைத்து இராமாநுஜர், 'நீர் போய் ஆழ்வானுடைய நிலையை ஆராய்ந்துவாரும்; அங்குள்ள செய்திகளையும் விசாரித்துவாரும்' என்று திருவரங்கத்திற்கு அனுப்பிவைத்தார். இதற்குள் திருக் கோஷ்டியூர்நம்பியும் காலமாகிவிட்டார்; திருமாலையாண்டானும் திருவரங்கப் பெருமாளரையரும் பெரிய திருமலை நம்பியும் திருக்கச்சி நம்பியும் காலமாகிவிட்டனர். ஆம், அந்தக் காலம் போய்விட்டது,—இடரும் இடையூறும் புகுந்த பிற்காலத்தையும் தன்னுடன் இழுத்துக்கொண்டு!

ஆண்டான் பயணமாகி விரைந்து சென்று திருவரங்கத்தை அடைந்து கூரத்தாழ்வானைச் சேவித்து நின்றார். செவியே கண் ணாக ஆழ்வானும் ஆண்டானைக் கண்டுகொண்டார். இராமாநுஜ ரைச் சேவித்தாற்போல் இன்பமுற்றார். 'உடையவர் என்ன செய் கிறார்?' என்று பேராவலுடன் கேட்டார். 'மேற்கிலும் வளர்கிறது உங்கள் பக்திப் பயிர்!' என்று கூறி ஆண்டானும் நடந்ததை யெல்லாம் விவரித்தார். அந்தப் பிரதேசத்திலே இராமாநுஜர் நிகழ்த்திய அதிசயங்களைக் கேட்டுக் கூரேசன், 'பொலிக, பொலிக, பொலிக; போயிற்று வல்லுயிர்ச்சாபம்!' என்று குதூகலம் அடைந்தார்.

ஆண்டான் கடைசியாக, 'இராமாநுஜர் உமக்குக் கண் போயிற்றே என்று பெரிதும் வருந்தினார்; உம்மைத் தரிசித்து உம் திருவுள்ளத்தைத் தெரிந்துவரச்சொல்லி அடியேனை அனுப்பி வைத்தார்' என்று சொன்னார். அது கேட்ட ஆழ்வான், 'உலகுக்கெல்லாம் ஓருயிர் சுகமாய்ப் பணிபுரிந்து வருகிறாரென்றால், அடியேனுக்கு இந்தக் கண்ணழிவும் ஒரு விபத்தாகுமோ? இதை விண்ணப்பம் செய்யும் உடையவரிடத்தில்; நான் மகிழ்ச்சியுடன் இருக்கிறேன் என்று சொல்லும்' என்றார்.

கூரேசனிடம் விடைபெற்றுக்கொண்டு ஆண்டான் மேற்கு நோக்கிப் புறப்படும் சமயத்தில், சோழமன்னன் இறந்துபோய் விட்டான் என்ற செய்தியும் காதில் விழுந்தது. 'உண்மைதானா?' என்பதை ஆண்டான் கங்கைகொண்ட சோழபுரத்திற்கே விரைந்து போய் விசாரித்து அறிந்துகொள்ள விரும்பினார். அங்கே போய்ச் சேர்ந்ததும், அந்த மரணச் செய்தி உறுதிப் பட்டது. 'கழுத்திலே புண்ணாய்ப் புழுத்துப் புரண்டான் கிருமி கண்ட சோழன்!' என்று சிலர் ஆத்திரமாக வந்து செய்தி சொன்னார்கள்.

ஆண்டான் கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து வரும் வழியில் அம்மங்கி அம்மாள் என்பவரைச் சந்தித்தார். இவர் அருளாளப் பெருமாள் எம்பெருமானாருடைய சீடர். தாய்க்கு உள்ள பரிவுடன் நடந்துகொள்ளும் சில பெரியோரை 'அம்மாள்' என்று சிறப்பித்துப் பேசுவதுண்டு. இவர் வேறு; அம்மங்கி அம்மை என்ற பெயருடன் இராமாநுஜரின் சீடருள் ஒருவராக இருந்த அம்மையார் வேறு.

ஆண்டான் அம்மங்கி அம்மாளையும் கூட்டிக்கொண்டு இராமாநுஜரின் இருப்பிடத்திற்கு விரைந்துவந்தார். இருவரும் இராமாநுஜரைத் தண்டனிட்டு, 'ஆழ்வானுக்கும் பெரிய நம்பிக்கும் கொடுமை இழைத்தவன் கண்டமாலை நோயுற்று இறந்தான்!' என்று விண்ணப்பம் செய்தார்கள். அது கேட்ட இராமாநுஜர் மகிழ்ச்சி அடைந்தார் என்றும், இவர்களுக்கு, 'த்வயம்' என்ற மந்திரத்தைப் பரிசிலாக இரங்கி அருளினார் என்றும் குருபரம்பரைக் கதைகள் கூறுகின்றன.

பிறகு இராமாநுஜரும் சீடர்களும் திருநாராயணப் பெருமாளை அடிதொழுதார்கள்; திருப்பல்லாண்டு பாடினார்கள். 'நமோ நாராயணாய' என்று சரணாகதி செய்தார்கள். 'இனி அடியேன் திருவரங்கம் போய் வருகிறேன்' என்று பெருமாளின் திருவடிகளை நோக்கி விண்ணப்பம் செய்துகொண்டார் இராமாநுஜர்.

அப்பால் அங்குள்ள முக்கிய சீடர்களான ஐம்பத்திரண்டு பேரையும் நோக்கி, 'திருநாராயணனையும் செல்வப்பிள்ளையையும் தரிசித்துக் கொண்டு ஸ்ரீவைஷ்ண கைங்கரியம் புரியுங்கள்' என்றார். அவர்களும் இவர் திருவடிகளை நோக்கி விழுந்து சேவித்து, 'உம்மை எப்படிப் பிரிந்திருப்போம்!' என்று வருந்திய வண்ணம் எழுந்து நின்றார்கள்.

இராமாநுஜர் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பிறகு 'நாம் உங்களுக்காக இங்கும் இருப்போம்!' என்றார். தம்மைப் போல் ஒரு விக்கிரகத்தை உருவாக்குமாறு கட்டளையிட்டார். சிற்பக்கலை வல்லுநர்கள் இவரது திருமேனியைப் படம் பிடித்து விட்டதுபோல் விளங்கும் சிலை ஒன்றை உருவாக்கிக் கொடுத்தார்கள். 'இதில் இதோ என் சக்தியைப் பிரதிஷ்டை செய்கிறேன்!' என்று சொல்லிப் பிறகு, அந்த விக்கிரகத்தை அவர்களிடம் கொடுத்தார்.

இராமாநுஜர் தாம் அரும்பாடுபட்டு டில்லியிலிருந்து மீட்டுக் கொண்டுவந்து கொடுத்திருந்த செல்வப்பிள்ளையை அவர்களுக்குச் சுட்டிக்காட்டினார்; 'இந்த என் செல்வப்பிள்ளையை நான் எப்படிப் பிரிவேன்? இதோ உங்கள் கையிலே அடைக்கலமாகக் காட்டிக் கொடுக்கிறேன்!' என்றார். பிறகு, தாம் செல்வப்பிள்ளையைப் பிரியமாட்டாமல் திருவடிகளில் விழுவதும் எழுவதும் தொழுவதுமாய் உள்ளம் உருகிக் கண்களில் நீர் துளிக்க அப்படியே நின்றார். அந்த விமானத்தையும் சோலையின் எழில்களையும் பார்த்துப் பார்த்து அஞ்சலி செய்தார். பிள்ளைமைக் காதல் பின்னே தள்ள, அரங்கநகரப்பனின் அருள் முன்னே நடத்த, இத் திருப்பதியைவிட்டுப் புறப்பட்டார்.

தம்மைத்தொடர்ந்துவந்த ஐம்பத்திருவரையும், 'நில்லுங்கள்' என்று பரிவுடனும் பணிவுடனும் நிறுத்தினார். 'நீங்கள் அனைவீரும் ஒருவீராய்ப் பணிபுரிந்து இந்தப் பிரதேசத்தை உய்விக்க வேண்டும். ஒருகாலும் ஒருவருக்கொருவர் கோள் சொல்லக் கூடாது; துரோகம் நினைக்கவும் கூடாது. ஒத்த இதயமும் உணர்ச்சிகளும் உடையவராய்ச் சகோதர நேசம் பூண்டு பக்தி பண்ணுங்கள், கைங்கரியம் புரியுங்கள்' என்றார். 'அப்படியே செய்வோம்' என்றார்கள். 'என்மீது ஆணையிட்டுச் சொல்லுங்கள்' என்று இவர் கூறியதும், அவர்களும் இவர் திருவடிகளைத்தொட்டு வாக்களித்தார்கள்.

திருவரங்கத்தை அடைந்து காவிரியில் நீராடித் திருமண் காப்பு அணிந்துகொண்டு எழுந்தருளியிருந்த இராமானுஜரை ஊர் திரண்டுவந்து எதிர்கொண்டு சேவித்தது. பிறகு இராமானுஜர் கோயிலுக்குப் போனார்.

**அரவணை விரும்பி**
**அறிதுயில் அமர்ந்த**
**அணிதிரு அரங்கர்**
**மணிதிகழ் முகுந்தர்**

ஆகிய அழகிய மணவாளப் பெருமானை அகம் குளிர மலர்க்கண்கள் பனிதுளிக்க, அகக்கண்களால் பருகினார்; வாயார நெஞ்சார வாழ்த்தி நின்றார்.

அப்போது பெருமாளின் 'பவளவாயு'ம் 'கமலச் செங்கண்ணு'ம் பேசினவா, என்ன?

**திருப்பவளச் செவ்வாய்தான்**
**தித்தித் திருக்குமோ ?**

என்று ஆண்டாள் பாடிப் போற்றிய அந்த வாய் திறந்து, 'நெடுநாள் தேசாந்தரம்போய் மிகவும் மெலிந்தீரே!' என்று குலாவியது போன்ற உணர்ச்சி இராமானுஜருக்கு ஏற்பட்டது.

கோயில்-மரியாதைகளைப் பெற்றுக்கொண்டபின் இராமானுஜர், அங்கே வந்து குழுமியிருந்த பக்தர்களை நோக்கி, 'அகமகிழும் தொண்டர் வாழ அன்பொடு தென் திசை நோக்கிப் பள்ளிகொண்டருளும் நம் அப்பன் இருக்க, நமக்கு என்ன குறை?' என்று சொன்னார். பிறகு மண்டபங்கள் கோபுரங்கள் மதில்கள் தொடக்கமான சிற்பச் செல்வங்களையெல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டு, பாகவதர் குழாமும் தாமுமாகக் கூரத்தாழ்வான் இல்லத்திற்குச் சென்றார்.

சீடர்திலகம் எதிர்கொண்டு வந்து அடிகளில் முடிபட விழுந்து உகப்பின் மிகுதியால் அத் திருவடிகளைப் பூண்டுகொண்ட கையினராய்க் கிடந்தார். இராமானுஜர் வாரியெடுத்து ஆவி தழுவ அணைத்துக்கொண்டார். ஒரே சோகமாய் உள்ளம் உடைந்துருகக் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகியது. கோடை நிலத்தில் கோதிலா மாரி பெய்ததுபோல் கண்மாரி பெய்ய, குருநாதர் நெடும்பொழுது ஒரு வார்த்தையும் சொல்ல முடியாமலே விம்மல் பொருமல்களாய் நின்றுகொண்டிருந்தார்.

பிறகு இராமானுஜர் தழுதழுத்த ஒலியுடன், 'ஆழ்வான்! உமக்கும் இப்படி நேர்ந்ததே, நீர் என்ன குற்றம் செய்திருக்க முடியும்?' என்றார். அதற்குக் கூரேசன், 'ஒரு ஸ்ரீவைஷ்ணவரின்

திருநாமம் கோணியது என்றுவது நான் நினைத்திருக்க மாட்டேனோ?' என்று பதில் சொன்னார். 'அது உமக்கு உண்டோ? அடியேன் செய்த தீவினையன்றோ உமக்கு இப்படி நேர்ந்ததற்குக் காரணம்?' என்றார் இராமாநுஜர். இப்படிப் புண்பட்ட உள்ளத்துடன் பேசியவர் 'இரத்ததான சிகிச்சை' செய்து குணப்படுத்துவதுபோல் கூரேசனது நெஞ்சைத் தேற்றிவிட்டார்.

இராமாநுஜர் ஸ்ரீ வைஷ்ணவத் திரளுடன் தம் மடத்திற்குச் சென்றார். 'ஆழ்வானுக்குக் கண் போயிற்று; பெரிய நம்பிக்கு உயிரே போய்விட்டது. உம்மை மறுபடியும் இப்படிச் சேவிக்கப்பெற்றோமே!' என்று எல்லாரும் காலில் விழுந்து தங்கள் பக்தி விசுவாசங்களைத் தெரிவித்துக்கொண்டனர்.

இராமாநுஜர் பெரியநம்பி இல்லத்திற்கும் சென்றார். அங்கே அத்துழாயம்மையும், பெரியநம்பியின் புதல்வரும் இவர் சீடருமான புண்டரீகரும் வரவேற்றார்கள். இராமாநுஜர் அவர்களுக்கு ஆறுதல் கூறி மடத்திற்குத் திரும்பினார் என்று 'ராமாநுஜ திவ்ய சூரி சரித்திரம்' தெரிவிக்கிறது.

இராமாநுஜர் திருவரங்கத்திற்கு வந்தபோது கூரேசன் இங்கே இல்லையென்றும், வானமாமலையில் இருந்தார் என்றும், இராமாநுஜர் ஆள் அனுப்பிக் கூரேசனை வரவழைத்துக்கொண்டார் என்றும் 'திவ்யசூரி சரித்திரம்' அறிவிக்கிறது.

ஆழ்வான் திருவரங்கம் வந்ததும் இராமாநுஜர் அவரை அரங்கநாதனின் சந்நிதியில் கொண்டுபோய் நிறுத்தினாராம். பெருமாளிடம் வரம் கேட்டுக் கூரேசன் தாம் இழந்த கண்களை மீண்டும் பெற்றுக்கொண்டால் நலமாயிருக்கும் என்பது இவர் விருப்பம்.

கூரத்தாழ்வானோ, 'குருநாதர் அளித்திருக்கும் என் ஞானக் கண்களை யாரே அழிக்க முடியும்? இந்தக் கண்களே எனக்குப் போதும்' என்ற மனநிலையில் இருந்தார். இத்தகைய சீடரை இராமாநுஜர் தமக்குச் சீடர் என்று கருதவில்லை, தமக்கு மேம்பட்டவர் என்று கூடக் கருதியிருந்தார்.

இராமாநுஜர் ஒரு நாள் கூரேசனை அழைத்து, 'நீர் பேரருளாளரான வரதராஜப் பெருமாளுக்கு உமக்குக் கண்தர வேண்டும் என்று ஒரு தோத்திரத்தை விண்ணப்பம் செய்துகொள்ள வேண்டும்' என்று வற்புறுத்தினார். அதற்குக் கூரேசன், 'வரதராஜப் பெருமாளைத் தோத்திரம் செய்வேன்; ஆனால் எனக்குக் கண் வேண்டும் என்று பிரார்த்திக்க என் உள்ளம் இசையவில்லையே' என்று பதில் சொன்னார்.

எனினும் இராமாநுஜர் பல நாளாக நிர்ப்பந்திக்க, ஆழ் வானும் 'வரதராஜஸ்தவம்' என்ற தோத்திரத்தை இயற்றினார். அதில், 'எப்போதும் காண்பதற்குத் தகுதியான, உலக இயற்கைக்கு அப்பாற்பட்ட, திவ்யமான கண்களை அடியேனுக்குத் தந்தருள வேணும்' என்று விண்ணப்பித்தார்.

பிறகு கூரேசன் வரதராஜஸ்தவத்தை முற்றுப்பெறச் செய்து, இராமாநுஜரின் மடத்திற்குச் சென்று தண்டனிட்டார். 'தேவரீர் நியமித்தபடியே செய்தேன்' என்று வரதராஜ ஸ்தவத்தை ஒப்பித்தார். இராமாநுஜரும் கேட்டு மகிழ்ந்தார். அப்போது கூரேசன், 'அடியேன் கேட்டபடியே பரமபத நாதனை எப்போதும் பார்க்கிற, இயற்கைக்கு அதீதமான, பார்வையை அருளாளப் பெருமாள் அளித்துவிட்டார்!' என்பதைத் தாம் நன்குணர்ந்திருப்பதாகவும் தெரிவித்தார்.

அப்பால் இராமாநுஜர் கூரேசனைக் கையைப் பிடித்துக் கொண்டு, 'அங்கே போவோம், வாரும்' என்று சொல்லிக் காஞ்சீபுரத்திற்கு அழைத்துச் சென்றார். வரதராஜன் சந்நிதியில், இராமாநுஜரின் விருப்பத்திற்கு இணங்கக் கூரேசன் தாம் இயற்றிய தோத்திரத்தை ஒப்பித்தார். அப்போது இராமாநுஜர் வேறொரு காரியத்தில் சற்றுக் கவனமாயிருந்ததால், கூரேசனுடன் நின்று தோத்திரத்தைக் கேட்கச் சற்றுத் தாமதமாகிவிட்டது.

அதற்குள்ளே பெருமாள் அர்ச்சகர் மூலமாக, 'ஆழ்வானே, உமக்கு என்ன வரம் வேண்டும்?' என்று கேட்டுவிட்டாராம். ஆவேசமுற்ற அந்த அர்ச்சகரை நோக்கிக் கூரேசனும், 'நான் பெற்ற பேறு நாலூரானும் பெறவேண்டும்!' என்று வரம் கேட்டுவிட்டார். ஓடிவந்த இராமாநுஜர் காதிலும் கூரேசனின் இந்தப் பிரார்த்தனை விழுந்தது.

இராமாநுஜர் அப்படியே ஆச்சரியத்தில் மூழ்கிப் போனார். 'தாம் கண் இழப்பதற்குக் காரணமாக இருந்த பரம சத்துருவிடம் காட்டுகிற இந்தப் பரிவை, இந்தக் கருணையை என்னென்பது? இவரை அறிய அறிய நான் என் அறியாமையைத்தான் காண்கிறேன்!' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார்.

குருவின் தொடர்பால் சீடர் உய்ந்து போகிறார் என்பது சித்தாந்தம். இந்தத் தொடர்பு உடைக்க முடியாத ஒரு நீண்ட பொற்சங்கிலியின் பகுதியாக அமைந்து குலபதியான (பிரபந்ந குலம் என்ற தொண்டர் குழாத்தின் தலைவரான) நம்மாழ்வாருடன் உறவாடச் செய்து பாகவதர்களையெல்லாம் உய்விக்கிறது

என்று இராமாநுஜர் தம் சீடர்களுக்குப் பன்முறையும் கூறிய துண்டு. ஆனால் இந்தச் சீடர் இப்போது உணர்த்துவது என்னே?

நல்லாசிரியர் சீடரை உய்விப்பதுபோல் நல்ல சீடர் குருவையும் உய்விப்பர் என்ற உண்மையைக் கூரேசனின் நிகரற்ற கருணையுள்ளம் இப்போது வற்புறுத்திவிட்டது. எனினும், இராமாநுஜர் கூரேசனை நோக்கி, 'நான் வருவதற்கு முன்னே இப்படிச் செய்துவிட்டீரே!' என்று வெறுப்புற்றதுபோல் பேசியதாக ஆறாயிரப்படி குருபரம்பரை நூல் தெரிவிக்கிறது. 'பகவானே! அருளாளா! நீரும் இப்போது என் நினைவை நிறைவேற்றி வைக்கவில்லையே' என்று உள்ளம் உளைந்து இராமாநுஜர் பெருமாளையும் நொந்து கொண்டாராம்.

ஆனால் இராமாநுஜர் கருணைக் கடல் அல்லவா? 'ராமாநுஜ திவ்ய சூரி சரித்திர'த்தில், திருவரங்கன் சந்நிதியிலே 'நாலூரானும் பேறு பெறவேண்டும்' என்று கூரேசன் வேண்டிக் கொண்டதாகவும், அப்போது அது குறித்து இராமாநுஜர் மகிழ்ச்சிவெறி பொங்கத் தம் உத்தரியத்தை உயரவீசி ஆனந்த ஆரவாரம் செய்ததாகவும் ஒரு செய்தி சொல்லப்பட்டிருக்கிறது. இதுவே இராமாநுஜரின் எதார்த்த மனநிலையாக இருக்க முடியும். இத்தகைய சீடரால் தாமும் பரமபதத்தில் இடம் பிடித்துக் கொள்ள முடியும் என்று கூடச் சொன்னாராம் இராமாநுஜர்.

கூரேசனின் குணாதிசய சிகரங்கள், இமாலயத்தில் சிகரத்திற்கு மேல் சிகரம் காணப்படுவதுபோல் தோற்றம் அளிக்கின்றன. இவற்றுள் எவரெஸ்ட் சிகரம் நாலூரான் மீது இவர் காட்டிய கருணை!

# 24

# ஸ்ரீவைஷ்ணவ சிகரஜோதி

**மை**சூர்ப் பிரதேசத்திலிருந்து இராமாநுஜர் திருவரங்கத்திற்குத் திரும்பி வரும்போது வயது நூறுக்கு மேலாகிவிட்டது. எனினும், குதூகலமாகவே காலட்சேபங்கள் நடத்தித் தம் ஸ்ரீவைஷ்ணவப் பெருந் தொண்டைத் தொடர்ந்து பூர்த்தி செய்ய விரும்பினார். தமது தரிசனமாகிய பக்தி மதம் மேலும் மேலும் வளர வேண்டும், அதற்காக ஆசாரிய பரம்பரையும் இடையறாது வளர்ந்து வருவது நலமாகும் என்று கருதினார்.

எழுபத்துநான்கு ஆசாரியர்களைத் தேர்ந்தெடுத்து, 'நீங்கள் பகவானுடைய பணிகளையும், பாகவதர்களுக்கு உரிய பணிகளையும், தொண்டர் குலத்தின் ஒருமைப்பாட்டைத் தொடர்ந்து

வளர்க்கும் சிறப்புப் பணிகளையும் மேற்கொள்ளவேண்டும்' என்று பெரும்பரிவுடன் கட்டளையிட்டார். தம் நோக்கம் இனிது நிறைவேறுமாறு, எழுநூறு துறவிகளையும் வேறு பல்லாயிரம் பாகவதர்களையும் நியமித்தார்.

எழுபத்துநான்கு ஆசாரியர்களும் சிம்மாசனாதிபதிகள் என்ற பட்டத்துடன் அருளாட்சி புரிந்து மக்கள் உய்ய அன்புப் பணிகள் புரிய வேண்டும் என்பது யதிராஜரின் திருவுள்ளம். இந்தச் சிம்மாசனாதிபதிகளில் ஆளவந்தாரின் புதல்வரான சொட்டை நம்பியும் ஒருவர்.

பெரிய நம்பியின் புதல்வரான புண்டரீகரும், திருக்கோஷ்டியூர் நம்பியின் புதல்வரான தெற்காழ்வானும், திருமலையாண்டான், பெரியதிருமலைநம்பி ஆகியவர்களின் புதல்வர்களும் ஆசாரியர்களாக நியமிக்கப்பெற்றனர். ஆளவந்தாரின் பேரப்பிள்ளையான என்னாச்சானும் அவர் புதல்வரான பிள்ளையப்பனும் இராமாநுஜரின் சீடர்களாய்ப் பயிற்சி பெற்றுச் சிம்மாசனாதிபதிகளின் குழுவில் இடம்பெற்றனர்.

முதலியாண்டானும் (இவர் மருமகனும்), அவர் புதல்வர் கந்தாடையாண்டானும் ஆசாரியர்களாக நியமிக்கப் பெற்றனர். எம்பாருக்கும் இக் குழுவில் சிறப்பாக இடம் உண்டு; கிடாம்பியாச்சான், திருமலை நல்லான் முதலியவர்களுக்கும் இடம் உண்டு. அருளாளப்பெருமாள் எம்பெருமானார், வடுகநம்பி, திருக்குருகைப்பிரான் பிள்ளான், மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டான், மாருதிப் பெரியாண்டான், அம்மங்கி அம்மாள், ஆட்கொண்ட வில்லி சீயர் முதலானவர்களும் சிம்மாசனாதிபதிகளாயினர்.

இந்த எழுபத்துநான்கு சிம்மாசனாதிபதிகளுடனும் எழுநூறு துறவிகளுடனும் ஒத்துழைத்த பன்னீராயிரம் பாகவதர்களை 'ஏகாங்கிகள்' என்று கூறுவர். முந்நூறு 'கொற்றியம்மைமார்க'ளும் இராமாநுஜரின் திருவடிகளில் பணிபுரிந்து ஸ்ரீவைஷ்ணவப் பெருந்தொண்டில் பங்குகொண்டிருந்தனர்.

அக்காலத்துக் குறுநில மன்னர்கள் பலரும் இப்பெருந்தொண்டினை ஆதரித்து வந்ததாகத் தெரியவருகிறது. இத்தொண்டின் ஆதரவாளர்களாய் இராமாநுஜரின் ஆணைவழியே ஒழுகிவந்தவர்களில் 'சாத்தின, சாத்தாத முதலிகள்' எண்ணிறந்தவர் என்று ஆறுயிரப்படி குருபரம்பரை தெரிவிக்கிறது. இங்கே 'முதலிகள்' வைஷ்ணவர்களை ஒரே சமுதாயத்தின

ராகக் குறிக்கும் சொல்; முதன்மையானவர்கள் என்று பொருள். 'சாத்தின முதலிகள்' பார்ப்பனரையும், 'சாத்தாத முதலிகள்' பார்ப்பனர் அல்லாதாரையும் குறிக்கும் சொற்றொடர்கள்.

இராமாநுஜரின் கடல்போன்ற இந்தச் சீடர் குழாத்தை 'ஐசுவரியம்' என்று குறிப்பிடுகிறார் பின்பழகிய பெருமாள் சீயர். ஆய்ப்பாடியின் செல்வம் கண்ணபிரானின் அருளுக்குச் சிறப்பாக உரிமைபெற்றிருந்த ஆய்க்குலச் சிறுமியரே என்ற குறிப்புடன்,

**சீர்மல்கும் ஆய்ப்பாடிச்**
**செல்வச் சிறுமியர்**

என்று கூறுவதுபோல், திருவரங்கத்தின் செல்வமும் ஸ்ரீரங்க ராஜாவின் ஐசுவரியமும் யதிராஜாவான இராமாநுஜரின் சிஷ்ய சம்பத்தே என்பது கருத்து.

இந்தச் சீடர் குழாத்தில், இராமாநுஜருக்கு நாள்தோறும் பணிபுரியும் பேறு பெற்றிருந்தவர்கள் சிலர். இவர்களில் நிகரற்ற தியாகம் புரிந்த கூரத்தாழ்வானின் பெயரே முதல்முதல் நினைவுக்கு வரும். இவரை முக்கிய உசாத்துணையாகக் கொண்டே ஸ்ரீபாஷ்யம் இயற்றப்பட்டது என்பதையும், இவரே இராமாநுஜர் சொல்ல ஸ்ரீபாஷ்யத்தை எழுதி முடித்தாரென்பதையும் நாம் நன்கறிவோம்.

அடுத்தபடியாக, முதலியாண்டானும் உசாத்துணையாக உதவினார். இராமாநுஜரது சமய-தத்துவ ஆராய்ச்சித் துறையிலே ஆழ்வானையும் ஆண்டானையும்போல் வேறு சிலரும் உசாத்துணையாக இருந்தனர் என்று குருபரம்பரை வரலாறுகள் அறிவிக்கின்றன.

இராமாநுஜரின் திருவாராதனப் பணியைக் கவனித்துவந்த அருளாளப் பெருமாள் எம்பெருமானார் (தேவராஜமுனி) ஞான ஸாரம், பிரமேயஸாரம் என்ற இரு நூல்களையும் எழுத உதவியவர். கிடாம்பியாச்சானும் கிடாம்பிப் பெருமாள் என்பவரும் மடைப்பள்ளிக்குப் பொறுப்பாயிருந்தனர். இவர்களும் காலட்சேபங்களில் சிறப்பாகப் பங்கு கொண்டிருந்தனர். பிள்ளையுறங்காவில்லிதாசர் கருவூலத்தைப் பாதுகாத்ததுடன், பாகவத தருமத்தை உயிர்கொடுத்தும் பாதுகாக்கத் துணிந்திருந்தார்.

மடத்தில் அமுதுபடி, கறியமுது முதலியவற்றைக் கவனித்தவர் மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டான். பாகவதர்களின் செவிக்கு உணவு அளிப்பதிலும், இவருக்குப் பங்கு உண்டு எனலாம்.

திருமேனிக்காவலரை 'இராமாநுஜ வேளைக்காரர்' என்பர். வேளை அறிந்து வேலை செய்யத் தவறினால் தம் உயிரையும் போக்கிக்கொள்ளச் சித்தமாயிருப்பவரை 'வேளைக்காரர்' என்பர்.

இப்படியெல்லாம் குருபரம்பரை வரலாறுகள் தெரிவிப்ப திலிருந்து, கைங்கரிய வகைகளில் ஏற்றத்தாழ்வுகள் பாராட்டப் படவில்லை என்பதும், உறுதியும் ஒழுங்கும் கட்டுப்பாடும் ஒருமைப் பாட்டுணர்வும் நிலவின என்பதும் தெளிவு. எத்தகைய பக்தி யுடனும் ஒழுக்கத்துடனும் கைங்கரியங்கள் செய்யப்பெற்றன என்பதும் இனிது புலனாகும்.

இராமாநுஜர் ஸ்ரீரங்கநாதனின் சந்நிதியில் பல்வேறு கைங் கரியங்கள் புரிவதற்கும், தமது விரிவான திட்டத்திற்கு இணங்கத் தகுதிவாய்ந்த பாகவதர்களை நியமித்து இன்றியமையாத சீர்திருத் தங்களை வழிபாட்டு முறையிலும் நிர்வாகத்துறையிலும் நிறை வேற்றி வைத்தார். 'திருவரங்கச் செல்வம் சிந்தாமலும் மங்கா மலும் பொங்கும்படி ஆராய்ந்து' திட்டமிட்டுக் கைங்கரியங்களை வரையறுத்து, ஆற்றலும் ஒழுக்கமும் உள்ளவர்களிடம் ஒப்படைத் தார் என்பது குருபரம்பரைச் செய்தி.

கோயிலுக்குரிய எல்லாப் பணிகளையும் வேளை தவறாது நடக்கும்படி ஏற்பாடு செய்தவர், பலவிதமான தொழிலாளிகளை யும் ஏற்படுத்தி அவரவருக்குப் 'பணப் பிரஸாதங்களும்' (பணமும் உணவுகளும்) கிடைப்பதற்கு உரிய அமைப்பையும் உருவாக்கினார். தொழிலாளிகளில், வீதி செப்பனிடுவோர், காவேரி கரைகாப்போர், சுற்றுக் கோயில் செப்பனிடுவோர், பெரிய கோயிலுக்குப் பல்வகை ஊழியங்கள் புரிவோர் முதலான பிரிவினரைச் சுட்டிக்காட்டலாம்.

மண்பானை வனைவோர், தச்சர், கல்லுத்தச்சர், ஓவியர், தையற்காரர், இசைவல்லோர், நாட்டியக்காரர், பலசரக்கு வியாபாரிகள், மாடுகளைத் தரம் ஆராய்ந்து பாதுகாக்கும் கோவலர்கள், கணக்கர்கள் முதலான பல்வகைத் தொழிலாளி களுக்கும் வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன. இந்த விவரங்கள் குறிக்கப்பெற்றிருப்பதுடன், 'இன்னும் செய்யவேண்டுவன அனைத்தும் செய்தருளி'னார் என்பதும் குருபரம்பரைச் செய்தி.

'நாழிகை வட்டில்காரர்' வந்து நாழிகை எவ்வளவாயிற்று என்பது குறித்து விண்ணப்பம் செய்வதுண்டு என்ற செய்தி யையும் கேட்கிறோம்.

மடத்திலே ஒருபுறம் 'சப்த தர்க்கம்' (இலக்கண விவகாரங்கள்) நடைபெறும் என்றும், வேருெருபுறம் இதிகாச புராணங்களும் ஸ்மிருதிகளும் ஆராயப்படுமென்றும், இன்னும் ஒரு பக்கத்தில் வேதத்தின் பகுதிகளுக்குப் பொருள் நிச்சயம் செய்யப் படுமென்றும் ஐதிகங்கள் அறிவிக்கின்றன.

வேதங்களையும் உப நிஷதங்களையும் ஓதுவாரும் ஓதுவிப்பாரும் உருச்சொல்லுவாரும் ஒரு புறம்; அவ்விதமாகத் திவ்யப் பிரபந்தங்களைக் கற்பவரும் கற்பிப்பவரும் பொருள் நிச்சயம் செய்வோரும் ஒரு புறம். திருமந்திரம் ஆகியவற்றின் இரகசியப் பொருள்களை நிர்ணயிப்பவர் ஒரு புறம்; ஸ்ரீபாஷ்யம் குறித்துச் சிந்தனை செய்வோர் ஒரு புறம்; அற நுட்பங்களையும் விசேஷ தருமங்களையும் ஆராய்வோர் ஒரு புறம். புலனடக்கம் உள்ள சீயர்களும் சீடர்களும் ஒரு புறம். இவை—இராமாநுஜர் திரு மடத்தின் வளமும் வைபவமும்.

பாகவதர்கள் வரம்பின்றி வந்து திருவடிகளில் விழ, அவர்களுக்கெல்லாம் பட்சபாதமின்றி வழிகாட்டி அருள் புரிந்து வந்தார் இராமாநுஜர். அன்பர்களையும் அடியவர்களையும் ஆழ்வார்களின் அருளிச் செயல் என்ற அமுதம் ஊட்டி வளர்த்துவந்தார் இவர் என்பதும் குருபரம்பரைச் செய்தி. இப்படி 'அன்பருடன் கழித்த சீர்ப்பெரும்பூதூர் எதிராசன்' மக்களை வாழ்வித்த வண்ணம் நூற்றிருபது ஆண்டு வாழ்ந்தருளினுர்.

திருவரங்கத்திற்குத் திரும்பி வந்ததும், சுமார் இருபது ஆண்டுகளே வாழ்ந்தார் என்றும், இந்தக் கால எல்லைக்குள், தடைப்பட்ட கைங்கரிய திட்டத்தைப் பூர்த்திசெய்து திருவரங்கத்தைப் 'பூலோக வைகுந்தம்' என்றே யாத்திரிகர்கள் பிரமிக்குமாறு திருத்திவிட்டார் என்றும் கூறுவர்.

இதனுல், இந்தக் காலப்பகுதியில் சோக நிகழ்ச்சி ஒன்றும் ஏற்படவில்லை என்று ஊகிப்பது தவருகும். கூரத்தாழ்வானின் மறைவு தம் கண்முன் நிகழ்ந்ததை இவர் எப்படி மறக்கமுடியும்?

கூரேசன் மரணம் அடையும் தருணத்தில், இராமாநுஜர் அவரை அணைத்துக்கொண்டு விம்மலும் பொருமலுமாய், தம் வயிர நெஞ்சும் வலியிழந்து உடைந்ததுபோல், 'ஆழ்வான்! என் உயிர்நிலையான உம்மை இழந்து எப்படிப் பொறுத்திருப்பேன்? என்னையும் உடன்கொண்டு போகலாகாதா? என்னை விட்டுப் போக உமக்கு எப்படித்தான் மனம் வந்ததோ?' என்று ஏங்கினுர், பிரலாபித்தார்.

பிறகு தம்மைத் தாமே தேற்றிக்கொண்டு, 'இப்போது உம்முடைய உள்ளம் கலங்கப் பேசி என்ன பயன்? பாகவதனுக்கு மரணமும் ஒரு பாக்கியம்தானே. அந்தப் பாக்கியத்திற்கு நான் இடையூருக இருப்பேனு? சுகமே எழுந்தருளும்' என்று ஆழ்வான் முதுகைத் தடவிக்கொடுத்து, அப்பால் அஞ்சலித்து விடைகொடுத்தார் என்கிறது ஆருயிரப்படி குருபரம்பரை. அப்போது ஆழ்வானின் உயிர் ஊசலாடிக்கொண்டிருந்தது.

இந்தச் சந்தர்ப்பத்தில் இராமாநுஜர் கூரேசனின் மனைவியான ஆண்டாளை நோக்கி, 'அம்மா, நீர் என்ன நினைத்திருக்கிறீரோ?' என்று கேட்டார். அதற்கு அவள்—கூரேச பத்தினி அல்லவா?—'தேவரீர் திருவுள்ளத்தைப் பின்பற்றுவதைத் தவிர அடியேனுக்கு வேருெரு நினைவும் உண்டோ?' என்று திருவடிகளில் விழுந்து தண்டனிட்டு எழுந்து அஞ்சலித்து நின்ருள்.

ஆழ்வான் தம் புதல்வர்களான பட்டரையும் சீராமபிள்ளையையும் அழைத்துவரச் சொன்னுர். 'நீங்கள் அம்மா சொல்லுகிறபடி நடக்கவேணும்; நம் ஸ்ரீவைஷ்ணவத்திற்கு ஒரு தாயான இராமாநுஜரின் திருவுள்ளத்தைப் பின்பற்றி ஒழுகவேணும். பாகவத சமுதாயத்திற்கு மனமெய்மொழிகளில் தவறு செய்யாது பணி செய்தவண்ணமாயிருக்கவேணும்' என்ருர் கூரேசன்.

அவர்கள் கண்ணீர்விட்டுக் கதறினுர்கள். கூரேசனே, 'இப்படிச் சரீர உறவை நினைத்து வருந்தினுல் நீங்கள் இராமாநுஜரின் திருவடி சம்பந்தத்தைப் புறக்கணித்தவர்கள் ஆவீர்!' என்று சொல்லி அவர்களைத் தேற்றினுர்.

பிறகு தம் சீடருள் ஒருவரான பிள்ளைப் பிள்ளையாழ்வான் மடியிலே தலையும், ஆண்டாள் மடியிலே பாதங்களும் வைத்துக் கொண்டு இராமாநுஜரின் அடி மலர்களைத் தியானித்த வண்ணம் பரமபதத்திற்கு எழுந்தருளினுர்.

கண்ணுங் கண்ணீருமாயிருந்த பட்டரை இராமாநுஜர் நோக்கி, 'சோகத்தை விட்டுச் செய்ய வேண்டிய இறுதிக் கடனைச் செய்யும்' என்று கட்டளையிட்டார். மறுநாள் பட்டரைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு பெருமாள் சந்நிதிக்குப் போனுர். பெருமாளை நோக்கி, 'இவர் உம்முடைய புதல்வர், இது இவர் சிறப்புரிமை,-இல்லையா?' என்று விண்ணப்பம் செய்துகொண்டார். அப்போது அர்ச்சகர், பெருமாளின் ஆவேசம் பெற்றவர்போல், பட்டரை நோக்கி, 'சோகத்தை விட்டுவிடும்;

நம்மை ஆழ்வாருக நினைத்திரும்!' என்றார். பட்டரை 'நம்பெருமாள் குமாரர்' என்று கூறுவதுண்டு.

பிறகு இராமாநுஜர் தம் மடத்திற்குத் திரும்பினார், பட்டருடன். அங்கே எம்பாரை நோக்கி, 'இவருக்கு நம் தரிசனத்தை வளர்ப்பதற்குறிய சிறப்புப் பயிற்சி அளிக்கவேணும்' என்று சொல்லி அவர் கையிலே ஒப்படைத்தார். உடனே கூரேசனின் பிரிவை அப்படியே மறந்துவிட்டவர்போல், அங்கே வீற்றிருந்த பாகவதர்களுக்குப் பகவத் விஷயத்தைத் உபந்யசிக்கத் தொடங்கினார்.

கூரேசனின் ஆவி பிரிந்ததும் இராமாநுஜர் துக்கம் பொறுக்க மாட்டாமல் கதறினார் என்ற ஐதிகமும் உண்டு.

**ஒரு மகள் தன்னை உடையேன்,**
**உலகம் நிறைந்த புகழால்**
**திருமகள் போல வளர்த்தேன்,**
**செங்கண்மால் தான்கொண்டு போனான் !**

என்ற பெரியாழ்வார் பாசுரத்தைச் சொல்லி, ஆண்டாளைப் பிரிந்த அந்த ஆழ்வாரைப் போல், வருந்தினாராம். எனினும், விரைவில் சமாளித்துக்கொண்டு முகத்தில் துன்பக்குறி சிறிதும் தோன்றாதபடி எல்லாருக்கும் ஆறுதல் சொன்னார் என்பது ஒருவகை ஐதிகம்.

கூரேசனின் மறைவிற்குப் பின் இராமாநுஜர் திருவரங்கத்தை விட்டு ஒருநாளும் வெளியூருக்குச் செல்லவில்லை என்பர். ஆனால், அதற்கு முன்பே திருமலை என்ற திருப்பதிக்குச் செல்லவேண்டிய ஒரு நிர்ப்பந்தம் ஏற்பட்டது என்று ஆறுயிரப்படி குரு பரம்பரை தெரிவிக்கிறது. காரணம், 'சித்திரகூடம் அழிந்தது!' என்று சிலர் வந்து சொன்ன செய்திதான்.

சைவப்பெருமக்களால் 'கோயில்' என்று போற்றப்பெறும் சிதம்பரத்தில் நடராஜப் பெருமானுக்கு அருகில் கோவிந்தராஜப் பெருமாளும் காட்சி வழங்குவதை அறியாதார் இல்லை. கோவிந்தராஜர் எழுந்தருளியிருக்கும் தலம் திருச்சித்திரகூடம் என்று வைஷ்ணவர்களால் போற்றப்படுகிறது. இந்தப் பெருமாளை இரண்டாம் குலோத்துங்க சோழன் என்ற சக்கரவர்த்தி அப்புறப் படுத்திவிட்டான் என்பது இலக்கிய ஆதாரத்துடன் கூடிய ஒரு வரலாற்றுச் செய்தி.

இந்தப் பெருமாளைக் கீழைத் திருப்பதியில் பிரதிஷ்டை செய்து, தில்லைத் திருச்சித்திரகூடத்தில் ஏற்பட்ட நஷ்டத்திற்கு

ஈடுசெய்து கொள்ளவேண்டும் என்றுதான் இராமாநுஜர் திருப்பதிக்குச் சென்றார். இவர் நோக்கம் அங்கே இனிது நிறைவேறியது.

திருமலை ஏறி வேங்கடமாமுகிலைத் தொழுதபின் இறங்கி வந்து கோவிந்தராஜரையும் ஆழ்வார்களையும் தொழுது காஞ்சீபுரத்திற்குப் போய் வரதராஜரையும் வணங்கித் திருவரங்கத்திற்குத் திரும்பினார் என்று ஆருயிரப்படி குருபரம்பரை தெரிவிக்கிறது.

திருமலைக்கு இவர் எழுந்தருளும்போது தயிர் விற்றுப் பிழைத்து வந்த ஆய்ச்சி ஒருத்தி வந்து, இவரையும் உடன் இருந்த பாகவதர்களையும் வணங்கி நின்றாள். 'எனக்குக் கதி கொடுக்கும்படி, திருவேங்கடமுடையானுக்குச் "சிபாரிசு" செய்யவேணும்; அதற்காக ஒரு சிறு முறி (ஓலைத்துண்டுக்கு) எழுதித் தரவேணும்' என்று அவள் வேண்டிக்கொண்டாள். இராமாநுஜர் அவளுக்கு வயிற்றுப்பசி தீர உணவு அளிக்குமாறு கிடாம்பியாச்சானுக்குக் கட்டளையிட்டபின், அவளுடைய பக்தி விசுவாசத்திற்கு இணங்க ஒரு முறியும் கொடுத்தாராம்.

இத்தகைய இராமாநுஜரின் புகழ் மக்களுக்கு இதயகீதமாயிற்று; இதை முதலில் தமிழிலக்கிய வடிவில் நிலைநிறுத்தியவர் அமுதனார். இவரைக் கூரத்தாழ்வான் சீடராக்கிக் கொண்டிருந்ததால், இவர் 'இராமாநுச நூற்றந்தாதி' என்ற நூலை இயற்றி, அதை இராமாநுஜரின் புகழ்க்கோயிலாகத் தமிழகத்திற்குக் காட்டினார்.

இந்த நூல் ஆழ்வார்களின் அருளிச் செயலான திவ்யப் பிரபந்தங்களுடன் ஒரு பிரபந்தமாக இடம் பெற்றிருக்கிறது. கூரேசன் அமுதனாரை வைஷ்ணவராக்கியதே ஒரு ரசமான கதை:

திருவரங்கத்துக் கோயிலின் உரிமையாளராக இருந்த அமுதனார், தாம் பாகவதர் அல்லாதவராக இருந்த காலத்தில், அன்னையாருக்காகத் தாம் நடத்திய சிராத்தத்தில் (திதியில்) 'போக்தா'வாக (பிதிரர் ஸ்தானத்தில் உண்பவராக) அமர்ந்து உண்டு தட்சிணை பெற்றுக்கொள்ளும்படி ஒரு வைஷ்ணவரை அனுப்பிவைக்குமாறு இராமாநுஜரை வேண்டிக்கொண்டார். அமுதனார் அந்த நாளில் அத்வைதியாக இருந்தும் இவரது அன்னைக்குப் பாகவதர்களின் காலட்சேபங்களைக் கேட்பதில்

ஈடுபாடு இருந்ததாம். எனவே அவளுடைய ஆத்ம சாந்தியை முன்னிட்டுப் புதல்வர் சிராத்த போக்தாவாக ஒரு வைஷ்ணவரை வரித்தாராம்.

இராமாநுஜர் தம்முடைய அந்தரங்கச் சீடரான கூரேசனை நோக்கி, 'நீர் போய் வாரும்; இது அவருக்கும் நன்மை, நமக்கும் நன்மை!' என்று கூறினர். குருவின் ஆணையைத் தலைமேல் தாங்கிக் கூரேசன் போய்ச் சேர்ந்தார். சாப்பிட்டுத் தட்சிணை பெற்றுக் கொண்டதும், திருப்தி தெரிவிக்க வேண்டும்; அதற்காக 'த்ருப்தோஸ்மி' என்று ஸம்ஸ்கிருதத்தில் சொல்ல வேண்டும். ஆனல் அமுதனர் எவ்வளவோ தட்சிணை கொடுத்துப் பார்த்தும், கூரேசன் திருப்தி சொல்லவில்லை. கடைசியாக அவர், 'எது கொடுத்தால் "திருப்தோஸ்மி" என்று தாங்கள் சொல்ல முடியும்?' என்றே துணிந்து கேட்டுவிட்டார்.

உடனே 'கோயில் திறவுகோல்' என்று கூரேசன் அமைதியாகச் சொல்ல, அமுதனருக்கு உண்மை பளிச்சென்று புலனகி விட்டது. இப்படி இவர் கேட்டுவிட்டாரே என்று அவர் அதிருப்தி அடையவில்லை. தாய்மீது தாம் கொண்டிருந்த பக்தியால் 'எப்படியும் அவள் ஆத்மா சாந்தி அடைய வேண்டும்' என்ற ஒரே நோக்கத்துடன், கோயில் திறவுகோலையும் தட்சிணையாகக் கொடுத்துவிட்டார். ஆம், கோயில் உரிமையையே கொடுத்து விட்டார்.

கூரேசன் 'த்ருப்தோஸ்மி' சொல்லிவிட்டார். சிராத்தம் இப்படிப் பூர்த்தியாகி, இராமாநுஜரின் மனேரதமும் பூர்த்தியாகி விட்டது என்பது ஓர் ஐதிகம். இதைச் 'சிராத்த நிமிந்த்ரண ஐதிகம்' என்று குறிப்பிடுவதுண்டு.

ஏராளமான பொருளையும் கொடுத்துக் கடைசியில் திறவு கோலையும் அமுதனர் கொடுத்தபின், அவற்றைப் பெற்றுவந்த கூரேசன் இராமாநுஜரின் அடிகளில் திறவுகோலை வைத்து வணங்கினர். அப்போது இராமாநுஜர், 'நிறையப் பொருள் கொடுத்திருப்பாரே அமுதனர், அந்தப் பொருள்கள் எங்கே?' என்று கேட்டார். 'அநர்த்தமாகையால் அவை கைகழிந்து போயின!' என்று உடனே பதில்வந்தது கூரேசன் வாயிலிருந்து.

'அநர்த்தம்' என்றல் பொருள் அல்லாதது; 'அர்த்தம்' என்றல் பொருள். திறவுகோல் ஒன்றையே பொருளாக மதித்தது கூரேசன் உள்ளம். அமுதனர் வழங்கிய செல்வப் பொருள்களெல்லாம் கைகழிந்து சென்றுவிட்டன, வழியிலேயே ஏழைகளுக்கு வழங்கிவிட்டார் கூரேசன் என்பது குறிப்பு.

கூரேசனின் உள்ளத்தை உள்ளபடியே அறிந்துகொண்டதும், 'ஆஹா, அடியேன்மீது இவ்வளவு கருணையா இந்த மகா ஞானிக்கு? அன்னையும் உய்ந்தாள், அடியேனும் உய்ந்தேன்!' என்று ஒரே வியப்பில் மூழ்கிப்போயிற்று அமுதனாரின் உள்ளம். இந்த மனநிலையைக் குறிப்பாகவாவது காண்கிறோமா 'இராமாநுச நூற்றந்தாதி'யில்?

**மொழியைக் கடக்கும் பெரும்புகழான்,**
**வஞ்ச முக்குறும்பாம்**
**குழியைக் கடத்தும்நம் கூரத்தாழ்வான்**

என்ற வாக்கிலே காணலாம் என்பர்.

சாதிச் செருக்கு, செல்வச் செருக்கு, கல்விச் செருக்கு என்ற மூவகைச் செருக்குகளையும் 'வஞ்ச முக்குறும்பு' என்கிறார் அமுதனார். இந்த முக்குறும்புகளும் வாழ்க்கைப் பாதையில் மூன்று வஞ்சப் படுகுழிகள். நல்லவைபோல் தோன்றி மதியை வஞ்சிக்கும் இப்படுகுழிகளைத் தாம் அபாயமில்லாமல் கடந்து செல்லும்படி உதவிய கருணையை உள்ளத்திற்கொண்டு தம் குருவை இப்படிச் சுட்டிக் காட்டுகிறாராம் அமுதனார்.

இராமாநுச நூற்றந்தாதிக்குப் 'பிரபந்த காயத்ரி' என்ற ஒரு பெயரும் உண்டு. காயத்திரியை நூற்றெட்டுத் தடவை ஜபிக்கிறார்கள். இந்த நூற்றந்தாதியில் நூற்றெட்டுப் பாடல்கள் அடங்கியுள்ளன. காயத்திரியில் பகவான் தியானிக்கப்படுகிறான்; 'இராமாநுச நூற்றந்தாதி'யில் இராமாநுஜரின் தனிப் பெரும்புகழ் பாடப் பெற்றிருக்கிறது.

மதுரகவியாழ்வார், பத்துப் பாடல்களால் ஸ்ரீவைஷ்ணவத் தாயாகிய நம்மாழ்வாரின் புகழைக் குறிப்பிட்டிருக்கிறார். அமுதனார், வளர்ப்புத் தாயாகிய இராமாநுஜரின் புகழை நூற்றெட்டுப் பாடல்களாக விரித்திருக்கிறார்.

இந்த அந்தாதியை இராமாநுஜர் முதலில் பார்க்க இசையவில்லை; பாடல்களைக் கேட்கவும் விரும்பவில்லை. ஆனால் இராமாநுஜரின் சீடர்குழாம், 'அருள்வாக்கான பிரபந்தம் இது' என்று பாராட்டியது. இந்நூலை 'இயற்பா' என்ற திவ்யப் பிரபந்தத் தொகுப்பின் இறுதியில் சேர்த்துக் கொள்வதற்கு அரும்பாடுபட்டுக் கடைசியாக அனுமதியும் பெற்றுக்கொண்டது தொண்டர் குழாம் என்பர்.

இராமாநுஜரின் புகழ் உச்சநிலையுற்றிருந்தபோது, இவர் ஸ்ரீவைஷ்ணவ சிகரஜோதியாகத் திருவரங்கத்திலிருந்து புகழொளி பரப்பி வந்தபோது, இவர் பிறந்த ஸ்ரீபெரும்பூதூரில் இவரது விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்ய வேண்டுமென்ற



ஸ்ரீ ராமாநுஜர் சன்னிதி, ஸ்ரீபெரும்புதூர்

விருப்பம் பக்தர்கள் பலருக்கும் ஏற்பட்டது. அவர்கள் சார்பில் முதலியாண்டானின் புதல்வர் கந்தாடையாண்டான் இவரிடம் விண்ணப்பம் செய்துகொண்டதும், 'தமர் (தம்மவர்) உகப்பே தம் உகப்பு' என்றிருக்கும் பெருமாளைப்போல் இராமாநுஜரும் 'அப்படியே செய்யுங்கள்' என்று அனுமதி கொடுத்து விட்டாராம்.

உடனே ஒரு சிற்பியை அழைத்து அந்தக் கைங்கரியத்தில் ஈடுபடச் செய்தார்கள். அச் சிற்பி ராமாநுஜரைத் தரிசித்துத் தியானித்து அர்ச்சா விக்கிரகத்தில் உருவாக்கிக் கொண்டு வைத்தான். இராமாநுஜர் உகப்புடன் அதைத் தழுவிக் கொண்டார். 'உடம்பு மட்டுமா, ஆவியும் தழுவிக் கொண்டது!' என்று சொல்லும்படி. தம்முடைய ஸர்வசக்தியும் அதில் தங்கும்படி தழுவிக்கொண்டார் என்கிறது ஐதிகம்.

இராமாநுஜ விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்வதற்கு ஒரு தினம் குறிக்கப்பட்டது. ஸ்ரீபெரும்பூதூரில் பிரதிஷ்டை நடந்த அதே தினத்தில் இராமாநுஜரின் திருமேனியில் தளர்ச்சி அதிகரித்து விட்டதாம்.

இராமாநுஜர் திருநாராயணபுரத்திலிருந்து மீளும்போது அங்குள்ளவர்கள் இவர் பிரிவுக்கு வருந்தினர் என்பதையும், அங்கும் தம்மைப்போல் ஒரு படிவம் அமைக்க அனுமதி கொடுத்து அதற்கும் தம் சக்தியைத் தந்து உதவினார் என்பதையும் நாம் ஏற்கெனவே தெரிந்து கொண்டிருக்கிறோம். அந்த இராமாநுஜ விக்கிரகத்தைத் 'தாமான உருவம்' என்பர். ஸ்ரீபெரும்பூதூரில் உள்ள இராமாநுஜ விக்கிரகத்தைத் 'தான் உகந்த உருவம்' என்பர்.

திருமேனி தளர்ந்திருந்தும், இராமாநுஜர் உள்ளம், குதூகலமாகவே பக்தர்களுக்குப் பக்குவம் அறிந்து உபதேசம் செய்வதிலும், எல்லாரும் கருத்தொருமித்து அனுபவித்து ஆறுதல் பெறும்படி காலட்சேபங்கள் செய்வதிலும் ஈடுபட்டிருந்தது. 'பழுத்திருக்கிற தேமாவைக் கிளித்திரள்கள் காத்துக் கொண்டிருக்குமா போலே' சீடர்கள் அனைவரும் இவர் வாக்கை அனுபவித்தனர்.

வயது நூற்றிருபதும் ஆகிப் பழுத்திருந்த திருமேனியைச் சேவித்து, அன்புப் பணிகளிலும் அருட்பணிகளிலும் முற்ற மூத்துப் பழுத்திருந்த அந்தத் திருவுள்ளத்தையும் அறிந்து ஒழுகுவது தொண்டர்களுக்கெல்லாம் பேரின்பமாக இருந்தது.

இந்தத் திருவுள்ளத்தில் இப்போது இத்தகைய வாழ்க்கையிலும் அருசி பிறந்துவிட்டது என்பதை அவர்கள் எப்படி அறிவார்கள்?

# 25

# மறைந்தும் மறையாத ஜோதி

எவ்வளவோ தூரத்தையும் சமீபமாக்கி அன்னியரையும் அன்பர்களாக்கிக்கொண்ட இராமாநுஜரின் திருவடி நிழலில் பலரும், 'ஆசைகளுக்கும் அப்பாற்பட்ட ஆனந்தநிலை ஒன்று உண்டு', என்பதை உணர்ந்து ஒழுகுவாராயினர். இவரது உபதேச ரத்தினங்களை அனுபவிக்கும் இச்சுவையிலேயே இவர்கள் பேரின்ப நிலையையும் கண்டுகொண்டார்கள்.

இச்சுவை தவிர யான்போய்
இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகரு ளானே !

என்ற தொண்டரடிப் பொடியாழ்வாரின் அனுபவம், எஞ்சியுள்ள தம் வாழ்க்கைப் பகுதியைத் திருவரங்கத்திலேயே கழித்துவந்த இராமாநுஜரின் அருளால், மடத்திலும் வெளியிலும் உள்ள பாகவதர்களுக்கும் ஒருவாறு வாய்த்தது.

எனினும், இராமாநுஜருக்கு இப்போது **அச்சுவையில்** ருசியும் **இச்சுவையில்** அருசியும் ஏற்படலாயின. இவர் கண்முன்பு, கூரேசன் காலமானதுபோல், வேறுபல அன்பர்களும் காலமாகி விட்டனர். பிள்ளை உறங்காவில்லிதாசரும் பொன்னாச்சி என்ற ஹேமாம்பாளும் காலமாகிவிட்டார்கள் இவர்களுக்கு இறுதிக் கடன்களை நடத்துமாறு இராமாநுஜர் கூரேசனின் மூத்த புதல்வரான பராசரபட்டருக்குக் கட்டளையிட்டார்.

இங்கே வில்லிதாசரைக் குறித்தும் பொன்னாச்சியைக் குறித்தும் சில விவரங்களைத் தெரிந்து கொள்வோம். ஒரு நாள் சில பாகவதர்கள் பொன்னாச்சியிடம் சென்று, 'அம்மணீ, நாங்கள் இராமாநுஜரை உள்ளிட்ட பலரிடமிருந்தும் பாகவத தருமத்தின் பல அம்சங்களையும் தெரிந்துகொண்டிருக்கிறோம். ஏன் இவரைச் சரணமாக அடைந்து இரட்சகராகப் போற்ற வேண்டும்?' என்று கேட்டார்கள். அவள் புன்னகை புரிந்து, தனது நீண்ட கூந்தலைச்சுற்றி ஒரு சிவப்புக் கயிறுகொண்டு கட்டி ஒழுங்குபடுத்திக் கொண்டாள். அப்போதே அந்தப் பாகவதர்களை நோக்கி, 'அறிவு புகட்டும் ஆசிரியர்கள் (தலை ரோமம்போல்) பலராக இருக்கலாம்; ஆயினும் எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்திக் காட்டும் தலைவர் இராமாநுஜர் என்ற பரமாசாரியரே!' என்று சொன்னாள்.

கூரேசனைப் பிரிந்தபின் ஏதோ ஒரு அநாதப் பேய்போல் சில தினங்களாக அலைந்துகொண்டிருந்தார் வில்லிதாசர். அத்தகைய நட்பு அவர்களிடையே தழைத்திருந்தது. 'இதோ நமக்கும் அந்திமதசை வந்துவிட்டது!' என்பதை உணர்ந்ததும், உறங்கா வில்லி தம் மனைவி பொன்னாச்சியைப் பார்த்து, 'என் பிரிவு குறித்து நீ கலங்கவேண்டாம். நமது அன்பு-நெறியில் பிரிவுக்கோ மறைவுக்கோ இடம் எங்கே?' என்று சொன்னார். அவளும் அப்படியே ஆறுதல் அடைந்தவள் போல், 'இராமாநுஜரின் திருவடிகளே சரணம்' என்று சொல்லிக்கொண்டே தன் கணவர் அருகில் இருந்தாள். இந்த நிலையில், உறங்காவில்லி உடையவர் திருவடி நிலைகளைத் தம் முடியிலே வைத்துக்கொண்டு, இங்கு மறுபடியும் விழித்துக் கொள்ள முடியாத உறக்கத்தில் ஆழ்ந்து விட்டார்.

பிள்ளை உறங்காவில்லிதாசரின் உயிர் நீத்த உடம்பை விமானம் போல் அலங்கரித்திருந்த பூம்பல்லக்கில் ஏற்றிவைத்து ஏகாங்கிகளும் மற்றப் பாகவதர்களும் மாறிமாறித் தோள் கொடுத்துத் தூக்கிக்கொண்டு போனார்கள். அதை, வைத்த கண் வாங்காமல், அந்தக் கண்களில் துளிநீரும் ததும்பாமல் பார்த்துக் கொண்டே நின்றாள் பொன்னாச்சி. விமானம் தூரத்தில் மறைந்த அளவில், 'துணை காணேன்; ஊரும் துஞ்சிற்று, உலகமும் துயின்றது...தேரும் போயிற்று, திசைகளும் மறைந்தன! செய்வதொன்று அறியேனே!' என்று, திருமங்கை மன்னனின் பாசுரப்பகுதிகளைச் சொல்லிப் புலம்பினாள். புலம்பிக்கொண்டே திசைநோக்கிக் கும்பிட்ட பின், கீழே விழுந்து மூர்ச்சித்து அங்கே அப்போதே மரணமடைந்துவிட்டாள். இவளையும் வில்லிதாசருடன் பள்ளிபடுத்தி அந்திமக் கிரியைகளை நடத்தினர்.

இத்தகைய சோக நிகழ்ச்சிகளும் இராமாநுருள்ளத்தில் உலக வாழ்க்கைமீது அருசி ஏற்பட்டதற்கு ஒரு பெருங்காரணமாகும். எனினும் இவரைக் குளிரக் காணவேண்டுமென்றும் உபதேசமணிகளை அள்ளிக் கட்டிக்கொண்டு போகவேண்டுமென்றும் மக்கள் திரள் திரளாக நாலுதிசைகளிலிருந்தும் வந்த வண்ணமாயிருந்தனர். அவர்களுக்கு இவர் தரிசனமே ஒரு பேரின்ப அனுபவமாயிற்று. தமது சீடர்களையெல்லாம் தம்மைப் போல் ஆக்கிவிட வேண்டும் என்ற அந்தக் கருணையே, ஒரு ஞான கங்கை வந்து தங்களை முழுக்காட்டித் தூய்மை செய்வது போன்ற உணர்ச்சியைப் பலருக்கும் பட்சபாதமில்லாமல் தோற்றுவித்தது.

'இனிப் பரமபதம் அடைய வேண்டியதுதான்' என்ற நோக்கம் மேலிட்ட நிலையில், இராமாநுஜரின் சிந்தனை-அலைகள் ஒடுங்கி ஒடுங்கி உள்முகமாய்ச் சென்றன. சித்தக்கடல் மோன அமைதி பெற்றது. இந்த நிலையை உய்த்துணர்ந்துகொண்ட சீடர்கள் 'அநாதைச் சிறுவர்கள் ஆனோமே!' என்ற உணர்ச்சியும் பெறத் தொடங்கிவிட்டனர்.

இராமாநுஜரும் தம் சீடர்களின் நிலைகண்டு இரங்கி ஆறுதல் கூறினார். 'உங்களை ஒரு நாளும் பிரியப்போவதில்லை; ஒருகணமும் உங்கள் இதயத்தை விட்டுப்பிரியாத நிலையைத் தான் அடையப்போகிறேன்' என்றார். 'மரணத்தை வியாஜமாகக் கொண்டு நம் மக்கள் உள்ளம் புகுந்து வளர்வோம்!' என்பது இராமாநுஜர் குறிப்பு.

பிறகு அந்த அன்பர்கள் தங்கள் கவலைகளை உதறித் தள்ளி விட்டு, 'எது எது என் பணி?' என்று விசாரிக்காமல் 'எல்லா அடிமைகளும் செய்ய ஒருப்பட்டு' மடத்தில் கைங்கரியம் புரிந்த வண்ணமாய், இராமாநுஜரைத் தொழுது தொழுது சித்த சாந்தி பெற முயன்றார்கள். இப்படியிருக்க இராமாநுஜர் ஸ்ரீரங்கநாத னின் சந்நிதிக்கு எழுந்தருளி ஸ்ரீதேவியான பெரியபிராட்டியைப் புருஷாகாரமாக முன்னிட்டுக்கொண்டு சரணம் புகுந்தார்.

'அடியேனைக் காலக்கழிவு செய்யாமல் உன் பொன்னடி சேர்த்துக் கொள்ளவேண்டும்' என்று பிரார்த்தித்தார். 'இன் றைக்கு ஏழாம் நாள் அப்படியே செய்கிறோம்!' என்று பெருமாள் தம் வாய்திறந்து அருளிச் செய்தது போன்ற ஓர் உணர்ச்சி ஏற்பட்டது இவருக்கு.

மடத்திற்குத் திரும்பியதும், 'ஸ்ரீரங்கராஜாவிடம் பரமபத மகாராஜ்யம் பெற்றோம்!' என்ற தெய்விக மகிழ்ச்சியுடன் சீடர் களை நோக்கினார். 'சீடராய் உள்ளவர் எல்லார்க்கும், ஒருகாலும் அருளிச்செய்யாத அர்த்த விசேஷங்களை யெல்லாம் மூன்று நாளாக வழங்கினார்' என்கிறது ஆறுயிரப்படி குரு பரம்பரை.

'இப் பொருள்களையெல்லாம் நீங்கள் நம்பி ஒழுகி வந்தால் போதாது; உங்களைப் பற்றிக் கொண்டவர்களுக்கும் வழிவழியாக உபதேசிக்க வழிகாணுங்கள்' என்று இராமாநுஜர் கட்டளையிட் டார். 'இற்றைக்கு நாலாம் நாள் பெரிய பெருமாள் திருவடிகளை அடையப்போகிறோம்' என்று இறுதியில் இவர் சொன்னதும், கடல் கலங்கினாற்போல் கலங்கிவிட்டது சீடப் பெருங்குழாம்.

'உடையவர் உயிர் துறந்தால், நாமும் ஆத்ம தியாகம் செய்துவிடுவோம்!' என்றுகூடத் துணிந்து தேறியிருந்தார் களாம் சீடர்கள். அதுகண்ட இராமாநுஜர், அந்த மனப்பான்மை நம்மாழ்வார் தொடக்கமாகவரும் சம்பிரதாய பரம்பரைக்கு விரோதமானது என்றார். உயிர் வாழ்ந்து தியாகரூப கைங்கரியங் கள் புரிந்து கொண்டிருப்பதே ஸ்ரீவைஷ்ணவ தருமம் என்பதை யும் வற்புறுத்தி, அவர்களைத் தேற்றித் தரிக்கப் பண்ணினார்.

பிறகு நடாதூராழ்வானை நோக்கி, 'நீர் பாஷ்யத்தைப் பரப்புவதில் கண்ணும் கருத்துமாயிருக்கவேண்டும்' என்று சொல்லி,'ஸ்ரீபாஷ்ய சிம்மாசனத்தை' அளித்தார் என்கிறது ஆறு யிரப்படி குருபரம்பரை. 'ஸ்ரீஸூக்தி சிம்மாசனத்தை'ப் பெரிய பட்டருக்கு இட்டருளினார். குருகைப்பிரான் பிள்ளான் முத லானவர்களை நோக்கிப் 'பட்டருக்கு இஷ்டமாயிருங்கள்' என்றார்.

கோயிலில் கைங்கரியம் பண்ணிக்கொண்டிருந்தவர்கள் அனைவரும் வந்து சேர்ந்தார்கள். அவர்களை நோக்கி இராமா

நுஜர், 'நான் தவறுகள் செய்திருந்தால், அவற்றைப் பொறுத்துக் கொண்டு நீங்கள் என்னை மன்னிக்க வேணும்' என்று வேண்டிக் கொண்டார். அவர்கள் திகைத்துத் திடுக்கிட்டுத் 'தேவரீரும் தவறு செய்வதுண்டோ? உலகத்திற்கெல்லாம் ஒருயிரான தேவரீரை இழந்து எப்படிப் பொறுத்திருப்போம்?' என்று கண்ணீர்ப்பெருக்கினுர்கள்.

அப்போது இராமாநுஜர், 'அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளும் அணி அரங்கன் இருக்க, உங்களுக்கு ஒரு தாழ்வுமில்லை. பணிகளையெல்லாம் குறைவின்றி நடத்திக்கொண்டு பாகவதர்களையெல்லாம் அன்பால் அணைத்துக்கொள்ளுங்கள்!' என்று மெல்லச் சொன்னுர்; சொல்லி அவர்களைப் பட்டர் கையிலே காட்டிக் கொடுத்தார். பிறகு பட்டரைப் பார்த்து, 'உமக்குத் தந்தையும் தாயுமாவார் சிறப்பாக நம்பெருமாள் தானே! அவனுடைய ஆராதனத்தை நன்ருக நடத்திக் கொண்டு, நம்முடைய தரிசனத்தையும் நன்ருய்ப் பரவச் செய்வீர்!' என்ருர்.

தம்மைச் சூழ்ந்திருந்த பாகவதர்களையெல்லாம் பேரன்புடனும் கருணையுடனும் நோக்கிச் சில வார்த்தைகள் சொன்னுர். பிரபந்நனுகிய வைஷ்ணவனுக்கு—அதாவது, பிரபத்திநெறியில் ஆண்டவனைச் சரணமாக அடைந்திருப்பவனுக்கு—கவலையோ, துன்பமோ இருப்பதற்கு நியாயமில்லை. ஆத்மயாத்திரை கருதியோ, தேகயாத்திரை கருதியோ கவலைப்படுகிறவன் நாஸ்திகன்தான்! நம் ஆத்மயாத்திரை இறைவன் பொறுப்பு; தேகயாத்திரையோ விதியின் விளைவு. இதை உணர்ந்து விட்டால் கவலைக்கு இடம் எங்கே? இந்த வார்த்தைகளைச் செவிவாயாகப் பருகினுர்கள் அங்கு இருந்தவர்கள்.

இராமாநுஜர் தொடர்ந்து சொன்னுர்:—'பணிகளையெல்லாம் ஆண்டவன் பணியாகவும் அன்பர் பணியாகவும் செய்ய வேண்டும். வைஷ்ணவர்களையெல்லாம் வேற்றுமை கருதாது அனுகூலராகக் கருதவேண்டும். பகவானை வெறுப்பவர்கள் அனுகூலர் அல்லர், பிரகூதிலரே ஆவர். அனுகூலராகவும் இல்லாமல் பிரதிகூலராகவும் இல்லாமல் இருக்கும் சம்சாரிகளும் உண்டு.' பாகவதர்கள் ஒரே கவனமாய்க் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

அனுகூலரைக் கண்டால் சந்தனம் தாம்பூலம் முதலியவற்றைக் கண்டாற்போன்ற உணர்ச்சி கொள்ளவேண்டும். பிரதிகூலரைக் கண்டால், பாம்பையோ நெருப்பையோ கண்

டாற்போல் அஞ்சி ஒதுங்கவேண்டும். இப்படியும் இல்லாமல் அப்படியும் இல்லாமல் 'உலகச் செல்வமும் செல்வாக்குமே பிராட்டியும் பெருமாளும்!' என்று கருதியிருப்பவரைக் கண்டால், அவர்களைத் துரும்பாக மதித்து அப்பால் போய்விடலாம். அவர்கள் மனம் திரும்பி அனுகூல வழிக்கு வந்தால், தம் ஆத்ம ஞானத்தைப் பக்தர்கள் அவர்களோடு பகிர்ந்து கொள்ள வேண்டும். அனுகூலர் அல்லாதவர்கள் விஷயத்திலும் "ஐயோ!" என்று இரங்கிக் கருணைபுரிவதே பாகவதர் கடமை. இப்படியெல்லாம் அருளிச் செய்தார் இராமாநுஜர்.

தமக்குப் பின் தரிசனத்தை வளர்க்கத் தக்கவர் பட்டர் என்று இராமாநுஜர் அங்குள்ள பாகவதர்களுக்குச் சுட்டிக்காட்டினார் என்றும் ஆறுயிரப்படி குருபரம்பரை சொல்லுகிறது. பாகவதர்களைக் குருகைப் பிரான் பிள்ளான் கையில் காட்டிக்கொடுத்து, 'சித்தாந்தம் பரவி வளரவேண்டும்' என்று கூறியதாகவும், கோயிற் பணியாளர்களை நோக்கி, 'நம்முடைய ஞானபுத்திரரான பிள்ளான் இருக்க, உங்களுக்குக் குறையுண்டோ?' என்று ஆறுதல் கூறியதாகவும் மூவாயிரப்படி குருபரம்பரை தெரிவிக்கிறது.

பிள்ளானையும் கிடாம்பியாச்சானையும் அழைத்துச் சில விசேஷ அர்த்தங்களையும் இராமாநுஜர் அருளிச்செய்தாராம். இந்தச் சித்தாந்தம் அவர்கள் வாயிலாக நிலைநிற்கும் என்பது பெருமாள் திருவுள்ளம் என்றும் தெரிவித்தாராம். பிறகு கோயிலுக்கு நேரே பிள்ளான் மடியில் திருமுடியும் கிடாம்பியாச்சான் மடியிலே திருவடியுமாய்க் கண்வளர்ந்தருளினார் என்கிறது மூவாயிரப்படி.

எம்பார் மடியில் முடியும் வடுகநம்பி மடியில் திருவடிகளுமாய்க் கண்வளர்ந்தார் என்கிறது ஆறுயிரப்படி. அங்கே கூடியிருந்த பாகவதர்களிடம் அனுமதி பெற்றுக் கொண்டு, ஆளவந்தாரின் திருவுருவத்தைத் தியானித்த வண்ணம் இராமாநுஜர் 'திருநாடு' அடைந்தார், தம் சீடரான கூரேசனுடன் சேர்ந்து கொண்டார் என்றும் ஆறுயிரப்படி அறிவிக்கிறது.

பாகவதர்கள் பலரும் அலறிக்கொண்டு வேரற்ற மரம்போல் விழுந்து கிடந்தார்கள், — இட்ட கால் இட்டகைகளாய்ச் சிறிது நேரம். சிலர் துடித்தார்கள். சிலர் தொண்டை தழுதழுக்கப் புலம்பினார்கள். சிலர் மலர்க்கண்களில் பனிததும்புவது போல் கண்ணீர் ததும்ப நின்றார்கள். சிலர் முத்துமுத்தாய்க் கண்ணீரை உகுத்தனர்.

கடைசியாக, 'காரியம் நடக்கவேணுமே' என்று எம்பெருமானார் திருமேனியை நீராட்டினார்கள். சில பக்தர்கள் உடையவர் திருவடிகளைக் கண்ணிலும் நெஞ்சிலும் ஒற்றிக்கொண்டார்கள். மூர்ச்சித்துக் கிடந்தவர்களைச் சிலர் எடுத்துத் தேற்றினார்கள்.

கீதவாத்தியங்கள் இசைக்கச் சாமரம் முதலான விருதுகளுடன் இராமானுஜரின் சரமவிக்கிரகம் தாங்கிய திவ்ய விமானம், உபநிஷதங்கள் – திவ்யப் பிரபந்தங்களின் முழக்கங்களுக்கிடையே வீதிகள் தோறும் சென்று பவனி வந்தது. திருவரங்கத்து அமுதனார் 'இராமானுச நூற்றந்தாதி' யைச் சொல்லிக்கொண்டே போனார்.

வீதிகளெல்லாம் அலங்கரிக்கப் பெற்றிருந்தன. சிலர் பொரியும் பூவும் சிதறிக் கொண்டு போனார்கள். சிலர் கரும்பும் குடமும் ஏந்திச் சென்றனர். சுமங்கலிகள் மங்கள தீபம் ஏந்தி முன்னே சென்றனர். சென்ற வழியெங்கும் 'நடைபாவாடை' விரித்திருந்தது. 'எம்பெருமானார் திருநாட்டுக்கு எழுந்தருளினார்' என்று ஒற்றைச் சின்னம் ஊதி ஒலிபரப்பியது.

புழுதியாடிய குழந்தையை, அந்த அழுக்கையும் உகப்பது போல் தாய் தூக்கிவைத்துக் கொள்கிறாள். தன் காதலுக்குரிய மகிஷியை அரசன் அந்தப்புரத்துச் சிங்காரப் பூங்காவிலேயே அடக்கம் செய்கிறான். பொருளாளன் தன் நிதியை உள்ளே இட்டுவைத்துக் கொள்கிறான். ஸ்ரீரங்கராஜாவும் '**இராமானுசன்** என்தன் மாநிதி' என்று இவர் திருமேனியைக் கோயில் திருமதிலுக்குள்ளேயே (ஆவரணத்துள்ளில்) உட்கோப்பிலே அந்தரங்கமாக வைத்துக் கொண்டான் என்று ஆறாயிரப்படியின் சில பிரதிகள் கூறுகின்றன. இக்கருத்துள்ள வாசகம் சில பிரதிகளில் காரணப்படாததால் இது பிற்காலத்தில் செருகப்பட்டது என்று கருதுவோரும் உண்டு.

'ஆண்டான், நம்பெருமாள் அனுமதியுடனே எம்பெருமானாரை எல்லாரும் சேவித்து உஜ்ஜீவிக்கும்படி அவ்விடத்தே ஆவிர்ப்பவித்தாற்போலே இருக்க அர்ச்சாவதாரமாக ஏறியருளப் பண்ணிப் பிரதிஷ்டிப்பித்தருளினார்' என்கிறது ஆறாயிரப்படி குருபரம்பரை. 'உடையவர் நியமனப்படிக்குப் பிள்ளானும் கோயிலிலே உடையவரை ஒரு மூலபேரத்தோடே சேர்த்துப் பிரதிஷ்டிப்பித்து ஆராதித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார்' என்கிறது மூவாயிரப்படி.

ஸ்ரீபெரும்பூதூரிலும் திருநாராயணபுரத்திலும் உடையவரின் விக்கிரகங்கள் பிரதிஷ்டை செய்யப் பெற்றிருப்பது போல்,

காஞ்சீபுரத்திலும் நாடாதூராழ்வான் பிரதிஷ்டை செய்துவைத் தார். கீழைத்திருப்பதியிலும் திருமலையிலும் இராமாநுஜரின் விக்கிரகங்கள் பிரதிஷ்டை செய்யப்பெற்றிருக்கின்றன. வேறு திருப்பதிகளிலும் அங்கங்கே உள்ளவர்கள் இராமாநுஜ விக்கிரகங் களைப் பிரதிஷ்டை செய்வித்திருக்கிறார்கள்.

குருகைப்பிரான் பிள்ளானை இராமாநுஜர் தமது ஞானபுத் திரராக வரித்திருந்ததால், அவரே பிரமமேதச் சடங்குடன் இறுதிக் கிரியைகள் எல்லாம் செய்து முடித்தார் என்பர்.

மானுட உருவம் பூண்டு வந்திருந்த தருமம் மானிட வர்க் கத்தின் கண்ணுக்குப் புலனாகாது மறைந்தும் மறையாது அருள்புரிந்த வண்ணமாயிருக்கிறது என்பதைச் சீடர்கள் தெரிந்து கொண்டார்கள். எனவே, இராமாநுஜரைத் தோன் றாத் துணையாகக் கண்டு, தொடர்ந்து கைங்கரியம் புரிந்து மக் களை வாழ்வித்து வந்தனர்.

# 26

# பொன்னுரைகளும் புனிதக்குரலும்

‘நாம் வருகிறோம், அழுகிறோம் : அது வாழ்க்கை. நாம் அலறுகிறோம், போகிறோம் : அது மரணம்’ என்றார் ஒரு சிந்தனையாளர். ‘வாள்களாகி நாள்கள் செல்ல’ என்ற திருமழிசை ஆழ்வார்வாக்கிலே, வாழ்க்கையில் ஒவ்வொரு நாளும் உடம்பிலிருந்து உயிரை அறுத்துப் பிரிக்கும் கூரிய வாளாகும் என்ற திருவள்ளுவர்-கருத்தைக் காண்கிறோம். இத்தகைய வாழ்க்கையிலே மகிழ்ச்சி அடைவது எப்படி?—இந்த வாழ்க்கை வாழ்வது தான் எப்படி?

‘உயிரும் தருமனையே நோக்கும்!’ என்று கூறும் ஆழ்வார், நாம் வாழும்போதே இறக்கிறோம்’ என்பதை நினைவூட்டி நம்

உணர்வு ஸ்ரீ லட்சுமி-நாராயணமூர்த்தியாகிய பகவானையே நோக்கிய வண்ணமாயிருக்கவேண்டும், இதுவே மரணத்தை வெல்லும் வழி என்பதையும் சுட்டிக்காட்டுகிறார். இத்தகைய பக்தர்களுக்குச் சாவு என்பதே இல்லை; இவர்கள் சாவைச் சாகடித்து விடுகிறார்கள்! இவர்களுக்கு மறைவு என்பது நிறைவு தான்!

சூரியன் அஸ்தமனமாவதைப் பார்க்கிறோம். ஆனால் சூரியன் செத்துப்போய் விட்டதாக நினைக்கிறோமா? இந்த அஸ்தமன வருணனை ஒன்றில் கம்பன், வாழ்வை நிறை செய்து கொண்டே நெறி கண்டு ஒளி காட்டிய ஒரு மகாவீரனின் மறைவை நினைவூட்டுகிறான். விரிந்துகொண்டே வரும் தீவினையிருளாகிய பகையை ஓட்டித் திசைகளை வென்று எல்லாருக்கும் மேலாக நின்று ஆணை செலுத்திய அந்தப் போர்வீரன் தன் உயர்ந்த புகழை நிலைநிறுத்தி விட்டு மறைந்து போகிறான். அவன், சாவை வியாஜமாகக் கொண்டு மக்கள்-உள்ளம் புகுந்து வாழ்கின்றான், வளர்கின்றானும்.

ஒருவன், ஓர் ஊரன், ஒரு காலத்தவன், என்றும் எங்கும் உள்ளவன் என்று சொல்லுமாறு மாறி விடுகிறான். இந்த மாறுதலே உண்மை வீரனுக்கு மரணம் அல்லது மறைவு. ஒரே செங்கதிர்ச் செல்வமாக மறைந்து கொண்டிருக்கும் சூரியஜோதி, உலகப் பெரியார்களான வீரர்களின் மறைவு குறித்து நமக்குக் கற்பிக்கும் உண்மை இது என்பது கவிச்சக்கரவர்த்தியின் குறிப்பு.

ஞான சூரியனாகிய இராமாநுஜர் மறையும் போது, என்றும் இல்லாத சௌந்தரிய ஒளி வீசியது முகத்திலே, சாந்தி நிலவியது மடத்திலே. எனினும், ஒவ்வொரு பாகவதருக்கும் தனிமையுணர்வு ஏற்பட்டது. 'இனி நம்மை அன்பால் அணைத்து யார் வழிகாட்டப் போகிறார்? அந்தோ! இனி நம் சம்பிரதாயத்திற்குக் கொழுகொம்பாவார் யாரே?' என்ற உணர்ச்சிகள் மேலிட்டன.

பிரிவுத்துயரம் திடுக்கிடச் செய்தது; முதல் முதல் ஒரே இருட்டாகத் தோன்றியது. ஆனால் இந்த நிலையைத் தொண்டர்கள் விரைவில் சமாளித்துக் கொண்டார்கள்.

பரமபதத்திற்கு எழுந்தருளும்போது இராமாநுஜர், ஆசாரிய அபிமானம் ஒழிய மோட்சத்திற்கு உபாயம் இல்லையென்றும், பாகவத அபசாரம் ஒழிய மோட்ச விரோதம் இல்லையென்றும், கைங்கரியம் ஒழியப் புருஷார்த்தம் இல்லையென்றும் அருளிய முக்கிய மணிமொழிகள் பல தொண்டர்களுக்கும் ஆறுதல் அளித்தன என்பர்.

தான் அறப்பெய்து மாய்ந்து போகும் மேகம் இறுதியில் சில அமுதத்துளிகள் சிந்தி மறைவது போல், இராமாநுஜர் எண்பத்திரண்டு வார்த்தைகள் அருளிச் சென்றதாகப் **பிரபந்நாம்ருதம்** தெரிவிக்கிறது.

இவற்றுள் முதலாவது வார்த்தை, பகவத் கைங்கரியத்திலும் பாகவத கைங்கரியத்திலும் ஆசாரிய கைங்கரியத்திலும் சமபுத்தி கொள்ளவேண்டும் என்பது. ஏற்றத்தாழ்வு கருதாமல் எந்தப் பாகவதனுக்கும் பணி புரியவேண்டும், அந்தப் பணி குருவுக்குச் செய்யும் பணி போலவும் பகவானுக்கே செய்யும் பணி போலவும் மதிக்கப் பெறவேண்டும்—என்ற இந்த வார்த்தையிலேயே ஸ்ரீ வைஷ்ணவத்தின் அடிப்படை-உண்மை ஒன்றை எவ்வளவு தெளிவாய்க் காண்கிறோம்!

இரண்டாவது வார்த்தை: பூர்வ ஆசாரியர்கள் அருளிய பிரபந்தங்களில் நம்பிக்கை வைக்கவேண்டும். நம்பினோர் நலம் பெறுவர், சமுதாய நலத்திற்கும் வழிகாட்டுவர் என்பது கருத்து. எப்போதும் இந்திரியங்களுக்கு வசப்பட்டு இருக்கக்கூடாது என்பது மூன்றாம் வார்த்தை. கைங்கரிய நெறியிலே புலனடக்கம் பெறவேண்டும் என்பது குறிப்பு.

சாமானிய சாஸ்திரங்களில் எப்போதும் பற்றுடையவனாக இருக்கக் கூடாது என்பதும், பகவத் விஷயங்களான சாஸ்திரங்களில் நிலையுடையவனாக இருக்கவேண்டும் என்பதும் முறையே நான்காம் வார்த்தையாகவும், ஐந்தாம் வார்த்தையாகவும் அமைந்திருக்கின்றன. இதனால், பாகவதன் தன் ஆராய்ச்சியறிவைப் பயன்படுத்திக்கொண்டு ஸாரமாகிய பகவத் விஷய ஞானத்தை அடையவேண்டும் என்பது உறுதிப்படுகிறது.

ஆசாரியர் வழிகாட்ட ஞானத்தை அடைந்து, பிறகு ஐம்புலன் வழிச்சென்று அடிமைப்பட்டிருக்கக் கூடாது என்பது ஆறும் வாக்கு. 'சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தங்களாகிய விஷயங்கள் ஐந்தையும் சமமாகப் பார்க்கவேண்டும்' என்பது ஏழாம் வாக்கு. சந்தனம், பூ, தாம்பூலம் முதலியவற்றில் ஆசையற்று இருக்கவேண்டும் என்பது எட்டாம் வார்த்தை. இம்மூன்று வார்த்தைகளாலும் பாகவதன் ஐம்புலனை ஐந்து பாற்பசுக்கள் போல் பாதுகாத்துப் பேறு பெறவேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப்படுகின்றது. அப்போது பசுக்கள் கைங்கரிய ரூபமான பாலைச் சொரியும் என்பது குறிப்பு.

பகவானுடைய திருப்பெயர்களைக் கீர்த்தனம் செய்வதில் கிடைக்கும் சக்தியால் புலனடக்கம் பெற்று மரணத்தையும்

வென்று விடலாம் என்று தொண்டரடிப் பொடியாழ்வார் தம் திருமாலையில் முதற் பாசுரத்தில் கூறியுள்ளார். மரண பயத்தைப் போக்கிக்கொண்ட பின்பு பகவானுடைய நாமகீர்த்தனங்களில் உண்டாகும் சுவை புலப்படும் என்ற கருத்தையும் இந்த ஆழ்வார் வாக்கில் காண்கிறோம். இந்தச் சுவையில் போகப் பொருள் களின் மீதுள்ள மோகத்தை மறந்து விடுவது எளிது என்ற குறிப் புடன், இராமாநுஜர் தம் ஒன்பதாம் வார்த்தையில் நாமகீர்த்த னங்களைக் குறிப்பிடுகிறார்.

நாமகீர்த்தனங்கள் என்றால், பகவானுடைய நாமகீர்த் தனங்கள் மட்டுமல்ல; பாகவதர்களின் நாமகீர்த்தனங்களும் அவசியமானவை என்கிறார். பகவானுடைய நாமகீர்த்தனங் களில் உண்டாகும் பிரியம் பாகவதர்களின் நாமகீர்த்தனங்களிலும் இருக்கவேண்டும் என்பது இவர் வாக்கு.

மகாபாகவதர்களை அடைவதே மோட்சத்திற்குக் காரணம் என்று, அவர்கள் கட்டளையின்படி நடந்துகொள்ளவேண்டும் என்பது பத்தாம் வார்த்தை. அன்பர் பணியாகிய பாகவதர் பணியையும், அன்பன் பணியாகிய பகவானுடைய பணியை யும் குருவின் பணியையும் இழந்து புலனின்பங்களில் மிகுந்த பற்றுடையவன் எவ்வளவு அறிவுடையவனாக இருந்தாலும் கெட் டுப் போவான் என்பது பதினொன்றாம் வார்த்தை.

பன்னிரண்டாவது, பதின்மூன்றாவது வார்த்தைகளில் ஸ்ரீ வைஷ்ணவர்களின் ஒழுக்கங்களும் ஸ்ரீ வைஷ்ணவ ஒழுக் கங்களும் பிரஸ்தாபிக்கப்படுகின்றன. புலனடக்கம் அவசிய மாயினும் அதுவே பகவானை அடைவிக்கும் என்று நினைக்க வேண்டாம் என்கிறார் இராமாநுஜர். ஜைன பௌத்தங் களைப்போல் ஒழுக்க நெறியே முத்திநெறி என்று ஸ்ரீ வைஷ் ணவம் கருதவில்லை. ஸ்ரீ வைஷ்ணவனாக ஒழுகி அருள் நெறியே சென்று சரணாகதனாகிக் கைங்கரிய நெறியில் நிற்பதையே வற்புறுத்துகிறார்.

ஸ்ரீ வைஷ்ணவர்களை ஏக வசனமாக அழைக்கலாகாது என்பது பதினாலாம் வார்த்தை. வயது கருதியோ, சாதி கருதியோ, வேறு காரணங்கள் [illegible]யோ, பாகவதர்களை ஏக

[illegible] ர் உரை யாடவேண்டும் என்பது கருத்து. இதை அடுத்து, '[illegible] வைஷ் ணவர்களைப் பார்க்கும்போது முதலில் கைகூப்பவேண்டும்!' என்ற வார்த்தை வருகிறது. இதிலிருந்து, ஸ்ரீ வைஷ்ணவர்கள்

அனைவரும் ஏற்றத் தாழ்வு இன்றி மதித்துக் கௌரவிக்கத் தக்க வர்கள் என்பது புலனாகும்.

பகவானுடைய சந்நிதியிலும், ஆசாரியனது முன்னிலையிலும், பாகவதர் முன்பும் கால்களை நீட்டலாகாது என்பது பதினாறும் வார்த்தை. இவர்களுடைய் உறைவிடங்கள் உள்ள திக்கிலும் கால்களை நீட்டிக்கொண்டு படுக்கலாகாது என்ற பதினேழாம் வார்த்தையும், பாகவத சமுதாய உணர்ச்சியைப் போற்றிக் கௌரவிப்பதுதான்.

துயிலுணர்ந்து எழும்போது குரு பரம்பரையை நினைத்துக் கொள்ளவேண்டும் என்ற பதினெட்டாம் வார்த்தையும், பகவானுயை சந்நிதியில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் சேர்ந்து நிற்கும்பொழுது 'திருமந்திர' த்தையோ 'த்வய'த் தையோ அநுஸந்தித்துத் தண்டனிடவேண்டும் என்ற பத்தொன்பதாம் வார்த்தையும், பாகவத சமுதாய உணர்ச்சிக்கும் கட்டுப்பாட்டுக்கும் உரம் தருவனவே. இனி, நாம் மற்ற வார்த்தைகளையும் இயன்றவரையில் ஒரே பார்வையாகப் பார்த்துக்கொண்டு போவோம்.

ஸ்ரீ வைஷ்ணவர்கள், நாமகீர்த்தனங்களைப்போல் குண கீர்த்தனங்களை உகப்பதும் இயல்புதானே. குண கீர்த்தனங்கள் என்றால் பகவானுடைய குணமாயிருக்கலாம்; பாகவதனுடைய குணமாயிருக்கலாம்; ஆசாரியனுடைய குணமாயிருக்கலாம். இத்தகைய குண கீர்த்தனங்களில் ஈடுபடுவோர் நம் போற்று தலுக்கு உரியவர். அவர்களைத் தகுந்தவாறு போற்றாது எழுந்து போவது அபசாரம் என்பது இருபதாம் வார்த்தை.

ஸ்ரீ வைஷ்ணவர்களை எதிர் சென்று உபசரிக்கவேண்டும். அவர்கள் திரும்பிப் போகும்போது பின்னே அவர்கள் மறையும் வரை அஞ்சலி செய்துகொண்டிருக்கவேண்டும். இது இருபத் தொன்றாம் வார்த்தை. ஸ்ரீ வைஷ்ணவ தாஸராக இராமல் சாமானியர்களை 'ஐயா! அம்மா!' என்று பின் சென்று புகழ்ந்து இரந்து திரிவது கேடு விளைக்கும் என்பது அடுத்த வார்த்தை.

பகவானுடைய விமான கோபுரங்களைக் கண்டதும் அஞ்சலி செய்யவேண்டும் என்பது இருபத்து மூன்றாம் வார்த்தை. மறந்தும் புறந்தொழா மாந்தரான வைஷ்ணவர்களின் நிலையை இருபத்து நாலாம்—இருபத்தைந்தாம் வார்த்தைகளாகப் பிரபந்நாம்ருதம் குறிப்பிடுகிறது.

பாகவதர்களின் குணங்களையோ, ஆசாரியரின் குணங் களையோ, பகவானுடைய குணங்களையோ கேட்டு மகிழாது

இடையே குற்றங்களை எடுத்துக் கூறுவது அபசாரம் என்பது இருபத்தாறுவது வார்த்தை.

அடுத்துவரும் மூன்று வார்த்தைகளில் ஸ்ரீவைஷ்ணவர்களின் நிழலையும் மிதிக்கக் கூடாது என்றும், அவர்கள் மேல் நமது நிழல் படும்படி நடக்கக்கூடாது என்றும், சாமானியர்களைத் தொட்டு அவர்களைத் தொடக்கூடாது என்றும், இராமாநுஜர் கூறுவதி லிருந்து, ஸ்ரீவைஷ்ணவர்களை எத்தகைய லட்சிய புருஷர்களாக இவர் மதிக்கிறார் என்பது இனிது புலனாகும்.

ஒரு ஸ்ரீவைஷ்ணவன் முன்னே தண்டனிட 'அவன் ஏழை தானே' என்று அசட்டை செய்வதும், தண்டனிட்ட வைஷ்ண வர்களைப் போற்றாது அலட்சியம் செய்வதும் அபசாரமாகும் என்பதையும் இரண்டு வார்த்தைகளில் வற்புறுத்துகிறார் இராமா நுஜர். ஸ்ரீவைஷ்ணவர்களின் குறைகளை மறந்து நற்குணங் களையே கொண்டாடவேண்டும் என்பது முப்பத்திரண்டாம் வார்த்தை.

பிறகு மூன்று வார்த்தைகளில் ஸ்ரீபாத தீர்த்தம் குறித்துப் பேசுகிறார். 'நான் பாகவதனுக்கு அடியவன்' என்று கருதாது சமானன் என்று எண்ணக்கூடாது என்பது முப்பத்தாறும் வார்த்தை. அப்போதுதான் பரஸ்பர கைங்கரிய நினைவில் பாகவத சமுதாய ஒழுக்கம் நிலைபெறும் என்பது குறிப்பு.

அடுத்தபடியாக, அஜாக்கிரதையால் நேரும் அசுத்தத்திற் குப் பாகவதர்களின் ஸ்ரீ பாததீர்த்தம் பரிகாரமாகும் என்பதைக் கூறிவிட்டு, ஞானபக்தி வைராக்கியம் முதலான பண்புகளை உடைய மகாத்மாக்களை எப்படிச் சிறப்பாக நினைக்கவேண்டும் என்பதையும் ஒரு தனி வார்த்தையாகக் குறிப்பிடுகிறார். அத் தகைய பாகவதர்களிடம் குலம் குணம் முதலியவற்றை ஆலோ சித்துப் பார்க்கவே கூடாது என்பது முப்பத்தொன்பதாம் வார்த்தை.

சாமானிய சம்சாரிகளைக் குறித்து இரண்டு வார்த்தைகளில் எச்சரிக்கை செய்த பின், திவ்ய தேசங்கள் என்ற திருப்பதிகளில் திருஷ்டி தோஷம் கிடையாது என்கிறார் நாற்பத்திரண்டாம் வார்த்தையில். அடுத்த இரண்டு வார்த்தைகளில் கோவில்-பிரசாதத்தின் மகிமை பேசப்படுகிறது.

ஒருவன் தன்னுடைய நற்குணங்களை ஸ்ரீ வைஷ்ணவர்கள் முன்னிலையில் சொல்லிக் கொண்டாடக்கூடாது என்பது நாற்பத் தைந்தாம் வார்த்தை. அடுத்த வார்த்தையில் பாகவதர் எதிரில்

மற்ெருரு பாகவதரை அலட்சியம் செய்வதையும், அதற்கு அடுத்த வார்த்தையில் பாகவத கைங்கரியம் இன்றி ஒருவன் தன் சொந்தக் காரியம் மட்டும் பார்த்துக்கொள்வதையும் கண்டிக்கிருர் இராமாநுஜர்.

நாள்தோறும் ஒரு நாழிகையாவது குருவின் கல்யாண குணங்களைக் கொண்டாடவேண்டும் என்பதும், அப்படியே நாள்தோறும் ஒரு நாழிகையாவது நம்பிக்கையுடன் திருவாய்மொழி முதலான பிரபந்தங்கள் ஓதப்படவேண்டும் என்பதும் இரண்டு வார்த்தைகளாக வருகின்றன. வயிற்றுப் பெருமான் பொருட்டே உழைப்பவர்களின் கூட்டுறவும், ஸ்ரீ வைஷ்ணவ வேடதாரிகளான வஞ்சகர்களின் தோழமையும் விலக்கப்படுகின்றன, இரண்டு வார்த்தைகளில்.

'பிறர்மீது குற்றமே சொல்லிக்கொண்டிருப்பவர்களோடு உரையாடாதே' என்கிருர். ஸ்ரீ வைஷ்ணவர்களோடு உரையாடிக் குறைபாடுகளைப் போக்கிக்கொள்ளலாம் என்கிருர். பாகவத நிந்தை செய்வோரைப் பார்க்கவே கூடாது என்கிருர். பிரபத்தி தருமத்தில் மூழ்கியிருக்கும் பாகவதர்களுடைய கூட்டுறவே வேண்டும் என்கிருர்.

இப்படியெல்லாம் சில வார்த்தைகள் கூறிவிட்டு, வைஷ்ணவர்கள் நம்மை அவமானப்படுத்தினுலும் பகைமை பாராட்டலாகாது என்கிருர், ஐம்பத்தொன்பதாம் வார்த்தையில். அடுத்த வார்த்தையில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கெல்லாம் நன்மை செய்ய வேண்டும் என்பதை வற்புறுத்துகிருர்.

கர்மங்களைக் குறித்தும், உணவு வகைகளைக் குறித்தும், இறைவனைச் சரணம் அடைந்த பிரபந்நன் என்ன செய்யவேண்டும் என்பது குறித்தும் சில வார்த்தைகள் சொல்லுகிருர். வேறு சில கருத்துகளை வெளியிட்டபின், பகவானுடைய விக்கிரங்களைக் கல் என்றும் மரம் என்றும் எண்ணக்கூடாது என்கிருர். குருவைச் சாதாரண மனிதனுக நினைக்கக்கூடாது என்றும் சொல்லுகிருர்.

ஸ்ரீ வைஷ்ணவர்களை 'இன்ன ஜாதி' என்று நினைப்பதே இழிவு படுத்துவதாகும் என்பதைத் தெளிவுபடுத்துகிருர். ஸ்ரீ பாத தீர்த்தத்தைச் சாதாரண ஜலம் என்று கருதுவதும், பகவானுடைய மந்திரத்தைச் சாதாரண வார்த்தை என்று எண்ணுவதும், திருமாலைச் சாதாரண தேவதையாக மதிப்பதும் நரகத்தை நோக்கும் வழி என்கிருர்.

பகவானை மகிழ்விப்பதிலும் பாகவதரை மகிழ்விப்பதே உத்தமம் என்கிருர். பகவானுக்கு அபசாரப்படுவதைக் காட்டிலும்

பாகவதருக்கு அபசாரப்படுவது கொடுமையானது என்கிருர். ஆத்மா உய்ந்து போகவேண்டும் என்பது குறித்துப் பாகவதன் வருந்தலாகாது, ஆத்மாவை இறைவனுக்கு உரிமையாக்குவதே கடமை என்கிருர்.

பிரபந்நனுடைய தேகயாத்திரை (தேகத்தை நடத்திச் செல்வது) பழவினையின் பலன், ஆகவே விசனப்படாதே, விச னப்படுகிறவன் விசுவாசம் இல்லாதவன் என்கிருர். நாம் செய் யும் கருமங்கள் ஊதியம் கருதிச் செய்யப்படலாகாது, அன்புரு வாகிய அழகனது முக உல்லாசத்திற்காகவே செய்யப்பட வேண்டும் என்கிருர்.

ஸ்ரீ பாஷ்யத்தைக் குருவின் வாயிலாகக் கேட்டு உலகத்தில் பரவச் செய்யவேண்டும் என்கிருர். ஆழ்வார்களின் அருளிச் செயல்களைச் சரிவரக் கற்றுச் சீடர்களுக்கு உபதேசிக்கவேண் டும் என்கிருர். திருப்பதிகள் என்ற திவ்யதேசங்களில் பல்வேறு பணிகளும் புரியவேண்டும் என்கிருர்.

'நமக்கு மிகவும் பிரியமான திருநாராயணபுரத்தில் ஒரு கூரை வீடாகிலும் கட்டி வாசம் பண்ணுங்கள்' என்பது எழுபத்தொன் பதாம் வார்த்தை. இதிலிருந்து, மைசூர்ச் சீமையில் இவர் அரும்பாடுபட்டு ஆற்றிய ஸ்ரீ வைஷ்ணவப் பணிகளின் நினைவு இவருள்ளத்தில் மறைவுக்காலத்திலும் எவ்வளவு பசுமையாக இருந்தது என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

'இது முடியாத பட்சத்தில், பொருளோடு "த்வய"த்தை அநுஸந்தித்துக் கொண்டு நீங்கள் இருக்கும் இருப்பிடத்திலே இருங்கள்' என்பதை எண்பதாம் வார்த்தையாக அருளிச் செய்கிருர்.

இதற்கும் ஆற்றல் இல்லாதவராக இருந்தால் ஸ்ரீ வைஷ்ண வர்களோடு சேர்ந்து அகங்காரத்தை விட்டு அவர்களுடைய ஆணை வழியே ஒழுகுங்கள் என்கிருர். இதுவே கடைசி உபாயம், இதை விட வேறு உபாயம் இல்லை என்றும் உறுதி கூறுகிருர்.

இறுதியான எண்பத்திரண்டாம் வார்த்தையில் அநுகூல ரான ஸ்ரீ வைஷ்ணவர்களைக் குறித்தும் பிறரைக் குறித்தும் பிரஸ் தாபிக்கிருர். அவர்களிடம் ஒரு பாகவதன் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பதையும் தெளிவாகக் கூறுகிருர்.

பிரபந்நாம்ருதத்தில் காணப்படும் இந்த வார்த்தைகளில் பொதுவாக இராமாநுஜரின் புனிதக் குரலைக் கேட்கிறேம். இந்த வார்த்தைகளைக் கூறிய பின்பே இராமாநுஜர் கோவில்-பணி யாளர்களிடம் தாம் அறிந்தோ அறியாமலோ செய்திருக்கக்

கூடிய பிழைகளுக்கு மன்னிப்பு வேண்டினாராம். அப்பால் இந்த அற்புத வாழ்க்கை-நாடகம் முற்றுப்பெற்றது, உடம்பு கோவிலுக்குள்ளேயே அடக்கம் செய்யப்பெற்றது என்பர்.

இந்தப் பொன்னுரைகளினூடே நாம் கேட்கும் புனிதக்குரல், எல்லாவற்றுக்கும் மேலாக, எல்லாவற்றுக்கும் உயிர் நிலையாகக் கூறுவது தான் என்ன? அது ஸ்ரீ வைஷ்ணவ வாழ்க்கை-வழி தான் என்பதில் ஐயமில்லை. இந்த லட்சணத்தை இப்போது சுருங்கக் கூறி விளங்க வைக்க முயல்வோம்.

ஸ்ரீ கிருஷ்ண சைதந்ய சுவாமிகளை வங்க நாட்டு இராமானுஜர் என்று கூறலாம். அவரைக் குறித்து விநோபாஜி நிகழ்த்திய பிரார்த்தனையுரை ஒன்றில், 'அவர் மிகுந்த அன்புள்ளவராக இருந்ததுடன் துறவு-மனப்பான்மையோடு கூடிய வைராக்கிய சீலராகவும் இருந்தார்' என்று கூறியுள்ளார். ஸ்ரீ வைஷ்ணவனது வாழ்க்கையில் அன்பும் துறவும் இரக்கமும் வைராக்கியமும் அதிசயமாய்ப் பொருந்தியிருக்கும் என்று இராமானுஜர் கருதுவதாக ஊகிக்கலாம்.

நம் பாரத பூமியில் மட்டுமல்ல, உலகத்திலேயே வைராக்கிய மனப்பான்மையைப் புலப்படுத்தி ஆன்ம முயற்சிகள் செய்திருக்கும் துறவிகளும் தவசிகளும் நீண்ட காலமாக மக்களின் மரியாதைக்கு உரியவராக மதிக்கப்பெற்று வந்திருக்கிறார்கள். கடுந்துறவிகளை மதிப்பதுபோல் அன்புப்பெருந்தொண்டுகள் புரிந்தவர்களையும் மக்கள் மறவாது மதித்து வந்திருக்கிறார்கள். எனவே, அன்பும் துறவும் எங்கும் என்றும் செல்லக்கூடிய நாணயங்கள் என்பர். இராமானுஜரோ, அன்பும் துறவும் ஒரு நாணயத்தின் இருபுறம் போல் பாகவதனாகிய ஸ்ரீ வைஷ்ணவனிடம் பொருந்தி அமைந்திருக்கவேண்டும் என்கிறார். அப்போதுதான் பாகவதனுக்கு உரிய கைங்கரிய நெறி சரியாக அமைந்திருக்கும் என்பது குறிப்பு.

எல்லாருக்கும் சுலபமான சமய வழியை இவர் காட்ட முயன்றார். எனவே நம்பிக்கை அல்லது விசுவாசத்தை வற்புறுத்துகிறார். நம்பிக்கை என்றால் குருட்டு நம்பிக்கை அல்ல. இராமானுஜர் வற்புறுத்துவது சாஸ்திர ஸாரமாகிய ஞானபக்திக்கு இசைந்த மகாவிசுவாசம்.

தலையிலும் முதுகிலும் சுமைகளைத் தூக்கிக்கொண்டு வருவதைக் காட்டிலும், இதயத்தில் துன்பச் சுமைகளையும் கவலைச் சுமைகளையும் சுமந்து தவிப்பது மிகவும் கஷ்டமானது. இந்த நிலையில் 'எவராவது நம் சுமையைத் தூக்கிக் கொண்டுவர

இசைந்தால், நாம் அதிக பளுவில்லாமல் சுகமாய் நடந்து கொண்டிருக்கலாமே!' என்று வாழ்க்கையாகிய யாத்திரைவழியில் தோன்றுவது இயல்புதான். ஆகவேதான் பாகவதன் சரணுகதி நெறியைப் பின்பற்றுகிருன்.

'எல்லாச் சுமைகளையும் எப்போதும் முழுக்க முழுக்கச் சுமப்பதற்கு நான் சித்தமாயிருக்கிறேன்!' என்கிருனும் அடியவருக்கு அடியவனுகிய ஆண்டவன். இப்படிக் குரல் கொடுத்து இறைவன் உறுதி கூறுகிருன் என்பது பொதுவாகப் பக்தி அனுபவம்; சிறப்பாக இராமாநுஜரின் வாழ்க்கை அனுபவம்.

இதற்குத் தத்துவ அடிப்படை ஸ்ரீபாஷ்யத்திலும், இக் கொள்கையின் முழு உருவமும் இவரது வாழ்க்கையிலும் குணுதிசயத்திலும், உரைகளிலும் உரையாடல்களிலும் காணப்படுகின்றன.

இராமாநுஜர் தாம் கண்ட தரிசனமாகிய ஸ்ரீவைஷ்ணவத்தின் சில துளிகளையே எண்பத்திரண்டு வார்த்தைகளாக வெளியிட்டிருக்கிருர். இந்தக் கருணைமேகம் வெள்ளமாய்க் கொட்டிய தத்துவக் கொள்கைகளையோ, பல்வேறு நுட்பமான ஞானபக்தி அம்சங்களையோ இந்த வார்த்தைகளில் நாம் காண்பதற்கில்லை. தம் இறுதிக் காலத்தில் வந்து சூழ்ந்து கொண்ட, பல்வேறு நிலைகளில் உள்ள, தொண்டர் குழாத்தை நோக்கிப் பொதுவாகச் சொன்ன வார்த்தைகள் இவை.

பாகவத சமுதாயம் வாழவேண்டும், பாகவத சமதர்மம் வாழவேண்டும், பாகவதர்கள் ஒருமுகமாய் ஒரு நோக்குடன் ஒரு குலம்போல் வாழ்க்கை நடத்தவேண்டும்—என்ற பெருநோக்குடன் இராமாநுஜர் பேசிய பேச்சு இது. இந்த எண்பத்திரண்டு துளிகளுக்கும் பொதுமையாக உள்ள அமுதப் புனல் 'ஸமத்வம்' என்பதே. இராமாநுஜர் காட்டும் ஸமத்வம்தான் எது?

பகவத்கீதையின் சுலோகம் ஒன்றில் வரும் 'ஸமதா' என்பதை விவரிக்கும்போது, 'ஸமத்வமாவது தன்னிடத்திலும் பிறரிடத்திலும் ஒரு நிகரான புத்தியுடைமை' என்று இராமாநுஜர் கூறியுள்ளார். இதற்கு மேலும் விளக்கம் தரும்போது வேதாந்த தேசிகர், 'தன்னிடத்திலும் தன் பகைவர்களிடத்திலும் ஒரு நிகரான புத்தியை உடையவனுயிருப்பவனே ஸ்ரீவைஷ்ணவன்' என்று பொருள்படும் விஷ்ணுபுராண வசனம் ஒன்றை எடுத்துக் காட்டுகிருர்.

இத்தகைய ஸமத்வ லட்சணத்தில், 'பகை, பகைத் தீயால் அவியாது, அன்புநீரால் அவியும்' என்ற புத்தர் கொள்கைக்குச் சிறப்பாக இடம் உண்டு என்று ஊகிக்கலாம்.

**இன்னா செய்தாரை ஒறுத்தல், அவர்நாண**
**நன்னயம் செய்து விடல்**

என்ற திருவள்ளுவர் கொள்கைக்கும் இடம் இருக்கத்தானே வேண்டும்?

பகை ஒழியப் பகைவனை ஒழிக்க வேண்டாம் என்ற புத்தர் கொள்கையின் அடிப்படையில் திருவள்ளுவர், துன்பம் செய்யும் பகைவரைத் தண்டிப்பதற்கு அவர்கள் நாணித் திருந்தும்படி அன்புடன் உபகாரம் செய்யவேண்டும் என்ற தம் கொள்கையை மலர்ச்சிபெறச் செய்திருக்கிறார்.

இக் கொள்கையின் 'முத்தாய்ப்பு' இன்னா செய்தார்க்கு நன்னயம் செய்தோம் என்ற நினைப்பையும், அவர்கள் இன்னா செய்தார்கள் என்ற நினைப்பையும் ஒருங்கே மறந்துவிட வேண்டும் என்பது.

இனி, நாம் இராமாநுஜர் காட்டும் ஸ்ரீவைஷ்ணவ மார்க்கத்தின் சிறப்பியல்பையும் கண்டுகொள்ள முயல்வோம். 'குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் (பொறுமையும்) க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகார ஸ்மிருதியும் (உபகார நினைவும்) நடக்கவேணும்' என்ற ஸ்ரீவசனபூஷண வாக்கியத்தில் இந்தச் சிறப்பியல்பைக் காணலாம் என்று தோன்றுகிறது.

குற்றத்தைப் பொறுத்து அருள்புரிய வேண்டும் என்று கூறும் ஸ்ரீவசனபூஷண ஆசிரியர், பொறுமை மட்டும் போதாது, கிருபையும் போதாது, சிரிப்பும் உகப்புமாயிருக்க வேணும் என்பதையும் வற்புறுத்துகிறார். இவற்றுக்கெல்லாம் மேலாக, உபகார நினைவும் வேண்டும் என்கிறார்.

'நீ செய்த உபகாரத்தையும் அவர்கள் அபகாரத்தையும் மறந்துவிடு' என்று வள்ளுவர் பகைவருக்கு நன்மை செய்பவனை நோக்கிக் கூறுகிறாரல்லவா? ஸ்ரீவசனபூஷணமோ, 'குற்றம் செய்தவர்கள்' செய்த அந்தக் குற்றத்தை மறக்கவேண்டாம், அதையே உபகாரமாக நினைத்துக்கொள்ள வேண்டும் என்கிறது.

இந்த ஸ்ரீவசனபூஷண வாக்கியத்தை ஒட்டிப் பழைய வியாக்கியானம் கூரேசபுத்திரரான பட்டரின் வரலாற்றுத் துணுக்கு ஒன்றைச் சுட்டிக் காட்டுகிறது.

பட்டர் ஒருநாள் ஸ்ரீரங்கநாதனின் சந்நிதியில் தம் அன்பர்களான சில பாகவதர்களுடன் பகவானை நோக்கி மௌனமாய்ப் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். அப்போது இவர்கள் இருப்பதை அறிந்திராத சிலர்—தூண்மறைவில் நின்றவர்கள்—செவி பொறுக்க முடியாத சில வார்த்தைகளைச் சொல்லி,

பட்டரை நிந்தித்துக் கொண்டிருந்தார்கள். அந்த வார்த்தைகள் தம் காதில் விழுந்தும், பட்டர் அமைதியாகவே இருந்தார்.

உடன் இருந்த பக்தர்களுக்குத்தான் ஒரே ஆத்திரம். பட்டர் சைகை காட்டி இவர்களைத் தடுத்தார். அந்த நிலையில் தூஷணை செய்து கொண்டிருந்தவர்கள் வெளிப்பட்டு வந்தார்கள். இவர்களைப் பார்த்ததும் திகில் அடைந்தார்கள். பட்டரோ வெகு விநயமாகத் தாம் அணிந்திருந்த மோதிரம் முதலிய அணிகளை அவர்களுக்கு உவகையுடன் வழங்கினார்.

'தூஷணை செய்தவர்களுக்குப் பூஷண தானமா? இன்னா செய்தார்க்குப் பொன்னுடையா?' என்று பிரமித்தார்கள் பட்டருடன் இருந்த பாகவதர்கள். பட்டரோ இவர்களை நோக்கி, 'நிந்தித்தவர்களுக்கு அஞ்சியோ லஞ்சமாகவோ கொடுக்கவில்லை; நாம் அறியாத குற்றங்குறைகளையும் பெருமாள் செவிசாத்தி அருளும்படி சொன்ன உபகாரத்தை நினைத்துக் கொடுத்தேன்' என்றார். 'இவர் அன்றோ ஸ்ரீவைஷ்ணவர்?' என்று எல்லா உள்ளங்களும் ஒருமுகமாக வாழ்த்தின.

இத்தகைய ஸ்ரீவைஷ்ணவத்திற்குரிய ஒருமைப்பாட்டு-உணர்வை அங்கும் இங்குமாகக் கோடுகள் கிழித்துக் குழந்தைகளுக்குக் காட்டுவதுபோல் எண்பத்திரண்டு வார்த்தைகளால் இராமாநுஜரின் குழந்தையுள்ளம் பாகவதர்களுக்குக் காட்ட முயன்றிருக்கிறது. முதல் வார்த்தையில் கூறப்படும் 'ஸமபுத்தி' எல்லா வார்த்தைகளையும் ஒருசேரக் கோத்துக் கட்டும் பொற் சரடு போல் ஓடிக்கொண்டிருக்கிறது. இது முப்பத்தொன்பதாம் வார்த்தையில் வெளிப்படையாகப் புலப்படுவதையும், இறுதிப் பகுதியில் சிகரம்போல் புலனாவதையும் காண்கிறோம்.

# 27

# வாழ்க்கையும் குதூகலமும்

இராமாநுஜர் பரம பதத்துக்கு எழுந்தருளும்போது எம்பார் இவர் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு, 'கடுங்காட்டிலே இருந்த என்னை "வாரும்" என்று அழைத்துப் புத்தியில் புகுந்து உம்மிடம் அன்பு பெருகும்படி திருத்திப் பணி கொண்டீரே; பொருளல்லாத என்னைப் பொருளாக்கி வைத்தீரே! "தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்" அடியேனை அணைத்துக் காத்து வந்தீரே! தேவரீரின் நிழல் என்று சொல்லும்படி அடியேன் வாழ முயன்றேன். "அடியேன் தேகம், தேவரீர் தேகி" என்ற அனுபவமும் வாய்க்கச் செய்தீர் அடியேனுக்கு. இனி எவ்வாறு தரித்திருப்பேன்? தேகம் இன்றி நிழல் உண்டோ? தேஹி

இல்லாமல் தேகம் நிற்குமோ ?'' என்றெல்லாம் சொல்லிப் பிரலாபிக்கத் தொடங்கிவிட்டார்.

இராமாநுஜர் மறுமொழி சொல்லாமலே கேட்டுக்கொண்டிருந்தார். எம்பார் பளிச்சென்று எழுந்தார்; இவர் திருவடிகளில் விழுந்து எழுந்திராமலே கிடந்தார். இராமாநுஜர், 'எழுந்து உட்காரும், அருகில் வாரும்' என்று சொல்லிக் குளிர நோக்கினுர். 'உம்மைத் திருத்திய திருமலை நம்பி என்னிடம் ஒப்படைத்தபின் எனக்கும் உம்மைப் பிரிய முடியுமோ ?'' என்று எம்பாரை அணைத்துக்கொண்டார்.

இராமாநுஜர், பரமபதித்தபின் எம்பார் உளம் நைந்து கரைந்து உருகினுர்; தாயை நாடும் கன்றேபோல் தவித்தார். பெரிய பெருமாள் சந்நிதிக்குப் போய், 'உடையவரைப் பிரிந்து உயிர் தரிப்பேனு?'' என்று புலம்பினுர். தம்முடைய உள்ளத்திற்கு இணங்கப் பெருமாள் வரம் கொடுத்துவிட்டதாக மகிழ்வெய்தி இராமாநுஜ மடத்திற்குத் திரும்பினுர்.

அங்கே பட்டரை அழைத்து வரச் செய்தார். 'வாரீர் பட்டரே! "நாம் கூரேசன் குமாரர், சாஸ்திரங்களையெல்லாம் கரை கண்டிருக்கிறேம். மேலும், நம்பெருமாள் குமாரர்! இறைவனே புத்திர சுவீகாரம் செய்து கொண்டதாக, நாட்டார் பாராட்டுகிருர்கள்''-இப்படியெல்லாம் இறுமாந்திருக்க வேண்டாம். நம் ஆணை : எம்பெருமானுர் திருவடிகளே சரணம் என்று அவர் கொள்கைகளைப் பரவச் செய்வீர்' என்று சொன்னுர்.

அங்கிருந்த பாகவதர்களையெல்லாம் பட்டர் கையிலே ஒப்படைத்தார். அப்பால் இராமாநுஜரின் திருவடிகளைத் தியானித்துக்கொண்டு தேகவியோகமானுர். எம்பாரின் திருவுள்ளத்திற்கு இணங்க இராமாநுஜரைப் பின்பற்றி இவர் கொள்கைகளைப் பட்டர் பிரசாரம் செய்த வண்ணமாயிருந்தார்.

சீடர்களுக்கெல்லாம் இராமாநுஜரது உபதேசங்களும் வாழ்க்கையும் குணதிசயமும் வழிகாட்டிய வண்ணமாக இருந்தன. எம்பாரும் ஆந்திர பூர்ணர் என்ற வடுக நம்பியும் அருளாளப் பெருமாள் எம்பெருமானுர் முதலான சீடர்களும் இராமாநுஜர் வைபவத்தை மன மெய் மொழிகளில் போற்றிப் பாராட்டித் தம் வாழ்க்கையை உருவாக்கிக்கொண்டனர். எம்பெருமானுர் திருவடிகள் தவிர உய்ய வேறு தஞ்சம்இல்லை என்ற கொள்கை, வடுக நம்பியின் வாழ்க்கையையும் ஒழுக்கத்தையும் உருவாக்கியதுபோல், வேறு சீடர்களின் வாழ்க்கையையும்

செயல்களையும் செம்மைப்படுத்தி, ஒரு பெரிய தீவர்த்தியில் கொளுத்திய பல தீபங்களைத் திகழச் செய்தன.

ஒருசமயம் மிளகாழ்வான் என்பவர் முதலியாண்டானை, 'என்னோடு தர்க்கிக்க வாரும்' என்று அழைத்தார். அதற்கு முதலியாண்டான், 'நீர் தோற்றீராகில் செய்வதென்ன?' என்று கேட்டார். 'நான் தோற்றுப்போனால் என் தோளிலே உம்மைச் சுமந்துகொண்டு போவேன்' என்று உடனே பதில் வந்தது.

இருவரும் வாதப் போராடினர். மிளகாழ்வான் தோல்வியுற்றார். தாம் ஒப்புக்கொண்டிருந்தபடி இவர் அவரைத் தோளில் தூக்கிக்கொண்டு குறிப்பிட்ட இடம் போய், 'இரங்கியருளவேணும்' என்று விண்ணப்பம் செய்தார். இறக்கிவிடும் உத்தேசத்துடன் விண்ணப்பித்துக்கொள்ளவில்லை; தம் வாதம் சரியானதன்று, எனவே தம்மை வழிப்படுத்தி இரக்கம்கொண்டு ஆட்கொள்ளவேண்டும் என்பதுதான் இவர் பிரார்த்தனை. அப்போது முதலியாண்டான் சொன்னது என்ன? 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்று இரும்' என்பதுதான் அவர் பதில்.

பட்டர் தம் சீடரான நஞ்சீயரைப் பார்த்து, 'என்னைக் குருவாகக் கொண்டிருப்பது குறித்துத் திருப்தி அடைந்திருக்க வேண்டாம். எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்று இரும்' என்று உபதேசித்தார். இதனால் இராமாநுஜரின் சீடர்களைப்போல் சீடர்களின் சீடர்களும் இராமாநுஜரையே வழித்துணையாகக்கொண்டு 'வழிவழி வைஷ்ணவம்' என்ற முறையில் பாகவத சம்பிரதாயத்தை வளர்க்க முயன்றனர் என்று ஊகிக்கலாம்.

நஞ்சீயர் தம் சீடரான நம்பிள்ளையை நோக்கி, 'நீர் லோகாசாரியர் என்று பெயர் பெற்றிருக்கிறீர்; திருவாய்மொழிக்குப் பொருள் கூறுவதில் நிகரற்றவராயிருக்கிறீர். எனினும் இந்தப் பேரும் புகழும் போதுமா? எம்பெருமானார் திருவடிகளே வழித்துணை; என்னைப்போல் உமக்கும்தான்' என்று உபதேசித்தார்.

நம்பிள்ளையும் தம் சீடர்களுக்கு இராமாநுஜரின் திருவடிகளையே வழித்துணையாகக் காட்டினார். இவர் சீடர்களில் சிவக்கரைப் பிள்ளை என்பவரும் ஒருவர். நம்பிள்ளை ஒரு சமயம் இவர் கையைப் பிடித்துக் கொண்டு தம் இல்லத்திற்குள்ளிருந்து வெளியே வந்தார். அப்போது இடைகழியில் ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் படுத்திருந்தார். உடனே சிவக்கரைப் பிள்ளை, 'லோகாசாரியரான நம்பிள்ளைக்கு அவர் மரியாதை காட்டவேண்டாமா?' என்ற எண்ணத்துடன் 'காலை மடக்கும்' என்றார். அந்த

வார்த்தை ஸ்ரீவைஷ்ணவப் பண்பாட்டுக்கு இழுக்கானது என்று கருதிய நம்பிள்ளை பளிச்சென்று கையை விட்டு விட்டார்.

சிவக்கரைப்பிள்ளை, 'நம்பிள்ளையின் அருளுக்குப் புறம்பாகி விட்டோமே!' என்ற சோகத்துடன் தம் ஊராகிய சிவக்கரையில் போயிருந்தார் கொஞ்ச காலம். குருநாதரைப் பிரிந்து உயிர்தரித்திருக்க முடியாது என்று கருதியவராய், நம்பிள்ளைக்கு ஒரு செய்தி அனுப்பினார். 'இரண்டாற்றுக்கு நடுவேயிருந்து கவணில் கல்லை வைத்து வீசினாற்போல் தள்ளி விட்டீர்களே! இனி "இச்கல்"லுக்குக் கதி என்ன?' என்பது தான் அந்தப் பச்சாத்தாபச் செய்தி. உடனே நம்பிள்ளை சிவக்கரைப் பிள்ளையை அழைத்து வரச்செய்து, 'உமக்கு ஒரு குறையும் இல்லை; எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்ற நம்பிக்கையுடன் நடந்து கொள்ளும்' என்று ஆறுதல் கூறினார்.

திருக்குருகைப்பிரான் பிள்ளானிடம் சோமயாஜி ஆண்டான் மூன்று தடவை ஸ்ரீ பாஷ்ய காலட்சேபம் செய்துகொண்டார், சிறுப்புத்தூர் என்ற இடத்திலே. பிள்ளான் திருவரங்கத்திற்குத் திரும்பும்போது சீடர் தமக்குத் தஞ்சமாயிருப்பதொரு வார்த்தை அருளவேண்டும் என்று வேண்டிக்கொண்டார். அப்போது 'நீர் பல சாஸ்திரங்களிலும் வல்லவர்; ஸ்ரீபாஷ்யத்திலும் பயிற்சி பெற்றிருக்கிறீர்; ஆனால் இந்த அறிவுத் திறனைக் காட்டிலும் எம்பெருமானார் திருவடிகளையே நம்பி வாழும்' என்றார் குரு.

நடாதூர் அம்மாளிடம் பத்துப்பன்னிரண்டு சீடர்கள் ஸ்ரீ பாஷ்ய உபந்யாஸ பாடங்கள் கேட்டார்கள். அப்போது அவர்கள், 'சுவாமி, பக்தியும் கஷ்டமான வழி போலிருக்கிறதே!' என்று சொன்னார்கள். 'அப்படியானால் பிரபத்தி பண்ணுங்கள்' என்று அம்மாள் சொல்லி, பக்தி அன்புவழி என்பதையும் பிரபத்தி விசுவாச வழி என்பதையும் தெளிவு படுத்திக் காட்டினார்.

அந்தச் சீடர்களில் சிலர், 'பக்தியைக் காட்டிலும் பிரபத்தி அரிதாயிருக்கிறது' என்றார்களாம். 'அப்படியானால் இராமானுஜர் திருவடிகளே தஞ்சம் என்ற நம்பிக்கையுடன் பிழைக்கும் வழி காணுங்கள்' என்று முடிவாகச் சொன்னார் நடாதூர் அம்மாள்.

'ஸ்ரீ பாஷ்யம் சிரமமாயிருந்தது' என்று சொன்ன சீடர்களை நோக்கித் திருநாராயணபுரத்திலே நடுவில்ஆழ்வானும், 'ஸ்ரீ பாஷ்யம் இயற்றிய எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்று நம்புங்கள்; வழி தெளிவாய்ப் புலப்படும்' என்று சொன்னாராம்.

இப்படியெல்லாம் இராமாநுஜ வைபவத்தைச் சீட பரம்பரையினர் நினைவூட்டி, இராமாநுஜர் மீதுள்ள நம்பிக்கையைத் தங்களுக்கும் பிறருக்கும் நிகரற்றதொரு காப்பாகக் கண்டு காட்டி வந்திருக்கிறார்கள்.

'இப்படி இவர் பிரபாவத்தை எல்லாரும் பிரகாசிப்பித்தார்கள்' என்கிறது ஆறாயிரப்படி குருபரம்பரை. 'எல்லாரும்' என்ற சொல்லில் சீட பரம்பரையை மட்டும் குறிப்பிடவில்லை. ராமாநுஜரின் குருமார்களான திருவரங்கப் பெருமாளரையர், திருமாலையாண்டான், திருமலைநம்பி, திருக்கோஷ்டியூர்நம்பி, பெரியநம்பி, திருக்கச்சிநம்பி ஆகியவர்களும் இராமாநுஜரின் மேன்மையையே எடுத்துக்காட்டினார்கள் என்பது குருபரம்பரை வரலாறுகள் எல்லாம் கருத்தொருமித்துக் காட்டும் உண்மையாகும்.

ஆளவந்தாரை இராமாநுஜர் சிறப்பாகத் தம் குருநாதர் என்று கூறிவந்தாரல்லவா? — துரோணருக்கு ஏகலைவன்போல் என்று நம்பியிருந்தாரல்லவா? இத்தகைய பெருமை வாய்ந்த ஆளவந்தார் காஞ்சிக்கு வந்து இராமாநுஜரைச் சற்றுத் தூரத்திலிருந்து கண்ணுற்றதுமே, 'இம்மகாநுபாவன் இத்தரிசனத்திலே புகுந்தானாகிலோ!' என்று அதிசயித்தாராம். 'இப்படி உரக்கச் சிந்திப்பது போல் சொல்லிக் கொண்டார்' என்று பொருள்படக் கூறுகிறார் பின்பழகிய பெருமாள்சீயர். ஆசாரிய முதல்வரான நாதமுனிகளும் ஒரு தீர்க்க தரிசனம்போல் இராமாநுஜர் தோன்றித் திகழப்போவதை உணர்ந்திருந்தார் என்று கூறுவதும் உண்டு.

இத்தகைய தனிப்பெருஞ் சிறப்புக்கு இராமாநுஜரின் வாழ்க்கையும் குணாதிசயமும், இவற்றிலிருந்து செழித்து விளைந்திருக்கும் நூல்களும் உபதேசங்களும் காரணமாகும்.

இந்தத் தனிப்பெருஞ் சிறப்பு, வித்துக்குள் மரம்போல், யாதவப்பிரகாசரிடம் இவர் வேதாந்தக்கல்வி பயிலும்போதே காணப்பட்டது. அதனால்தான் 'தஸ்யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ' என்ற உபநிடதத்திற்கு யாதவர் தவறான பொருள் கூறி அன்புருவாகிய அழகனைப் பழித்துவிட்டாரே என்று இவர் இதயம் கதறியது; கண்ணீரை நெருப்பாகக் கக்கியது. இதே அன்புநெறி தம்மை வஞ்சித்துக் கொல்ல முயன்ற யாதவரையும் முடிவில் நெறிப்படுத்தி ஆட்கொண்டது.

ஆளவந்தார் இராமாநுஜரை யாதவப் பிரகாசருடன் பார்த்தபோது, உடனே அழைத்துக்கொள்ள விரும்பவில்லை. 'இளையாழ்வாரைக் கண்டு நாம் வார்த்தை சொன்னால் பூர்வ

பட்சம் வாசிக்கிறதற்கு விரோதமாம்' என்று திருவுள்ளம் பற்றினர் என்கிறது மூவாயிரப்படி குருபரம்பரை. யாதவப் பிரகாசரிடம் அத்வைத வேதாந்தத்தைக் கசடறக் கற்றுக் கொள்ள வேண்டும், அப்போதுதானே அதைக் கண்டித்து விசிஷ்டாத்வைதத்தை நிலைநிறுத்தமுடியும் என்பது ஆளவந்தார் மனநிலை.

இராமாநுஜர் யாதவப்பிரகாசரை விட்டுவிட்டு வரதராஜப் பெருமாள் கோயிலில் திருமஞ்சன கைங்கரியம் செய்யத் தொடங்கினர் என்ற வரலாற்றின் உட்பொருளும் கூர்ந்து நோக்கத் தக்கது. தம் அன்னையிடம் இராமாநுஜர் யாதவப்பிரகாசரின் கல்வி முறையின் தவற்றைக் குறிப்பிட்டார். அவர் கருத்துகளைத் தாம் ஒப்புக்கொள்ளாததால், 'இன்று, தொடங்கி உமக்குத் தகுமிடம் தேடிப்போய் வாசியும்' என்று அவர் சொன்னதாகச் செய்தி சொன்னதும், அந்தத் தாய் தன் அருமைப் புதல்வரை நோக்கி, 'பேரருளாளனுக்குக் கைங்கரியம் பண்ணிக்கொண்டிரும்' என்று நியமித்தாள் என்றும், 'இளையாழ்வாரும் அப்படியே இருந்தார்' என்றும் மூவாயிரப்படி தெரிவிக்கிறது.

இதுவும், 'கைங்கரியம் இறைவனுக்கு ஆராதனமாவதுடன் பாகவதனுக்குத் தக்கதொரு கல்விப் பயிற்சியுமாகும்' என்ற உண்மையை உய்த்துணர வைக்கிறது.

இந்த நிலையில், இராமாநுஜரைத் தாமே மேலும் பக்குவப் படுத்தித் தரிசனத்திற்குத் தலைவராக்கிவிடலாம் என்று கருதியது ஆளவந்தார் உள்ளம். ஆனால் விதி அதற்கு இடம் கொடுக்கவில்லை. எனினும் ஆளவந்தாரின் சீடராகவே தம்மை இராமாநுஜர் பாவித்துக் கொண்ட அந்தப் பாவனையும், இவரது வாழ்க்கையையும் குணதிசயத்தையும் உருவாக்கிய சக்திகளினிடையே ஒரு பெருஞ்சக்தியாக இடம் பெற்றிருக்கிறது எனலாம்.

இராமாநுஜரது புறக் கண்களுக்கும் தோற்றமளித்து உதவிய ஆசிரியர்களில் திருக்கச்சிநம்பியும் ஒருவர் என்பதை நினைத்துப் பார்க்கும்போதும், திருக்கச்சி நம்பிகள் வரதராஜரின் அருளால் சொன்ன ஆறு வார்த்தைகளை ஒருவகை அடிப்படையாகக் கொண்டு இராமாநுஜர் தமது விசிஷ்டாத்வைத நினைவுகளை வளர்த்து வந்தார் என்பதை நோக்கும்போதும், இவரது சித்தாந்த அடிப்படை வெகு விசாலமானது என்றே கருதத் தோன்றுகிறதல்லவா?

அன்பும் துறவும் இரண்டறக் கலந்து நின்ற இவரது வாழ்க்கையில், மூன்று தவறுகளுக்காகத் 'தஞ்சமாம்பாள் தர்மபத்தினியாகாள்!' என்று அவளை விலக்கியது துறவு-மனப்பான்மை

அந்தத் தவறுகளில் ' ஒரு பாகவதரை இகழ நினைத்து இருந்த இடம் சுத்தம் பண்ணி'யது முதல் தவறு, என்று குறிப்பிடுகிறது மூவாயிரப்படி. பாகவதருக்குள் சாதி கருதுவதே இகழ்வது தான் என்பது குறிப்பு.

முப்பெருந்தவறுகளில் ஒன்ருக, ' பசித்தாருக்கு ஊண் இருக்க, இல்லை ' என்று சொன்னதைக் குறிப்பிடுகிறது மூவாயிரப் படி. பெரியநம்பி விஷயத்திலும் திருக்கச்சிநம்பி விஷயத்திலும் தவறு நேர்ந்ததைச் சகிக்காத உள்ளம், ஏழைத் தொழிலாளிக்குப் பசிபோக்காத தவற்றையும் சற்றும் பொறுத்துக் கொள்ளவில்லை.

இத்தகைய பொன்னுள்ளம் யாதவப்பிரகாசரைக் கோவிந்த ஜீயராக்கிப் பாராட்டியதுடன், எதிரிகளுக்கெல்லாம் அருள் புரிய எப்போதும் சித்தமாக இருந்தது என்று கருதுவதே பொருந்தும்.

கூரேசனும் பெரியநம்பியும் கண் இழந்ததற்குக் காரணமாக இருந்த சோழ சக்கரவர்த்தியின் மகனுக்கும் இரங்கி அருள்புரிந் தார் இராமாநுஜர் என்ற செய்தியும் நம் ஆழ்ந்த சிந்தனைக்கு உரியது. இதிலிருந்து, தம் குருவின் கண்களைப் பிடுங்கக் கட்டளையிட்ட அந்தச் சோழனும் மனம் திருந்தி வந்திருந்தால் இவர் மன்னித்து ஆட்கொண்டிருப்பதும் சாத்தியமே என்று ஊகிக்கலாம்.

இத்தகைய கருணை, இவரையும் இவர் கொள்கைகளையும் வென்று வலியழிக்கக் கங்கணம் கட்டி வந்த யக்ஞமூர்த்தி முதலான வாதியர்களைத் திருத்தி ஆட்கொண்டது. இது, சீடர் குழாத்தில் பிள்ளை உறங்காவில்லியையும் பொன்னச்சியையும் ஒரு தனிமதிப்பிற்குரிய பக்திநிலைக்கு உயர்த்தி விட்டது.'

இக்கருணை, ஊமைகள் முதலான அங்கஈனர்களுக்கும் அன்பு சுரந்தது ; அங்கஈனன் என்று குருமார்களால் ஒதுக்கப் பட்டிருந்த ஹொய்சள மன்னனுகிய விட்டல தேவராயனை விஷ்ணுவர்த்தனனுக்கி அன்பு சொரிந்தது. ஆண்டி என்றும் அரசன் என்றும் பாராது, வஞ்சித்தவர்களையும் நஞ்சிட்டுக் கொல்ல முயன்றவர்களையும் கூட ஒதுக்கிவிடாது அனைவரையும் அணைத்துக் கொண்டது இராமாநுஜரின் அருள்.

இத்தகைய அருளாளர், ' பத்மகிரியிலே சென்று பௌத்த சமயங்களை வென்று...அவர்களைக் கற்காணம் தன்னில் அரைப் பித்து...' என்று ஆருயிரப்படி குருபரம்பரை கூறுவது பொருந் துமா ? இது ஆழ்ந்த ஆலோசனைக்கும் ஆராய்ச்சிக்கும் உரியது.

இந்தக் கற்காணச் செய்தி, ஆருயிரப்படி குருபரம்பரை யைப் பெரும்பாலும் தழுவிச்செல்லும் பன்னீராயிரப்படியில்

காணப்படவில்லை. 'அவர்கள் எல்லாரையும் நிச்சேஷமாக நிரஸித்து நிஷ்கண்டகமாக்கி யருளி ஸ்ரீபாஷ்யம் வியாக்கியானித்து...' என்ற பகுதிமட்டும் காணப்படுகிறது (பக்கம் 378). ஆனால் மூவாயிரப்படியில் 'அவர்களை ஜயித்துக் கல்செக்கிலே காணமாடுவித்தார். அவர்களில் சிலர் ஆச்ரயிக்க அவர்களையும் திருத்தி அருளினார்' என்ற செய்தி காணப்படுகிறது.

அந்த ராஜாவின் குருக்கள் பன்னீராயிரவர் 'வந்து ஏக காலத்தில் வாதம் பண்ண, உடையவரும் ஒரு மண்டபத்தில் திரையை வளைத்துக்கொண்டு ஸஹஸ்ரபண மண்டலம் உடைய (ஆயிரம் படங்களை உடைய) திருவனந்தாழ்வானைப் போலே பிரதியுத்தரம் அருளிச் செய்து...' என்று கற்பனையாக வருணிக்கப்படுவதன் பகுதியாகக் கற்காணச் செய்தி வருவதால், இதையும் ஆராய்ச்சியாளர் கற்பனையாகவே கருதுவர்.

ஆறாயிரப்படி, பௌத்த சமயிகளைக் குறித்தே கற்காணச் செய்தி கூறுகிறது. மூவாயிரப்படியோ இச் செய்தியை ஜைனர்களுடன் தொடர்பு படுத்தியிருக்கிறது. ஆறாயிரப்படியில் 'வென்று...கற்காணம் தன்னில் அரைப்பித்து' என்று வருவதற்கு, தர்க்கவாதமாகிய கற்காணத்தில் அவர்களுடைய கொள்கைகளை அரைத்துத் தள்ளிவிட்டார் என்று சிலர் பொருள் கூறுவதையும் கேட்டிருக்கிறேன். 'விசுவாமித்திர சிருஷ்டிதான், இதற்குப் பழைய ஏடுகளில் ஆதாரமில்லை' என்று கருதுவோரும் உண்டு.

ஆட்கொண்ட வில்லி கோவிந்தாசாரியர் தாம் ஆங்கிலத்தில் வெளியிட்டிருக்கும் 'இராமாநுஜாசாரியரின் வாழ்க்கை' என்ற நூலில், ஜைனவாதியர்களை ஆயிரம் பணமுடியுடன் கூடிய ஆதிசேஷன் வடிவில் முற்றும் வென்றார் என்றும், அவர்களில் பெரும்பாலார் இராமாநுஜரின் சீடர்களாகிவிட்டனர் என்றும் கூறியுள்ளார்.

உயர்திரு ஸி. ஆர். ஸ்ரீநிவாசையங்கார் 'ஸ்ரீராமாநுஜாசார்யா: வாழ்க்கையும் உபதேசங்களும்' என்ற தம் ஆங்கில நூலிலும் வாதத்தில் தோல்வியுற்ற ஜைனர்களில் பலரும் ஸ்ரீவைஷ்ணவர்களாகி விட்டதாகக் கூறுகிறார். அடிக்குறிப்பு ஒன்றில், 'அரசன் அவர்களைக் கற்காணத்தில் அரைப்பிக்கச் சித்தமாயிருந்தான்' என்றும், இராமாநுஜர் தம் எல்லையற்ற கருணையால் அவர்களைக் காப்பாற்றி விட்டார் என்றும் இதே ஆசிரியர் தெரிவிக்கிறார். பலர் வைஷ்ணவர்கள் ஆனதாகவும் சிலர் மட்டும் நாட்டை விட்டு ஓடிப்போய் விட்டதாகவும் இக் குறிப்பிலிருந்து தெரிந்து கொள்கிறோம்.

இராமாநுஜர் ஜைனர்களை ஸ்ரீவைஷ்ணவர்களாக்கிக் கொண்டார் என்ற அளவிற்குத்தான் இது குறித்த ஐதிகங்களை நாம் நம்ப முடியும். 'விட்டலராயன்' என்றும் 'பிட்டிதேவன்' என்றும் 'பெட்டவர்த்தனன்' என்றும், பலவிதமாகக் குறிக்கப்படும் விஷ்ணுவர்த்தனன் வைஷ்ணவனானபின் ஜைன சமயத்தினருக்கு வழங்கியிருந்த நில உரிமைகளைப் பறிமுதல் செய்தான் என்றும், அவர்களுடைய கோயில்களை இடித்துப் பஞ்சநாராயணர்களின் கோயில்களைக் கட்டினான் என்றும், 'சரவண பெல்குலா' ஸ்தல புராணம் கூறுகிறது. இடிக்கப்பட்ட சமணர் ஆலயங்களின் கற்களைக் கொண்டு திருமலை ஸாகரம் என்ற தொண்டனூர் ஏரியை அமைத்தான் என்றும் சொல்லுகிறது. ஆனால் 'கற்காணத்தில் அரைப்பித்த' செய்தியை ஜைனர்களும் குறிப்பிடவில்லை என்பது கவனிக்கத் தக்கது.

திருமலை ஸாகரத்தை 'மோதி தலாப்' (முத்துக்குளம்) என்றும் கூறுவதுண்டு. தொண்டனூரின் பெரிய குளம் இது. இரண்டு குன்றுகளுக்கிடையே காணப்பட்ட இடைவெளியில் கரைகட்டி யாதவ நதியின் தண்ணீரையும் வேறு மலைவீழ் அருவிகளின் நீரையும் தேக்கி வைத்திருப்பதுதான் இந்தத் தடாகம். இதை இராமாநுஜரே நிர்மாணித்தார் என்று, 1897-ல் வெளிவந்த (**ரைஸ்** என்ற ஆங்கிலேயரால் தொகுக்கப்பெற்ற) மைசூர் கெஜட்டீர் தெரிவிக்கிறது. இத் தடாகத்தை இராமாநுஜரின் மேதைக்கும் கருணைக்கும் கூட ஒரு நினைவுக் குறியாகக் கொள்ளலாம்.

பொதுவாக யாத்திரைகளில் கிடைத்த அனுபவங்களும், சிறப்பாக மைசூர்ப் பிரதேசத்தில் வாய்த்த அனுகூலங்களும் அனுபவங்களும் இராமாநுஜரது இதய விசாலத்தை மேலும் விசாலமாக்கியிருக்க வேண்டும். பண்டிதர்களோடு பாமரர்களையும்—ஏன், பண்டிதர்களைக் காட்டிலும் பாமரர்களை—இவர் அருளிப்பார்த்த அன்புப்பார்வை, காஷ்மீரம் வரை செய்த யாத்திரைகளாலும், முஸ்லிம்கள் உள்ளிட்ட பல்வேறு மக்களுடன் பழக நேர்ந்ததாலும், கூர்மையும் நேர்மையும் சிறப்பாகப் பெற்றிருந்தது எனலாம்.

இந்தக் கருணையை இமாலயக் கருணையென்றே குறிப்பிடலாம். இதன் ஒரு சிகரம் தான், மகாத்மா காந்தி ஹரிஜனப் பெயர் சூட்டி நம் மக்களை முன்னேற்றமடையச் செய்வதற்கு முன்பே, திருக்குலத்தார் என்ற அழகிய தமிழ்ப்பெயரைச் சூட்டி ஆதரவு காட்டி வாழ்விக்க முயன்ற அரும்பெருஞ் செயலாகும்.

ஹரிஜன வகுப்பினர் இவரது மைசூர் யாத்திரையிலும் திருநாராயணபுரத்திலிருந்து டில்லி நோக்கிச் சென்று திரும்பிய யாத்திரையிலும் இன்றியமையாத பணிகள் புரிந்தனர் என்றும், யாதவகிரியில் கோயில் கட்டும்போது தொலைதூரங்களிலிருந்து பொருள்களைக் கொண்டு சேர்த்துப் பேருதவி புரிந்தனர் என்றும் தெரியவருகிறது. அதற்கு நன்றி தெரிவிக்கும் முறையில் இராமாநுஜர் சில கோயில்களில் இம்மக்களைக் கொடிமரம் அல்லது பலிபீடம் வரை வருவதற்கு அனுமதி கொடுத்தார் என்பது குருபரம்பரைச் செய்தி.

ஆனால் இந்தச் சீர்திருத்தத்திற்கு அந்த நாளில் எவ்வளவு எதிர்ப்பு இருந்திருக்கக்கூடும்! ஆலயப் பிரவேசச் சட்டம் வருவதற்கு முன்பே இராமாநுஜரின் சீர்திருத்தத் திட்டம், மைசூர்ச் சீமையில் **ஹஸ்ஸான்** மாவட்டத்தைச் சார்ந்த ஸ்ரீரங்க பட்டினம், மேல்கோட்டை, பேலூர் ஆகிய இடங்களில் குறிப்பிட்ட தினங்களில் திருக்குலத்தாருக்கு ஆலயப்பிரவேசம் அளித்திருந்தது என்பதை நாம் நினைத்துப் பார்க்கவேண்டும். இதை அக்காலத்து மக்கள் புரட்சிகரமான சீர்திருத்தம் என்றே கருதியிருப்பார்கள் என்பதையும் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

இப்படிப் பார்க்கும்போது, அவர்கள் செய்த உபகாரத்திற்கு நன்றி தெரிவிக்கும் முறையில்தான் இராமாநுஜர் இத்திட்டத்தை நிறைவேற்றி வைத்தார் என்று கருதுவது முழு உண்மையும் அன்று என்றே தோன்றுகிறது. அன்பும் கருணையும் அலையெறிந்து கொண்டிருந்த எல்லையில்லாத கடலை ஒத்த ஓர் இதயம், ஹரிஜனர் உள்ளிட்ட எல்லா வகுப்பினரையும் ஒருசேரத் தழுவிக் கொள்ள முயன்ற ஒரு பெருமுயற்சிக்கு அறிகுறியாக இந்தச் சீர்திருத்தத் திட்டத்தை மதிப்பிடுவதே பொருத்தமாகும்.

திருக்குலத்தார் என்று ஹரிஜன வகுப்பினரில் பாகவத சம்பிரதாயத்தைத் தழுவிக்கொண்டவர்களை இராமாநுஜர் குறிப்பிடவில்லை. பாகவதர்களுக்குப் பொதுக்குலம் தொண்டக்குலம் தான்; மற்றப்படி குலத்தையோ சாதியையோ நினைவூட்டிக் கொள்வது தவறு தானே. எனவே, ஹரிஜன மக்கள் என்று காந்தியடிகள் குறித்தவர்களையெல்லாம் இராமாநுஜர் திருக்குலத்தார் என்று குறிப்பிட்டார் என்பது தான் உண்மை.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குரிய பஞ்ச ஸம்ஸ்காரம் முதலியவற்றைத் திருக்குலத்தினரும் பெற்றுக் கொள்ள உரிமை வாய்ந்தவர்கள் என்ற இராமாநுஜர் கொள்கையை நினைவில் கொள்ளவேண்டும். (ஆட்கொண்ட வில்லி

கோவிந்தாசாரியர் எழுதிய 'இராமாநுஜாசாரியரின் வாழ்க்கை வரலாறு': பக்கம் 191)

எப்படிப் பார்த்தாலும், திருக்குலத்தாரின் முன்னேற்றத்திற்கு இராமாநுஜரின் அன்புமதம் இடம் கொடுத்தது என்பதை மறுக்க முடியாது. சாதி கருதாது ஆழ்வார்களையெல்லாம் கோயிலில் வைத்து வழிபடவேண்டும் என்ற கொள்கை நாதமுனிகள் முதலான ஆசாரிய பரம்பரையில் இவருக்குக் கிடைத்த குலதனம். இக் கொள்கையை உறுதிப்படுத்தியவர் தொண்டக் குலத்தை மேலும் மேலும் மேலும் வளர்த்துவிட அரும்பாடுபட்டு வந்தார் என்பதற்குப் பல ஆதாரங்கள் உண்டு.

இத்தகைய வாழ்க்கைக்கும் குணாதிசயத்திற்கும் உரியதோர் உயிர்நிலை-ஐதிகம் திருமந்திரத்தின் இரகசியப் பொருளைப் பலருடனும் இவர் பகிர்ந்துகொண்டார் என்பது. இச் செய்தியைக் கூறும் ஆறாயிரப்படி குரு பரம்பரை, திருக்கோஷ்டியூரில் 'தெற்காழ்வார் திருவோலக்கத்திலே, அநேகம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அப் பரம ரகஸ்யார்த்தத்தை அருளிச் செய்தார்' என்று தெரிவிக்கிறது. 'அந்த ரகஸ்யார்த்தத்தை எல்லாருக்கும் ப்ரஸாதித்தருளினார்' என்கிறது மூவாயிரப்படி குரு பரம்பரை.

ஆட்கொண்ட வில்லி கோவிந்தாசாரியரின் ஆங்கில நூலில் இச் செய்தி விவரமாய்த் தெரிவிக்கப்படுகிறது. 'இத்தகைய உண்மைகள் மக்கள் அனைவருக்கும் தெரியாமல் ஏன் பாதுகாக்கப்படவேண்டும்? பகவான் பாவிகளுக்குத் தானே தேவைப்படுகிறான்? நான் இதை இரகசியமாக வைத்துக்கொள்ளப் போவதில்லை. விளைவுகள் எப்படி ஏற்பட்டாலும் நான் இதை அனைவருக்கும் வெளியிடுவேன்' என்றெல்லாம் இராமாநுஜர் சிந்தித்துப் பார்த்தாராம். எல்லா மக்கள்மீதும் உள்ள கருணை இவர் உள்ளத்தைத் தவிக்கச் செய்தது என்றும், ஆகவே இதை வெளியிட்டார் என்றும் ஆட்கொண்ட வில்லி கோவிந்தாசாரியர் கூறுகிறார்.

தெற்காழ்வான் என்ற நரசிம்மப் பெருமாளின் சந்நிதியில் கூடியிருக்கும்படி இவர் எல்லாரையும் அழைத்துக் கோபுரத்திலிருந்து இந்த இரகசியங்களை வெளியிட்டாராம். கரை புரண்ட கோபத்துடன் குரு தம் சீடரை ஒரு பெருங் குற்றவாளியாகவே முதலில் கருதினார் என்றும், கடைசியாகக் குரு தமக்கு அத்தகைய இதய விசாலம் இல்லை என்பதை ஒப்புக்கொண்டு இராமாநுஜரின் தனிப் பெரு நோக்கை மிகவும் உகந்து

பாராட்டினர் என்றும் கூறி, ஆட்கொண்ட வில்லி கோவிந்தாசாரியர் இவ்வரலாற்றுப் பகுதியை முடிக்கிருர்.

ஆட்கொண்ட வில்லி கோவிந்தாசாரியர் 74 சிம்மாசனுதிபதிகளில் ஒருவராகத் திகழ்ந்த ஆசாரிய புருஷர். பழம் பெரும் புலமையுடன் தற்காலப் புலமைத் திறனும் பேரளவில் வாய்க்கப் பெற்றவர். இவர் கூற்றைத் துணையாகக்கொண்டு, அனேகம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அப் பரம ரகசிய அர்த்தத்தை இராமானுஜர் வெளியிட்டதாக வரும் ஆருயிரப்படி குரு பரம்பரை வாக்கின் பொருளை நாம் உள்ளபடியே தெரிந்துகொள்ளவேண்டும்.

வடிவழகிய நம்பிதாசரின் செய்யுள் வடிவமான தமிழ்க் குரு பரம்பரையும், **பாகவதப் பெருந்திரளுக்குத்** திருமந்திரத்தையும் அதன் பொருளையும் வழங்கியதாகத் தெரிவிக்கிறது. ' அநேகம் ஸ்ரீ வைஷ்ணவர்கள் ' என்று ஆருயிரப்படியில் வருவதைத்தான் வடிவழகிய நம்பிதாசரின் பாகவதப் பெருந்திரளும் நமக்கு நினைவூட்டுகிறது.

விஷ்ணு சம்பந்தம் உள்ளவர்களெல்லாம் வைஷ்ணவர்கள், பகவானுடைய சந்நிதியில் வழிபடுகிறவர்கள் எல்லாம் பாகவதர்கள் என்ற பரந்த பொருளிலேயே, 'அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்கள்', 'பாகவதப் பெருந்திரள்' என்ற சொற்றொடர்கள் வழங்கப் பெற்றிருக்க வேண்டும் என்று ஊகிப்பதே பொருத்தமாகும். இப்பரந்த பொருளில்தான் மூவாயிரப்படியில் பிரமதந்திர ஸ்வதந்திர சுவாமி, 'தெற்காழ்வான் திருவோலக்கத்தில் அந்த இரகசியார்த்தத்தை எல்லாருக்கும் பிரசாதித்தருள......' என்று சொல்லுகிருர். (மூவாயிரப்படி குருபரம்பராப்பிரபாவம், புதிய திருத்தமான பதிப்பு, பக்கம் 67.)

இந்த வரலாற்றை, முன்ஞேர்பால் காணப்படாத இராமானுஜரின் பேருளுக்குச் சான்ருகக் குறிப்பிடுகிருர் மணவாள மாமுனிகளும் :

**ஓராண் வழியாய் உபதேசித்தார் முன்ஞேர் ;**
**ஏரார் எதிராசர் இன்னருளால்—பாருலகில்**
**ஆசையுடை யோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறும் என்று**
**பேசி வரம்புஅறுத்தார் பின்.**

நாதமுனிகள் முதலான பூர்வாசாரியர்கள் பிரபந்த வியாக்கியானங்களை ஓராண் வழி அடைவாகவே உபதேசித்து வந்திருக்க, அந்த வரம்பு இருந்தால் ஸ்ரீவைஷ்ணவம் உலகில் ஓங்கிப் பரவுவது அரிது என்று கருதிய இராமானுஜர் ஆசை உடையவர்களுக்கெல்லாம் பகவத் விஷய ஞானத்தை

உபதேசிக்கலாம் என்று உறுதி கொண்டார் என்பதையும், அதற்காகத் தாமே திருக்கோஷ்டியூர்க் கோபுரத்திலிருந்து பக்தர்கள் அனைவருக்கும் தாம் திருக்கோஷ்டியூர் நம்பிகளிடம் கற்றுக் கொண்ட திருமந்திரப் பொருளையும் சரமசுலோகப் பொருளையும் மூவாயிரப்படி கூறும்வண்ணம் வழங்கியருளினர் என்பதையும் மணவாள மாமுனிகளும் மேலே சொன்ன வெண் பாவில் வற்புறுத்தியுள்ளார்.

இந்த மனப்பான்மையிலிருந்து இராமாநுஜரின் குணாதிசயம் படிப்படியாக ஓங்கி வளர்வதை மூவாயிரப்படி குருபரம்பரை சுருங்கக்கூறி விளங்க வைத்திருக்கிறது. திருமாலையாண்டானிடம் திருவாய்மொழிக்குப் பொருள் கேட்டவர், ஆண்டான் கூறிய பொருளுடன் திருப்தியடையாது ஆளவந்தார் கூறியிருக்கத்தக்க சிறப்புப் பொருள்களையும் உய்த்துணர்ந்து வெளியிடலானர் என்ற வரலாறும், இராமாநுஜரின் மேதையோடு பெருங்கருணைக்கும் சான்ருகக் கருதத்தக்கது.

அன்பாலும் கருணையாலும் அகப்புரட்சியை மக்களிடையே விளைத்து ஸ்ரீவைஷ்ணவத்தை இவர் பரப்ப முயன்ற முயற்சிகளுக்கு இடையூறுகளும் துணை செய்தன. நஞ்சிட்டுக் கொல்ல முயன்ற ஒருவனது துஷ்டபுத்தி, எவ்வளவு பரபரப்பை உண்டாக்கிச் சீடர் உள்ளங்களிலெல்லாம் ஒரு புதிய விழிப்பைத் தோற்றுவித்தது! வலிய வாதுக்கு வந்த பண்டிதர் அருளாளப் பெருமாள் எம்பெருமானர் என்ற பரம பாகவதசிகாமணியாக மாறிப் பிறந்ததற்கும் இராமாநுஜரின் நிகரற்ற அன்பும் கருணையுமே முக்கிய காரணமாகும்.

இராமாநுஜரின் அன்பும் கருணையுமே அனந்தாழவான் வாயிலாகவும் திருமலை நம்பி வாயிலாகவும், திருமலைமேல் பெரும்பணிகள் புரிந்து, அந்தக் கோயில் இன்றளவும் நம் பாரத பூமிக்கே ஒரு தனிச் சிறப்பாகத் திகழுமாறு செய்திருக்கின்றன. வேறு திருப்பதிகளையும் ஸ்ரீவைஷ்ணவர்களின் வளர்ப்புப் பண்ணைகளாகத் திகழச் செய்தது இவரது குணாதிசயம்.

வரம்பற்ற கருணையோடும் எல்லையற்ற அன்போடும் கூடிய சித்த சக்திதான், சோழநாட்டில் இடையூறு விளைந்தது கண்டு, மைசூர்ப் பிரதேசத்தையும், ஸ்ரீவைஷ்ணவத்திற்கு ஒரு வளர்ப்புப் பண்ணையாகச் செய்துவிட்டது. டில்லியை நோக்கிச் சென்ற யாத்திரையும் காஷ்மீர யாத்திரையும், வடநாட்டில் வைஷ்ணவ சமய விதைகளைப் பரவலாக விதைத்துப் பின்னாளில் கபீர்தாசர், ஸ்ரீசைதன்யர் முதலான மகாத்மாக்கள் தோன்றுவதற்குக் காரணமாயின.

சுருங்கச் சொன்னால், தாழ்ந்தார் பொருட்டும் 'ஐயோ!' என்று முகங்காட்டி அன்புப் பணிகள் புரிந்த இராமாநுஜரின் சித்தசக்திதான், நன்னெஞ்சுதான், மகா விசுவாசம்தான், 'அற்புதம் அற்புதம்' என்று பிரமிக்கத்தக்க செயற்கருஞ் செயல்களைச் செய்து முடித்து, சித்தாந்தப் பெருங்கோயிலை ஆழ்ந்தகன்றதோர் அடிப்படையில் நிலைநிறுத்த உதவியிருக்க வேண்டும்.

இந்த வாழ்க்கையில் ஏற்பட்ட இடையூறுகள், இன்னல்கள், சோகங்கள், கடுமையான சோதனைகள் எல்லாம் இவரது அன்புச் சாதனைகளுக்குமுன் பணிந்து போயின. இவ்வாழ்க்கைக்குத் தோல்வி ஏது?—எங்கும் வெற்றி, எல்லாம் வெற்றி, என்றும் வெற்றிதானே! எத்தகைய தோல்வியையும் வெற்றியாக்கி நரகத்தையும் நற்கதியாக்கிக் கொள்ளும் அற்புதசக்தி வாய்க்கப் பெற்றது இராமாநுஜரின் கருணை தோய்ந்த மேதை.

இவரது கருணையுள்ளம்தான், வடநாட்டில் அக் காலத்து முஸ்லிம் அரசனிடத்திலும் சென்று செல்வப்பிள்ளை என்ற சம்பத்குமார விக்கிரகத்தைப் பெற்று வருவதற்குரிய அற்புத சாகசத்தையும் அளித்திருக்க வேண்டும். செல்வப் பிள்ளை 'துருஷ்க ராஜக்கிரகத்தில்' இருப்பதாகத் தெரிய வந்ததும், இராமாநுஜர் திடுக்கிடவில்லை, திகைத்துப் பின்வாங்கிப் போகவுமில்லை. உளமகிழ்ந்து சில முதலிகளுடனே (ஸ்ரீவைஷ்ணவர்களுடனே) புறப்பட்டார் என்கிறது குருபரம்பரைச் செய்தி.

'அந்தத் துருஷ்க ராஜாவும் உடையவரைக் கண்டு தேஜோ விசேஷத்தாலே (ஒளிச்சிறப்பாகிய பொலிவினால்)' கவரப் பட்டதாக மூவாயிரப்படி குருபரம்பரை கூறுகிறது. ராஜபுத்திரியுடன் அந்தப்புரத்தில் செல்வப்பிள்ளை இருப்பதாக அறிந்தும், இவர் சிறிதும் அதைரியப்படவில்லை. செல்வப்பிள்ளையைப் பெற்றுத் திரும்பிவரும்போது அரசனின் படைவீரர்கள் துரத்தி வந்தும் இவர் அஞ்சாது, தம் உயிருக்கு இரங்காது, தம் பரிவின் விரிவினால் திருக்குலத்தாரின் உதவிபெற்றுச் செல்வப்பிள்ளையைக் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டார் யாதவகிரியிலே என்பது குருபரம்பரை ஐதிகம்.

இக்கருணை-வாழ்க்கை காஞ்சீபுரத்தில் வேரூன்றித் தளிர்த்து இலைவீசித் திருவரங்கத்தில் அரும்பி மலரக் காண்கிறோம்; மலர்ந்து, கிளை வீசுவதையும் காண்கிறோம். நாலு திசைகளிலும் நறுமணம் பரப்பிவருகையில் இக்கற்பகமும் கருகத் திருவுளமோ?-என்ற அச்சமும் ஏற்படுகிறது. ஆனால் அச்சம் இராமாநுஜருக்கு இல்லை.

அபாயங்களை இகழ்ந்து அச்சத்தைத் துச்சமாகக் கருதும் பேராண்மையோடு கூடிய அன்பும் கருணையும் மேலும் மேலும் கைங்கரிய நெறியில் தழைத்த வண்ணமாயிருந்தன ; வேறு கொழுகொம்பு தேடி ஓடின.

மைசூரில் விஷ்ணுவர்த்தனன் ஸ்ரீவைஷ்ணவம் செழித்துப் படர்வதற்கு இன்றியமையாததொரு கொழுகொம்பாக வாய்த்ததும், இராமாநுஜருக்கு இறைவனது அருள்நெறியிலுள்ள கொள்கைப் பிடிப்பு மேலும் அதிகரித்திருக்க வேண்டும். இறையருளை நம்பி வாழ்ந்தவர், தம் உள்ளத்தில் பொங்கிய அருளையும் நம்பிச் செயற்பட்ட வண்ணமாயிருந்தார்.

திருவரங்கத்திலும் திருமலையிலும் வேறு திருப்பதிகளிலும் இந்த வாழ்க்கையின் ஒளி இன்றும் குன்றாது நின்று நிலவுகிறது. படைகொண்டு திக்குவிஜயம் செய்தவர்கள் சென்ற வழிகளை இரத்தமும் நெருப்பும் அடையாளம் காட்டின என்று கூறுவதுண்டு. தெற்கிலும் வடக்கிலும் மேற்கிலுமாக இராமாநுஜர் யாத்திரை செய்துவந்த வழியெல்லாம் அன்பும் கருணையும் ஒளிவீசியதாய்க் கருதுவது மிகையாகாது.

# 28

# தென்னிந்திய வரலாற்றில் இராமாநுஜர்

இராமாநுஜரின் நீண்ட வாழ்க்கையில் சில முக்கிய நிகழ்ச்சிகளின் காலக் குறிப்பு நிச்சயமாய்க் கிடைத்திருப்பதாகப் பலரும் கருதுகிருர்கள். பதினேராவது நூற்ருண்டின் முற்பகுதியில் கி. பி. 1017ல் இராமாநுஜர் பிறந்தார், பன்னிரண்டாம் நூற்ருண்டின் முற்பாதியில் கி. பி. 1137ல் மறைந்தார் என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

யாதவப் பிரகாசரிடம் வேதாந்தக் கல்வி கற்றது இந்த நீண்ட பெருவாழ்வில் ஒரு முக்கியமான மைல்–கல்லாகும். திருப்புட்குழியில் இக்கல்வி கற்கத் தொடங்கியபோது இவருக்கு வயது பதினறு என்கிருர்கள். எனவே, கி. பி. 1033ல்

இராமாநுஜர் யாதவப்பிரகாசரின் வேதாந்தப் பள்ளியில் சேர்ந்து கொண்டார் எனலாம்.

கி. பி. 1049ல்—அதாவது 32-ம் வயதில்—இவர் துறவு பூண்டார். இதற்கு ஏழு ஆண்டுகளுக்கு முன்பே ஆளவந்தாரைத் தரிசிக்க வேண்டுமென்று முதல் தடவையாகத் திருவரங்கத்திற்குச் சென்றூர்; இது கி. பி. 1042-ல் நிகழ்ந்தது என்பர். இதற்கு முன்பே, கருத்து வேற்றுமை காரணமாக வேதாந்தப் பள்ளியில் பயிற்சி நின்று போயிற்று. யாதவப்பிரகாசருடன் காசியாத்திரை செய்ததும், அவர் இவரைக் கொல்லச் சூழ்ச்சி செய்ததும், கி. பி. 1042-ம் ஆண்டுக்கு முற்பட்டே நிகழ்ந்திருக்க வேண்டும்.

இராமாநுஜர் துறவு பூண்டபின் இவரது வாழ்க்கையின் முக்கியமான பகுதி தொடங்குகிறது. திருவரங்கத்தில் செய்து வந்த பிரசாரம் இவர் புகழைப் பாரதபூமியெங்கும் பரப்பிவிட்டது. திக்கு விஜய யாத்திரை இந்தப் புகழொளியை மேலும் வசீகரமானதொரு தெய்விக ஒளியாகப் பரிணமிக்கச் செய்துவிட்டது. சுமார் அரை நூற்றுண்டுப் பிரசாரத் திருப்பணி, பல நூற்றுண்டுகளின் வைரம் பாய்ந்த வளர்ச்சியைத் தந்துவிட்டது, ஸ்ரீவைஷ்ணவம் என்ற கற்பக தருவுக்கு.

இந்த நிலையில் கி. பி. 1096-ல்—தம் 79-ம் வயதில்—சோழ மன்னனுடைய வன்முறைச் செயலுக்கு இரையாகாது இவர் மைசூர்ச் சீமைக்குத் தப்பிச் சென்று தம் ஸ்ரீவைஷ்ணவ வளர்ப்புப் பணியைத் தொடர்ந்தார் என்பது பொதுவாக ஆராய்ச்சியாளர்களின் கருத்து. விட்டலதேவன் (பிட்டிதேவன்) என்ற அரசனை விஷ்ணுவர்த்தனன் என்ற புதுப் பெயரிட்டு ஸ்ரீவைஷ்ணவனுக்கியது கி. பி. 1098-ல் என்று சிலர் கூறுவர். ஆனால் இந்த அரசன் கி. பி. 1104 முதல் 1141 வரை ஆண்டு வந்தான் என்ற வரலாற்றுச் செய்தியிலிருந்து, கி. பி. 1104-ம் ஆண்டுக்குப் பின்பே இராமாநுஜர் இவனை வைஷ்ணவனுக்கியிருக்கவேண்டும்.

அப்பால் மேல்கோட்டையில் திருநாராயணப் பெருமாளைப் பிரதிஷ்டை செய்தார் என்றும், பல ஆண்டுகள் அந்தப் பிரதேசத்தில் ஸ்ரீவைஷ்ணவத்தை வளர்த்து வந்தபின் கி. பி. 1118-ல் திருவரங்கம் திரும்பினூர் என்றும் சொல்லுகிறூர்கள். இத்தகைய பத்து முக்கிய நிகழ்ச்சிகளுக்குக் காலக் குறிப்புகள் நிச்சயமாய்க் கிடைத்திருக்கின்றன.

இராமாநுஜர் வாழ்ந்த காலம் தமிழகத்துச் சோழப் பேரரசின் வரலாற்றிலே ஒரு முக்கியமான காலப்பகுதியெனக் கருதலாம்.

கி. பி. 6-ம் நூற்றுண்டுக்கும் 9-ம் நூற்றுண்டுக்கும் இடையில் நம் தமிழ் நாட்டில் பொங்கியெழுந்த சமயப் புத்துணர்ச்சிக்கு உரிய எதிர்கால வாழ்வை உருப்படுத்திக் கொடுத்த பகீரத முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட காலம் இது.

இக்காலத்தாலும் சூழ்நிலைகளாலும் உருவாக்கப்பட்டும், இக்காலத்துச் சமயப் புதுமலர்ச்சியை உருவாக்கியும் உள்ளன இவர் வாழ்வும் மேதையும்.

இராமாநுஜர் வளர்த்த ஸ்ரீவைஷ்ணவம் என்ற திருமால்-சமயத்தின் ஜீவ ஊற்றுக் கண்களான ஆழ்வார்கள் வாழ்ந்த காலப் பகுதியிலேயே, சிவனடியார்களும் தேவாரம் பாடியவர்களுமான அப்பர் சம்பந்தர் சுந்தரர் என்ற மூன்று பிரதான நாயன்மார்களும் வாழ்ந்து வந்தார்கள். இந்தக் காலப் பகுதி 9-ம் நூற்றுண்டுடன் முடிவு பெற்றிருக்கக்கூடும். இந்த நூற்றுண்டில் நம்மாழ்வாரும் அவருக்குப்பின் மாணிக்கவாசகரும் வாழ்ந்தனர் என்பதற்கு ஆதாரம் உண்டு.

ஏற்கெனவே ஒடுங்கிக்கிடந்த சோழ வம்சத்தை நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும் வாழ்ந்த ஒன்பதாம் நூற்றுண்டில் மலர்ச்சி பெறச் செய்தவன் விஜயாலய சோழன். இவனுடைய மகனை இராஜகேசரி ஆதித்த சோழனது ஆட்சியின் மூன்றும் ஆண்டில் 'சடகோபன்' என்ற நம்மாழ்வாரின் பேரும் புகழும் சோழ நாட்டிலும் பரவியிருந்தன.

ஆதித்த சோழனின் மகனை முதற்பராந்தகன் காலத்தில்—பத்தாம் நூற்றுண்டின் முற்பகுதியில்—நாதமுனிகள் என்ற ஆசாரியத் தலைவரால் ஸ்ரீவைஷ்ணவம் பிரசித்தியடைந்து வந்தது என்பதற்குச் சாசனச் சான்றும் கிடைக்கிறது.

பத்தாம் நூற்றுண்டுக்குப் பிற்பட்ட சோழ மன்னர்களின் காலங்களில் ஆழ்வார்களைப் பற்றியும் அருளிச் செயல்களைப் பற்றியும் அமைந்த சாசனங்கள் உண்டு. தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டி நிறுத்திய இராஜராஜனின் காலத்திலே நம்மாழ்வாருக்கும் கோயில் அமைந்திருந்தது. அந்த நாளிலேயே நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாடல்கள் பிரசித்தமாக இருந்ததுடன், திருவாய்மொழி என்ற பெயரும் நன்கு அறியப்பட்டிருந்தது. 'திருவாய்மொழித் தேவர்' என்ற பெயரையும் சாசனத்தில் காண்கிறோம். இவரது அவதாரத் தலமான ஆழ்வார் திருநகரி 'சீ குருகூர்' என்ற பெயரால் அழைக்கப்படுவதையும் காண்கிறோம்.

இராஜராஜன் மகனை முதலாம் இராஜேந்திரன் காலத்துக் கல்வெட்டுகளிலிருந்து, கோயில்களில் திருவாய்மொழி ஓதுவ

தற்கு இறையிலி (வரி நீக்கப்பட்ட நிலங்கள்) உதவிய செய்தியும் தெரிய வருகிறது. முதற்குலோத்துங்கனது ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டுச் சாசனத்திலிருந்தும், திருவாய்மொழியும் தொண்டரடிப்பொடியாழ்வாரின் திருப்பள்ளியெழுச்சியும் கோயில்களில் ஓதப்பெற்றுவந்த செய்தி அறியப்படுகிறது. முதற்குலோத்துங்கனின் 18-ம் ஆண்டுச் சாசனம், ஸ்ரீரங்கநாதனின் கோயிலில் குலசேகரப் பெருமாளின் திருமொழி ஓதப்பெற்ற செய்தியைத் தெரிவிக்கிறது. அப்படியே திருமங்கை மன்னனின் அருளிச் செயல் ஓதப்பெற்று வந்ததற்கும் சான்று கிடைக்கிறது.

இராமாநுஜர் காலத்திலும் இவருக்கு முன்பும், ஆழ்வார்களும் திவ்யப் பிரபந்தங்களும் பிரசித்தி பெற்று, ஸ்ரீவைஷ்ணவம் ஓரளவு மக்களிடையே தழைத்து வளர்ந்து வந்தது என்பதற்கு, சிவபக்தியைச் சிறப்பாக வளர்த்த சோழ மன்னர்களின் சாசனங்களிலும் சான்றுகள் காண்கிறோம்.

நாயன்மார்களின் சிவநெறியைத் தமிழ்மக்கள் போற்றி வந்ததுபோல் ஆழ்வார்களின் விஷ்ணுபக்தி நெறியையும் போற்றி வந்தனர் என்பது திண்ணம். சோழர் ஆட்சிகளில் சிவஸ்தலங்களில் தேவாரப் பதிகங்கள் ஓதப்பெற்றதுபோல் விஷ்ணு ஸ்தலங்களில் ஆழ்வார்களின் பாசுரங்கள் ஓதப்பெற்றன.

முதல் ராஜராஜ சோழனைத் ‘திருமுறை கண்டவன்’ என்பர். அதற்குமுன் சிறுக வழங்கப்பெற்ற தேவாரப் பதிகங்களை ராஜராஜன் பெருகச் செய்தான் என்பதே இதன்பொருள் என்று ஆராய்ச்சிப் பேரறிஞர் மு. இராகவையங்கார் கூறுவது பொருத்தமே. ஆனால் ஸ்ரீவைஷ்ணவம் ராஜராஜனைப் போன்ற சோழ சக்கரவர்த்திகளின் ஆதரவைச் சிறப்பாகப் பெற்றுக் கொள்ளாத நிலையிலும் பெரும்பாலும் பொதுமக்களின் ஆதரவிலேயே வளர்ந்தது என்று ஊகிப்பதும் பொருந்துவதே.

பௌத்த சமணங்கள் அறவொழுக்கங்களையே அழுத்தமாகக் கூறியிருக்க, ஆண்டவனிடம் பக்திகொள்வதே நன்னெறி, ஒளிநெறி, திருநெறி என்பதை மிகவும் அழுத்தமாக வற்புறுத்தின சைவமும் வைஷ்ணவமும். இத்தகைய இரட்டைப் பக்தி மதம், ஆறும் நூற்றாண்டுக்கும் பத்தாம் நூற்றாண்டுக்கும்இடையே இந்து சமயத்திற்குப் புத்துயிரும் புதுமலர்ச்சியும் அளித்திருக்கிறது.

இதற்கு இஸ்லாமியக் கொள்கைகளும் கிறிஸ்தவக் கொள்கைகளும் ஒரு மூலகாரணமாக இல்லாவிட்டாலும் துணைக் காரணமாக இருக்க முடியுமா ?—இது ஆராய்ச்சிக்கு உரியது தான்.

சிவனடியார்களைப்போல் திருமாலின் அடியார்களான ஆழ்வார்களும் பல்வேறு குலப்பிரிவுகளில் தோன்றியவர்களே. இதிலிருந்து, பொங்கியெழுந்த பக்திவெள்ளம் தமிழர் சமுதாயத்தின் எல்லாப் பிரிவுகளையும் பொதுவாக மங்கல முழுக்காட்டிப் புனிதமாக்க முயன்றது எனக் கருதுவது தவறாகாது. 'தீண்டத்தகாதவர்' என்று தாழ்ந்தும் தாழ்த்தப்பட்டும் இருந்த வகுப்பினரையும் இந்தப் பக்தி இயக்கம் தீண்டித் திருத்த முயன்றது என்பதற்கு வைஷ்ணவத்தில் திருப்பாணாழ்வாரும் சைவத்தில் நந்தனாரும் சான்று.

பக்தி-இயக்கத்துடன் வேதாந்த அறிவியல்–சிந்தனைகளும் இராமாநுஜர் காலத்திற்கு முன்பே நம் தமிழகத்தில் தழைத்து வளர்ந்திருந்தன. இராமாநுஜரின் பிறப்புக்குச் சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பே – ஏறக்குறைய கி. பி. 790-ல்—ஆதி சங்கரர் என்ற சங்கராசாரியார் வடகேரளத்தில் காலடி என்ற ஊரில் தோன்றினார். அந்த நாளில் கேரளம் என்ற சேர நாடு தமிழகத்தின் பகுதியாகவே இருந்தது.

சங்கரரும் பாரதநாடு முழுதும் சுற்றித் திரிந்து தம் அத்வைத வேதாந்தக் கருத்துகளை விதைத்து வந்தார். பாரத பூமியின் நாலு முக்கிய இடங்களில் நாலு மடங்களை நிறுவினார். பிரம சூத்திரங்களுக்கும் பகவத் கீதைக்கும் பாஷ்யம் என்ற அருமைப் பேருரைகள் எழுதித் தம் அத்வைதத்தைப் பண்டிதர்களிடையே நன்கு பரப்பினார்.

இராமாநுஜரைப்போல் சங்கரர் நீண்ட வயது வாழவில்லை. இராமாநுஜர் துறவுபூண்டு பிரசாரம் தொடங்கினார் தம் முப்பத்திரண்டாம் வயதில்; சங்கரரோ அதே வயதில் உயிர் துறந்தார். எனினும், இந்தியாவின் **உள்ளத்தில்** நிலையான இடம் பிடித்துக் கொண்டார் என்பதில் ஐயமில்லை. இராமாநுஜரோ இந்தியாவின் **இதயத்திலே** இடம்பிடித்துக் கொண்டவர்.

இவருக்கு முன்பே யாமுனாசாரியர் ஸ்ரீவைஷ்ணவ பக்திக் கொள்கைகளை அத்வைதத்துடன் முரண்பட்ட வேதாந்த அடிப்படையில் பரப்ப முயன்று வந்தார். பிரமசூத்திரங்களுக்குப் பாஷ்யம் செய்யவும் விரும்பினார். 'வேதத்தின் உச்சி' என்றும், 'மறையின் குருத்து' என்றும், 'அருமறை' என்றும் போற்றப்பட்ட உபநிஷதங்களைச் சங்கரர் தம் அத்வைத வேதாந்தத்திற்கு ஆதாரமாகக் காட்டியதுபோல், யாமுனர் அதே உபநிஷத வாக்கியங்களைத் தம் ஸ்ரீவைஷ்ணவத்திற்கு வேதாந்த அடிப்படையாகக் காட்ட முயன்றார்.

அந்த முயற்சிகள் இராமாநுஜர்—காலத்திலே முதிர்ந்து பலன் அளித்தன. யாமுனரின் கனவுகளையெல்லாம் நனவாக்க முயன்று வெற்றி பெற்று வைஷ்ணவப் பொதுமக்களின் இதய சிம்மாசனத்திலே அருள்முடி சூடி வீற்றிருந்தார் இராமாநுஜர் என்பது வரலாற்றுத் தீர்ப்பு.

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் பல வகுப்புகளில் தோன்றிய ஆழ்வார்களின் ஸ்ரீவைஷ்ணக் கொள்கையைத் தோன்றாத் துணையாகக் கொண்டே இராமாநுஜர் ஸ்ரீபாஷ்யம் இயற்றி இந்திய மக்கள் அனைவரையும் தம் பக்திமத அடிப்படையில் ஒன்றுபடச் செய்ய முயன்று வந்தார் என்பதும் வரலாறு காட்டும் உண்மைதான்.

உண்மையைத் தேடி யாத்திரை செய்த வண்ணமாயிருந்த முதலாழ்வார் மூவரும் திருக்கோவலூரில் ஓர் இரவில் ஒரு வீட்டு இடைகழியில் தங்கித் தாங்கள் தேடிய மெய்ப்பொருளை அழகனாகிய லட்சுமீ—நாராயண மூர்த்தியாகத் தரிசித்தார்கள் என்ற ஐதிகத்தைத் திறவுகோலாகக் கொண்டு, இராமாநுஜர் ஸ்ரீவைஷ்ணவத்தை வளர்த்து வந்த பெருங்கதையில் வரும் பல ஐதிகங்களையும் நாம் புரிந்து கொள்ள முயலலாம். இவரது விசிஷ்டாத்வைதம், ஸாராம்சத்தில், 'மேலொரு பொருளும் இல்லா மெய்ப்பொருளை' அனந்த கல்யாணக் குணக்கடலான் அழகனாகவும், தான் அறப் பெய்து வாழும் கருணைவள்ளலாகவும் காட்டுவதுதானே.

நம்மாழ்வாரே ஆழ்வார்களின் தலைவர் என்றும், ஸ்ரீவைஷ்ணவ குலபதி என்றும் மதிக்கப்பெறுகின்றார் என்பது அனைவரும் அறிந்ததே. இந்த ஆழ்வாரின் திருவாய்மொழிக்கும் மாணிக்க வாசகரின் திருவாசகத்திற்கும், கொள்கைகளிலும் பெயர்களிலும் கூட ஒற்றுமை சிறப்பாக உண்டு என்பதைத் திறனாய்வாளர்கள் இலக்கிய ஆராய்ச்சி முறையிலும் சமயதத்துவ ஆராய்ச்சி முறையிலும் அறிந்திருக்கிறார்கள். இராமாநுஜரோ திருவாய்மொழியின் நுட்பமான கருத்து—விதைகளைக் கொண்டு தம் ஸ்ரீவைஷ்ணவத்தை வளர்த்துப் படரவிட்டிருக்கிறார்.

இராமாநுஜருக்கும் இவருக்கு வழிகாட்டிய யாமுனருக்கும் முன்பே, ஸ்ரீவைஷ்ணவ இயக்கத்தை வேதாந்த அறிவியல்—கருத்துகளால் அரண் செய்து வளர்க்க முயன்ற நாதமுனிகள் கி. பி. 985 முதல் 1,030 வரை வாழ்ந்தவர் என்பது இன்றைய ஆராய்ச்சியாளர்களின் கருத்து. இவர் தாம் இயற்றிய **நியாய தத்துவம்** என்ற நூலில் விசிஷ்டாத்வைதக் கொள்கையை ஓரளவு

உருவாக்கியுள்ளார் என்கிருர்கள். ஆத்மாவானது பரமாத்மா வான புருஷோத்தமனின் திருவடிகளில் சரணுகதியடைந்து தன்னை முழுக்க முழுக்க ஒப்படைத்துவிட வேண்டும் என்ற பிர பத்திக் கொள்கையையும் நாதமுனிகள் அழுத்தமாகக் கூறி யுள்ளார் என்பர்.

நாதமுனிகள், யாமுனர் என்ற இருவர் அடிச்சுவட்டிலும் சென்று பெரும் பேறுபெற்ற இராமாநுஜர், பதினென்ரும் நூற்றுண்டின் பெரும் பகுதியையும் பன்னிரண்டாம் நூற்றுண் டின் முற்பகுதியையும் தம் சமயப் பெரும் பிரசாரத்திற்குப் பயன் படுத்திக் கொண்டார். சங்கரரின் செயற்கருஞ் செயல்களும் திக்கு விஜயச் செய்திகளும் இராமாநுஜருக்கு முன்மாதிரியாக அமைந்து வழிகாட்டின என்று கருதுவதில் தவறென்றுமில்லை.

தெற்குக் கோடியிலிருந்து காஷ்மீரம் வரை நம் பாரத பூமி முழுவதும் சென்று சங்கரர் திக்குவிஜயம் செய்ததுபோல் இராமாநுஜரும் போய்ப் பண்டிதர்களை வாதில் வென்று தம் கொள்கையை நிலைநிறுத்தியதுடன், பிரம சூத்திரங்களுக்குத் தம் கொள்கைக்கிணங்க விளக்க உரையான ஸ்ரீ பாஷ்யமும் செய்திருக்கிருரல்லவா?

ஸ்ரீ பாஷ்யம் திருவரங்கத்திலே தொடங்கித் திருவரங்கத் திலேயே முடிவு பெற்றது என்பதும், இடையே பல ஆண்டுகள் கழிந்திருக்கவேண்டும் என்பதும், இந்தக் காலப்பகுதியில் போதாயன விருத்தி தேடிக் காஷ்மீரம் சென்றிருக்க வேண்டும் என்பதும், ஆராய்ச்சியாளர்களின் கருத்து.

சோழ மன்னனின் அடக்குமுறைச் செயலை முன்னிட்டு மைசூர்ப் பிரதேசமாகிய ஹொய்சள நாட்டிற்கு இராமாநுஜர் சென்ருரல்லவா? இந்த நிகழ்ச்சியாலும் ஸ்ரீபாஷ்யம் முற்றுப் பெறுவது தடைப்பட்டிருக்க வேண்டும் என்று கருதுவோரும் உண்டு. சோழன் இறந்தபின் திரும்பி வந்தே இராமாநுஜர் ஸ்ரீபாஷ்யத்தைப் பூர்த்தி செய்தார் என்று இவர்கள் கூறுகிருர்கள். இது எப்படியிருந்தாலும், இராமாநுஜரின் விசிஷ்டாத்வைதக் கொள்கைகள் திக்குவிஜயம் செய்த வண்ணமாகவே இருந்தன.

பல்லாரி மாவட்டத்தைச் சேர்ந்த நிம்பபுரியில் நிம்பார்க்கர் என்ற வைஷ்ணவ ஆசாரியர் ஒருவரும் இராமாநுஜர் காலத்தை ஒட்டி வாழ்ந்தார் என்று சில வரலாற்றுப் புலவர்கள் கூறு கிருர்கள். நிம்பார்க்கரின் கொள்கை இராமாநுஜரின் ஸ்ரீவைஷ் ணவக் கொள்கையை ஒத்துமிருக்கிறது; இதிலிருந்து வேறுபட்ட தாகவும் காணப்படுகிறது.

இவரும் பிரபத்திக் கொள்கையை ஆதரிக்கிறார். லட்சுமி-நாராயணனுக்கு இராமாநுஜரின் ஸ்ரீவைஷ்ணவம் கொடுத்திருக்கும் சிறப்பிடத்தை நிம்பார்க்கர் ராதைக்கும் கிருஷ்ணனுக்கும் கொடுத்திருக்கிறார். இவரும் பிரம சூத்திரங்களுக்கு உரை எழுதியிருக்கிறார். நிம்பார்க்கரின் கொள்கையைப் 'பேத-அபேதம்' (வேற்றுமையில் ஒற்றுமை) என்று கூறுவர். நிம்பார்க்கரின் பக்தி இயக்கமும், இராமாநுஜரின் கொள்கைகள் வடக்கு நோக்கிப் பரவிக் கொண்டிருந்தன என்பதற்கு ஒரு சான்றாகும்.

இராமாநுஜர் ஸ்ரீவைஷ்ணவத்தைப் பரப்பி வந்த காலத்தில், சோழ அரசர்களான முதலாம் ராஜராஜனும் அவனுடைய மகனான கங்கைகொண்ட சோழனும் தங்கள் பேரரசைப் பரப்பி வந்தது போல் சைவத்தையும் பரப்ப முயன்று வந்தார்கள். வைஷ்ணவம் முதலான சமயங்களைப் பகைத்துக் கொள்ளாமலே தங்கள் பிரசார நோக்கங்களை நிறைவேற்றி வந்தார்கள். தங்கள் சொந்த மதம் சைவமாயினும், அரசர்கள் என்ற முறையில் பிற மதங்களையும் ஆதரித்தார்கள். வைஷ்ணவ அபிமானிகள் என்று சொல்லத்தக்க சிற்சில சோழ ராஜகுலத்தினரும் இருந்தார்கள். எனவே, சோழ மன்னன் ஒருவன் அடக்குமுறையைக் கையாண்டு வைஷ்ணவ சமயத்தை அழிக்க முயன்றிருக்கக் கூடுமா?—கூரேசனும் பெரியநம்பியும் கண் இழந்ததற்குக் காரணமாக இருந்ததும் சாத்தியமா?

இப்படிச் சில பண்டிதர்களும் வரலாற்றுப் புலவர்களும் கூட ஐயமுற்று எழுதியிருக்கிறார்கள். இந்தப் பிரசினையை ஆராய்வதற்கு, நாம் வரலாற்றுப் பின்னணியிலேயே சில செய்திகளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள முற்படுவோம்.

இராமாநுஜர் பிறந்த காலத்தில் முதலாம் ராஜராஜனின் புதல்வனான கங்கைகொண்ட சோழன் ஆட்சி செலுத்தி வந்தான். இவனை முதலாம் ராஜேந்திரன் என்பர். இவன் ஆண்ட காலம் கி.பி. 1,012—44; அதாவது, முப்பத்திரண்டு ஆண்டுகள் ஆட்சி செலுத்தினான். இவனது ஆட்சியின் ஐந்தாம் ஆண்டில் இராமாநுஜர் பிறந்தார். இவர் வேதாந்தக் கல்வி கற்று யாதவப் பிரகாசருடன் மாறுபட்டுத் துறவறத்தை மேற்கொள்வதற்கு முன்பே கங்கைகொண்ட சோழன் காலமாகி விட்டான்.

இராமாநுஜர் துறவுபூண்டபின் கி.பி. 1,052-ல் இரண்டாம் ராஜேந்திரன் ஆளத்தொடங்கி விட்டான். இவன் 1064 வரை ஆட்சி செலுத்தினான். இந்தக் காலப் பகுதியிலும், வீரராஜேந்திரன் என்ற சோழன் 1064 முதல் 1070 வரை ஆட்சி செலுத்திய காலப்பகுதியிலும், இராமாநுஜர் ஸ்ரீரங்கத்தை மையமாகக்

கொண்டு மும்முரமாக ஸ்ரீவைஷ்ணவப் பிரசாரம் செய்து வந்தார்.

கி. பி. 1070-ல் முதலாம் குலோத்துங்கன் பட்டத்திற்கு வந்து 48 ஆண்டுகள்-கி. பி. 1118 வரை-ஆட்சி செலுத்தினான். இவன் காலத்தில் சோழப் பேரரசு மகோன்னத நிலையை அடைந்தது என்பது வரலாற்றுச் செய்தி. ஏறக்குறைய அரை நூற்றாண்டாக இந்த அரசன் ஆட்சி செலுத்திவந்த காலமெல்லாம் யதிராஜாவாகிய இராமாநுஜரும் தம் அருளாட்சியைச் செலுத்தி ஸ்ரீவைஷ்ணவத்தைப் பரப்பி உச்சநிலைக்குக் கொண்டுவர முயன்ற வண்ணமாயிருந்தார் எனலாம்.

இந்த இரு வேறு பேரரசுகளும் மோதிக் கொண்டனவா?—இது ஒரு பெருங் கேள்வி. ஆம்; முதலாம் குலோத்துங்கனின் காலத்தில்தான் இராமாநுஜர் ராஜகோபத்தை முன்னிட்டு 'வெள்ளை சாத்தி' (காவியுடை துறந்து) மைசூர்ச் சீமைக்குச் சென்றார் என்று குருபரம்பரைகளிலிருந்து தெரிய வருகிறது. எனவே, இந்தச் சோழ மன்னனையே கிருமி கண்ட சோழன் என்றும், கூரேசனையும் பெரியநம்பிகளையும் கண் இழக்கச் செய்தவன் என்றும் சாதாரணமாகச் சொல்லுகிறார்கள்.

முதலாம் குலோத்துங்கன் கி. பி. 1118-ல் காலமானதும், இராமாநுஜர் திருவரங்கத்திற்குத் திரும்பினார் என்று ஊகிக்கிறார்கள். இக்குலோத்துங்கனின் ஆட்சி-இறுதியில் பல துன்பங்கள் தோன்றின என்பது வரலாற்றுச் செய்தி. இராமாநுஜரின் சீடனான விஷ்ணுவர்த்தனன் கி. பி. 1116-ல் கங்கைபாடியில் நிலைத்திருந்த சோழ ஆட்சியை முடிவுறச் செய்து அதிகமான் என்ற துணைவேந்தனைத் தோற்கடித்தான் என்பதும் வரலாற்றுச் செய்திதான்.

விஷ்ணுவர்த்தனன் இராமேச்வரம் வரை படை எடுத்துச் சென்றதாகக் கூறும் வரலாற்றுப் புலவர்களும் உண்டு. 'வேங்கியில் நிலைபெற்றிருந்த சோழரின் ஆதிக்கத்தை வேர்அறுக்கக் காத்திருந்த சாளுக்கிய மன்னர் ஆரும் விக்கிரமாதித்தர் கி. பி. 1118-ல் தம் படைகளை அங்கு அனுப்பிச் சாளுக்கிய ஆட்சியை அந்நாட்டில் நிறுவினார்' என்பதும் ஒரு வரலாற்றுச் செய்தி (டாக்டர் கே. கே. பிள்ளையின் தென்னிந்திய வரலாறு: பக்கம் 172). இந்த இரு தோல்விகளின் விளைவாகக் குலோத்துங்கனின் இறுதியாட்சிப் பகுதியில் இம்மன்னனின் புகழ் மழுங்கியது என்கிறார் டாக்டர் கே. கே. பிள்ளை.

இந்த நிலையில் தம் 101-ம் வயதில் திருவரங்கத்துக்குத் திரும்பிவந்தார் இராமாநுஜர் என்றும், தம் சமயப் பணிகளைச்

சில ஆண்டுகள் அமைதியாகப் புரிந்துவந்தார் என்றும் ஊகிக்கலாம். ஆட்சி-இறுதியில் குலோத்துங்கனின் புகழ் மழுங்கிப் போன போதிலும், இந்த அரசனின் காலத்தில் நாட்டு மக்கள் நலமுற்று வளமுற்று வாழ்ந்தனர் என்பது மறுக்க முடியாத உண்மை என்று வரலாற்றுப் புலவர்கள் கூறுவர். இந்த மக்கள்-நிலையும் இராமாநுஜரது அருளாட்சியின் இறுதிப்பெரும் பணிகளுக்கு இசைந்ததொரு சூழ்நிலையாக அமைந்தது எனலாம்.

முதலாம் குலோத்துங்கனுக்குப்பின் அவன் புதல்வனை முதலாம் விக்கிரம சோழன் இதே கி. பி. 1118-ம் ஆண்டில் முடிசூடப் பெற்று கி. பி. 1135-ம் ஆண்டுவரை—அதாவது, பதினேழு ஆண்டுகள் வரை—ஆட்சி செலுத்திவந்தான். இவன் இராமாநுஜரிடம் பணிவுடன் பக்தி செலுத்தியதாக ஐதிகம் தெரிவிப்பதும், வரலாற்றுச் செய்திகளுக்குப் பொருந்தும் என்றே தோன்றுகிறது.

இவன் காலத்திற்கு இரண்டாண்டுகளுக்குப் பின் இராமாநுஜர் காலமானார். இந்த விக்கிரம சோழனின் ஆட்சிக் காலத்திலே இராமாநுஜர் தம் சமயப் பெரும்பணிகளை முற்றுப் பெறச் செய்தார் எனலாம்.

விக்கிரம சோழனைப் போல் முதற் குலோத்துங்கனை வைஷ்ணவ அபிமானி என்று சொல்ல முடியவில்லையெனினும், இக் குலோத்துங்கனும் ஸ்ரீவைஷ்ணவத்தில் வெறுப்புக் காட்டியதற்கு வரலாற்றுப் புலவர்கள் ஒப்புக்கொள்ளக் கூடிய ஆதாரம் இன்னும் கிடைக்கவில்லை என்பது சில ஆராய்ச்சியாளரின் நிலை. சோழ ராஜ்யத்திலுள்ள பல வைஷ்ணவ-சமண-பௌத்தக் கோயில்களிலும் இவனுடைய கல்வெட்டுகள் காணப்படுகின்றன என்பதை, இந்த அரசனின் மனப்பான்மை குறுகியதன்று என்பதற்கு ஒரு சான்றாகக் காட்டுகிறார்கள்.

தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த மன்னார்குடியில் இருக்கும் ராஜகோபாலசுவாமி கோயில் இக்குலோத்துங்கனின் பெயரால் 'குலோத்துங்க சோழ விண்ணகரம்' என்று அந்நாளில் கட்டப் பெற்றதையும், முதற் குலோத்துங்கன் ஸ்ரீவைஷ்ணவர்களைத் துன்புறுத்தியிருக்க முடியாது என்பதற்கும் ஸ்ரீவைஷ்ணவ வளர்ச்சியைத் தடுத்திருக்க முடியாது என்பதற்கும் சான்றாகக் காட்டுகிறார்கள்.

முதற்குலோத்துங்கனும் தன் முன்னோரைப் போல் தில்லை நடராஜப் பெருமானைக் குலதெய்வமாகக் கொண்டிருந்த போதிலும், தன் காலத்து வழங்கிய பௌத்தம் உள்ளிட்ட

எல்லாச் சமயங்களிடத்தும் பொதுநோக்கையே அரசாங்கக் கொள்கையாகக் கொண்டிருந்தான் என்பதை வற்புறுத்துகிறுர், வரலாற்றுப் புலவர் சதாசிவ பண்டாரத்தார். இவனுக்கு உள்ள திருநீற்றுச் சோழன் என்ற புனைபெயரும், இவனது ஆழ்ந்த சிவபக்தியை வெளியிடுவதே அல்லாமல் பிறசமய வெறுப்பைப் புலப்படுத்துவதல்ல என்றும் இவர் கருதுகிறுர். கலிங்கத்துப்பரணியில் இவனது செங்கோல்-ஆட்சி வற்புறுத்தப் படுவதையும் சுட்டிக் காட்டுகிறுர்.

இந்த வரலாற்றுப் பேரறிஞர் மேலும் கூறுகிறுர், ' தம் பிற் காலச் சோழர் சரித்திரம் ' என்ற நூலில் (பக்கம் 257): 'ஒரு சோழமன்னன் தில்லைமாநகரில் சித்திர கூடத்திலிருந்த திருமால் மூர்த்தத்தைப் பெயர்த்துக் கடலில் எறிந்தமையோடு வைஷ்ணவர்களையும் துன்புறுத்தினுன் என்றும், அதுபற்றி வைணவ ஆசாரியராகிய இராமாநுஜர் தமிழ்நாட்டைத் துறந்து மைசூர் நாட்டிற்குப் போய்த் தங்க நேர்ந்தது என்றும், அந்நாட் களில் அவர் செய்த மாரண மந்திரத்தினுல் அவ்வரசன் இறந் தான் என்றும், வைணவர் அவனையே கிருமி கண்ட சோழன் என்பர் என்றும் திவ்ய சூரி சரிதம், யதிராஜ வைபவம், இராமா நுஜாசாரிய திவ்யசரிதை ஆகிய வைணவநூல்கள் கூறுகின்றன.'

இப்படிக் கூறியபின் இந்த அறிஞர், அந்தச் சோழமன்னன் அதிராஜேந்திர சோழன் அல்லன் என்றும் கூறியுள்ளார். யார் இந்த அதிராஜேந்திர சோழன்? இவன் வீரராஜேந்திர சோழ னின் புதல்வன் என்றும், அவன் கி. பி. 1070-ம் ஆண்டின் தொடக்கத்தில் இறந்தபின் இவன் முடிசூட்டப் பெற்றுன் என்றும் தெரிய வருகிறது. வீரராஜேந்திரன் கங்கைகொண்ட சோழ னுடைய புதல்வருள் ஒருவன் என்பதையும், இவன் கி. பி.1063-1070 வரை ஆண்டான் என்பதையும் நாம் நினைவூட்டிக் கொள்ள வேண்டும்.

கி. பி. 1070-ம் ஆண்டு ஜூன் மாதம் 9-ம் தேதியில் முதற் குலோத்துங்கனின் முடிசூட்டு விழா நடைபெற்றிருக்க வேண்டும் என்பதைச் சரித்திர ஆராய்ச்சியாளர் ஒருமுகமாய் ஒப்புக்கொள் கிறுர்கள். இதனுல் அதிராஜேந்திர சோழன் கி. பி. 1070-ம் ஆண்டின் முற்பகுதியில் சில மாதங்களே ஆட்சி புரிந்திருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம்.

உள்நாட்டுக் கலகத்தில் அதிராஜேந்திரன் கொல்லப் பட்டதாக வடமொழிப் புலவரான பில்ஹணர் கூறியுள்ளார். இக் கூற்று நம்பத் தகுந்ததன்று என்கிறுர் சதாசிவ பண்டாரத்தார்.

இவ்வரசன் கொடிய நோய்வாய்ப்பட்டு உயிர்துறந்திருக்க வேண்டும் என்பது இவர் ஊகம். இந்த அரசனே தில்லைச் சித்திர கூடத்தைச் சிதைத்துப் பெருமாளைக் கடலில் கிடத்திய கிருமிகண்ட சோழனாக இருக்க வேண்டும் என்றும், அதனால் ஏற்பட்ட கலகத்தில் இவன் கொல்லப்பட்டிருக்கக்கூடும் என்றும் வரலாற்றுப் புலவர்களில் சிலர் கூறுவதை ஆராய்ச்சி அறிஞர் சதாசிவ பண்டாரத்தார் ஒப்புக்கொள்ளவில்லை.

இவர், தில்லைச் சித்திரகூடத் திருமாலைக் கடலில் கிடத்திய வன் விக்கிரம சோழன் மகனாகிய இரண்டாம் குலோத்துங்க சோழனே என்பதற்கு உரிய கல்வெட்டுச் சான்றுகளையும் தமிழிலக்கியச் சான்றுகளையும் சுட்டிக்காட்டுகிறார். இந்த அரசன் கி. பி.1133 முதல் கி. பி. 1150 வரை ஆட்சி செலுத்தியவன்; விக்கிரம சோழன் கி. பி. 1135-ம் ஆண்டில் இறப்பதற்கு இரண்டாண்டுகளுக்கு முன்பே இரண்டாம் குலோத்துங்கனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டப்பட்டிருந்தது. இவன் 1135-ம் ஆண்டில்தான் முடிசூட்டப் பெற்றான் என்றாலும், ஆட்சிப் பொறுப்பை 1133-ம் ஆண்டிலேயே ஏற்றுக் கொண்டிருக்க வேண்டும்.

இரண்டாம் குலோத்துங்கன் தில்லைத்திருநகர் என்ற சிதம்பரத்திலேயே முடிசூடிக் கொண்டான். இத்தில்லையம்பதியிலும் கோயிலிலும் பல திருப்பணிகள் செய்த வண்ணமாயிருந்தான். 'இத்திருப்பணிகளையெல்லாம் மிக விரிவாகச் செய்யத் தொடங்கியபோது, தில்லைச் சிற்றம்பலத்திற்கு இடம் போதாதவாறு திருமுற்றத்தின் கண் இருந்த திருமால் மூர்த்தத்தைப் பெயர்த்தெடுத்து அலைகடலில் கிடத்தும்படி செய்து அதனால், இடத்தைப் பெருக்கிக் கொண்டு திருப்பணிகளை நிறைவேற்றினான் என்று ஆசிரியர் ஒட்டக்கூத்தர் தம் நூல்களில் கூறியிருப்பது குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்' என்பது வரலாற்றுப் பெரும் புலவரான பண்டாரத்தாரின் கூற்று.

இதற்கு ஆதாரமாக இவர் ஒட்டக்கூத்தனின் உலாப் பிரபந்தங்களிலிருந்தும் தக்கயாகப் பரணியிலிருந்தும் காட்டியிருக்கும் வாக்குகளை இப்போது நாம் உற்று நோக்குவோம்.

**தில்லைத் திருமன்றில்**
**முன்றில்—சிறுதெய்வத்**
**தொல்லைக் குறும்பு**
**தொலைத் தெடுத்து...**

என்ற வாக்கை முதல் முதல் கூர்ந்து பார்க்கலாம்.

இதில் 'தேவாதி தேவன்' என்று ஆழ்வார் போற்றியுள்ள தில்லைத் திருமால் 'சிறு தெய்வ'மாகக் குறிக்கப் பெற்றிருப் பதைக் காணலாம். இரண்டாம் குலோத்துங்கனின் சமயப்பற்றை வெளியிடுவதைக் காட்டிலும் சமய வெறியை வெளியிடுவது தான் இந்த வாக்கு. ஸ்ரீவைஷ்ணவர்களின் குருபரம்பரைகள் இச்செயல் விஷயமாகக் குறிப்பிடுவதை இந்த வாக்கும் ஆதரிக்கிறது.

'குறும்பு அனைத்தும் முன்னர்க் கடல் அகழில் மூழ்குவித்த' என்ற ஒட்டக்கூத்தன் வாக்கும் மேலே சொன்னதை உறுதிப் படுத்துகிறது. இனி, திரு. பண்டாரத்தார் தக்கயாகப் பரணித் தாழிசை ஒன்றை ஆதாரமாகக் கொண்டுதான் தம் கருத்தை வெளியிட்டிருக்கிறாரோ என்று பார்க்கலாம்.

தக்கயாகப் பரணியில் 777-வது தாழிசையாக வருவது இது :

> **முன்றில் கிடந்த**
> **கருங்கடல் போய்**
> **முன்னைக் கடல்புகப்**
> **பின்னைத் தில்லை**
> **மன்றிற்கு இடம் கண்ட**
> **கொண்டல்...**

இந்த வாக்கின் போக்கும், இரண்டாம் குலோத்துங்கனின் சமயப் பொறுமையுணர்வையோ, பரந்த மனப்பான்மை யையோ காட்டுவதாக இல்லை. 'மன்றிற்கு இடம் கண்ட' என்று வருவதைக் கொண்டுதான் பண்டாரத்தார், தில்லைத் திருக்கோயிலில் நடராஜ சந்நிதிக்குப் போதுமான இடம் வேண்டும் என்ற நோக்கத்துடன் முற்றத்திலிருந்த திருமால்– மூர்த்தத்தைப் பெயர்த்தெடுத்தான் என்ற தம் கருத்தை வலி யுறுத்தப் பார்க்கிறார். ஆனால் இந்தப் பொருளை இந்தத் தாழிசை யில் தமிழறிஞர்கள் காண்பது சாத்தியமா ?

'முன்றில் கிடந்த கருங்கடல்' என்பது, தில்லைத் திருமன்றத் தின் முற்றத்தில் சயனித்திருந்த திருமால் என்று பொருள்படும். 'கருங்கடல்' என்றால், கருநிறமுள்ள திருமால். 'திருமாலே! நீ முன்னாளில் கடலில் கிடந்தாய் (பள்ளி கொண்டிருந்தாய்); இப்போது எங்கள் கூத்தப்பெருமானின் முற்றத்தில் கிடக்கிறாய் ; இனி நீ மறுபடியும் பழைய கடலுக்குப் போக வேண்டியதுதான்; அந்த அலைகடலில் சக்கரவர்த்தியாகிய நாம் கிடத்திவிடுவோம்!' என்று உள்ளத்திலே திட்டமிட்டுச் செய்தான் இரண்டாம்

குலோத்துங்கன் என்பதுதான் தக்கயாகப் பரணித் தாழிசையின் முற்பாதிக்கு நேரான பொருளாகும்.

'பின்னைத் தில்லை மன்றிற்கு இடம் கண்ட'தாகத்தான் ஒட்டக்கூத்தன் தன் பரணித் தாழிசையில் கூறியுள்ளான். தில்லைச் சிற்றம்பலமாகிய மன்றுக்கு இடம் காண்பதன்று முக்கிய நோக்கம். 'சிறு தெய்வத் தொல்லைக் குறும்பு' தொலைப்பதற்காகக் கடலில் மூழ்குவித்தான் குலோத்துங்கன் என்பதே இத் தாழிசைக்கும் உயிர்நிலைச் செய்தியாக அமைந்திருக்கிறது.

'கி. பி. எட்டாம் நூற்றுண்டில் நந்திவர்ம பல்லவ மன்னனால் தில்லையம்பல முன்றிலில் நிறுவப்பெற்று அந்நாள்முதல் நிலைபெற்றிருந்த திருமால் மூர்த்தத்தைக் கடலில் எறிந்த இவன் செயல், வைணவர்களின் உள்ளத்தைப் பெரிதும் புண்படுத்தி விட்டது. அதுபற்றி வைணவ சமயத்தினர் எல்லாரும் இவனுக்குப் பகைஞர் ஆயினர் எனலாம்' என்று வரலாற்றுப் பெரும் புலவரான பண்டாரத்தாரே கூறியிருப்பதும் கவனிக்கத் தக்கது.

ஆனால் இந்த ஆராய்ச்சிப் புலவர், 'இவன் (இரண்டாம் குலோத்துங்கன்) தில்லைச் சிற்றம்பலவாணரிடத்து ஈடுபாடு உடையவனாய் அப்பெருமான் எழுந்தருளியுள்ள கோயிலை மிகப் பெரிதாக அமைக்கக் கருதித் திருப்பணி தொடங்கியபோது, தில்லைக் கோவிந்தராசரை வழிபட்டுவந்த வைணவர்கள் அத் திருப்பணிக்கு முரண்பட்டு நின்றமையோடு தம்மால் இயன்ற சில இடையூறுகளைச் செய்தும் இருக்கலாம். அதுபற்றிச் சினங் கொண்ட இவ்வேந்தன் அத்திருமால் மூர்த்தத்தைப் பெயர்த்துக் கடலில் போடச் செய்து பிறகு தான் மேற்கொண்ட திருப் பணியை நிறைவேற்றியிருத்தல் வேண்டும்' என்று ஊகஞ் செய்திருப்பதற்குத் துளியும் சான்று கிடைக்கவில்லை; வரலாற்றிலோ இலக்கியத்திலோ அகச்சான்றுமில்லை, புறச்சான்றுமில்லை.

இந்த வரலாற்றுப் பேராசிரியரின் ஊகம் சரியாக இருக்க வேண்டுமென்றால், ஒட்டக்கூத்தன் குறிப்பாகவோ வெளிப்படையாகவோ இது குறித்தும் சொல்லியிருக்கலாமே—ஏன் சொல்லவில்லை? இதற்கும் சமாதானம் சொல்லுகிறார் அறிஞர் பண்டாரத்தார்: 'இவன் தில்லைத் திருப்பணி நிகழ்த்தியபோது, அதற்குத் திருமால் சமயத்தினர் செய்த இடையூறுகளை ஒரு பொருட்படுத்திக் கூறவிரும்பவில்லை ஒட்டக்கூத்தன்' என்கிறார்.

'மன்றிற்கு இடம் காணவேண்டித் திருமாலை அவருக்கு உரிய பழைய கடலுக்கே அனுப்பிவிட்டான் என்று தம் தக்கயாகப் பரணியில் கூறியுள்ளனர்' என்று திரு. பண்டாரத்தார் கூறி

யிருப்பதிலேயே இரண்டாம் குலோத்துங்கனின் வைஷ்ணவ வெறுப்புக்குத்தான் சான்று கிடைக்கிறது.

'பிற்காலத்து எழுந்த திவ்யசூரி சரிதம், கோயிலொழுகு முதலான சில வைணவ நூல்கள் இவன் புரிந்த இச்செயலை மிகைபடக்கூறி இவன்மீது அடாத பழிகளைச் சுமத்தியும்,இவனைக் கிருமிகண்ட சோழன் என்று இழித்துரைத்தும் உள்ளன. அவையெல்லாம் வெறுங் கற்பனைக் கதைகளேயன்றி வேறல்ல என்பது நுணுகி ஆராய்வார்க்குப் புலப்படாமற் போகாது' என்று திரு. பண்டாரத்தார் துணிந்து கூறியிருப்பது ஆச்சரிய மாகவேயிருக்கிறது.

பொதுவாக இந்த நூல்களில் காணப்படும் ஐதிகங்களை ஆராய்ச்சியாளர் பலரும் சரித்திர அடிப்படை வாய்ந்தவை என்று ஒப்புக் கொள்கிறார்கள். மேலும், கிருமிகண்ட சோழன் என்று குருபரம்பரைகளும் வேறு வைஷ்ணவ நூல்களும் குறிப்பிடுவது இரண்டாம் குலோத்துங்கனை அல்ல, முதலாம் குலோத்துங் கனைத்தான் என்பதை நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

'இவன் செயல்பற்றிச் சோழ இராச்சியத்தில் அமைதி யின்மையும் கலகமும் யாண்டும் ஏற்படவில்லை; பொதுமக்கள் எல்லோரும் அமைதியாகவே இனிது வாழ்ந்து வந்தனர்; எனவே அவர்கள் இதனை நாட்டிற்குத் தீங்கு பயக்கும் கொடுஞ் செயலாகக் கருதவில்லை என்று தெரிகிறது' என்று இந்த வர லாற்றுப் புலவர் கூறி நம்மைத் திடுக்கிடச் செய்கிறார்.

படையெடுத்து வந்த புறச்சமயிகளே செய்வது போன்ற ஒரு கொடுஞ்செயலை இரண்டாம் குலோத்துங்கன் செய் திருந்தும், ஒரு வரலாற்றுப் பெருநூலில் ஒரு வரலாற்றுப் பெரும்புலவர் 'சமாதானம்' கூறப்பார்ப்பது ஆராய்ச்சி-மனப் பான்மையைக் காட்டுவதாகத் தோன்றவில்லை. இதை இவரே ஓரளவு உணர்ந்திருக்க வேண்டும் என்பதற்கு இவரது பின்வரும் வாக்கியமே சான்றாகும்: 'பெருவேந்தனாகிய குலோத்துங்கன் இங்ஙனம் செய்தமைக்குத் தக்க காரணங்கள் இருப்பினும் இச் செயல் இவனது பெரும்புகழுக்குச் சிறிது இழுக்கு உண்டுபண்ணி விட்டது என்பதில் ஐயமில்லை.'—(பிற்காலச் சோழர் சரித்திரம் இரண்டாம் பகுதி, பக்கம் 96). இவன் மட்டுமா இப்படி?

இந்தச் சந்தர்ப்பத்தில், காஞ்சி மகாவித்வான் அண்ணங்க ராசாரியர் எடுத்துக்காட்டும் ஒரு விஷயத்தை நமது வாச கர்கள் நன்றாகக் கவனித்து அறிந்துகொள்ள வேண்டும்.

நண்ணு அசுரர் நலிவுஎய்த,
நல்ல அமரர் பொலிவுஎய்த,

என்ற திருவாய்மொழிப் பாசுரம் ஒன்று உண்டு. இதில், விஷ்ணு பக்தியில்லாத அசுரர்கள் தொலையவும் நல்லவர்களான அமர கள் (தேவ சுபாவமுள்ளவர்கள்) வாழவும் திருவாய்மொ தோன்றியது என்ற கருத்து வெளியிடப்பட்டிருக்கிறது. இதை ஒட்டி நம்பிள்ளை என்ற ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர் பகவ விஷயத்தில் கூறியிருப்பதைத்தான் மகாவித்வான் அண்ணங் ராசாரியர் குறிப்பிடுகிறார்.

'அவ்யபதேச்யனுக்கு அனந்தரத்திலவன், தகப்பன் செய் தைக் கேட்டு, "இவன் என் செய்தானானான்!" என்று கர்ஹித்தான், "ஒரு மதிளை வாங்குங்காட்டில் அத்தர்சன குலைந்ததோ, திருவாய்மொழியென்றும் ஸ்ரீராமாயணமென்று வலியன இரண்டு ப்ரபந்தங்கள் உண்டாயிருக்க?" என்றுஇ யிற்று. இப்படி உகவாதார் நெஞ்சுளுக்கும்படியான ப்ரபந் மாய்த்து' என்பது ஈடு முப்பத்தாறுயிரப்படியில் காணப்படு நம்பிள்ளை வாக்கு. இதன் பொருள் என்ன?

காலட்சேப முறையில் கேட்டிராதவர்களுக்கு இந்த வா கியங்களின் பொருள் புரிவது எளிதன்று. எனவே, ஸ்ரீஅண்ணங் ராசாரியர் 'கூரத்தாழ்வானும் சோழ ராஜனும்' என்ற தலைப்பில் தமது 'ஸ்ரீ ராமாநுஜன்' பத்திரிகையில் எழுதியிருப் பதை வழிகாட்டியாகக் கொண்டு நம்பிள்ளையின் வாக்கைப் புரிந்து கொள்ளலாம்.

முதல் முதல் 'அவ்யபதேச்யன்' என்பது யாரைக் குறிப்பது என்று தெரிந்து கொள்வோம். கூரேசனும் பெரிய நம்பியும் கண் இழக்கக் காரணமாயிருந்த கிருமி கண்ட சோழனைக் குறிப்பது என்கிறார் உயர்திரு அண்ணங்கராசாரியர். 'அவனுடைய பெயரை வாயாலே எடுத்துரைக்கக் கூசி **அவ்யபதேச்யன்** என்றார்' என்றும் இம் மகாவித்வான் தெரி விக்கிறார்.

நம்பிள்ளை வாக்கில் அடுத்த சொற்றொடர் 'அனந்தரத்தில் அவன்' என்பது. அந்த அரசனுடைய மகன் என்பது இச் சொற்றொடரின் பொருள். இந்த மகன் சொன்ன ஒரு வார்த்தை யைத்தான் இங்கே நம்பிள்ளை குறிப்பிடுகிறார் என்பதை இப் போது நாமும் ஊகித்துக் கொள்ள முடியும். அந்த 'வார்த்தை நம் ஆசார்யர்களின் காதில் விழுந்து அஃது இங்கு எடுத்துக் காட்டப்பட்டுள்ளது' என்று ஸ்ரீ அண்ணங்கராசாரியர் ஊகிப் பதும் பொருத்தமே.

கிருமி கண்ட சோழனின் மகன் கூறுவதுதான் என்ன? தகப்பன் செய்ததைக் கேட்டு ஆச்சரியப்பட்டு, 'இவன் (தந்தை) என்ன காரியம் செய்தான்!' என்று வருந்தினன். பிறகு, 'ஒரு மதிளை வாங்கும் காட்டில் அத்தர்சனம் குலைந்ததோ?' என்று கேட்டான். 'ஒரு கோவில் மதிலை இடித்துவிட்டதால் ஸ்ரீவைஷ்ணவ தரிசனம் குலைந்துவிட்டதா?' என்றுன் என்பது பொருள்.

இதைத் தொடர்ந்து வருகிறது, 'திருவாய்மொழி என்றும் ஸ்ரீ ராமாயணம் என்றும் வலியன இரண்டு ப்ரபந்தங்கள் உண்டாயிருக்க' என்ற வாக்கியப் பகுதி. திருவாய்மொழியும் இராமாயணமும் ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்திற்கு இரண்டு மதில்களாக அமைந்திருக்கும் போது ஒரு மதிலை இடித்துத் தள்ளுவதால் என்ன நேர்ந்துவிடும்?—என்பது கருத்து.

'இப்படி மகனும் அருவருக்கும்படியிருந்த சோழன் தன்னுடைய அவிவேகத்தினுலும் துராக்ரஹத்தினுலும் கூரத்தாழ்வானுக்கும் பெரிய நம்பிக்கும் தீங்கு விளைத்தான் என்பது உண்மை' என்று ஸ்ரீஅண்ணங்கராசாரியர் கூறுவதும் பொருத்தமே. கூரேசனும் பெரியநம்பியும் கண்களை இழந்ததற்குப் பின்னே, இராமாநுஜர் கி. பி. 1096-ம் ஆண்டையொட்டி மைசூர்ச்சீமைக்குச்சென்றதால், முதற்குலோத்துங்க சோழனையே கிருமிகண்ட சோழன் என்று ஸ்ரீவைஷ்ணவ குருபரம்பரைகளும் வேறு நூல்களும் கூறுவதாய்க் கருதலாம். இவன் 'திருநீற்றுச் சோழன்' என்று சாசனத்தில் குறிக்கப்பட்டிருப்பதும் கூர்ந்து நோக்கத் தக்கது. கிருமிகண்ட சோழன் திருக்கண்ணபுரத்துக் கோயில் மதிலை இடித்தான் என்பது மக்களிடையே வழங்கும் ஒரு கர்ணபரம்பரை ஐதிகம்.

ஆனல் 'தம் சமயம் அல்லாத மற்றைச் சமயங்களைச் சார்ந்த மக்களைத் துன்புறுத்தும் சில அரசர்கள் போல இவன் பிறசமயத்தினர்பால் சிறிதும் வெறுப்புக்காட்டியவன் அல்லன்' என்கிருர் வரலாற்றுப் புலவர் பண்டாரத்தார். இவன் வேங்கி நாட்டில் இளவரசுப் பட்டம் பெற்ற நாளில், அந்த நாட்டின் வழக்கப்படியே சப்த விஷ்ணுவர்த்தனன் என்ற அபிஷேகப் பெயர் பெற்றிருந்தான் என்பதையும் ஒரு சான்ருகக் காட்டுகிருர்.

'இவற்றையெல்லாம் ஆராய்ந்து உண்மை காணுமிடத்து, இம் மன்னன் தன் காலத்து வழங்கிய எல்லாச் சமயங்களிடத்தும் பொது நோக்குடையவனுய் அவற்றை அன்புடன் ஆதரித்து வந்தனன் என்பது இனிது பெறப்படுகின்றது' என்று முடிவு கட்டுகிருர் திரு. பண்டாரத்தார். இக் குலோத்துங்கனது கல்விச்

சிறப்பைக் குறித்தும் இந்த ஆசிரியர் விரிவாய்க் கூறியுள்ளார். தனது தாய்ப்பாட்டனை கங்கை கொண்ட சோழனால் அமைக்கப் பெற்றிருந்த கங்கை கொண்ட சோழபுரத்தையே தலைநகராகக் கொண்டு இவன் ஆட்சி செலுத்தி வந்தான் என்ற வரலாற்றுச் செய்தியையும் தெரிவிக்கிறார்.

எனினும், குருபரம்பரைகளும் பிற வைஷ்ணவ நூல்களும் ஒருமுகமாகக் கூறும் அடக்குமுறைச் செய்தியை மறுப்பதற்குரிய ஆதாரம் ஒன்றும் மேலே சொன்ன செய்திகளில் நமக்குக் கிடைக்கவில்லை. பொதுவாக வைஷ்ணவம் உள்ளிட்ட பல சமயங்களையும் அரசாங்கக் கொள்கையை முன்னிட்டு இந்த அரசன் ஆதரித்து வந்தபோதிலும், இராமானுஜரின் புதுமைப் பேரியக்கத்தால் ஆபத்து வந்துவிடுமோ என்று அஞ்சி அடக்குமுறைக் கொடுஞ்செயல் ஒன்றில் இவன் தலையிட்டிருக்கவும் கூடுமே. இவன் நேராகத் தலையிடவில்லை என்பதற்கு ஆதாரம் கிடைத்தாலும்கூட, இவன் ஆட்சிக் காலத்தில் கூரேசனும் பெரியநம்பியும் கண்ணிழக்க நேர்ந்த கொடுஞ்செயல் நிகழ்ந்திருக்கவேண்டும் என்பது திண்ணம். எப்படியும் இச்செயலுக்குக் காரணமான அரசனை 'அணிமிடறு புழுத்தான்' என்று 'திருவரங்க நாயகர் ஊசல்' என்ற நூல் குறிப்பிடுவதையும் காண்கிறோம். இது திவ்யகவி பிள்ளைப் பெருமாளையங்காரின் அஷ்டப் பிரபந்தங்களில் ஒன்று. இக்கவிஞர், கூரேசனின் புதல்வரான பட்டரின் சீடர்களில் ஒருவர்.

'முதலாம் குலோத்துங்கனைக் காட்டிலும் இரண்டாம் குலோத்துங்கன் ஸ்ரீவைஷ்ணவத்தை வெறுத்தான் என்பது வெளிப்படை. வைணவத்தை வெறுத்த இவ்வரசன், கோவிந்தராசர் உருவச் சிலையைக் கடலில் எறிந்ததாகக் கூறப்படுகிறது. வைணவ இலக்கியம் கூறும் "கிருமிகண்ட சோழன்" இவனே என்று சிலர் கருதுவர்' என்று அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடாக வந்திருக்கும் 'இந்திய வரலாறு : கி. பி. 1200 வரை' என்ற நூல் கூறுகிறது. ஆனால் கிருமிகண்ட சோழன் முதற் குலோத்துங்கன்தான் என்பதற்கே சான்றுகள் கிடைக்கின்றன.

திருச்சித்திரகூடம் என்று வைஷ்ணவர்கள் போற்றும் சிதம்பரத்தில் ஆடும்பெருமானாகிய நடராஜாவுக்குப் பக்கத்திலேயே அறிதுயில் அமர்ந்த மூர்த்தியாகிய கோவிந்தராஜனை எட்டாம் நூற்றாண்டில் நந்திவர்ம பல்லவன் பிரதிஷ்டை செய்ததிலிருந்து, அந்த நாளில் நம் முன்னோர்கள் சைவ வைஷ்ணவ

சமரசத்திற்காகவும் முயற்சிகளை மேற்கொண்டனர் எனக் கருதலாம்.

இரண்டாம் குலோத்துங்கன் இந்த ஒற்றுமை நிலையைக் குலைத்துக் கோவிந்தராஜனின் திருவுருவைக் கடலில் எறிந்த காலத்தில் இராமாநுஜருக்குச் சுமார் 115 வயதுக்கு மேல் ஆகியிருக்க வேண்டும். இந்த நிலையில் இராமாநுஜரே நேரில் போய்த் திருப்பதியில் திருமலையின் அடிவாரத்தில் கோவிந்தராஜரின் திருவுருவைப் பிரதிஷ்டை செய்தார் என்று கருதுவது பொருந்துமா? இது ஆராய்ச்சிக்கு உரியது.

*　　　　*　　　　*

இராமாநுஜரின் நீண்ட வாழ்க்கை குறித்தும் செயற்கருஞ் செயல்கள் குறித்தும் ஆறுயிரப்படி முதலான ஸ்ரீவைஷ்ணவ நூல்களில் கூறப்படும் செய்திகள் பெரும்பாலும் வரலாற்றுப் பின்னணியில் பொருத்தமாகவே அமைந்திருக்கின்றன. இவர், திருவருளையே துணையாக நம்பிச் சோழப்பேரரசின் விருப்பு வெறுப்புகளைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் ஸ்ரீவைஷ்ணவத்தை வளர்த்துப் பொதுவாக மக்களுக்குப் பணி செய்ததுடன், இந்து சமயத்தைச் சீர்திருத்தி இந்து தர்மத்திற்குப் புத்துயிரளிக்கவும் சிறப்பாக முயற்சிகளை மேற்கொண்ட வண்ணமாயிருந்தார்.

சோழப் பேரரசு நம் தமிழகத்திற்கு எத்தனையோ நன்மைகளைச் செய்திருக்கிறது. சோழர்களின் வெளி நாட்டுத் தொடர்புகள் நம் மக்களோடு அந்த நாட்டு மக்களுக்கும் நன்மைகளாக விளைந்திருக்கின்றன. சோழர்களின் கல்விச் சிறப்பும் குணாதிசயச் சிறப்பும் பக்திச் செல்வமும் செங்கோலாட்சியும் தமிழர்களுக்கேயன்றி இந்தியர்கள் அனைவருக்கும் உதவியிருக்கின்றன. எனினும், இந்தப் பேரரசு உலகத்தில் தோன்றி மறைந்த வேறு பேரரசுகளைப் போலவே மறைந்து போய்விட்டது. ஆனால் இராமாநுஜர் நிலை நாட்டிய ஸ்ரீவைஷ்ணவப் பேரரசு இன்றும் வாடாத இளமை வாய்ந்ததாகவே காணப்படுகிறது.

சோழர்களின் திக்குவிஜயம் வன்முறைப் போராட்டங்களால் விளைந்ததுதான். இராமாநுஜரின் திக்குவிஜயமோ, 'தீதில் நன்னெறி' என்ற ஸ்ரீவைஷ்ணவ நன்முறைப் போர்களால் உருவாகி நிலைத்த நற்பயன் அளித்திருக்கிறது.

சோழ அரசர்கள் தமிழ் நாகரிகத்தையும் பண்பாட்டையும் வளர்த்ததுடன் சிவநெறியாகிய திருநெறியையும் பேரொளி பெற்றுத் திகழச் செய்தனர். இந்தச் சமயப் பணிதான் சோழப் பேரரசு தந்திருக்கும் நிலைத்த பரிசு. இராமாநுஜரோ, பெரும்

பாலும் இந்தப் பேரரசின் உதவியில்லாமலும், சிற்சில சமயங்களில் இந்த அரசின் எதிர்ப்பைச் சமாளித்துக் கொண்டும், தம் ஸ்ரீவைஷ்ணவத்தைப் பேரொளி பெற்று விளங்கச் செய்திருக்கிறார்.

தென்னிந்திய வரலாற்றில் இராமாநுஜரின் ஞானப்பேரரசு சிறப்பாக இடம் பெற்றிருக்கிறது.

# 29

# இவர் வளர்த்த ஸ்ரீவைஷ்ணவம்

கூரேசனின் புதல்வரான பட்டர் திருவரங்கத்தில் காலட்சேபம் செய்துகொண்டிருக்கிறார். 'செவிநுகர் கனிகளா'க அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள் சீடர்கள்,—இப்படி எத்தனையோ காலட்சேபங்களைக் கேட்டுக் கொண்டிருப்பவர்கள். இவர்.களில் ஒரு சீடர் மெல்ல எழுந்து நிற்கிறார்; ஒரு கேள்வி கேட்கிறார். வேதாந்த சித்தாந்த நுட்பங்கள் குறித்த கேள்வியன்று இது. சாதாரணக் கேள்வி; விஷயம் ஒன்றுமே தெரியாதவன் கேட்பது போன்ற ஒரு கேள்வி.

'ஸ்ரீவைஷ்ணவன் யார்? என்ற அரிச்சுவடிக் கேள்விதான் ஆனால் அரிச்சுவடியில் முதலில் நிற்கிற 'அரி (ஹரி) யார்?' என்பது போன்ற கேள்வி.

இதை ஒரு சாதாரணக் கேள்வியாக—அறியாதான் கேட்ட அறியாமை வினு அல்லது ஐய வினுவாக—மதித்துவிடவில்லை ஆசாரியர். 'விடையைத் திருமலைக்குப்போய் அனந்தாழ்வானிடம் தெரிந்து கொள்ளும்' என்பது பட்டரின் விடை.

உடனே திருவரங்கத்திலிருந்து திருவேங்கடத்திற்குப் புறப்படுகிருர் சீடர், பாதயாத்திரையாக. திருமலையில் ஏறுகிருர். அனந்தாழ்வானின் உறைவிடத்திற்குப் போகிருர்.

கேள்வி கேட்டதும் இங்கேதான் உடனே விடை கிடைத்து விடுகிறதா? அதுதான் இல்லை. ஆறுமாதம் காத்துக்கிடக்க வேண்டியதாயிற்று. இடையே சோதனைகள், விநோதமான பரீட்சைகள்.

முதல் முதல் உபசாரத்திற்குக் குறைவில்லை—பட்டரின் சீடரல்லவா? அனந்தாழ்வானே எதிர்கொண்டுவந்து தண்டனிட்டுக் களைப்பாறச் செய்கிருர்; 'உண்ணும், உண்ணும்' என்று உபசரிக்கிருர்.

அடியவர்களுக்கு உணவு அளிப்பதைத் ததீயாராதனம் என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் கூறுவர். இத்ததீயாராதனத்தில் முதல் திரை, இரண்டாம் திரை என்றெல்லாம் திரைகள் இட்டு அவரவர் தகுதிக்கு ஏற்ப அந்த அந்தத் திரைக்குள் அடியவர்கள் கூட்டம் கூட்டமாய் அமர்ந்து உணவு கொள்வது சம்பிரதாய முறை. அனந்தாழ்வானின் மடத்தில் முதல்திரைமுதல் ஏழு திரைகள் இட்டுத் ததீயாராதனம் நடைபெறுகிறது. பட்டரின் பிரிய சீடரை அனந்தாழ்வான் முதல்நாளில் முதல்திரை-விருந்தினராக்கி உபசரிக்கிருர்.

பிறகு கொஞ்ச காலம் இரண்டாம் திரை-விருந்தாளியாக்குகிருர். அப்படியே தாழ்த்தித் தாழ்த்தி ஏழு திரைகளிலும் இருக்கச் செய்கிருர் அனந்தாழ்வான், ஸ்ரீரங்கத்து ஸ்ரீவைஷ்ணவரை.

இப்படி 'அவமானம்' செய்தபோதும், ஆரம்பத்தில் சிறப்பாக உபசரித்தபோதும், சீடரின் முகம் மகிழ்ந்து திகழ்கிறது! சோதனை நடக்க நடக்க முன்னிலும் ஒளியேறி மலர்ந்து மகிழ்கிறது.

கடைசியாக அனந்தாழ்வானிடம் விடைபெறுகிருர் பட்டரின் சீடர். சூரியன் உதயமாகிறது. சற்றுத் தூரத்தில் ஒரு கோழி மேட்டிலிருந்து கூவுகிறது. கோனேரிக் கரையில் ஒரு கொக்கு யோகிபோல் அசைவற்று நிற்கிறது. ததீயாராதனத்திற்காக உப்பு மூட்டை ஒன்றை மடத்தில் கொண்டுவந்து சேர்க்கிருர் ஒரு பாகவத அபிமானி.

விடைபெற்றுக் கொள்ளும் சீடர் அனந்தாழ்வானைத் தண்டனிட்டு, 'அடியேன் கேள்விக்கு இன்னும் விடை கிடைக்கவில்லையே!' என்பதை நினைவூட்டுகிறார். அனந்தாழ்வானும் தண்டனிட்டு, ணவ லட்சணம் குறித்துத் தானே கேட் நல்லது,

**கொக்கைப் போல் இருப்பான்**
**கோழி போல் இருப்பான்**
**உப்பைப் போல் இருப்பான்**
**உம்மைப் போல் இருப்பான்!**

என்று கூறிவிட்டு மடத்திற்குள்ளே போய்விடுகிறார்.

விடை பெற்ற ஸ்ரீவைஷ்ணவர் அரங்கநகரை நோக்கி விரைந்து நடக்கிறார்; சிந்தனைகளோ அனந்தாழ்வான் சொன்ன ஸ்ரீவைஷ்ணவ சூத்திரத்தைச் சுற்றிச் சுற்றி வட்டமிடுகின்றன. அரங்கத்திற்கு வந்து சேர்ந்ததும், நடந்ததைப் பட்டரிடம் விண்ணப்பம் செய்துகொள்கிறார். குரு, சீடர்களுடன் அனந்தாழ்வானின் அருமையான சூத்திரப் பொருளைப் பகிர்ந்து அனுபவிக்கிறார். நாமும் அதை ஒருவாறு உணர்ந்துகொள்ள முயல்வோம்.

முதலில் 'கொக்கைப் போல்' என்ற சொற்றொடரை நோக்குவோம். ஸ்தூலமாகப் பார்த்தால், கொக்கு வெள்ளையாயிருக்கிறது, நீர்வளமுள்ள இடங்களில் வாழ்கிறது. கவனித்துப் பார்த்தால், கொக்கு அற்ப மீன்களை அலட்சியம் செய்து பெரிய மீனைப் பிடித்துக்கொள்கிறது; அதைப் பெற அதே தியானமாக இருக்கிறது.

ஸ்ரீவைஷ்ணவனும் கொக்கைப் போல் புனித நீர்க் கரையில் வசிப்பவன். உள்ளம் வெள்ளையாய்க் கள்ளங்கவடற்ற புனித நிலையில் இருக்கும்; அறிந்தும் அறியாத குழந்தை போலிருக்கும். வழிகாட்ட ஆசாரியனைத் தேடுவதிலும், தோழமை கொள்ளப் பாகவதரை நாடுவதிலும் யோகி போலிருந்து தனக்கு வேண்டிய மீனைப் பற்றிக்கொள்ளும் கொக்கைப் போல் நடந்து கொள்வானும்.

கோழிபோலிருக்கும் ஸ்ரீவைஷ்ணவனின் நிலை என்ன? கோழி குப்பை மேட்டில் செத்தைகளை விலக்கித் தனக்கு வேண்டியவற்றை உண்டு வாழ்வதைக் காண்கிறோமல்லவா? அப்படியே ஸ்ரீவைஷ்ணவனும் வேத சாஸ்திரங்களில் சாரத்தைக் கிரகித்துக் கொள்கிறான். கடைந்தெடுத்த அமுதமாகவுள்ள ஆழ்வார்–ஆசாரியர்களின் நூல்களைச் சிறப்பாகக் கற்று ஒழுகுகிறான்.

இனி, ‘ உப்பைப்போல் இருப்பான் ’ என்பதன் பொருளைச் சற்று நோக்குவோம். ஸ்தூலமாக, ‘ உப்பில்லாப் பண்டம் குப்பையிலே ’ என்றபடி உப்பு இன்றியமையாதது. பாகவதன் தொண்டக் குலத்தினன் ஆனதால், இவனது தொண்டு சமுதாயத்திற்கு இன்றியமையாதது. ஆனால் இதைக்காட்டிலும் ஆழ்ந்த பொருளை உணர்த்துகிறது உப்பு.

அதிகப்பட்டால் நிந்திக்கப்படும், நிந்தை கூறுமிடத்து மறுமாற்றம் சொல்லாது ; தன்னை அழிய மாறிக் கறியமுது ஆகும். இது உப்பின் உயர் நிலை, ஸ்ரீவைஷ்ணவனுக்கு ஒரு முக்கிய பாடம் கற்பிக்கும் நிலை.

ஒருவன் தன்னைப் புகழும்போது ஸ்ரீவைஷ்ணவன் வெள்கி ஒதுங்கி, ‘ நீசனேன், நிறை ஒன்றுமிலேன் ’ என்று தன் குறைகளை நினைத்துப் பார்ப்பான். தன்னை ஒருவன், ‘ நீசனே ! சீலமில்லாச் சிறியனே !’ என்று நிந்தித்தபோதும் சினந்து சீறுமல், ‘ அடியேனுடைய குறைகளை நினைவூட்டியதற்கு நன்றி !’ என்று மகிழ்ந்து வாழ்வான். தொண்டுநெறியிலும் முனைந்து தன்னைச் சிறிதும் விளம்பரப்படுத்திக் கொள்ளாமல் இருப்பான் ; தன்னை அழிய மாறியேனும் பிறர் நலம் நாடுவான்.

கடைசியாக, ‘ உம்மைப்போல் இருப்பான் !’ என்பதன் பொருளையும் உணர்ந்து கொள்ள முயல்வோம். ‘ ஸ்ரீவைஷ்ணவத்வம் உம்மைப்போலிருக்கும் !’ என்றார் அனந்தாழ்வான், என்பதைப் பட்டர் தெளிவுபடுத்தினார். துளசி (திருத்துழாய்) பரிமளத்துடன் வளர்வதுபோல் இச்சீடரும் அவ்வளவு இயற்கையாக ஸ்ரீவைஷ்ணவத்துடன் வளர்ந்திருந்தார். தாம் உத்தம வைஷ்ணவராக ஒழுகி வந்தும் அதையும் அறிந்து கொள்ளாத குழந்தையுள்ளத்துடன் வாழ்ந்தார் !

இராமானுஜர் வளர்த்துவிட்ட ஸ்ரீவைஷ்ணவம் இது என்று கருதலாம். இத்தகைய ஸ்ரீவைஷ்ணவன், ‘ உண்ணும் சோறும் பருகும் நீரும் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் !’ என்று சகல பாரங்களையும் அவன் அடிகளில் ஒப்படைத்து விடுவான். பக்தியைக்கூட உபாயமாகக் கருதமாட்டான் ; திருவடிகளையே சாதனமாகப் பற்றியிருப்பான். இவனுக்கு நெறியும் குறியும் ஒன்றே.

வைஷ்ணவன் என்றால் விஷ்ணுவைச் சார்ந்தவன், விஷ்ணு சம்பந்தம் பெற்றவன். விஷ்ணு என்ற சொல்லுக்கு எங்கும் பரந்த கடவுள் என்று பொருள். ‘ சம்பந்தத்தை நாம் அறிந்து கொள்ளாமல் போனாலும், அது நம்மைவிட்டு அகலாது’ என்பர்.

சம்பந்தத்தை அறிந்துகொள்ளும்போது, 'உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது' என்பதன் முழுப் பொருளும் புலனுகும் அப்போது ச் சம்பந்தம் இறைவனுலும் ஒழிக்க முடியாத உற வா என்பது தெளிவாகும்.

'கழுத்தில் துளசி மணிமாலையையும் தாமரை மணிமாலையையும் அணிந்து கொண்டும், தோள்களில் ஆழி, சங்குகளின் கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்றும், நெற்றியில் பளபள வென்று விளங்கும் திருமண்காப்பை அணிந்து கொண்டும் இருப்பவர்கள் வைஷ்ணவர்கள்' என்று பொருள்படும் ஒரு சுலோகம் உண்டு. இதை எடுத்துக் காட்டும் காஞ்சி மகா வித்வான் ஸ்ரீ உ. வே. அண்ணங்கராசாரியர், 'ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இருக்க வேண்டிய வெளி வேஷங்களை மாத்திரம் இந்தச் சுலோகம் தெரிவிக்கிறதேயன்றி அந்தக்கரணத்தில் திகழ வேண்டிய அம்சங்களில் ஏகதேசத்தையும் தெரிவிக்கவில்லை' என்று ஒப்புக்கொள்கிருர்.

பிரகலாதனை ஸ்ரீவைஷ்ணவத்திற்கு மிகச் சிறந்த குறிக்கோளாகக் காட்டுவதுண்டு. பிரகலாதன்போல வாழ்ந்த வைஷ்ணவ ஆசாரியர்களின் வரலாற்றுத் துணுக்குகளும் நமக்குக் கிடைத்திருக்கின்றன. அவற்றுள், பட்டர் தம்மைத் தூஷித்தவர்களுக்குப் பூஷண தானமும் பீதாம்பர தானமும் செய்ததாக வரும் அந்த வரலாற்றுத் துணுக்கையும் இவர் விளக்கியுள்ளார்.

ஸ்ரீவைஷ்ணவர்களிடையே 'நைச்யாநுஸந்தானம்' என்ற வார்த்தையைப் பலரும் கேட்டிருக்கலாம். 'நீசனேன் நிறை ஒன்றுமிலேன்' என்ற அருள்வாக்கிற்கு இணங்கக் கடுமையாகத் தற்சோதனை செய்து பார்த்துத் தம் குறைகளை உணர்ந்து திருந்த முயல்வோரே உண்மையாக 'நைச்யாநு ஸந்தானம்' செய்வோர் ஆவர். மேலும் இவர்கள், தாங்கள் அநுசந்தித்த 'நீசத்தன்மை' யைப் பிறர் தம் வாயினுல் சொல்லிக் காட்டின இடத்தும் உகந்தே இருப்பர். இந்த ஸ்ரீவைஷ்ணவ நிலையை வெளியிடுகிறது பட்டர் நிந்தித்தவர்களுக்குப் பரிசு வழங்கிய செய்தி.

இத்தகைய மனப்பான்மை பகவானுக்கும் பாகவதர்களுக்கும் தொண்டு பூண்டு வாழ்வதையே குறிக்கோளாகக் கொண்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இன்றியமையாதது. 'அவர்களது குலம் தொண்டக் குலம் எனப்படும். அவர்களது ஜாதி இன்னது என்பதைப் பற்றி ஆராய்தல் அவசியமற்றது' என்றும் ஸ்ரீ உ. வே. அண்ணங்கராசாரிய சுவாமி, 'ஸ்ரீவைஷ்ணவம்'

என்ற ஒரு தொகுப்பு நூலில் 'ஸ்வதர்மம்' என்ற தம் கட்டுரையில் கூறியுள்ளார். பாகவத அபசாரத்தை மிகப் பெருங் குற்றமாகக் கருதும் ஸ்ரீவைஷ்ணவ சமயம், 'ஜன்ம நிரூபண'த்தை முதன்மையான அபசாரம் என்று ஐயந்திரிபுகளுக்கு இடமின்றிக் கண்டித்திருக்கிறது.

வேறு வகைகளிலும் பாகவத அபசாரம் தவிர்க்கப்பட வேண்டிய பெருங் குற்றமாகவே கருதப்பட வேண்டும். உதாரணமாக, 'பாகவதன் கொக்கைப் போலிருப்பான்' என்று தெரிந்து கொண்டோமல்லவா? கொக்கு நீர்வளமுள்ள இடத்தில் வசிப்பதுபோல் ஸ்ரீவைஷ்ணவன் திருவரங்கம், காஞ்சி போன்ற வளமான திவ்ய தேசங்களில் வசிப்பான் என்ற ஒரு சாதாரணப் பொருளையும் தெரிந்து கொண்டிருக்கிறோம். ஆனால் அப்படி வசிக்காமல் குக்கிராமவாசியாக இருக்கும் வைஷ்ணவனை அற்பமாக நினைப்பதும் பாகவத அபசாரம்தான். இதை இராமானுஜரின் அடிச்சுவட்டிலே நின்று, 'நம்பிள்ளை கோஷ்டியோ, நம்பெருமாள் கோஷ்டியோ?' என்று கண்டவர் பிரமிக்கும்படி காலட்சேபம் நடத்தி வந்த நம்பிள்ளை என்ற ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர் வற்புறுத்தியுள்ளார்.

ஜாதியைக் குறிப்பிடுவதே—ஜன்ம நிரூபணம் செய்வதே—பழிப்பாகும் என்பதுபோல், ஒரு வைஷ்ணவனைக் குக்கிராமவாசி என்று கருதுவதே 'வாசநிரூபணம்' என்ற பாகவத அபசாரமாகும். வசிக்கும் தலமே திவ்யதேசம் என்று மதிக்கப்பெற வேண்டும். இதற்கு உதாரணமாக ஒரு கதையும் 'நம்பிள்ளை வைபவ'த்தில் குறிக்கப்பெற்றிருக்கிறது.

ஒரு காலத்தில் மிலேச்ச சீமை ஒன்றில் ஸ்ரீவைஷ்ணவ அம்மை ஒருத்தி வசித்து வந்தாள். அந்தச் சீமைவாசிகளை இவள் திருத்த முயன்று வந்தாள் என்றும் ஊகிக்கலாம். 'தீதில் நன்னெறி காட்டி எங்கும் திரிந்து' தங்கிய இடத்தைத் தூய்மையாக்கிய தொண்டர் குழாத்தில் இவளும் ஒருத்தி எனலாம்.

இப்படி இவள் வசித்துவந்த காலத்தில், கருடன் அந்த வழியாகப் பறந்து வந்தானும். பாகவத அம்மையின் பெருமை குறித்துக் கேள்விப்பட்டிருந்ததால் 'அம்மையார் திருவடிகளைச் சேவித்துப் போவோம்' என்று நினைத்தான். உடனே ஸ்ரீவைஷ்ணவனின் மனித உருவத்தைத் தரித்துக் கொண்டான். இந்த அம்மாளின் இல்லத்திற்கு வந்தான். இவள் எதிர்கொண்டு வந்தாள். மிக்க பசியுள்ளவன் அமிர்தத்தைக் கண்டதுபோலவும், ஏழை பெருநிதியைக் கண்டதுபோலவும், மகிழ்ச்சியடைந்தாள்.

பொருள் கூறுகிறது இராமாநுஜரின் மேதை; அபேத சுருதி களான அத்வைத வாக்கியங்களுக்கு ' ஜீவன் உடம்பாகவும் அதற்குத் தெய்வம் ஆத்மாவாகவும் இருக்கும் சேர்க்கையால் ஒன்று ' என்று பொருள் உரைக்கிறது. இது விசிஷ்டாத் வைதம். இப்படி வேதப்பகுதிகளைச் சமரசப்படுத்துவதற்குத் திறவுகோலாக உதவும் உபநிஷதப் பகுதியைக் **கடக சுருதி** என்பர்.

' கடக சுருதி ' என்பதில் கடகம் என்ற சொல் பொருந்த வைப்பது என்று பொருள்படுகிறது. இந்தச் சுருதியை இராமா நுஜருக்குக் காட்டிக் கொடுத்தது, திருவாய்மொழியில் முதற் பதிகத்தில் வரும்

**உடல்மிசை உயிரென**

என்ற சொற்றொடர்தான். எனவே இராமாநுஜர் தம் விசிஷ் டாத்வைத தரிசனத்திற்கு உயிரான பொருளை நம்மாழ்வாரின் திருவாய்மொழியில் கண்டுகொண்டார் என்பது ஸ்ரீவைஷ்ணவ அறிஞர்களின் கருத்து.

அத்வைத மதத்தை நிலைநிறுத்திய சங்கரர், நம்மாழ் வாருக்கு முன்பே, ஆழ்வார்-நாயன்மார்கள் தோற்றுவித்த சைவ வைஷ்ணவ பக்தி இயக்கத்தின் பிற்பகுதியில் வாழ்ந்தார். துவைதத்தை நிலைநிறுத்திய மத்வாசாரியார் சங்கரர் காலத்துக்கு ஐந்நூறு ஆண்டுகளுக்குப் பின் வாழ்ந்தவர். இந்த இரண்டு ஆசாரியர்களுக்கும் இடையே வாழ்ந்தவர் இராமாநுஜர்.

ஆத்மாவைச் 'சித்' என்றும் இயற்கையை 'அசித்' என்றும், கடவுளை 'ஈசுவரன்' என்றும் குறிப்பிடுகிறது இராமாநுஜ சித்தாந் தம். பிரமம் ஒன்றே சத்தியமும் நித்தியமுமாக இருக்கிறது என்கிறது அத்வைதம்; விசிஷ்டாத்வைதமோ, சித் அசித் ஈச்வரன் என்ற முப்பொருளும் நித்தியம் என்றும், சித்-அசித் என்ற வகுப்பில் அடங்கியுள்ள பொருள்களெல்லாம் ஈச்வரனுக் குச் சரீரம் என்றும் கூறுகிறது.

பகவானுடைய திருவருளால்தான் மோட்சம் அல்லது விடுதலை கிடைக்கும்; மோட்ச வீடாகிய பரமபதத்திலும் கைங் கரியம் என்ற அனுபவம் உண்டு; இந்த அனுபவத்துடன் பகவானுடைய திருக்குணங்களையும் அனுபவித்துக் கொண்டு பரமானந்தம் அடைகிறார்கள் முக்தர்கள். இது இராமாநுஜரின் விசிஷ்டாத்வைதம். ஆழ்வார்களின் பக்திக் கொள்கைகளை ஒட்டி, நாதமுனிகள் ஆளவந்தார் என்ற பேராசிரியர்களின் அடிச்சுவட்டிலே சென்று இராமாநுஜர் தமது சித்தாந்தத்தை

வளர்த்துப் புதிய உயிரும் புதிய ஒளியும் புதிய அழகும் பெறச் செய்திருக்கிறார்.

இராமாநுஜரின் விசிஷ்டாத்வைத மார்க்கத்தைப் பக்தி மார்க்கம் என்று சிறப்பித்துப் பேசுவதுபோல், சங்கரரின் அத்வைத மார்க்கத்தை ஞான மார்க்கம் என்கிறார்கள். சங்கரர், 'உயிர்க்குலம் ஒன்றே' என்ற கொள்கையைக் கொண்டு இந்து மதத்திற்கு ஆழ்ந்தகன்றதோர் அடிப்படையை அமைக்க முயன்றார். இராமாநுஜரோ, உயிர்களையும் இறைவனையும் பக்தி என்னும் அன்புப் பாசத்தால் இணைத்து இந்துசமயத்தை வானளாவிய ஒரு கோபுரமாக நிலைநிறுத்த முயன்றார். இந்த இரண்டு சித்தாந்தங்களுக்கிடையே எத்தனையோ வாதங்களும் பூசல்களும் பல நூற்றாண்டுகளாக நடைபெற்று வந்திருக்கின்றன.

அத்வைத வேதாந்தத்தை நிலைநிறுத்திய சங்கரரும், வாழ்க்கைக்குப் பக்தி பலன் தரும் என்ற கொள்கையை ஒப்புக்கொள்கிறார்; ஆனால் பக்தனுடைய நிலைக்கும் மேலான நிலை அத்வைத ஞானியின் நிலை என்பது சங்கரரின் தேர்ந்த கொள்கை. இராமாநுஜ சம்பிரதாயத்தைச் சேர்ந்த பக்தர்களோ, ஞானியின் கல்விகேள்விகள் நிறைந்த உள்ளத்தைக் காட்டிலும் பக்தரின் கள்ளங்கவடற்ற குழந்தை உள்ளமே பகவானுக்கு உகப்பானது என்கிறார்கள்.

தத்துவக் கொள்கைகளைப் பற்றிய சிந்தனைகளும் தியானங்களும் ஆராய்ச்சிகளும் பல்வேறு சாதனங்களும் தெய்வத்தைக் காட்டுவன அல்ல; அருள் நெறியே அன்பனும் அழகனுமாகிய புருஷோத்தமனைக் காட்டவல்லது. எத்தகைய முயற்சியாலும் பயிற்சியாலும் பகவானைக் காணமுடியாது, கோரமான மாதவங்களாலும் சடங்குகளாலும் காணமுடியாது. என்றும் எங்குமுள்ள பரம்பொருள் புருஷோத்தமனாக, தெய்வக் காதலனாகத் தன் அருளால் தன்னைக் காட்டிக் கொடுக்கிறது என்கிறார்கள்.

குணம் என்ற குன்றேறி நின்று நல்வினைகளைச் செய்து நல்லறம் புரிந்து நன்மைகளைத் தேடிக் குவித்தாலும் இறைவனை எட்டிப் பிடிக்க முடியாது; ஆனால் இறங்கி வந்து நம்மைப் பற்றிக் கொண்டு பாதுகாக்கும் பரிவும் ஆற்றலும் பரம்பொருளின் அருளுக்கு உண்டு என்பர்.

பகவானுடைய அன்பையும் காதல் என்றே குறிப்பிடலாம். பகவானுடைய காதல் பக்தனுடைய காதலைக் காட்டிலும் தீவிரமானது; அதி தீவிரமானது. இத்தகைய பக்திமதக் கொள்கையை ஸ்ரீவைஷ்ணவத்தில் தெளிவாகக் காண்கிறோம்.

உண்மையில், பக்தரின் இதயத்தைத் தேடித் தவிக்கிறது இறையருள். இந்த அருள் நமது நம்பிக்கையை, அன்புக் காதலை, சரணாகதியை நாடுகிறது; நம்முடைய தெய்வநாட்டத்திற்குரிய வழியையும் காட்டுகிறது.

**வான்ஏற வழிதந்த**
**வாட்டாற்ருன் பணிவகையே**
**நான்ஏறப் பெறுகின்றேன் ;**
**நரகத்தை நகுநெஞ்சே !**

என்று நம்மாழ்வார் எக்களிப்புடன் பேசுகிருரே, அந்த வழியைக் காட்டுவதற்காகவே இராமாநுஜர் பிரசாரம் செய்தார்; ஸ்ரீபாஷ்யம் செய்தார், வேதாந்திகளுடன் வாதாடினர்—ஏன், இதற்காகவே வாழ்ந்தார்; நீண்ட பெருவாழ்வு வாழ்ந்தார். இதற்காக, அனந்த கல்யாண குணக்கடலான புருஷோத்த மனைச் சுட்டிக் காட்டினர்.

சங்கரரின் தெய்வமோ நிர்க்குணப் பிரமம்; அதாவது, குணங்களே இல்லாத பரம்பொருள். குணங்களோடு கூடிய கடவுளாகிய சகுணப் பிரமத்தையும் சங்கரர் ஒப்புக் கொள்ளத் தான் செய்கிருர். ஆனல் இக்கடவுளை வழிபடுவது தாழ்ந்த படி என்று கருதுகிருர். தாழ்ந்த அறிவுள்ளவர்கள், சாமானிய மக்கள், பக்தி பண்ணுவதற்குச் சகுணப் பிரமம் போதும், ஆனல் ஞானம் என்ற கத்திமுனையில் நடக்க வல்லவர்களான தீரர் களுக்கு உரிய மேலான படி அத்வைதம் தான் என்பர்.

தாழ்ந்த அறிவு என்பது 'அவித்தை' தான், வித்தை அல்லாததுதான்; மாயையும் அவித்தையும் உள்ள உலகத்திற்கு உரியது தான் இஷ்ட தெய்வத்திற்குப் பக்தி பண்ணிக் கொண்டிருப் பதும். ஆனல் மேலான அத்வைதப் படியில், தேவர்களின் வழிபாடோ, தேவ தேவன் ஒருவனது வழிபாடோ இன்றியமைய யாதது அல்ல. இரண்டற்ற ஒரே பொருளான பிரமமும் (அதாவது பரமாத்மாவும்) ஜீவாத்மாவும் ஒன்றே. முடிவில் அதுவுடன் அதுவாய்ப் போவது ஜீவாத்மா. இது அத்வைத வேதாந்தம்.

இக் கொள்கையை இராமாநுஜர் வன்மையாகக் கண்டித் தார். அத்வைதம் என்ற ஞான கோபுர சிகரத்திலிருந்து கீழ் நோக்கிப் பக்திமதத்தைப் பார்ப்பது என்ற அந்தக் கொள்கையை முற்றும் மறுத்தார். சிறுவராக யாதவப் பிரகாசரிடம் வேதாந்தக் கல்வி கற்றுவந்தபோதே அந்த ஆசிரியரின் அத்வைதக் கொள் கையை மறுக்கத் துணிந்தவர், பரிபூர்ண பக்திக்குத் தம்

உள்ளத்தைக் கொள்கலன் ஆக்கிக் கொண்டு; அத்வைத வேதாந்தத்தை அவர்களுடைய வாத நெறியிலேயே தாக்கி முறியடிக்க முயன்றார்.

எனினும், தர்க்கங்களாலோ குதர்க்கங்களாலோ, வாதங்களாலோ விதண்டாவாதங்களாலோ முடிவு கட்ட முடியாத பகவத் விஷயஞானம் என்ற பிரதேசத்தில் இவருள்ளம் சஞ்சரித்த வண்ணமாயிருந்தது என்று குருபரம்பரை வரலாறுகள் ஒருமுகமாய்த் தெரிவிக்கின்றன. இவர் போராடியது வரட்டுத் தத்துவத்திற்காக அல்ல; ஒரு மகத்தான, சிகரமான, சமய உண்மைக்காகத்தான், ஞான பக்தி என்ற அனுபவத்திற்காகத்தான்.

இராமாநுஜர் நிலைநிறுத்தியுள்ள ஸ்ரீவைஷ்ணவ விசிஷ்டாத்வைதத்தை அருள்–நெறி என்று சிறப்பாகக் குறிப்பிடலாம்.

**நன்னெஞ்சே! நம்பெருமான்**
**நமக்குஅருள்தான் செய்வானே**

என்பது நம்மாழ்வாரின் பரம விசுவாசச் செய்தி. முதலாழ்வாரான பொய்கையாரின் நன்னம்பிக்கை,

**உளன்கண்டாய் நன்னெஞ்சே!**
**உத்தமன்**

என்ற நற்செய்தியை நம்மாழ்வாருக்கும் முன்பே அறிவித்துவிட்டது. இத்தகைய புருஷோத்தமனையும் அவனது அருள்நெறியையும் காட்டும் திவ்யப் பிரபந்தங்கள் என்ற பக்திப் பூங்கோயிலுக்கு ஞானப் பொற்கோட்டை கட்டி வைத்திருக்கும் இராமாநுஜரின் தரிசனம் சாராம்சத்தில் அருள்நெறிச் சித்தாந்தம் தான்.

ஆழ்வார்கள் தாங்கள் கண்ட ஸ்ரீவைஷ்ணவத்தைத் 'தீதில் நன்னெறி' என்று கருதினர். இச்சொற்றொடரைக் குலசேகராழ்வார் வாக்கில் காண்கிறோம். இந்த நெறியைக் கண்டு காட்டிய ஆழ்வார்களை 'நன்னெஞ்சர்' என்று கூறுவதும் உண்டு. இவர்களுடைய இந்த நெறியை 'அன்பு மதம்' என்றும் 'நம்பிக்கை மதம்' என்றும் குறிப்பிடுவது பெரிதும் பொருந்தும். 'மதம்' என்று கூறுவதைக் காட்டிலும் நெறி என்றும் தரிசனம் என்றும் கூறுவது நலம். இந்த நெறியை ராஜ நெறியாகச் செப்பனிட்டுக் காட்டுகிறது இராமாநுஜரின் மேதை.

பொதுவாக இந்து மதத்தைச் சனாதன தருமம் என்றால், ஆழ்வார்கள் காலந்தொட்டுத் தழைத்துவந்து இராமாநுஜரின் அரும்பணிகளால் செழித்து வளர்ந்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவத்தை அந்தச் சனாதன வைதிக தருமமே அரணாக அமையப்பெற்ற 'கருணையங் கோயில்' என்று காட்டலாம். இக்கோயிலை அடைய

இராமாநுஜருக்கு வழிகாட்டியவர்கள் ஆழ்வார்களும் பூர்வ ஆசாரியர்களான நாதமுனிகள், ஆளவந்தார் முதலானவர்களும் ஆவர். ஆழ்வார்கள் வழிகாட்டினர் என்பதற்கு இராமாநுஜர் காலத்தில் தோன்றிய 'இராமாநுச நூற்றந்தாதி'யே சாட்சி.

ஸ்ரீவைஷ்ணவத்தைச் சம்பிரதாயம் என்றும் குறிப்பிடுவதுண்டு. மிகச்சிறந்த குலதனம் என்று பொருள்; தாயம் என்ருல் குலதனம். வேதமுனிவர்கள் ஈட்டிவைத்த குலதனம், கட்டிப் பொன் ஆபரணமாவதுபோல், ஆழ்வார்களின் வாயிலாக மாறிப் பிறந்து எல்லா மக்களுக்கும் சேமநிதியாகி விட்டது. இக்குல தனத்தை ஸ்ரீபாஷ்யத்தின் வாயிலாகப் பண்டிதர்களுக்கும் நுண்ணறிவாளர்களுக்கும் சுட்டிக்காட்டுகிருர் இராமாநுஜர்; குறிப்பாகவும் வெளிப்படையாகவும் தம் வாழ்க்கை மூலமாகவும், உபதேசங்கள் வாயிலாகவும் பாமரர் உள்ளிட்ட மக்களுக்கெல்லாம் வாரி வழங்க முயன்றிருக்கிருர்.

நன்னெறி என்ற சன்மார்க்கம் 'தீதில் நன்னெறி' என்ற சம்பிரதாயத்தின் இன்றியமையாத பகுதிதான். எனினும் ஒழுக்க நெறியையே ஒரு மதமாக்கிக் காட்டும் அறிவுமதங்களில் ஒன்றல்ல ஸ்ரீவைஷ்ணவம். 'அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது; நாம் அவனது கருவி' என்று எண்ண எண்ண, 'நான்' தேய்ந்து போகும்; அருள்நெறியில் சென்று சரணுகதி செய்து பக்திக்கு உள்ளத்தையும் கைங்கரியத்திற்கு வாழ்க்கையையும் உரிமையாக்குவது எளிமையாகிவிடும். அப்போது ஒழுக்கம் தானே வந்துவிடும்; பக்தியிலும் ஒழுக்கத்திலும் புலனடக்கம் சித்திக்கும். இத்தகைய நம்பிக்கைக்குத் தத்துவ அடிப்படை அமைத்திருப்பது இராமாநுஜரின் விசிஷ்டாத்வைதம்.

தம் காலத்திலுள்ள தத்துவக் கொள்கைகளேயும் சமயக் கருத்துகளேயும் அலசி ஆராய்ந்தபின்பே இராமாநுஜரின் ஆழ்ந்தகன்ற நுண்ணறிவு ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தை ஒரு முழுக்கட்டடமாக உருவாக்கியிருக்க வேண்டும். இம்முழுக் கட்டடத்தை ஸ்ரீபாஷ்யத்தில் மட்டும் கண்டுகொள்வதைக் காட்டிலும், இராமாநுஜரது வாழ்க்கையும் உபதேசங்களும் பற்றிய ஐதிகங்களேயும் ஒழுங்குபடுத்தி ஆராய்ந்து பயன்படுத்திக்கொண்டும் பார்க்க வேண்டும். அப்போது திருவரங்கம்-பெரியகோயிலேப் போல் ஸ்ரீவைஷ்ணவம் என்ற சித்தாந்தப் பெருங்கோயிலும் நம் அகக்கண்ணுக்கு இலக்காவதைக் காணலாம்.

நம்மாழ்வாரைப் பாரதம் பாடிய வில்லிபுத்தூரர் ‘ தத்துவத்தின் முடிவுகண்ட சதுமறைப் புரோகிதன் ’ என்கிருர். இராமாநுஜரை, அதே தத்துவத்தின் முடிவை ஸ்ரீபாஷ்யத்திலும் வேறு நூல்களிலும் உபதேசங்களிலும் தம் வாழ்க்கை நெறியிலும், நிர்வாகத் திறனிலும்கூட நிலைநாட்ட முயன்ற நிகரற்ற ‘புரோகிதர்’ எனலாம். தத்துவ சிகரத்தை வேதாந்த பாஷையில் காட்டுகிறது ஸ்ரீபாஷ்யம் ; ஆழ்வார்கள் தோற்றுவித்த பாகவத பரிபாஷையில் நிலைநாட்டுகின்றன இராமாநுஜரின் வாழ்க்கை வரலாறும் அருளுரைகளும்.

ஸ்ரீபாஷ்யம் ஆழ்வார்களையோ, அவர்களது கொள்கைகளையோ வெளிப்படையாகச் சுட்டிக் காட்டவில்லை. தமிழர் அல்லாதவர்களையும் காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரையிலுள்ள பண்டிதர்களையும் வசப்படுத்துவதற்காக எழுந்ததுதானே இப்பேருரை. எனினும், இறைவன் உலகத்தைச் சரீரமாகக் கொண்டு தான் சரீரியாக இருக்கிருன் என்ற உயிர்நிலைக் கொள்கை நம்மாழ்வாரின் அரும்பெருங் கொள்கையைத் தழுவியதுதான்.

இராமாநுஜரின் ஸ்ரீவைஷ்ணவம் வேத வேதாந்த அடிப்படையில் மட்டுமல்ல, தமிழகத்தில் தொன்று தொட்டு வழங்கி வந்து ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் தோய்ந்து உரம் பெற்றிருந்த அடிப்படையிலும் அமைக்கப் பெற்றிருக்கிறது. இதனுல்தான் ஸ்ரீவைஷ்ணவத்தை ‘உபய வேதாந்தம்’ என்கிருர்கள். இராமாநுஜருக்கு வாழ்க்கையில் துணைபுரிந்த ‘குலபதி’யாகிய நம்மாழ்வார் ஸ்ரீபாஷ்யத்திலும் தோன்ருத் துணையாக உதவியிருக்கிருர் என்பதை ஸ்ரீபாஷ்யத்தையும் திவ்யப் பிரபந்தங்களையும் ஒப்பிட்டுக் கசடறக் கற்றிருப்பவர்கள் நன்கு அறிவர்.

ஸ்ரீவைஷ்ணவம் என்ற அன்புப் பெருநெறி, ‘ கண்டதே காட்சி, கொண்டதே கோலம் ’ என்றிருக்கும் லோகாயதர்களும் திருந்திப் பேறு பெறுவதற்கு இடமளித்து வந்திருக்கிறது. சிற்றின்பப் பிரியர்களையும் திருத்திப் பணி கொள்ளும் சக்தி இந்தச் சமய நெறிக்கு உண்டு. பிள்ளையுறங்கா வில்லிதாசர் தம் மனைவிமீது கொண்டிருந்த காதலை இறைவன் மீது பக்திப் பெருங் காதலாக மாற்றி வளர்த்துக் கொண்டு பரம வைஷ்ணவராக வாழ்க்கை நடத்தவில்லையா ?

திருடர்களும் திருந்தி உய்ந்து போக வழிகாட்டுகிறது ஸ்ரீவைஷ்ணவம் என்ற பக்திப் பெருநெறி. இந்தச் சிறப்பியல்பைத் திருமங்கையாழ்வாரைப் பற்றிய கதைகள் சுட்டிக்காட்டுகின்றன.

உள்ளெலாம் உருகிப் பச்சாத்தாபக் கண்ணீர் வடித்து எத்தகைய கள்வனும் திருந்திப் பேறு பெற முடியும், பகவானது அருள் அவ்வளவு விசாலமானது—என்கிறது ஸ்ரீவைஷ்ணவம்.

திருடர்கள் மட்டுமா திருடர்கள்?—இறைவனுக்குரிய ஆத்மாவை 'நான்' என்று சொந்தமாக்கிக் கொள்ளப் பார்ப்பதே களவு தான்; இது 'ஆத்மாபஹாரக் களவு'—என்கிறது ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தம். இந்த இருவகைக் களவுகளுக்கு மிடையே வேறு எத்தனை வகைக் களவுகள்! பிறர் பங்கைத் திருடுவோர், சீலமுள்ளவர் போல் கோலம் பூண்டு வாழும் ஆசாரக் கள்வர்கள்!...

புறச்சமயிகளையும் இராமாநுஜர் திருத்திப் பாகவதர்களாக்கிக் கொண்டார் என்பதற்குப் பல சான்றுகளை இவர் வாழ்க்கையிலே காண்கிறோம். அத்வைதிகள் விசிஷ்டாத்வைதிகளானது மட்டுமா?—ஜைன பௌத்தர்களையும் இவர் தம் பாகவதப் பெருந்திரளில் சேர்த்துக் கொண்டார். ஒருமை உள்ளத்துடன் ஒரே குறியாகத் திருமாலைப் பரம்பொருளாய்க் கருதிச் சரணமடைய விரும்பியவர்கள் அனைவரும் வைஷ்ணவர்கள், விஷ்ணு எங்கும் பரவியிருப்பதால் உலகமெல்லாம் வைஷ்ணவ மயமாக வேண்டும் என்று பொற்கனவு கண்டார் இராமாநுஜர்.

கதியற்றவர்களுக்கெல்லாம் கதியாவது வைஷ்ணவம் என்ற கருத்துடன் நாற்பாற் குலத்திற்கும் கீழ்ப்பட்டவர்கள் என்று கருதப்பட்டிருந்தவர்களைத் திருக்குலத்தாராக்கித் திருத்த முயன்றது இராமாநுஜரின் திருவுள்ளம். சாஸ்திரங்களிற் கூறப்படும் வருணாசிரம தருமங்களைப் பழைய தூய வைதிக நிலையில் ஸ்ரீபாஷ்யம் ஒப்புக்கொள்ளுகிறது என்பது வெளிப்படை. ஆனால் பாகவதர் குழாத்தில் 'ஜன்ம நிரூபணம்' (சாதியைக் குறிப்பிடுவது) கூடாது என்ற கொள்கை அனுஷ்டானத்திலும் இருந்தது என்பதற்கு இராமாநுஜரது வாழ்க்கைக் கதைகளும் உபதேசங்களும் சான்று தருகின்றன.

பாகவதர்களுக்கிடையே சகோதர தர்மம் நிலவவேண்டும் என்ற ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தக் கொள்கையை உள்ளத்திற் கொண்டே கவிச்சக்கரவர்த்தியான கம்பன் தமிழ் மக்களுக்குப் பேரிதிகாசமாகத் தான் இயற்றிவைத்திருக்கும் இராமாயணத்தைச் சரணாகதி நூலாகக் காட்டுவதுடன் சகோதர தரும நூலாகவும் அமைத்துக் காட்டுகிறான்.

நீதியால் வந்ததொரு
நெடுந்தரும நெறிஅல்லால்
சாதியால் வந்தசிறு
நெறி அறியான்

என்று விபீஷணனைக் குறித்துக் கும்பகர்ணன் கூற்றாகக் கம்பன் வெளியிட்டிருக்கும் கொள்கை, இராமாநுஜ சித்தாந்தத்தின் சிறப்பியல்புகளில் ஒன்றைத் தழுவி விளைந்திருப்பதுதான் என்று ஊகிப்பது தவறாகாது.

விபீஷண சரணாகதியில் ஸ்ரீவைஷ்ணவர்கள் சரணாகதியின் உச்சநிலை ஒன்றைக் காண்கிறார்கள். சத்தியத்துடனும் தருமத்துடனும் உறவுகொண்ட விபீஷணன் இராவணனுடன் தனக்குள்ள உறவை அறுத்துக் கொண்டான். 'அவன் எனக்கு அண்ணனுமில்லை, அரசனுமில்லை, நான் அவனுக்குத் தம்பியுமில்லை' என்று துணிந்து இராமனை வந்தடைந்தான். அரக்கர் குலத்தவன் இராமகுலமாகிய இட்சுவாகு குலத்தினன் ஆகிவிட்டான் என்பது ஸ்ரீவைஷ்ணவர் கொள்கை. எனவே, விபீஷணனைத் தன் கடைசித் தம்பியாக—தன் தந்தையின் கடைக்குட்டியாக—இராமன் ஒப்புக் கொண்டான் என்ற கம்பசித்திரமும், இராமாநுஜரின் ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தைத் தழுவிய உயிர்ச் சித்திரம்தான்.

* * *

ஆசாரிய மணிமாலையில் நடுநாயகமாகத் திகழும் இராமாநுஜரின் ஸ்ரீபாஷ்யத்தால் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்திற்கு விசிஷ்டாத்வைத வேதாந்தக் கோட்டை கிடைத்திருக்கிறது. இவர் ஸ்ரீபாஷ்யத்தாலும் தம் வாழ்க்கையாலும் தனிப்பெரும் பணிகளாலும் காட்ட முயலும் பரம்பொருள், மூளைக்கும் தத்துவ சிந்தனைகளுக்கும் தேவைப்படும் தெய்வமல்ல ; மக்களின் இதயமும் ஆன்மாவும் தேடித் தவிக்கும் அன்புருவாகிய—அருள்நிதி.

இந்த அருள்நிதியாகிய அழகனை 'உடையவன்' என்று கூறுகிறோம். உலகத்தில் உள்ளும் புறமுமாயிருந்து காப்பாற்றும் அருள்நிதியின் உடைமைதானே உலகம். இப்படி உடையவனைக் காட்டிய இராமாநுஜரை உடையவர் என்கிறோம். அன்பினால், தியாகத்தால், நம்மை உடையவர் அல்லவா இவர்? உடையவனாகிய பகவானை எம்பெருமான் என்று ஆர்வத்துடன் குறிப்பிடும் ஸ்ரீவைஷ்ணவர்கள், இராமாநுஜரை எம்பெருமானார் என்று குறிப்

பிடுவதும் கவனிக்கத் தக்கது. இப்படிக் குறிப்பிடுவதிலிருந்தே விஷ்ணுமதமாகிய ஸ்ரீவைஷ்ணவத்தை இவர் எப்படியெல்லாம் பேணி வளர்த்திருக்கிறர் என்பதை உய்த்துணர்ந்து கொள்ள லாம்—இல்லையா?

---

# பின்னுரை

சித்திரம் எழுதுவதில் வல்லவள். தலைவனது உருவத்தை எழுதிப் பார்த்தாவது பிரிவுத் துயரத்தை மறந்திருக்கலாமோ என்று நினைக்கிறாள். வரிச்சித்திரம் எழுதி வண்ணம் தீட்டிப் பார்க்கிறாள். ராஜாதி ராஜனும் தேவாதி தேவனுமாகிய பெருமாளின் காதலி இவள்.

ரூபசித்திரத்தை முடிசூட்டிப் பார்க்கிறாள். உலகங்களையெல்லாம் வாழ்விக்கும் மணிமா மகுடத்தைப் பச்சைப் பசுந்துழாய் மாலை அணி செய்கிறது. ஆனால் 'இந்த முடிமாலையில் துளசி மணம் கமழவில்லையே!' என்று பிரமிக்கிறாள்.

இரு விழிகளும் மலர விழிக்கின்றன—விரிந்து நீண்டு காதளவும் மோதுவதுபோல. 'என்னை நோக்கித்தான் விழிக்கிறான் தலைவன்' என்று திருப்தியடைகிறாள். ஆனால் அதே சமயம் 'இந்த விழிகளில் அந்த அருள் அலையெறியவில்லையே!' என்று மயங்குகிறாள்.

பவளம் போன்ற உதடுகள் மலர்ந்திருக்கின்றன. 'ஆனால் அந்த மகிழ்ச்சி தோய்ந்த குறுநகையைக் காணவில்லையே!' என்று திகைக்கிறாள். அழகனின் மார்பில் கௌஸ்துப மணியும் அணியாக அமைந்திருக்கிறது. 'ஆனால் இந்த மணியில் சுடர் வீசவில்லையே!' என்கிறாள். ஆபரணத்திற்கும் ஆபரணமான திருமேனியின் ஜோதியால் கௌஸ்துப மணி பெற்றிருக்கும் ஜொலிப்பை இங்கே காண முடியவில்லை என்பது குறிப்பு.

பத்மநாபன் அல்லவா பகவான்? இந்த உந்தியங் கமலத்தின் மலர்ச்சிதானே படைப்பு! ஆனால் அனைத்துயிரும் எங்கே?

திருவடித் தாமரையில் கங்கை உண்டு என்பர். அந்த ஸ்ரீபாத தீர்த்தத்தையும் இந்தக் காதலி அழைத்துக் காட்டியிருக்கிருள். இப் போது முன்தானையால் ஒற்றிப் பார்த்து, 'ஐயோ! ஈரமும் காணேன்' என்று ஆற்ருமைப் படுகிருள். 'எழுத அரிய பெருமான் நம் தலைவன் என்பது இப்போது நன்கு புலனுகி விடுகிறது.

'எழுத அரிய பெருமான்என்று
எண்ணுது, எழுதி இருந்தேனே!'

என்று ஏங்குகிருள். (இது பிள்ளைப் பெருமாளையங்காரின் திருவரங்கக் கலம்பகத்தில் 3–வது பாட்டில் வருவது.)

இந்தக் காதலியின் நிலைதான் இந்த நூலை எழுதி முடித்த அடியேனது நிலையும்!

பி. ஸ்ரீ.

# ஐந்து வார்த்தைகள்

அம்மங்கி அம்மாள் இராமாநுஜரின் திருவடிகளில் தண்ட னிட்டு, 'அடியேன் திருக்கண்ணபுரம் போகிறேன், விடை கொள்ளு கிறேன்' என்று விண்ணப்பஞ் செய்தபோது இராமாநுஜர் ஐந்து வார்த்தைகள் சொன்னுர்:

1. அக்கினிச் சுவாலையை அணுகாதே;
2. அசுசியை மிதியாதே;
3. அருநஞ்சைத் தின்னுதே;
4. அபலைகளோடு நகையாதே;
5. ஆத்தரோடு கூடிவாழ்.

# முக்கியமான சில காலக்குறிப்புகள்

*பக்தி இயக்கம் ஆறும் நூற்றுண்டில் தொடங்கியது என்று ஊகிக்கலாம். தேவாரம் பாடிய மூவருள் அப்பரும் சம்பந்தரும் கி. பி ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந்தார்கள். கி. பி. 600 முதல் 630 வரை ஆட்சி செலுத்திய பல்லவ மகேந்திர வர்மன்–1 சமணனுக இருந்து அப்பர் சுவாமிகளால் ஆட்கொள்ளப்பட்டுச் சைவனுனன். அப்பரும் சம்பந்தரும் சுந்தரரும் தேவாரம் பாடியவர்கள். சுந்தரர் எட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர் என்பது ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு. வையாபுரிப் பிள்ளையின் கருத்து.*

*திருவாசகம் பாடிய மாணிக்கவாசகர் ஒன்பதாம் நூற்றுண்டின் இறுதிப் பகுதியில்–அதாவது 862 முதல் 880 வரை ஆட்சி செலுத்திய – இரண்டாம் வரகுண பாண்டியன் காலத்தில் வாழ்ந்தவர். இவரையும் சேர்த்துச் சைவ சமயாசாரியர் நால்வர் என்று கூறுவர்.*

*ஆழ்வார்கள் பன்னிருவரும், ஏறக்குறைய சைவ சமயாசாரியர்கள் வாழ்ந்த காலப்பகுதியிலே – அதாவது ஏழாம் நூற்றுண்டு முதல் ஒன்பதாம் நூற்றுண்டின் இறுதி வரையுள்ள காலப் பகுதியில்–வாழ்ந்தார்கள். பொய்கை, பூதம், பேய் என்ற முதல் மூன்று ஆழ்வார்களும் கி. பி. ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந் திருக்கக்கூடும். நம்மாழ்வார், மாணிக்கவாசகர் வாழ்ந்த அதே நூற்றுண்டில் அவருக்குமுன் வாழ்ந்திருக்க வேண்டும் என்பது இப் போதுள்ள ஆராய்ச்சி நிலை.*

*கி. பி. 731 டிஸம்பர் 18ம் தேதியில் திருப்பாவை தோன்றியதாக ஆராய்ச்சி அறிஞர் திரு. மு. இராகவையங்கார் கருதுவது பொருந்து வதே. ஆண்டாளும் இவளது வளர்ப்புத் தந்தையான பெரியாழ் வாரும் எட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்தார்கள். இந்த நூற்றுண்டின் இறுதியில் வாழ்ந்தவர் திருமங்கையாழ்வார்.*

*இந்தப் பக்தி யுகத்திற்கு இடையே வாழ்ந்தவர்தாம் அத்வைத வேதாந்தத்தை நிலைநிறுத்திய ஆதிசங்கரரும். இவர் கி. பி. 788–ல் தோன்றித் தம் முப்பத்திரண்டாம் வயதில்–அதாவது கி. பி. 820–ல் மறைந்தார்.*

துவைத மதத்தை நிலைநிறுத்திய மத்வாசாரியர், சங்கர காலத்திற்குச் சுமார் நானூறு ஆண்டுகளுக்குப் பின் வாழ்ந்தவர் இவர் கி. பி. 1198 முதல் 1275 வரை – அதாவது எழுபத்தேட வயது வரை வாழ்ந்தார்.

அத்வைதம், துவைதம் என்ற முரண்பட்ட இருவகை வேதாந்த கொள்கைகளை நிலைநிறுத்திய சங்கரர், மத்வர் காலங்களுக்கு இடையே வாழ்ந்தவர், விசிஷ்டாத்வைதத்தை நிலைநிறுத்திய இரா மாநுஜர். சங்கரர் என்ற ஞான சூரியன் மறைந்து இரண்டு நூற் றுண்டுகள் ஆவதற்குள் இராமாநுஜர் தோன்றினர். மத்வர் தோன் றுவதற்கு நூற்றெண்பது ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது இராமா நுஜரின் தோற்றம்.

ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரிய பரம்பரையில் முதல்வர் நாதமுனிகள் ஆழ்வார்களின் அருளிச் செயல்களான நாலாயிர திவ்யப் பிரபந் தத்தைத் தொகுத்த இவர் கி. பி. பத்தாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர். இவரது பேரர் ஆளவந்தார் என்ற யாமுனாசாரியர். இவருக்குப் பின் ஸ்ரீவைஷ்ணவப் பிரசாரத்தை உச்ச நிலைக்குக் கொண்டு வந்தவர் 1017 முதல் 1137 வரை வாழ்ந்த இராமாநுஜர்.

சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு. இவை இராமாநுஜர் காலத்திற்குப் பின் தோன்றித் திகழ்ந்தன. இராமாநுஜர் பெரு வாழ்வு வாழ்ந்து தனிப்பெரும் பணிகள் புரிந்து மறைந்தார், கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டின் முற்பகுதியில். அதே நூற்றுண்டில் பிறந்து பதின்மூன்றும் நூற்றுண்டின் முற்பகுதியில்—அதாவது கி. பி. 1223–ல் காலஞ்சென்ற மெய்கண்ட தேவர் தமிழில் இயற்றிய பன் னிரண்டு சூத்திரங்களே சைவ சித்தாந்தத்திற்கு ஆதாரமும் அடிப் படையுமாகும். இச்சூத்திரங்கள் சிவஞானபோதம் என்று பெயர் பெற்றுப் பிரசித்தமாக வழங்குகின்றன. பிரபலமான சைவ மடங் களும் பதினான்காம் நூற்றுண்டு முதல் சைவ சித்தாந்தத்தின் அரண் களாக அமைந்து தொண்டாற்றி வந்திருக்கின்றன.

# ஸ்ரீ இராமானுஜர் விஜயம் செய்த தலங்கள்

இராமானுஜர் விஜயம் செய்ததாகக் குருபரம்பரைகள் குறிக்கும் தலங்கள்

திருவரங்கம்
கும்பகோணம்
(குடந்தை)
திருவாலி திருநகரி
திருமாலிருஞ்சோலை
ஸ்ரீவில்லிபுத்தூர்
திருப்புல்லாணி
சேது
திருப்புளிங்குடி
ஆழ்வார் திருநகரி
(திருக்குருகூர்)
திருக்கோளூர்
திருக்குறுங்குடி
திருப்பதிசாரம்
(திருவண்பரிசாரம்)
திருவாட்டாறு
திருவனந்தபுரம்
வேறு மலையாளத்
திருப்பதிகள்
மேலைக் கடற்கரை
வழியாக வடநாடு
வட மதுரை
கோகுலம் (ஆய்ப்பாடி)
கோவர்த்தனகிரி
பிருந்தாவனம்
சாளக்கிராமம்

அயோத்தி
பிரயாகை
குருக்ஷேத்திரம்
ஹரித்வாரம்
காசி
கயை
கண்டம் என்ற கடிநகர்
நைமிசாரணியம்
பதரிகாச்ரமம்
காஷ்மீரம்—ஸ்ரீநகர்
ஜகந்நாதம் (பூரி)
ஸ்ரீ கூர்மம்
ஸ்ரீகாகுளம்
வாரங்கல்
அஹோபிலம்
திருமலை (திருப்பதி)
திருவல்லிக்கேணி
திருநீர்மலை
மதுராந்தகம்
காஞ்சிபுரம்
திருவயிந்திரபுரம்
வீரநாராயணபுரம்
(காட்டுமன்னார் கோவில்)
திருவரங்கம்
(ஸ்ரீரங்கம்)

# நூலின் ஆக்கத்திற்கு உதவிய துணை நூல்கள்


*ஆறாயிரப்படி குருபரம்பரை ப்ரபாவம்*

*மூவாயிரப்படி குருபரம்பரை ப்ரபாவம்*

*பன்னீராயிரப்படி குருபரம்பரை ப்ரபாவம்*

*வடிவழகிய நம்பி தாசர் இயற்றிய குருபரம்பரை ப்ரபாவம்— (தமிழ் விருத்தங்களில் சில நூற்றுண்டுகளுக்கு முன் தோன்றியது.)*

*திவ்ய சூரி சரிதம் (தமிழ் விருத்தங்களில் இயற்றியவர் கோயில் சப்தம் வங்கீபுரம் ஸ்ரீநிவாஸாசாரியர்.)*

A History of South India by K. A. Nilakanta Sastri M. A.

A History of Tirupati (Two Volumes)–Dr. Krishnaswami Iyengar

Life of Ramanuja by C. R. Srinivasa Iyengar

Life of Ramanujacharya. .Alkondaville Govindacharya.

Life and Teachings of Sri Ramanuja by M. Rangacharyulu.

The Heart of Hindustan by S. Radhakrishnan.

*ஸ்ரீ நவநீதம் அல்லது ருக்மிணி உபந்நியாசங்கள்:– வித்யாரத்னகர ஸ்ரீ வே. ராம நரஸிம்ஹாசாரியார்.*

*குணரத்நகோசம்—பராசர பட்டர் அருளியது.*

*திருவாய்மொழி ஈடு வியாக்கியானம்.*

Ramanuja's Idea of the Finite Self by P. N. Srinivasachari.

The Twilight of Faith and Reason.

The Law of love by Mahatma Gandhi.

History of Tamil Language and Literature by S. Vyapuri Pillai

Life of Sri Ramanuja by Swami Ramakrishnananda.

*சாஸனத் தமிழ்க் கவி சரிதம் – மு. இராகவையங்கார்*

*தமிழர் சால்பு—வித்யானந்தன் (இலங்கைப் பல்கலைக் கழகம்.)*

*ஸ்ரீ காஞ்சி மகாவித்வான் அண்ணங்கராசாரியரின் நூல்கள், வியாக்கியானங்கள் முதலியன.*

# பிழை திருத்தம்

| பிழை | திருத்தம் | பக்கம் | வரி |
|---|---|---|---|
| பெரும்புதூர் | பெரும்பூதூர் | 1 | |
| வழங்க | விழுங்க | 21 | 6 |
| மாறனேர் | மாறனேரி | 21 | 29 |
| தில் | தின் | 47 | 8 |
| முகமாய் | முகமுகமாய்ப் | 58 | 11 |
| ஞன் | ஞர் | 95 | 23 |
| முடி | வடி | 104 | 16 |
| சொன்ஞராம் | சொன்ஞனும் | 105 | 27 |
| வாடும் | வாடும் ; | 105 | 31 |
| மெய்மை | மெய்ம்மை | 109 | 18 |
| நம்மையா | நம்மையா? | 109 | 27 |
| ஏற்ற | ஏற்றகலம் | 112 | 19 |
| கற்கவும் துணிந்தார் | கற்பிக்கவும் துணிந்தார் | 112 | 23 |
| உரு | குரு | 113 | 21 |
| தம் | நம் | 119 | 14 |
| வளை | வளை ஒலிப்ப | 120 | 8 |
| கேட்க | கேட்ட | 123 | 20 |
| பிரபந்த | பிரபந்ந | 127 | 17 |
| கொள்ளலாம் | கொண்டார் | 127 | 28 |
| கொண்டர் | கொண்டவர் | 130 | 5 |
| பெருமாளரையின் | பெருமாளரையரின் | 131 | 26 |
| பெருமாளரையின் | பெருமாளரையரின் | 131 | 28 |
| மணலில் | மணல் | 131 | 25 |
| கிடம்பி | கிடாம்பி | 131 | 34 |
| திருக்கச்சி | திருக்கோட்டி | 136 | 21 |
| புலவன் தாம் | புலவர் தாம் | 137 | 2 |
| மாய வாதம் | மாயா வாதம் | 137 | 2 |
| வந்திருக்கிறேன் | வந்திருக்கிறோம் | 138 | 20 |
| உலகும் | உலகம் | 160 | 8 |

| பிழை | திருத்தம் | பக்கம் |
|---|---|---|
| குறிப்பீடுகிருர் | குறிப்பிடுகிருர், | 161 |
| நேர் | ஓர் | 164 |
| பொருமான் | பெருமான் | 180 |
| உறங்காவல்லி | உறங்காவில்லி | 194 |
| பிரபந்த | பிரபந்ந | 238 |
| படுகிவறன் | படுகிறவன் | 244 |
| நாடாதூார் | நடாதூார் | 247 |
| விக்கிரங் | விக்கிரகங் | 254 |
| இச்கல் | இக்கல் | 263 |
| சரவண | ச்ரவண | 268 |
| ஓராண் | ஓரான் | 271 |
| ஓராண் | ஓரான் | 271 |
| இராமாநுஜர் | யாமுனர் | 282 |
| புலனுகும் | புலனுகும். | 292 |